பன்னூல் பாடற்றிரட்டு
குறிப்புரையுடன்

கழக வெளியீடு: ௧௩௧௪

# பன்னூல் பாடற்றிரட்டு

1314



தொகுப்பாசிரியர் :
திரு சு அ இராமசாமிப்புலவர் அவர்கள்
குறிப்புரையாசிரியர் :
பண்டித புலவர்

திரு தி சங்குப்புலவர் அவர்கள்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. :: சென்னை-1.
1968

THE SOUTH
INDIA SAIVA SIDDHANTA WORKS © 1968
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

Ed 1 January 1968

PANOOL

O31, 1x N7

K 8

# PAADART TIRATTU

## (Kurippurai)

Forms 1—28 Printed at Parri Achakam, Madras-1.
Title form, forms 29—37 & க—கூ Printed at
Appar Achakam, Madras-1.

## பதிப்புரை

"அறம்பொரு ளின்பம்வீ டடைதல்நூற்
பயனே" என்று இலக்கண நூல் இயம்புகின்றது. இதனுடைய பொருள் நூல்களால் ஏற்படக்கூடிய பயன் அறம், பொருள்,

இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் அடைதலே என்பதாம். உலகத்தில் உள்ள பொருள்கள் யாவும் இந்நான்கனுள் அடங்கி விடுகின்றன. உயிர்த்தொகைகள் யாவும் இந்நான்கு

பொருள்களில் ஒன்றனையோ இரண்டனையோ மூன்றனையோ

அன்றி நான்கினையுமோ அடைதற்கு முற்படுகின்றன. ஆறறிவு பொருந்திய மக்கள்தாம் நான்கினையும் அடைய முற்படுகின்ற னர். அஃறிணைகள் அருந்தல்

தைத்தான் நாடுகின்றன.

பொருந்தல்களாகிய இன்பத்

முன்காலத்தில் தமிழ்நாட்டில்

முதன்முதலாகத் தோன்

றிய சீரிய தமிழ்நூல்கள் சங்க காலத்து நூல்க ளேயாம் என்று

நாம் ஒருவாறு கூறமுடியும். சங்க நூல்களில் பத்துப்பாட்டு,

எட்டுத்தொகை என்பன முதலில் தோன்றின. பத்துப்பாட்டு,

எட்டுத் தொகை நூல்கள் இவை யென்பதை,

'முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து'

'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்

கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை!

என்னும் பாடல்கள் விளக்குகின்றன. இவைகளையடுத்து ஐம்பெருங் காப்பியங்களாகிய சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் நூல்கள் எழுந்தன. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களாகிய அறநூல்களும் மேற்படி சங்கநூல்களுக்கு முற்பட்டனவாகவும் பிற்பட்டனவாகவும் பலதோன்றின.



முற்காலத்தவர்கள் பெரும்பாலும் அகவற்பாக்களிலேயே தங்கள் நூல்களை யியற்றினர். அறநூல் இயற்றினோர் வெண்பா வகையிலேயே

நூல்களைச் செய்தனர். இந்நூல்களை யடுத்துத் தெய்வச் செய்திகளைக் கூறும் புராணங்களும், அரசர்கள் முதலி யவர்களுடைய செய்திகளைக் கூறும் இதிகாசங்க்ளும் மிகுதியா கத் தோன்றின. பிற்காலத்தார் முற்காலத்தார் கூறிய அற நூற் செய்திகளைத் தாங்கள் இயற்றிய நூல்களில் தகுந்த இடம் பார்த்து அமைத்தனர். இவ்வாறு அமைத்ததற்குக் காரணம் அறநூல்களைக் கல்லாதவர்களும் அறநூற் பொருள் களை உணர்ந்துகொள்ள வேண்டுமென்னும் விரிந்த மனப் பான்மையேயாம். இவ்வாறு அறநூற் பொருள்களை நூல்க ளில் அமைக்காவிடில் அந்நூல்கள் முற்கூறிய நூலிலக்கணத் தில் குறைவுபட்டனவாய்ப் பயனற்றனவாகும். பிற்காலத்தார் அகவற்பாவின் இனமாகிய விருத்தப் பாவிலேயே தங்கள் நூல்களை இயற்றினர். பிற்காலத்தில் மிகுதியாக மொழி பெயர்ப்புப் புராணங்களும், இதிகாசங்களும், சிறு காப்பியங்களுந் தோன்றின. இக் காலத்தில் உள்ள புராணங்களையும், இதிகா சங்களையும், பிற நூல்களையும் ஒருவர் படித்தறிவதென்பது இய லாத காரியமாகும். புலவர்களாக உள்ளவர்களிற்கூட ஒரு சிலரே எல்லா நூல்களையும் படித்துணரும் வாய்ப்பைப் பெறுகின்றனர்.

இவ்விருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இராமநாத புரத்தில் வாழ்ந்திருந்த பாண்டித்துரைத் தேவர் என்பவர்

சிறந்த தமிழ்ப்புலவராகவும், புரவலராகவுந் திகழ்ந்தார். அவர் சொற்பொழிவு செய்தலினும் வல்லவர். சொற்பொழிவு செய்யுங் காலங்களில் சொற்பொழிவு செய்வோர் அறம் பொருள் இன்பச் செய்திகளமைந்த பாடல்களை இடையிடையே கூறிச் சொற்பொழிவு செய்வது இயற்கை. அவ்வாறு பாடல்களையுங் கூறி ஞல்தான் கேட்பவர்கள் தாங்கள் கூறுஞ் செய்தியை நம்புவார்கள் என்பது அவர்களுடைய எண்ணம். சொற்பொழிவு செய்பவர்கட்கும், கட்டுரை யெழுதுபவர்கட்கும், அறநூற்

பாடல்களை ஒருங்கே உணர்ந்துகொள்ளவேண்டும் என்னும் எண்ணமுடையவர்கட்கும் பயன்படுமாறு அறம் பொருளின்பச்

செய்திகளமைந்த பாடல்களைப் புராணங்கள், அறநூல்கள் முதலியவைகளிலிருந்து திரட்டி ஒன்று படுத்த வேண்டுமென்று பாண்டித்துரைத் தேவர் எண்ணினர். தம் அவைக்களப் புலவர்களையுந் துணையாக வைத்துக்கொண்டு பாடல்களைத் திரட்டி ஒன்று படுத்தினர். திருக்குறளைப் போல் அதிகாரவரிசைப்படுத்தி ஐம்பத்தோர் அதிகாரங்களாக வகுத்தார். திருக்குறளைப்போல் அதிகாரங்களை வகுக்காமல் பல செய்யுட்களை ஒழிபு என்னும் அதிகாரத்தில் சேர்த்துவிட்டபடியால் அதிகாரங்கள் குறைவாயின. இவ்வாறு தொகுத்த நூலுக்குப், "<u>பன்னூற்றிரட்டு</u>" என்று பெயர் கொடுத்து 1898 ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினர். முதற்பதிப்பாக அவர் வெளிப்படுத்திய நூலின் பாடற்றொகை கசுசஎ. பிறகு மேலும் பல பாடல்களைச் சேர்த்து உகஙஉ பாடல்களாக்கி இரண்டாம் பதிப்பை 1906 ஆம் ஆண்டில் வெளியிட்டார்; பிறகு மூன்றும் பதிப்புச் சில மாற்றங்களுடன் வெளியாயிற்று. இம் மூன்று பதிப்புக்களிலும் பாடல்கள் ஓர் பிரிக்கப் பெறவில்லை என்பது அறிதற்பாற்று.

அன்பர் சிலர் இந்நூலில் மேலும் பல பாடல்களைச் சேர்த்துக் கழக வாயிலாக வெளியிட வேண்டுமென்று

விரும்பினர். அவ்வேண்டுகோட்கிணைந்து மேலும் பல பாடல்களைச் சேர்த்து அதிகாரங்களையும் விரிவுபடுத்தி வெளி யிட எண்ணினோம். உடன்பிறந்தார், ஈத்தார் பெருமை, வான சிறப்பு, விருந்தோம்பல், களவு, பொறுமை, பசி தீர்த்தல், அடக்க முடைமை, நன்றியில் செல்வம், சினம், புகழ், நடுவுநிலைமை, தற்புகழ்ச்சி, மெய்யுணர்தல் முதலிய பதினேழு அதிகாரங்களைப் புதிதாகச் சேர்த்தும், எல்லா அதிகாரங்கட்கும் பொருத்தமான பாடல்களை ஏறக்குறைய எழுபது நூல்களில் இருந்து பொறுக்கி யெடுத்து அவ்வவ்வதிகாரங்களின் இறுதியிற் சேர்த்தும் அடிஉ பாடல்களை மிகுதிப்படுத்தியுள்ளோம். இப்பொழுது பாடல தொகை ௪கூ௨௫ ஆகியது. பல நூல்களையும் அப்படியே முழுமையுஞ் சேர்க்காமல் சில பாடல்களை மட்டுமே சேர்த்திருப் பதால் "பன்னூற்றிரட்டு" என்னும் பெயரைவிட "பன்னூல் பாடற்றிரட்டு" என்னும் பெயரே ஏற்புடைத்தென்று அப் பெயரோடு இப்பொழுது இதனை வெளிப்படுத்துகின்றோம்.



இத்தகைய அரிய நூல் ஒன்று தமிழுலகில் தோன்று வதற்குக் காரணமாகவிருந்த

பாண்டித்துரைத் தேவர் அவர்கட்கும், மதுரைத் தமிழ்ச்சங்கத்தார்க்கும் தமிழ் உலகம் நன்றி பாராட்டுங் கடப்பாடுடைத்து. கழகத்தினர் விருப்பத்திற்கிணங்க இந் நூலில் பாடல்களை மிகுதியாகச் சேர்த்து அமைத்துத் தந்த கருப்பக்கிளர் உயர்திரு சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கட்கும், பொருள் எளிதில் விளங்காத புராணப் பாடல்கள் பலவற்றிற்குக் குறிப்புரை எழுதியுதவிய பண்டித புலவர் உயர்திரு நீ. சங்குப் புலவர் அவர்கட்கும் கழகத்தாருடைய நன்றி உரித்தாகுக. சொற்பொழிவு செய்பவர்களும் கட்டுரையெழுதுபவர்களும் புராணே திகாசங்களிலுள்ள சிறந்த பாடல்களை ஒருங்கே உணர்ந்து கொள்ள விரும்புபவர்களும் இந்நூலைப் பெற்றுப் பயனடைவார்களாக.

●

இப்பதிப்புநூல் பள்ளி கல்லூரிகளின் நூல் நிலையங்களிலும், பொது நூல் நிலையங்களிலும் கட்டாயம் இருக்க வேண்டியதாகும். இதனை வாங்கி எங்கள் பதிப்புத்துறைக்கு ஊக்க மளித்து, மேலும் இதுபோன்ற தொகுப்பு

நூல்கள் சில வெளிவருவதற்கு உதவுமாறு, நூலகங்களின் மேலாளர்களையும் தமிழ் நன்மக்களையும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

## அதிகார அகரவரிசை

[எண் : பக்க எண்]

# பன்னூல் பாடற்றிரட்டு நூல் அகரவரிசை

## எண் : செய்யுள் எண்

# பன்னூல் பாடற்றிரட்டு.

உ
திருச்சிற்றம்பலம்

# பன்னூல் பாடற்றிரட்டு

## க. அறத்துப்பால்

### க. கடவுள் வாழ்த்து

#### தேவாரம்

1 பரிதி யானைப்பல் வேறு சமயங்கள்
கருதி யானைக்கண் டார்மன மேவிய
பிரிதி யானைப் பிறரறி யாததோர்
சுருதி யானைக்கண் டீர்தொழற் பாலதே.

2 ஆதி யானை யமரர் தொழப்படு
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே.

#### திருவாசகம்

3 வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு

வானாகி நின்றாயை யென்சொல்லி

வாழ்த்துவனே.

திருவாய்மொழி

4 உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

கந்தபுராணம்

5 திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
யருவந் தனையு முருவத்தையு மன்றி நின்ற
வொருவன் றனது பதந்தன்னை யுளத்துள்
ப. பா.—1

வைப்பாம்.



6 பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.
சு

விநாயக புராணம்

7 ஒருப்படு முத்தி னாலே யொண்பொரு ளின்பஞ் செம்பொற்
பருப்பதங் கடல்போல் வந்து பயப்படு மதனைக் கேண்மோ

விருப்பொடு வெறுப்பி லாத மிக்கவெண் குணத்தோ டொன்று
யிருப்பவன் யாவ னன்று னிணையடி வணங்கல் வேண்டும். எ

காசி கண்டம்

8 நோக்கின்றிக் கண்டுநனி கையின்றிக்
கொடுத்துமறை நுவல்வ தாய
நாக்கின்றி யறுசுவையு மினிதுணர்ந்துங்
காலின்றி நடத்தல் செய்து
மூக்கின்றி மணங்கவர்ந்துஞ் செவியின்றிக்
கேட்டுமறை முதல்வர் யார்க்கும்
வாக்கன்றி மனத்தினுக்கு மெட்டாநின்
ருமரைத்தாள் வணங்கல் செய்வாம்.
அ

இராமாயணம்

9 உலகம் யாவையுந் தாமுள வாக்கலு
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் நாங்களே.

கூ

10 சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத னன்றரோ.

க0

சூளாமணி

11 வென்ருன் வினையின் ருெகையாகி விரிந்து
தன்கண்
ஒன்ருய்க் கிடந்த வுணர்வின் ருெழியாது முற்றுஞ்
சென்ருன் றிகழுஞ் சுடர்சூ ழொளிமூர்த்தி யாகி
நின்ரு னடிக்கீழ்ப் பணிந்தார் வினை நீங்கி நின்ருர். கக

## சீவகசிந்தாமணி

12 மூவா முதலா வுலகம் மொருமூன்று
மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி
னெய்தி



ஓவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வ
னென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து மன்றே.
கஉ

## விநாயகர் தோத்திரக் கொத்து

13 வேக மாநெறி சேரும் வினைகளும்
தாக போகம் விடாத தளர்ச்சியும்
சோக வாரியி லுல்வருந் துன்பமும்
போக யானை முகத்தனைப் போற்றுவாம்.
கங

## இனியவை நாற்பது

14 கண்மூன் றுடையான்ருள் சேர்தல் கடிதினிதே

தொன்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது.

கச

## ஆசிரியமாலை

15 மூவிலை நெடுவே லாதி வானவன்
இடமருங் கொளிக்கு மிமயக் கிழவி
தனிக்கண் விளங்கு நுதற்பிறை மேலோர்
மிகைப்பிறை கதுப்பிற் சூடி வளைக்கையின்
வாள்பிடித் தாளி யேறித் தானவன்
மாளக் கடும்போர் கடந்த குமரி
மூவா மெல்லடித் திருநிழல்
வாழி காக்கவிம் மலர்தலை யுலகே.

கரு

## பெருந்தொகை

16 கொடியார் கொடியார் மதின்மூன்றுங் கொன்ற
படியார் பனைத்தடக்கை நால்வாய்க்—கடியார்
உரியா ருரியா ரெமையாள வோதற்
கரியார் கரியார் களம்.

கசு 17 கூற்றுவனை வின்மதனை யரக்கர் கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை யிஞ்சி மூன்றை
ஏற்றுலகின் புறவுருவ மாளத் தோள்க
ளிறவெறிப்ப விமயப்பெண் வெருவ வேவக்
காற்றெழிலா னயனத்தால் விரலாற் கற்றைக்

கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற் பின்னும்
ஊற்றழிய வுதைத்தெரித்து நெரித்துச் சூடி
யுரித்தெரித்தா னவனெம்மை யுடைய கோவே.

கஎ

18

பணிமின்கள் பாதம் பகர்மின்க ளுமங்கள் பாரகத்தீர்
தணிமின்கள் சீற்றந் தவிர்மின்கள் பொய்ம்மை தவம்புகுநூள்

பன்னூல் பாடற்றிரட்டு

கணிமின்க ளேன்ற கிளிகடி மாதர்தங் கைவிசைத்த
மணிமின்கள் போலொளிர் வான்றேய் சிராப்பள்ளி
வள்ளலுக்கே. கஅ

வள்ளலார் சாத்திரம்

19 சாத்திரத்தா லளவுபடாத் தனிமுதலைப்
பராபரத்தைத் தானே தானய்
மூத்திரையாய் நிற்பதனை வாய்விட்டுப்
பேசாத மௌன வைப்பைக்
காத்திரவா தனைகடந்த வறிஞருக்குப்
பலயீயுங் கற்ப கத்தைப்
பார்த்தவிடந் தொறுநிகழும் பரமரக
சியப்பொருளைப் பணிதல் செய்வாம்.

௧௯

பாரதம்

20 வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளும்
அப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனும்
அப்பயன் பொலிவுற நுகரும்
ஞாதமும் உலகம் படைத்தளித் தழித்து
ஞானமா யகிலமு நிறைவுற்
றாதியு நடுவு முடிவுமாய் நின்ற
ஆதியா னடியிணை பணிவாம்.

௨௦

தாயுமானவர்

21 அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறாய்
அமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல வாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாம்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப்
பேரன்பால் நினைதல் செய்வாம். ௨௧

நீதிநூல்

22 தீட்டுவோ னின்றி யாமோ சித்திரந் திகழ்பொற் பாவை
யாட்டுவோ னின்றித் தானே யாடுமோ திவவி யாழின்

மீட்டுவோ னின்றிக் கீதம் விளையுமோ சராச ரங்கள்
நாட்டுவோ னொருவ னின்றி நன்கமைந் தொழுகுங்
கொல்லோ. உஉ

## க. கடவுள் வாழ்த்து

23 மண்டப மாதி கண்டோர்
மயனுள னென்னல் போலுங்
குண்டல முதல்கண் டோர்பொற்
கொல்லனுண் டென்னல் போலும்
ஒண்டுகில் கண்டோர் நெய்தோ
னொருவனுண் டென்னல் போலும்
அண்டமற் றகண்டஞ் செய்தோ
னுளனென வறிவாய் நெஞ்சே.

24 மரமுத லசைத லாற்கா லுளதென மதிப்பா ரெங்கும்
பரவிய புகையாற் செந்தீ யுளதெனப் பகர்வார் சுற்றும்
விரவிய மணத்தாற் பாங்கர் வீயுள தென்று தேர்வர்
பரனுள னெனுமுண் மைக்குப்
பாரெலாஞ் சான்று மன்றே.

உச

25
வானின்றி மழையு மில்லை வயலின்றி விளைவு மில்லை
ஆனின்றிக் கன்று மில்லை அரியின்றி யொளியு மில்லை
கோனின்றிக் காவ லில்லை குமரர்தா யின்றி யில்லை
மேனின்ற கடவு ளின்றி மேதினி யில்லை மாதோ.

உ௫

26 அத்தன்ருய் முன்ஞேர் தம்மை யறிகிலா
னிலரென் பாஞே
சத்தமின் சுவைகந் தத்தைத் தரிசியா னிலனென் பாஞே
நித்தனைக் கண்ணிற் காணு நீர்மையா லிலனென் றேதும்
பித்தரிற் பித்தர் பாரிற் பேசிட வுளரோ வம்மா. உசு
27 தேவனே யிலனேன் மோக்கந் தீநர கில்லை
வேதம்
பாவபுண் ணியங்க ளில்லை பரனில்லை
யென்போ னில்லில்
மேவலர் தீயிட் டன்ஞேன் விபவமெல் லாஞ்சி
தைத்துச்
சீவனை வதைசெய் தாலென் செய்குவன்
சிதடன் ருனே. உஎ
28 ஆதியீ றில்லான் றன்னை யமைத்தகா
ரணமொன் றில்லான்
கோதிலான் கணத்து ளண்டங் கோடிசெய்
தழிக்க வல்லான்
ஓதிடு மொப்பொன் றில்லா னுருவிலா
னுருவிண் டங்குஞ்
சோதிதன் னிழலாக் கொண்ட சோதியைத்
துதியாய் நெஞ்சே
உஅ 29 ஆணலன்
பெண்ணு மல்ல னஃறிணை யலன்பா ரல்லன்
சேணலன் புனல்தா னல்லன் தீயலன் ஐம்பு
லத்தாற்
காணரும் வடிவ னித்தன் கத்தனம் மத்தன்

சுத்தன்

மாணற முருக்கொண் டன்ன மாட்சியான் கடவுள் நெஞ்சே.

உ௯

30 இருநிதி பெற்ற தீன ரெண்ணிடா திகழ்ந்த தொப்ப
அருவமாய் உருவ மாய்நம் மாருயிர்க் குயிரா யண்டம்



பெருநில மெங்கு மின்பம்
கருணையங் கடலா டாது

பெருக்கெடுத் தோங்கி நிற்கும்
கழித்தனை வாழ்நாள் நெஞ்சே. ௩0

31 முன்னவன் றனையு ளத்து முன்னமுன் னத்தெ விட்டாக்

கன்னலோ வமுதோ பாகோ கற்கண்டோ வெனத்தித் திக்கும்

இன்னல்மே வாத வன்ரு னெங்கணு நிறைந்தி ருந்தும்

அன்னையை நீத்த சேய்போ லையனை நீத்தாய் நெஞ்சே.

௩௧

32 மாசறு கடவுள் பாத மலரினைத் தினமும் போற்றிப்

பாசமில் சுகம்பெ ருமற் பவஞ்சத்தூ டுழலல் பைம்பொன்
ஆசனந் தன்னி லேறி யரசுசெய் தகைமை நீத்துக்
காசனக் கழுவி லேறுங் கயமையே கடுக்கு மாதோ. ௩௨

33 விலகரு மருளின் மீக்கூர் விமலனை வாழ்த்த வேண்டின்
அலகில்கற் பங்க ளேநம் மாயுளாய் மும்மைத் தாய
உலகமோ ருடம்பா யந்த வுடம்பெலாம் வாயாய் நித்தம்
புலகவி மாலை சூட்டிப் பரவினு முடியுங் கொல்லோ. ௩௩

தனிப்பாசுரத் தொகை

34 எங்கணும் விளங்குறு மிறைவனே! எண்குணந்
தங்கிய வொருபெருந் தலைவனே! ஒப்புயர்
வில்லா தோங்கிய வீசனே! என்றும்
எல்லாந் தானு யிலகிடும் பொருளே!
இன்பமோ டெழிலு மன்புட னருளும்
நண்ணிய நாதனே! புண்ணிய முதலே!
உருவுடை யாயோ? உருவிலி யேயோ?
உருவரு விலாயோ? உடையையோ? உணர்கிலேன்

என்னணு மெளியேன் நின்னை யண்முகோ ?
உன்னுமா றறியேன் உணருமா றறியேன்
பன்னுமா றறியேன் பாடுமா றறியேன்
வணங்குமா றறியேன் வாழ்த்துமா றறியேன்
இணங்கி யென்னையு மெடுத்துக்
கருத்தல் வேண்டும் பூத்துநின் னருளே.

கூ

செய்யுட் கோவை

35 விண்ணுறும் அண்டக் குழுவும் அகண்ட வெளியுமிந்த
மண்ணு ருயிர்களும் பண்டமுஞ் சூடு மகிமையென்றன்
கண்ணாரக் கண்டும் கடவுளுண் டென்னக் கரியெதற்கோ
எண்ணாத கோடியும் சொல்லுமவ் வுண்மை யெடுத்தெடுத்தே.

கூ



க. கடவுள் வாழ்த்து

36 திண்பார்க்கு மீசன் றிறம்பார்க்க வேண்டில் திகழுகின்ற
விண்பார்க்க மெய்யின் விசித்திரம் பார்க்கநம் மெய்யொடுங்கும்
மண்பார்க்க மண்ணின் வளம்பார்க்க பார்க்குமிம் மாண்கருவிக்
கண்பார்க்க பின்கரு திப்பார்க்க செய்ததெக்

கையெனவே.

௩௬

37 மண்ணளித் தான்புல் மரமளித் தானம் மனமளித்தான்

கண்ணளித் தான்கை களையளித் தான்கண்கள் காணுமொளி

விண்ணளித் தான்விண்ணு மண்ணுங்கொள் கோடி வியப்பளித்தான்

தண்ணளிச் சாகரன் எண்ணருங் கோடிக்குந் தந்தையனே.

௩௭

3 8

ஒவ்வோர் பொருளினு மொவ்வோர் நலத்தை யுதிக்கவிட்டுச்

செவ்வே யுலகஞ் செழிக்கச்செய் தான்பெருஞ் சித்துடையான்

அவ்வப் பொருளிலுந் தானிலன் போலிருந் தாட்டிவைத்துக்

கவ்வைக் கடலிற் கலவா தகிலங் கலந்தனனே. ௩௮

39

கோவில்மட் டோகுடி கொண்டது தெய்வங் கொடிசெடியிற்

பூவிலுண் டேயகப் பூவிலுண் டேவன் பொருப்பிலுண்டே

காவிலுண் டேபைங் கிளிகளின் பாட்டிற் கலந்ததுண்டே

நாவிலுண் டேசெய்யும் பாவினுண் டமெய்ந் நவில்பொழுதே. ௩௯

40 அறியார்க்கு மிக்க அறிவார்க்கு மீசன் அறிவிக்கின்றான்
சிறியார்க்குஞ் சீர்த்த பெரியார்க்கும் நீதி செலுத்துகின்றான்
வறியார்க்குஞ் செல்வம் மலிந்தார்க்கு நேயம் வழங்குகின்றான்
குறியா தொருவரை யேனும் விடானெண் குணத்தவனே. ௪௦

41 வேதங்க ளோதுதல் வேண்டுவ தில்லை விரித்தரிய
வாதங்கள் செய்ய வகத்திய மில்லை வருந்திப்பல
காதங்கள் செல்லவுங் கட்டாய மில்லை கடவுள்மலர்ப்
பாதங்க ளெண்ணி யுளங்காத்தல் போதும் பதம்பெறவே. ௪௧

42 வெல்லரிய வினைப்பகையை வென்றிடலாம்
விழுப்பொருளே விரைந்து நல்கும்
செல்லரிய வுயர்நெறிக்கண் சென்றிடலாம்
பெற்றிடலாஞ் சித்தி யெல்லாந்
தொல்லரிய மறைகளெலாந் தொடலரிய

பதங்களித்துத் தொழலாம் எண்ணச்
சொல்லரிய சுகம்பெறலாஞ் சுயஞ்சோதி
யருள் நமக்குத் துணையா னலே.

## பன்னூல் பாடற்றிரட்டு

43 வழுத்துமொரு வழியறியேன் வரங்கேட்க
அறியேனென் வருத்த மெல்லாம்
பழுத்துருகிச் சொலவல்லே னல்லேன்பல்
வகைத்துன்பம் படர்ந்து பற்றிக்
கழுத்தளவு மானதன்பின் கடவுளெனக்
கருதிடுவேன் கடையேன் கற்ருல்
எழுத்தளவு மறியார்மே லிரங்கவறி
யேனென்மே லிரங்கு வாயே.

சங

44 அழிந்துவிடு மாக்கையுயிர் அழிந்துவிடும்
அழிந்துவிடு மசையாக் கல்லும்
கழிந்துவிடும் நாள்கதையாய்ப் போய்விடுநம்
முத்யோகம் கனவாம் வாழ்வே

ஒழிந்துவிடும் பொருளிருப்ப தருளொன்றே
நன்மையொன்றே யுறுதி யீசன்
பொழிந்துவிடும் அருளறிந்து போய்ப்புனித
அருள் நிறைப்பீர் புவனத் துள்ளே.

## திருக்குறள்

45 கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.
௪௫

46 வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.
௪௬

47 தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

௪௭ 48 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

௪௮

---

# ௨. வான் சிறப்பு

## சிலப்பதிகாரம்

49 மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற்கு அவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்.
௧

### இன்னிசை

50 வானம் பரவுதூஉம் வானம் பரவுதூஉம்
ஞான முதல்வன் அருள்போல ஞாலக்குப்
பானமும் ஆகி வளமும் பலவளித்துத்
தானே துணையாத லான்.

### மதுரைக்காஞ்சி

51 மழைதொழில் உதவ மாதிரங் கொழுக்கத்
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய
நிலனும் மரனும் பயனெதிர்பு நந்த
நோயிகந்து நோக்கு விளங்க.

### மலைபடுகடாம்

52 வான மின்னு வசிவு பொழிய ஆனாது
இட்ட வெல்லாம் பெட்டாங்கு விளையப்
பெயலொடு வைகிய வியன்கண்.

### பதிற்றுப்பத்து

53 காலை மாரி பெய்துதொழில் ஆற்றி
விண்டு முன்னிய புயல்நெடுங் காலைக்
கல்சேர்பு மாமழை தலைஇ.

### திருக்குற்றாலப் புராணம்

54 பொங்குமா கடலிடத்துத் தெள்ளமுதிற்

பிறந்துசெழும் பூமேல் ஆகிச்
சங்கமா நிதியினொடு மணியினொடும்
தருவினொடும் தகவாய்த் தோன்றி

எங்குமே அடுத்தவர்க்கு வாழ்வருளி
ஆக்கமதாம் இயற்கை யாலே
செங்கண்மா லுரத்துறையும் திருமானின்
உருமானுந் தெய்வ வாரி.



## விநாயக புராணம்

55 அறமுதற் பொருளுல கமல ஞாணயா
னிறுவதற் கேதுவாய் நிகழு மாமறை
வறுமையெய் தாவகை வயங்கு வேள்வியை
யுறுதரு மங்கள யுளுற்றல் வேண்டுமால்.

## நான்மணிக்கடிகை

56 கோனோக்கி வாழுங் குடியெல்லாந் தாய்முலையின்
பானோக்கி வாழும் குழவிகள் - வானத்
துளிநோக்கி வாழு முலக முலகின்

விளிநோக்கி யின்புறாஉங் கூற்று.
அ

திருக்குறள்

57 வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று.
க

58 விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.
க0

59 விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.
கக

60 சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.
கஉ

61 தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.
கக

62 நீரின்று அமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின்று அமையா தொழுக்கு.
கச

## ௩. நீத்தார் பெருமை

### திருவெங்கைக் கலம்பகம்

[ஐம்புலன்களையும் வென்ற பெரியோர்களுடைய பெருமை கூறுவதற்கருமை என்றல்]

63 சிவனாலும் மறையாலும் உணர்வி னாலும்
தெரியாத பரன்வெங்கை அரசன் தன்மா
தவனாலும் அயனாலும் அலரி யாலும்
சசியாலுங் குருவாலும் அமரர் கோவாம்
அவனாலும் குகனாலும் முனிவ ராலும்
அரவாலுஞ் சுரராலும் புலவ ராலும்
எவராலும் வெலற் கருமைம் புலன்கள் வென்ற
எழிலடியார் பெருமைதனை இயம்பொ ணாதே

### பட்டினத்தார்

[துறவிகளின் பெருமையைக் கூறமுடியாது என்றல்.]

64 அறந்தான் இயற்றும் அவனிலுங் கோடி அதிகமில்லந்
துறந்தான் அவனிற் சதகோடி உள்ளத்

துறவுடையோன்
மறந்தான் அறக்கற் றறிவோ டிருந்திரு
வாதனையற்
றிறந்தான் பெருமையை என்சொல்லு
வேன்கச்சியேகம்பனே.

உ

## இன்னிசை

[நூற் பொருளையுங் கடவுளையும் உலகிற்குக் காட்டும் துறவி
களைப் போற்றுகிறோம்.]

65 நீத்தாரைப் போற்றுதும் நீத்தாரைப்
போற்றுதூஉம்
நேத்திரம் என்ன உலகை நெறிநிறீஇ
மூத்த அறிவினால் நூற்பொருள் முற்காட்டி
ஆத்தனையும் காட்டிவிட லான்.

கூ

## சொருபானந்த சித்தி

[மெய்ஞ்ஞானியின் கால் துகளினால்
தூயனாவேன் என்றல்.]

66 கன்றுதல் இன்றி ஆறிக் கழிந்தகா மத்த னாகி
ஒன்றஎவ் வுயிருந் தன்னை ஒக்கவே உணரும் ஞானி [தூளி
சென்றதோர் நெறியிற் செல்வன் சென்னிமேல் அவன்கால்
துன்றுமேல் சுத்தன் ஆவேன் எனுமிது துணிவிற் கொண்டேன்.

[மெய்ஞ்ஞானி வணங்குதற் குரியவன்.]

67 ஒழுக்கமே புரிந்தோ னுதல் அதனைவிட்
டொழிந்தோ னுதல்
இழுக்கஞ்செய் மூர்க்க னுதல் பண்டித
னுதல் எண்ணில்
பழிப்பறு
ஞானந் தன்னின் முயல்பவன் பணியத் தக்கோன்
தொழத்தகும் ஞானி என்று சொல்லவேண்டுவது
முண்டோ.
ஓ

[மெய்ஞ்ஞானிகளைத் தேவர்களும்
வழிபடுவார்கள்.]

68 மன்னனை மனிதரெல்லாம் அரிமானு தனத்துள்
வைத்து
மன்னிய உபசா ரத்தால் வந்தனை செய்யு
மாபோல்
பன்னரும் மறையின் அந்தம்
பயின்றநன் ஞானி தன்னைப்
பொன்னுல கத்தில் தேவர் இருடிகள் பூசை செய்வார்.
சு

[ஞானியே போற்றத்தக்கவன் என்றல்.]

69 அத்துவி தந்தான் ஆகும் அவிகற்பத் தடைந்த

போதே

புத்தியின் நினைப்பும் போகும் போகுறிற் பிறப்பு நேரா
எத்திகழ் வாலும் பேதம் இன்மையால் இறையே என்னும்
தத்துவ வித்தே என்றன் தலையினால் வணங்கத் தக்கான். ௭

[எல்லோரினுஞ் சிறந்தவன் ஞானியே; அவனை வழிபடுதலே மேலான வழிபாடாகும்.]

70 எல்லாமுஞ் சிவரூபம் ஆகித் தோன்றும்
யாவனுக்குத் தன்னுடைத்தாய் அவனே மிக்க
சொல்லாலும் அளப்பரியான் அவன்றன் இச்சை
சுருதியினால் துணிந்துரைத்த சரிதை தானும்
பல்லோரும் அவனைஅருச் சனைசெய் தேத்தப்
பரரூபந் தனக்கேநற் பூசை யாகும்
நில்லாத அவிச்சையினை நீங்கி உள்ளம்
நிர்க்குணனும் அவனாகும் நினையுங் காலே. அ

[ஞானி ஒருவனே அழிவற்றவன்.]

71 பரப்பி னால்இந்தி யங்களைப் பராக்குறப்
பரம்பர னுள்ளாகி
இருத்த லால்அறி வொண்கிலன் புறம்புள

விகாரமே காண்கின்றான்

திருப்பி ஞானநாட் டத்தினால் அப்பொருள்
தெரியவே பெறுந்தீரன்
ஒருத்த னேஅவி நாசியாம் பரவொளி
யாய்அவன் ஒளிர்கின்றான்.
கூ

௯. நீத்தார் பெருமை 13
குறுந்திரட்டு

[நல்லஞானி தங்கியுள்ள இடமே நல்வினை பொருந்திய இடமாம்.]

72 சிற்சொரூ பத்து ஞானி சேர்ந்திடம் மிகவும் எங்கும்
குற்சிதத் தான மேனும் கோடிவிற் கிடைக்குள் எங்கும்
தற்சிவ தானம் சுத்தம் தபோவனந் தீர்த்தம் ஆகும்
நற்சுடர் புக்கிடந்தான் நன்மையாய் விளங்கும் ஆங்கே. ௧௦

[ஞானிக்கு ஒப்பானவர்கள் எவரும் இவ்வுலகில் இலர்.]

73 இருடிகள் இமையோர் மற்றும் இயோகத்தால் விடவல் லோர்க்கு

மருடிகழ் உடல்விட் டோடா மாயையின்
வலியைப் பாரா
அருடிகழ் மெய்ஞ்ஞானத்தால்
ஆக்கையைப் போக்கி இன்பப்
பொருடிகழ் முத்தி சேர்ந்த புண்ணியர்க் குவமை உண்டோ
? .
[ஞானியை அடைந்தோர் உயர்ந்தவர்களாவர்.]

74 கோதிலா அமுத ஞானி குரைகழல் குறுகிற்
கீழாம்

சாதியிற் கடைப்பட் டோர்கள் ஆகிலுந் தலைவ ராவர்
வீதியில் ஒழுகும் நீரும் அகழிடை விரவு நீரும்
பாய்தலால் நதியில் அந்நீர் தீர்த்தமாம்
பரிசுபோல. கஉ

[ஞானியின் பெருமையை எவராலுங்
கூறமுடியாது.]

75 பண்டை நான்மறை பகருதற் கரியவன் பரந்த
அண்ட நாடரும் அனந்தகோ டிகளுமா
ரமுதாய்
உண்ட நாயகன் உருவுதன்
உளத்துளே அடக்கிக்
கொண்ட ஞானிதன் பெருமையைக் கூறுவார்
எவரே. கரு

தகடூர் யாத்திரை

[இரப்பவர்களைப்போற் காணப்பெறினும்

மிகுந்த சிறப்புடைய
வர்கள்.]

76 கிழிந்த சிதாஅர் உடுத்தும் இழிந்தார்போல்
ஏற்றிரந் துண்டும் பெருக்கத்து நூற்றிதழ்த்
தாமரை அன்ன சிறப்பினர்.

கசு

திருக்குறள்

77 ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து

வேண்டும் பனுவற் றுணிவு.

கஉ



78 துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

கசு

79 உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

கள

80 ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு

ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

கஅ

81 சுவையொளி யூறோசை நாற்றமென்
றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.

கக

82 நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

உ௦

83 குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது.

உக

84 அந்தண ரென்போர் அறவோர்மற்
றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

உஉ

---

## சு. பெரியோரியல்பு

### விநாயக புராணம்

85 ஐது குடியிற் பிறந்தருநூ லாய்ந்து செல்வத் துயர்ந்ததனு
லெய்த லரிது பெருமையஃ தெய்துங் கொடையொப் புரவாதி
செய்தற் கரிய செய்துபிறர் செயிர்கூ ருமற் றருக்காம
லுய்தி நெறியிற் பிறழாம லொழுகு வார்க்குள்

ளுதிமைந்தா. க

86 அன்பொப் புரவு கண்ணேட்ட மழியா வாய்மை நாணுதி

யின்பம் பெருக்கு நற்குணங்க ளெல்லா நிறைந்த சான்றேர்கள்

துன்புற் றவர்க்கு மினியனவே சூழ்வர்

வன்பிற் றளரார் நட்டார்க்கு மடங்கித்

துணையின் வினைமுடிப்பர்

தோற்ற ஞுறே. உ

87 ஆன்ற குடியன் பெண்பதநல் லறநீ திகளின் வழுவாமை

• சான்ற மக்கட் பண்பாகுந் தன்னே யுடையார் நகையானு

மான்று மிகழார் பகையிடத்து மதியா ரவர்த நற்குணமே

யேன்ற வுலகம் பாராட்டு

மெல்லாப் பயனு மவர்மாட்டாம். ௩

## சேது புராணம்

88 அரிய நான்மறை யந்தணர் தங்களிற்
பெரிய ராவர் பிறர்க்கிட ரெண்ணிலார்
தரிய லார்தம ரென்றிரு சார்பினுக்
குரிய ரோபொரு ளுண்மை புணர்ந்துளோர்.

௪

## திருக்குடந்தைப் புராணம்

89 இருவினைப் பயனு யுள்ள வின்பத்துன் பங்கள் வந்து
மருவின்முன் புடற்க மைந்த வளமென விருப்புஞ் செய்யார்
பருவரும்வெறுப்புங்கொள்ளார் பவஞ்சத்தே யுறக்கம் வைத்தா
ரொருவரு
முயர்செம் பொன்னு மோடெனக் காணு நீரார். ௫

## மாயூரப் புராணம்

90 இன்புவந் துற்ற போது மெதிர்மறை யுற்ற போது
முன்புட லுறுமூ ழென்றே விருப்புறா முனிவுஞ் செய்யா
ரன்புசிற் றுயிர கத்து மமைத்துவாழ் கின்ற நீரார்
வன்புமும் மலமு நீங்கத் திருவருண் மூழுகு மாண்பார்.
௬

## சூத சங்கிதை

91 நடந்தாலு மிருந்தாலு நவின்றாலுந் துயில்கொண்டு
கிடந்தாலும் விழித்தாலுங் கிளர்முடிமன் னவர்முதலோர்

தொடர்ந்தாலுந் தொழுதாலுந் துதித்தாலு
மவமதித்துக்

கடந்தாலு

மெய்ஞ்ஞானி கமலவிலைப் புனல்போல்வான். ൭

பிரபோத சந்திரோதயம்

92 பயிறீக் கொடுங்கள்ளர் பயமுண்டு
பொருளோர்க்

கயில்வாய்த்த பகையச்ச மரசாள் பவர்க்குண்
டுயிர்வேட் டவர்க்குண் டுறுங்கால பயநம்
வயிராக் கியர்க்கேதில் வருமங்கொர் பயமே.

அ

93 அறிஞரு மறிவி லாரு மயலுளோ ரியற்ற லாகு
முறுதுய ருழப்பா ரொத்து மொத்தில ரொன்ன
லார்மேற்

பிறிதுறு மிடர்க்கு நோவர் பெருமையோர் மற்றை யோர்தம்
வறிதுறு முடலிற் றுக்கும் வன்றுயர்க் கழிவர் மாதோ.

க-

94 நெஞ்சக
வஞ்சகர்

முருகுந் தன்மை நீடறி வுடையார்க் கன்றி
திறத்து முண்டா மென்னினு மொவ்வார் மாத
ரஞ்சன விழியா லுள்ள மறிவிலார் குழைவ ரீசன்
தஞ்செனு மருட்க ணோக்காற் றம்முளங் கரைவர் சான்றோர்.

மாசற்றூர் செய்ய வேண்டு மாதவம் யாது மில்லை
யாசுற்றூர் செய்வ தில்லை யாதலா லினிய செய்கை
பேசுற்ற பெரியோர்க்கில்லை பிறக்குமஃ
திலையென்ருலு
மோசைத்தெண் டிரைசூழ் பாரி லவர்க்கிவ
ரொவ்வா
[ரொவ்வார். கசு

ஞானவாசிட்டம்

96 எத்திறத்தோ ரெவ்வனமா மிடையூற்றைக்
கடந்தெளிதி னேற வல்லோ
ரத்திறத்தோ ரேபுருட ரவர்களே
தொழற்குரியோ ரவரே சான்ருேர்
மெய்த்திறத்தோர் சேரிடமாய் விநயநிதி
படைத்தருளால் விளங்கா நிற்குஞ்
சுத்தகுண வெவ்வனமிவ் வுலகிலுள
தோவிசும்பிற் சூழ்கா டுண்டோ.
97 ஆனதிறத் தாற்குடும்ப பாரவியா
பாரத்தி லணுகும் போது
போனபொருட் கிரங்காமற் பொருந்து
மாத்திரமே புசித்து வாழ்வாய்

தீனமுற வருபொருளைச் சிந்தியார்
வந்தபொருட் டுதென் றெண்ணுர்
ஞானபர ராஞேர்க்குச் சுபாவமாங்
குணமிதுவே நளினக் கண்ணய்.

கஉ

கங

### ஒழிவி லொடுக்கம்

98 நாயேறி வீழ்ந்தென் னடாத்துகிலென்
ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தென்
பேணுகிலென்—ஞேயார்
பெருமை சிறுமையிலே பின்னுமுன்னு மில்லே
வரைவற்று வேண்டியசெய் வார்.
கசு

### † சிவ—சமாதி

99 யாவ னிங்குமெய் யுணர்ந்தவ னவனேயே
யிமையப்
பாவை தன்னேயோர் பாகம்வைத் தவன்பர
வுவது
நாவின் மங்கையை நயந்தவ னவில்வது
மவனேப்
பூவின் மங்கையைப் புணர்ந்தவன் புகழ்வது
மவனே. கரு

100 கரையின் மெய்ஞ் ஞான வின்பப் பிரமமாங்
கடலி னுள்ளே
யொருவன துள்ள மொன்றி யொடுங்குமே
லவனேப் பெற்ருேர்
பெரியபே றெல்லாம் பெற்ருர்
பேணுமுக் குலமுந் தூய்தாம்

பொருவிலா னிருந்த தேயம் புண்ணிய பூமி
தானே. கசு

சிவ—பூரணப்பிரகாசம்

101 மல்லன் ஞாலமுடி மன்னர் தம்மையும்
வழுத்து மாறிலர் மனத்தினு
னல்லர் தீயரென நாடிடார் பிறரை
நாகமேல் விழினும் வேகமாக்
கொல்ல வேலர்புடை சூழினுஞ்சிறிது
கூசிடார் மெலிவு கூறிடா
ரல்ல வாமென விகற்பியார் சமய
வாத ரோடுமறி வாளரே.

கஎ

102 புண்ணிய பாவ பலன்களுங் கருதார்
பூசியார் புனறனின் மூழ்கார்
பண்ணிய பதுமை தெய்வமென் றுணரார்
பட்டினி விடார்மகம் பண்ணார்
மண்ணிய மணிமந் திரமருந் தறியார்
வடிவிலோர் குறிகொளார் மற்று
மெண்ணிய கரும மியாவையும் புரியா
ரிம்மையு மறுமையு மிகழ்ந்தார்.

கஅ

103 வைய மாமணி யாதியாக வழங்கி னூர்மக
மேறினூர்
துய்ய மாநதி யாடி னூர்துனி யார்த வங்க

டொகுத்துளார்
மெய்ய மாதிக ளெட்டு மேவினர் மெய்யு
ணர்ந்தவர் கையிலே
ஐயய மாத்திர மிட்ட வர்க்குள தான பேறடை யார்களே. சக

† சிவ = சிவப்பிரகாசப்பெருந்திரட்டென்னு நூல். இங்ஙனம் வருமிடந்தோறுங் கொள்க.





## சிவ—மெய்ம்மொழி

104 †தண்ணி தானசண் டாளர்கள் சாதிவே
தியரென்
றெண்ணு மாறிலன் ஞானியிச் செகத்தியா
வையுந்தா
னுண்ணு மோதன மாதலா லுண்டியா தியினுந்
திண்ணி தாநலன் றீங்குசிந் தித்திடான்
சிறிதும். உo

105 ஓசைகேட் டிடுக செவியறு சுவையு
முண்ணநா
வுடலுமூ றறிக
வாசமூக் குயிர்ப்ப வுருவுகண் காண மற்றுமெக்
கருமமுஞ் செய்க
வாசுடைப் புலன்க ளனுபவித் திடினு
மப்பின்மூழ்
கிடினுமம் புயத்தின்

பாசடை நீரிற் பற்றிலா தனுபோற் பற்றிலார்
பரமயோ கிகளே.
உக

## சிவ—தத்துவரத்திஞவளி

106 ஒழுக்க மேவின ருயர்ந்தவ ரும்பர்மா முனிவ
ரிழுக்கு நீசர்க ளெண்ணு நான் மறையவ ரியாரும்
பழிக்கு மூர்க்கர்நற் பண்டிதர் பாவிய ரறவோர்

புழுக்க ளியாவையும் போதமென் றிகழ்வுறுர்
புகழார். உஉ

## சிவ—தோன்றி

107 ஆடையு மலருஞ் சாத்து மகிற்புகை தீப
முன்ஞக்
கோடிவே தியரைப் பூசை குறைவறச் செய்த
ருனும்
பீடுறு ஞானி தன்கை பிடித்திடும் பிச்சை
தானு
நாடிடிற் சமமா மென்றே நாதனூ னவிலுந்
தானே. உங
108 ஏவர்தம் மனையின் ஞானி யெய்திடு மவனைக்
கண்டு
மேவிய பிதிர ரெல்லாம் விரும்பிநின் ருடா
நிற்பர்
பாவிய நாக மென்னும் படுகுழி யொருவி

யென்று

மோவிலா வீடு பெற்றே மெனவெழு முவகை யாலே. ௨௪

### சிவ—ஞான சாரம்

109 மன்னனை மனித ரெல்லா மரிமாஞ சனத்தில் வைத்து

மன்னிய வுபசா ரத்தால் வந்தனை செய்யு மாபோற்

பன்னரு மறையனந்தம் பயின்றமெய்ஞ் ஞானி தன்னைப்

பொன்னுல கதனிற் றேவ ரிருடிகள் பூசை செய்வார். ௨௫

---

† தண்ணிதான சண்டாளர் = தாழ்மையுடையதாகிய சண்டாளத் தன்மையுடையவர். 'தண்மைதான் குளிர்ச்சி தாழ்வு' என்பது சூடாமணி நிகண்டு.



### சிவ—பரமார்த்த தரிசனம்

110 யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்போற் காணு

ரோதரு ஞானியத்தை யுளங்கையிற் கனிபோற்

காணும்
யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு
மென்றுங் காண்பார்
காதலின் ஞானி யத்தைக் கண்ணினுற்
றெரியக் காணுன். உகூ

## சிவ—குறுந்திரட்டு

111 பலங்கள் வேண்டிய பரிசெலாம் பலிப்பது
பரமதத் துவஞானி
நலங்கொ ளுமமே மந்திர நாடொறு
நயந்தவ னீராடுஞ்
சலங்க டீர்த்தமா மவன்றிரு மேனியே
சகலதெய்வமுஞ் செவ்வாய்
மலர்ந்த வாசக மேமறு பிறப்பென
வருபிணி மருந்தாகும்.
உள்

112 கண்முதற் புலன்கள் யாவையு மொடுக்கிக்
கரணவா
குலமறக் கடிந்தங்
குண்மைகாண் விருப்போ டுயிர்க்கெலாம்
பரிவுற் றுற்றசிற்
றின்பத்தை யுவர்த்து
வண்மையா முணவு வந்தவா கண்டு வாட்டமு
மகிழ்ச்சியு மின்றித்
தண்மையா முடம்பு தான்றன தென்னுத்
தன்மையோன்
றத்துவ முணர்வான்.

உ௮

## தாயுமானவர் பாடல்

113 காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந்
தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே.

உ௯

114 இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.

௩௦

## இராமாயணம்

115 தீர்வரு மின்ன றம்மைச் செய்யினுஞ் செய்ய சிந்தைப்
பேரரு ளாளர் தத்தஞ் செய்கையிற் பிழைப்ப துண்டோ
கார்வரை நிறுத்தித் தன்னைக் கனலெழக் கலக்கக் கண்டு
மார்கவி யமர ருய்ய வமிழ்துபண் டளித்த தன்றே. ௩௧

116 ஆன தூயவ ரோடுட னாடினர்
ஞான நீரவ ராகுத லன்றரோ
தேனு நாவியுந் தேக்கதி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

௩௨



117 ஆரிய னவனை நோக்கி யாருயி ருதவி யாதுங்
காரிய மில்லான் போனன்
கருணையோர் கடன்மை யீதாற்

பேரிய லாளர் செய்கை யூதியம் பிடித்து
மென்னூர்
மாரியை நோக்கிக்
கைம்மா றியற்றுமோ வைய மென்றான்.கக

குசேலோபாக்கியானம்

118 புகழ்ந்துநறு விரைக்கலவை பூசிடினும் புல்வியரைப்
போல நோக்கி
யிகழ்ந்துபல பேசிடினும்
விருப்புவெறுப் பென்பதவர்க்
கென்று மில்லை
யகழ்ந்தமலக் கிழங்கினராய்ப் பசிவேளை கிடைத்தவற்றை
யமுதாத் துய்த்துத்
திகழ்ந்திடுவர்
சிறிதேனு நாளைக்கு வேண்டுமெனச்
சிந்தை செய்யார்.

கஅ

119 விண்ணிடையே குதன்மீளப் பாதலத்திற்
புகன்மீட்டுப் புவியின் மேவ
லண்ணியபல் பரகாயப் பிரவேசஞ்
செயலுறையு மவ்வி டத்தே
யெண்ணியவெ லாம்வரச்செய்
திடன்முதற்செய்
சித்திகளை யென்றும் வேண்டார்

புண்ணியபா தகமிலார் பெருமையிலார்
சிறுமையிலார் பொய்மெய் யில்லார்.

கடு

120 ஆடுவா ருன்மத்தர் போற்றிரிவார் நகைத்திடுவா
ரங்கை கொட்டிப்
பாடுவா ரின்றிருந்த விடநாளை யிருக்கமனம்
பற்ருர் சுற்றிக்
கூடுவார் தமிற்கூடார் கந்தையன்றி வேறுடுக்கை
கொள்ளா ரன்ருர்
நீடுவார் புகழ்ப்பெருமை யிற்றென்று மதிப்பவரார்
நிகழ்த்து வாரார்.

கடசு

புறப்பொருள் வெண்பாமாலை

121 இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போ
லம்மூன்று முற்ற வறிதலாற்—றம்மி
னுறழா மயங்கி யுறழினு மென்றும்
பிறழா பெரியோர்வாய்ச் சொல்.

கடஎ

குண்டலகேசி

122 வாயுவினை நோக்கியுள மாண்டவைய நாவா

யாயுவினை நோக்கியுள யாக்கையவை
யேபோற்

சு. பெரியோரியல்பு
21

றீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்
தூயவனை நோக்கியுள துப்புரவு மெல்லாம்.
கூஅ

நாலடியார்

123 பாவமு மேனைப் பழியும் படவருவ
சாயினுஞ் சான்றவர் செய்கலார்—சாத
லொருநா ளொருபொழுதைத் துன்ப மவைபோ
லருநவை யாற்றுத லின்று.
கூகூ

124 கடையெலாங் காய்பசி யஞ்சுமற் றேனை
யிடையெலா மின்னுமை யஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய் தலையெலாஞ்
சொற்பழி யஞ்சி விடும்.
சO

பழமொழி

125 அடர்ந்து வறியரா யாற்றுத போழ்து
மிடங்கண் டறிவாமென் றெண்ணி யிராஅர்
மடங்கொண்ட சாயன் மயிலன்னாய் சான்றோர்

கடன்கொண்டுஞ் செய்வர் கடன்.

சகௗ

126 மனத்தினும் வாயினு மெய்யினுஞ் செய்கை
யனைத்தினு மான்றவிந்தா ராகி—நினைத்திருந்
தொன்றும் பரியலரா யோம்புவா ரில்லெனிற்
சென்று படுமா முயிர்.

சஉ

## திரிகடுகம்

127 ஒல்வ தறியும் விருந்தினனு மாருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிற்
சீல மினிதுடைய வாசனு மிம்மூவர்
ஞால மெனப்படு வார்.

சந

128 இல்லார்க்கொன் றீயு முடைமையு மிவ்வுலகி
னில்லாமை யுள்ளு நெறிப்பாடு மெவ்வுயிர்க்குந்
துன்புறுவ செய்யாத தூய்மையு மிம்மூன்று
நன்றறியு மாந்தர்க் குள.

சச

## ஆசாரக்கோவை

129 பழியா ரிழியார் பலருள் ளுறங்கா
ரிசையாத நேர்ந்து கரவா—ரிசையின்றி

யில்லாரை யெள்ளி யிகழ்ந்துரையார் தள்ளியுந்
தாங்கரும் கேள்வி யவர்.

௬௫



130 எய்தாத வேண்டா ரிரங்கா ரிழந்ததற்குக்
கைவாரா வந்த விடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர்.

௬௬

நன்னெறி

131 முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை.

௬௭ 132 உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோ
ரடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

௬௮

நீதி நெறிவிளக்கம்

133 நல்லா ரொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்து
மல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய

செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

சாகூ

அறநெறிச்சாரம்

134 காய்த லுவத்த லகற்றி யொருபொருட்க
ணாய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன்க
ணுற்ற குணந்தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்.

கூ

நீதிவெண்பா

135 தாமரைபொன் முத்துச் சவரங்கோ
ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகு
சவ்வா—தாமழன்மற்
றெங்கே பிறந்தாலு மெள்ளாரே நல்லோர்க
ளெங்கே பிறந்தாலுமென்.

கூக

136 வென்றி வரியுகிரும் வெண்கவரி மான்மயிருந்
துன்றுமத யானைச் சுடர்மருப்பு—நின்றநிலை
|வேறுபடி னுஞ்சிறப்பா மெய்ஞ்ஞானி
நின்றநிலை
|வேறுபடி னுஞ்சிறப்பா மே.

கூஉ

137 இந்திரவி நீள்கிரண மெங்கு நிறைந்தாலு

மிந்திரவி காந்தத் திலகுமே—யிந்திரவி
நேத்திரத்தோ னெங்கு நிறைந்தாலு நித்தனரு
ணேத்திரத்தோர் பாலே நிறைவு.

௩௭

௪. பெரியோரியல்பு

23

138 பொன்னுங் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமுஞ்
சின்னம் படவருத்தம் செய்தாலு—முன்னிருந்த
நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பா
னற்குணமே தோன்று நயந்து.

௩௪

139 பாலினீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையு மேன்மைபோ—னூலினெறி
யுற்றோ ரிடுக்க ணுயிர்கொடுத்து மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து.

௩௫

140 எல்லோர் தமக்கு மினிதுதவ லன்றியே
நல்லோர் தமக்குதவி நாடாரே—வல்லதரு
நாமநிதி மேக நயந்துதவ லன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று,
௫௬

141 திங்க ளமிர்த கிரணமிகச் சீதளமே
திங்களினுஞ் சந்தனமே சீதளமா—மிங்கிவற்றி
னன்பறிவு சாந்த மருளுடையார் நல்வசன
மின்பமிகுஞ் சீதளமா மே.
௫௭

142 கங்கைநதி பாவஞ் சசிதாபங் கற்பகந்தான்
மங்க லுறும்வறுமை மாற்றுமே—துங்கமிகு
மிக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடஞ்சேரி
லக்கணமே போமென் றறி.

௫௮

பெருந்தொகை

143 காதன் மதியங் களங்கமுடைத் தானலும்
பூதலத்தை யெல்லாம் பொலிவிக்கும்—ஓதுசில
குற்ற முடையா ரெனினுங் குவலயத்துள்
நற்றகையார் நல்லரென்றே நாடு.
௫௯

நீதிநூல்

144 தேமலி சுவைக்கனி பலசெ றிந்துயர்
காமரம் வளைதல்போற் கலையு ணர்ந்திடுந்

தூமண மாட்சியோர் தொழுவர் யாரையும்
பாமர ரெவரையும் பணிந்தி டார்களே.

சு0

145 குலமணி வெளியு ருதாழ் குரவையூ டொளித்தி
ருக்குஞ்
சலமிசை யெவருங் காணச் சஞ்சரித் திடுந்து
ரும்பு
கலமென மானம் பூண்ட கலைவலோ ரடங்கி நிற்பர்

புலனில்சீத் தையர்தம்
மைத்தாம் புகழ்ந்தெங்குந் திரிவர் மாதோ.



## செய்யுட்கோவை—(தி: ல.)

146 விருப்பா லுலகத் தவர்குறை யாடி விழைவொடிந்த
நெருப்பால் வெதும்பினும் வாழ்வால் மகிழ்ந்து நெளிந்திடினும்
ஒருப்போல் நிலைபிச காதொளி காட்டு முயருடுப்போல்
இருப்பார் பெரிய ருலகெண்ணி டாம விலங்கிக்கொண்டே.

சு உ

147 ஒழுக்கா று பாய்வழிச் சாக்கடை நீர்சென்
றடைவதுபோல்
அழுக்கா று பாயும் தகைசே ரிடத்திலவ்
வாற்றுவெள்ளம்
வழுக்கா தணையு மிழுப்பது போல்தகை

மாண்புடையோர்
இழுக்காளர் சொல்லுக்குங் காயா தடங்கி
யிருப்பரன்றே. கூஅ

திருக்குறள்

148 இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.
கூச
149 செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.
கூரு

---

# ரு. அறச்சிறப்பு

கந்தபுராணம்

150 தருமமென் றொருபொரு ளுளது தாவிலா
விருமையி னின்பமு மெளிதி னுக்குமா
லருமையில் வரும்பொரு ளாகு மன்னது
மொருமையி னோர்க்கலா லுணர்தற்
கொண்ணுமோ. க

151 தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடு
மருளெனுங் குழவியு மணையு மாங்கவை
வருவழித் தவமெனு மாட்சி யெய்துமேற்
றெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால்.
உ 152 ஆற்றிடுந் தருமம் விஞ்சை
யரும்பெறன் மகவு சீர்த்தி
ஏற்றிடு கொற்ற மாற்ற விருநிதி பெருமை
யின்பம்
நோற்றிடு விரதஞ் சீல நுவலரும் போத
மியாவும்
கூற்றுவன் கூவு ஞான்று குறித்திடிற்
கூடு மோதான். ந

காஞ்சிப்புராணம்

153 அறமே மறங்கண் முழுதமிழ்க்கு
மறமே கடவு ளுலகேற்று
மறமே சிவனுக் கொருவடிவ
மாகுஞ் சிவனை வழிபடுவோர்க்
கறமே யெல்லாப் பெரும்பயனு
மளிக்கும் யார்க்கு மெவ்விடத்து
மறமே யச்சந் தவிர்ப்பதென
வறைந்தான் சாதா தபமுனிவன். சா

விநாயக புராணம்

154 தேங்குவிண் போகமுஞ் சிறந்த முத்தியு
மீங்குறு மாக்கமு மினிது நல்கலா

லோங்கிய வறத்தினை யுளமுன் மூன்றினும்
பாங்குற நித்தலும் பரிந்து செய்தியால்

155 வழுக்கறு மறத்தினை மற்றுச் செய்துமென்
றொழுக்கிடா தொல்லுறும் வகையின் ஞச்சொலு

மழுக்கெனு முளத்தழுக் காற வாமுத
லிழுக்கொடு வெகுளியு மின்றிச் செய்கவே.



156 அன்புறு மறத்திறு லடுக்கு மின்பமே
யின்பெனத் தக்கதா லேனை யின்பெலாந்
துன்பமும் பழியையுந் தோற்று மாதலால்
வன்புறு மறத்தினை மறப்பிற் கேடுறும்.

எ

157 ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண்
ணூடி.
யோதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர்
மடந்த டாகங்
கோதிலா வுரிஞ்சி சுண்ணங் கொலையுயிர்
விடுத்த லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணோய் மருந்துநன்
மகப்பால் சோறு.அ 158 அறுசம யத்தோர்க் குண்டி
யழிந்தோரை நிறுத்த லட்டூண்
பிறரறங் காத்த லையம் பெண்போக மகப்பே
றுய்த்த
னறியதீன் விலங்கூண் வண்ணா ஞவிதன்
சிறைச்சோ ருதி
மறுதலத்
தறமெண் ணான்கு மனையறத் திவ்வூர் நல்கும். கூ

159 பூதானம் பரிதேர் யானை பொன்வெள்ளி விளைவு கன்னி
காதானந் தயில மெள்ளுக் கலைபணி யடிமை யில்லங்
கோதான மன்ன தானங் கூறுமெண் ணிருதா னத்தி

னேதான பலனு மன்ன மிட்டுண்பார்க் கருளு
மிவ்வூர். கO

## சேது புராணம்

✓ 160 திருவு மின்புஞ் சிறப்பும் புகழுமற்
றொருவ ராக்கலு நீக்கலு முள்ளவோ
மருவும் புண்ணிய மாந்தர்க் கவையெலாந்
தரும மின்றெனிற் றருமே சிதையுமால்.
கக

## திருக்கூவப் புராணம்

161 தரும மேயிணை யில்பொரு டரையிடைத் தகைசா
லொருமை யின்பிணை யுதவிவிண் ணுலகினு முடன்போ
யருமை யின்பமுய்த் தந்தகற் செறுமெனி லறமே
யிருமை யுந்துணை யாகுவ தன்றிமற் றில்லை.
கஉ

## கூர்ம புராணம்

✓ 162

அறந்திறம் பாது நாளு மரும்பொருள் காமந் துய்ப்போர்
சிறந்தவிவ் வுலகந் தன்னி லளப்பருஞ் செல்வ மெய்தி
மறங்கிளர் வடிவே லுண்கண் வானவர் மகளி ரோடு
முறங்கிடா தின்பந் துய்க்கு முலகினி லினிது வாழ்வார். கசு

திருப்பரங்கிரிப் புராணம்

163 தருமமே தனித்த ஞான்று தக்கதோர் துணைய தாகுந்
தருமமே பொருள்க ளனைத்துந் தந்திடும் வருண நாலுந்



தருமமெய் யாகச் செய்யுஞ் சமயமா றுடனே மற்றுந்
தருமமே காக்கும் வேந்தர் தடமுடி யிடறுந் தாளாய். கசு
164 இளமையர் காளை யானே ரெழிலறு விருத்த ரேனும்
வளர்தரு மங்கள் வேண்டு மருவுகண் ணுடி தன்னுள்
விளையுமுந் துருளும் போது மேனிமெய் யன்று காலன்
வளைவது மறியா ரந்தோ மட்டெடுத் திரைக்குந் தாராய். கரு

165 சிறுபொருள் கைக்கொண் டோருஞ்
செயத்தகு தருமஞ் செய்தா
லுறுபொருள் கைக்கொண் டோர்செ
யறத்தினு முயர்ந்து தோன்று
முறுபொருள் கைக்கொண் டோரு
முயர்வுருத் தருமஞ் செய்யிற்
சிறுபொருள் கைக்கொண் டோர்செய்
யறத்தினுஞ் சிறிதாத் தீரும்.

கசு

166
தருமமே யுலகம் போற்றச் சகலகா ரணம தாகுந்
தருமமே யழியா தென்றுந் தாபர மாகி நிற்குந்
தருமமே தனைவேட் டோர்க்குச் சவுக்கிய
மனைத்து நல்குந்
தருமமே முத்தி சேருஞ் சாதன மென்றுட் கொள்வான்.

கஎ

167 ஈங்கியற் றறத்தி னாலே யெய்திடுஞ் சித்த
சுத்தி
யாங்கது மேவின் யோக மாமத னாலின் பாகும்
பாங்குசே ரிதனைத் தேராப் பாதகர் பொருளை
யீட்டி
நீங்குவர் வறிதே யெல்லா நிரயத்துங் குளிப்ப
வென்றான். கஅ

168 எண்ணருந் தரும வாஞ்சை யெய்தினோர்
சாந்த மேவிக்

கண்ணருஞ் சுத்தி பெற்றுக் கதிக்கர சாகி வாழ்வார்
புண்ணரும் பொருளில் வாஞ்சைப் பட்டவ ரளவாப் பாவ
நண்ணருங் குணமாக் கொண்டு நரகெலாந் துளையா நிற்பர்.

கசு

## சிவதருமோத்தரம்

169 பாம்பழல் வாயினுற் பற்ற மண்டுகந்
தேம்பிடுந் துயருறுஞ் சீவன் றேயுநா
ளோம்பிட வல்லரே யுற்ற மற்றையார்
போம்பொழு தருந்துணை புரிந்த புண்ணியம்.
உ0

## பிரபுலிங்கலீலை

170 எய்தற் கரிய யாக்கைதனக் கெய்திற் றென்று லதுகொண்டு
செய்தற் கரிய வறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின்



றுய்தற் கொருமை பெறவெண்ணு துழல்வோ னுடம்பு பொற்கலத்திற்
பெய்தற் குரிய பால்கமரிற் பெய்த தொக்கு மென்பரால். உக

171 மின்போ லழியு முடல்கொடுநல்வினைசெய் தழியா வுடம்பெய்த
வின்போ டமர்த லாயிருப்ப யாக்கை வருந்து மென்றெண்ணி
யன்போ டறஞ்செய் திளையாம லருந்தி வாளா விருக்குமவன்
றன்போன் மருள ரிலையென்றான் றண்பூம் பொழில்வைத்
தளிக்கின்றான். உஉ

பிரபோத சந்திரோதயம்

172 தருமமா வதுவே யின்பந் தருமலாற் றரும நீக்குங்
கருமமா வதுபோற் றோன்றிக் காட்டினும் பசுமட் பாண்டத்
தருமையா நிரப்புந் தெண்ணீ ரனைத்துமப் பாண்டத் தோடு
மொருமையாக் கெடுத லேபோன் றொருகணத் தழியு மன்றே.
உங

இராமாயணம்

173 முன்புநின் றிசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின் றுறுதியைப் பயக்கும் பேரற
மின்பம்வந் துறுமெனி னினிய தாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற் றுறக்க லாகுமோ.
உச

174 நிறப்பெரும் படைக்கல நிறத்தி னேருற

மறப்பயன் விளக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினுந் திருவெலா மிழப்ப வெய்தினும்

துறப்பில ரறமெனல் சூர ராவதே.
உரு

175

அன்னதே முடிந்ததைய அறம்வெல்லும் பாவந் தோற்கும்
என்னுமீ தியம்ப வேண்டுந் தகையதோ வினிமற் றுன்றல்
உன்னிய வெல்லா முற்றும் உனக்குமுற் றுத
துண்டோ
பொன்னகர் புகுதி யென்னப் புகழ்ந்தவ
னிறைஞ்சிப்
போனான். உசு

176 தீயவை செய்வா ராகிச் சிறந்தவர் பிறந்த
உற்றார்
தாயவை தந்தை மாரென் றுணர்வரோ
தருமம் பார்ப்பார்
நீயவை யறிதி யன்றே நினக்குநா னுரைப்ப
தென்னோ
தூயவை துணிந்த போது பழிவந்து தொடர்வ
துண்டோ. உஎ

சீவகசிந்தாமணி

177 திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்

பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினு மறத்திற மறத்த லோம்புமின்
கரும்பெனத் திரண்டதோட் கால வேற்கணீர்.

உஅ

## ரு. அறச்சிறப்பு 29

### சிலப்பதிகாரம்

178 நாளைச் செய்குவ மறமெனி லின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கு
மிதுவென வரைந்து வாழுநா ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை.

உகூ

### மணிமேகலை

179 தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வ
ரீற்றிளம் பெண்டி ராற்ருப் பாலகர்
முதியோ ரென்னு னிளையோ ரென்னுன்
†கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பவிவ்
வழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டுங்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து

மிக்க நல்லறம் விரும்பாது வாழு
மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ.

கூO

180 இளமையு நில்லா யாக்கையு நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்
மிக்க வறமே விழுத்துணை யாவது.

கூக

## வளையாபதி

181 பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செல்லா
தருளைப் பொருளா வறஞ்செய்தல் வேண்டு
மருளைப் பொருளா வறஞ்செய்து வான்கண்
ணிருளியல் பெய்தாத தென்னே நமர்காள்.

கூஉ

## பாரதம்

182 உலகெலாங் காக்கு மொருவ னொருவன்
உலகெலாங் காலா லுழன்றும்—விலையுண்டாங்
காராது நல்கூரு மென்று லறம் பாவம்
பாரதா தென்னேவிப் பார்.

கூ௩

## பெருந்தொகை

183 சொல்ல லோம்புமின் றேநனி

செல்ல லோம்புமின் றீநெறி
கல்ல லோம்புமின் கைதவம்
மல்லன் ஞாலத்து மாந்தர்காள். க௩

† கொடுந்தொழிலாளன் = யமன்.



184 சொல்லல் சொல்லல் தீயவை
சொல்லல்—எஞ்ஞான்றும்
புல்லல் புல்லல் தீ நெறி புல்லல்—எஞ்ஞான்றும்
கொல்லல் கொல்லல் செய்ந்நலங்
கொல்லல்—எஞ்ஞான்றும்
நில்லல் நில்லல் நீசரைச்
சார்ந்தங்—கெஞ்ஞான்றும். கடு

185 நன்மை மேவுவார் மேவுவார் பெரும்பொரு
ளென்கும்
புன்மை மேவுவார் யாவரும் புகழொடு
பொருந்தார்
தொன்மை மேவுவார் மேவுவார் தொடர்வருச்
சுற்றம்
இன்மை மேவுவார் யாவரு மின்ப மொன்
றெய்தார் கசு

பழமொழி

186 ஈனுலகத் தாயி னிசைபெறூஉம் அஃதிறந்
தேனுலத் தாயி னினிததூஉந்—தானொருவன்

நாள்வாயு நல்லறஞ் செய்வார்க் கிரண்டுலகும்
வேள்வாய் கவட்டை நெறி

கள 187 பலநாளு மாற்ரு ரெனினு

மறத்தைச்

சிலநாள் சிறந்தவற்ருற் செய்க—முலை

நெருங்கி

நைவது போலு நுசுப்பினுய் நல்லறஞ்
செய்வது செய்யாது கேள்.

கஅ

நாலடியார்

188 தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு

செல்வதுமற்

றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—ஆங்குத்

தாம்

போற்றிப் புனைந்த வுடம்பும் பயமின்றே
கூற்றங் கொண் டோடும் பொழுது.

கக 189

மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னுது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா

னற்கா யுதிர்தலு முண்டு.

௬௦ 190 இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம்.

௬௧
191 என்னேமற் றிவ்வுடம்பு பெற்று மறநினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—யன்னோ
வளவிறந்த காதற்றம் மாருயி ரன்னார்க்
கொளவிழைக்குங் கூற்றமுங் கண்டு. ௬௨



## ரு. அறச்சிறப்பு

192 பெருங்கட லாடிய சென்று ரொருங்குட
னோசை யவிந்தபின் னாடுது மென்றற்று
லிற்செய் குறைவினை நீக்கி யறவினை
மற்றறிவா மென்றிருப்பார் மாண்பு.
௬௩

### நான்மணிக்கடிகை

193 நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்புங்
குளத்துக் கணியென்ப தாமரை பெண்மை
நலத்துக் கணியென்ப நாணந் தனக்கணி

தான்செல் லுலகத் தறம்.

௬௪

## அறநெறிச்சாரம்

194 தனக்குத் துணையாகித் தன்னை விளக்கி
யினத்து ளிறைமையுஞ் செய்து—மனக்கினிய
போகந் தருதலாற் பொன்னே யறத்துணையோ
டேகமா நண்பொன்று மில்.

௬௫

195 ஈட்டிய வொண்பொருளு மில்லொழியுஞ் சுற்றத்தார்
†காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர்—மூட்டு
மெரியி னுடம்பொழியு மீர்ங்குன்ற நாட
தெரியி னறமே துணை.

௬௬

196 இன்சொல் விளைநிலமா வீதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
யன்புநீர் பாய்ச்சி* யறக்கதி ரீனுமோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

௬௭

197 காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச்
சாலச்செய் வாரே தலைப்படுவார்—மாலை

கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொ
லறங்காலை செய்யாத வாறு.
சஅ

198 சென்றநா ளெல்லாஞ்
சிறுவிரல்வைத் தெண்ணலா
நின்றநாள் யார்க்கு
முணர்வரி—தென்றெருவ
னன்மை புரியாது நாளுலப்ப விட்டிருக்கும்
புன்மை பெரிது புறம்.
சக

† காட்டுவாய் = இடுகாட்டில்.

* "அறப்பைங்கூ ழாக்குவார்க், கென்று
மிடும்பை யிலை"
என்பது புறத்திரட்டிற் கண்ட பாடபேதம்.



199 இன்றுளா ரின்றேயு மாய்வ ரவருடைமை
யன்றே பிறருடைமை யாயிருக்கு—நின்ற
கருமத்த ரல்லாத கூற்றின்கீழ் வாழ்வார்

தருமந் தலைநிற்ற னன்று.

௧௦

200 மின்னு மிளமை யுளதா மெனமகிழ்ந்து
பின்னை யறிவென்றல் பேதைமை—தன்னைத்
துணித்தானுந் தூங்கா தறஞ்செய்க கூற்ற
மணித்தாய் வருதலு முண்டு.

௧௧

201 அம்மைத்தாஞ் செய்த வறத்தின் வருபயனை
யிம்மைத்துய்த் தின்புறு நின்றவ—ரும்மைக்
கறஞ்செய்யா தைம்புலனு மாற்றுத னல்லாக்
கறந்துண்டஃ தோம்பாமை யாம்.

௧௨

202 செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப்
பல்கிளையும் வாடாமற் பார்த்துண்டு—நல்லவாந்
தான மறவாத தன்மையரே லஃதென்பார்
வானகத்து வைப்பதோர் வைப்பு.

௧௩

நன்னெறி

203 கொள்ளுங் கொடுங்கூற்றங் கொள்வான் குறுகுதன்மு
னுள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்

பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

௫௪

நல்வழி

204 ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வ
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடுந்
தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக
வுண்ணீர்மை வீறு முயர்ந்து.

௫௫

நீதிநூல்

205 எத்தொழிலு முற்பழக்க மின்றியெய்தா
தறமென்னு மிணையொன் றில்லா
அத்தொழின்முற் பழக்கமின்றிச் சாங்காலத்
தமையுமோ வருமன் றற்கு.
வத்திரம்வேண் டிற்பருத்தி விதைத்துமுன்னம்
நெய்யாமல் மணஞ்செய் காலத்
தெரித்ததுகில் வேண்டுமென வெத்தனை பேர்
முயன்றாலு முறுமோ நெஞ்சே.

௫௬



206 தினங்கள்செலச் செலவேதோ பெற்றதுபோன்
மகிழுநெஞ்சே தினங்க ளோடுங்
கனங்கொளுமுன் னாயுள்நாள் கழிவதுண

ராயுயிர்தீர் காயஞ் சேரும்
வனங்கடுகி வாவென்ன விளித்துன்பால்
தினநெருங்கும் வன்மை யுன்னி
முனங்கொளறி யாமையைநீ யினங்கொள்ளா
தறஞ்செய்ய முயலு வாயே.

ருஎ

207 பரியூர்வோன் தனைமறந்து பரிக்குபசா
ரங்கள்மிகப் பண்ணல் போலும்
பெரியகட வுளைப்பணியா தாலயத்தை
யலங்கரிக்கும் பித்தர் போலும்
அரியபொருள் வெளியிட்டுச் செப்பினைக்காத்
திடல்போலு மான்மா வுக்கே
உரியவறம் புரியாமல் உடலினைநீ
யோம்புகின்று யுள்ளப் பேயே.

ருஅ

208 ஒருவனைப் புதிதாக் காணினு மவனோ
டுறவுசெய் யினும்பணி கொளினும்
பெருமையோன் தீய னெனவறி யாமுன்
பேசிடார் தீயனேற் பெயர்வார்
தருமநற் குணத்தைத் தீயரும் புகழ்வார்
சழக்கினைச் சழக்கரு மிகழ்வார்
இருமைதீ ரறத்தின் பெருமையு மறத்தின்
இழிவுமீ துன்னுவாய் மனனே.

ருக

209 இன்னமு தத்தின் முன்வே
றினிமையு முளதோ பானு
முன்னமோர் சுடரு முண்டோ ?
மோக்கத்திற் சுகம்வே றுண்டோ ?
துன்னற மேநல் லோர்க்குத்
துகளறு செல்வ மாகும்
அன்னதை யன்றி வேறோர்
ஆக்கமும் வேண்டுங் கொல்லோ.

சுO

210 நாம்பணி வோர்க ளெல்லாம்
நமைத்தொழச் செய்யுந் தேவர்
ஆம்ப ணி நல்கும் விண்ணும்
அகிலமும் வணங்கச் செய்யும்





சாம்பணி யில்லா வீசன்
தாளிணை மருவச் செய்யும்
தேம்பணி தரும மல்லால்
செல்வம்வே றுளதோ நெஞ்சே.

சுக

## செய்யுட் கோவை (தி. ல.)

211 நிறம்பற்றிச் சாதி மதம்பற்றிச் செல்வ

நிலைபகைசேர்

மறம்பற்றி நீதி திறம்பி மனிதரை வாட்டுகின்றோர்
அறம்பற்றி எவ்வுயிர் மாட்டு மியங்கு பவனருளின்
திறம்பற்றி உய்வது தானெங்ங னேவுட்
டெளிகிலனே. சுஉ

## திருக்குறள்

212 சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தி னூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

சுக

213 அறத்தி னூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

சுச

214 ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

சுரு 215 அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

சுசு 216 அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

சுஎ

---

## சு. நன்றியில் செல்வம்

## சீவக சிந்தாமணி

217 கூந்த லகிற்புகையும் வேள்விக் கொழும்புகையும்
ஏந்து துகிற்புகையும் மாலைக் கிடும்புகையும்
ஆய்ந்த பொருளொருவர்க் கீயா வதிலோப
மாந்தர் புகழேபோல் தோன்று மறைந்தனவே.

௧

## நீதி நூல்

218 வேம்புதே னீயுமோ வெயில்தண் ணாகுமோ
பாம்பமு தளிக்குமோ பரிவில் பூரியர்
தாம்பொதி யாளெனத் தாங்கும் பொன்னினைத்
தேம்புமா துலர்க்குளஞ் சிறந்த ளிப்பரே?

௨

219 ஈகையில் லாதுபொன் னீட்டு வோன்கொண்ட
தோகையு மைந்தருந் தொலைகி லானென
ஓகையா யருவிட முணவி விட்டவன்
சாகையே கருதிமா தவஞ்செய் வார்களே.

௩

220 அனுபவ மொன்றே பொன்னால்
ஆயநற் பயனஃ தின்றேல்
புனலிலாத் தடத்தைப் பெய்யாப்
புயலினைப் பொருவு மப்பொன்
தினமுமே நுகர்த லின்றித்
தீனர்க்கும் வழங்க லின்றித்

தனமதைக் காத்தல் நச்சுத்
தருவினைக் காத்தல் போலாம்.

221 தமதென உலோப ரீட்டுந்
தனத்தினைக் கொடுங்கோல் மன்னர்
எமதென இருப்பர் கள்வர்
எமதென்பர் கிளைஞ ரெல்லாம்
உமதெம தெனவா திப்பர்
உலகென தென்னும் யாமும்
நமதென்போம் பாரந் தாங்கி
நலிவதென் பிசின ரம்மா.

திருக்குறள்

222 பொருளானும் எல்லாமென் றீயா திவறும்
மருளானும் மாணாப் பிறப்பு.



223 கொடுப்பதூஉந் துய்ப்பதூஉம் இல்லார்க்
கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

எ 224 அற்ருர்க்கொன் ருற்ருதான் செல்வம்
மிகநலம்
பெற்ருள் தமியள்மூத் தற்று.

225 நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

226 ஈட்ட மிவறி யிசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

அ
கூ
கO

## எ. ஈகை

### திருமந்திரம்

227 கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்குஞ்
சீலமு நோன்பு மிலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது வாகுமே.

228 ஈவது யோக மியம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
யாவ லறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொள் ளீரே.

உ

229 மண்மலை யத்தனை மாதன மீயினும்
அண்ண லிவனென் றஞ்சலி யத்தறு
யெண்ணி யிறைஞ்சா தார்க் கீந்த விருவரும்
நண்ணுவ ரேழா நரகக் குழியிலே.

ந

## கந்தபுராணம்

230 என்னுனு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னுன் முடிவதெனிற் றுனே முடித்தறலை
சொன்னுன் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னுண் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே.

ச

231 உய்கை பொருளா யொருவர்க்கு மோருதவி
செய்கை யிலனேல் சிறியோன் கழித்தபகல்
வைக லதுவோ வறிதே யவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்தகொட்டி போலும் பொலிந்துளதே.

ஔ

## காஞ்சிப் புராணம்

232 கொடையே யெவர்க்கு மெய்பேறுங்
கொடுக்கு நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியி
னொழுகச் செய்யுங் குறைதீர்ந்த
கொடையே பகையை யுறவாக்குங்
குலவும் பூத மனைத்தினையுங்
கொடையே புரக்கு மென்றுள்ளங்
கொள்ளப் புகன்றான் கவுதமனே.



## தணிகைப்புராணம்

233 நிரைசெய் நீர்விழுஞ் சிலையினைப்
புணையன்றிச் சிலகரை யேற்றாற்
புரைசெய் பாவத்தி னழுந்தினோர்
தமைப்புரை யொழிந்தவர் தாமன்றி
நிரைசெய் மேற்கதி செலுத்தவல்
லாரலர் நிகழ்கரி சினரற்று
லுரைசெய் பாத்திர மபாத்திர
மறிந்தளித் தொழிக்கநற்
பயன்வேட்டோர். எ

234 தருக்குறுஞ் செல்வ மெய்திற் றருக்கினுற்
பிழைக ளெல்லாம்
, பெருக்குநல் கூரி னந்தோ
பிறருழை யிரந்து சேறன்
/
மரித்தலிற் றுயர மீண்டும் வந்தவர்க் கிரக்க மற்றுக்
\ கரத்தன்மற்
றதனி னூங்குக் கடுந்துய ரறிவிலார்க்கே. அ

விநாயக புராணம்

235 இரப்பவன் வாளா தேக
விலனெனு மெவ்வங் கூறு
திரப்பினை நிரப்ப னன்று மிதனினன் றுவ தாகு
மிரப்பவ னிலனென் றுர வியம்பிய வெவ்வஞ்
சொல்லென்
றிரப்பினும்
பிறர்பாற் கூறு திரக்கமோ டீதன் மைந்தா. கூ

236 அருத்தியி னிலனென் னுமு னளித்தலு மிலனென் றப்பா
லுரைத்தில னுகச் சால வுதவலு மேற்கின் றுனும்
வருத்துற விலனென் னுமை வழங்கிட வுரைவில் செல்வம்
பொருத்தலு மொன்றி னென்று புகழ்மிக
விளங்கி நிற்கும். கo

237 நலமிகு செல்வம் பேறு நல்குர வினரைக்
காத்த

விலனற மாதி சீர்த்தி யிலனெனப் பிறர்சொ
லெவ்வ
வலனுரைக் கஞ்சி யேனும் வறியனை யிலனென்
றெள்ளா
தலர்புகழ் பயனும் வேண்டி ஞக்கையு மளிக்க
மைந்தா. கக

238 சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாத
லின்றிப்
பூதல மிறக்குங் காறும் புகழுடம் பிருக்கு மந்தக்
கோதறு புகழின் யாக்கை கொடையினுற் செல்வங் கூர
வாழ்தலை யுடையா ரன்றே வானமும் வணங்கு நீரார்.
கஉ

239

வைத்துப் பொருளைத் தானுகரான் வழங்கா னிருந்துஞ் செத்தானே
செத்த பின்ன ரென்செய்வான் றீயார் கொள்வ ரீட்டுதலான்
மெத்தும் வருத்த மேயன்றி வேறென் றில்லை
பெரித்தும்
யாதலினுற் ...

வெறுக்கை நன்றியுறல் புசித்து வழங்க லேயாகும்.
கங

39

## திருக்கூவப் புராணம்

240 மனைக டோறுமுற் றிரந்திடு கபாலியுண் மகிழ
வனக மால்விடை யூர்ந்துவந் தெளிதினி லருளக்
கனைக ருங்கட லுலகினிற் செய்வது கருதின்
வினைக டீர்ந்திடு தானமே யன்றிவே றுளதோ.

க௪ 241 இகத்தி னன்கொடைப் பெருமையை
யறிந்துளோ ரில்லென்
றகத்தி னுமமு முரைசெயா ரவரரி தாகத்
தொகுத்த வோர்பொரு ணல்குவ ரென்பதென் றுணிந்து
மிகுத்த வாவியுங் கொடுப்பரால் வேண்டுமுன் விரும்பி.

க௫

## காசிகண்டம்

242 முகனெதி ரொன்றும் பிரியின்மற்றென்று
மொழிபவர் விழைவுறு தூத
ரகன்றகேள் வியிலா ரருமருத் துவர்க
ளரும்பொருள் கவருநர் தூர்த்தர்
புகலருந் தீமை புரிபவர் மல்லர்
செருக்கினர் புன்றொழிற் றீயோ
ரிகழ்தரு மினையோ ரொன்பது பெயர்க்கு
மீந்திடல் பழுதென விசைப்பார்.

க௬

243 மாண்புடை யாளர் கேண்மையர் தத்தம்
வழிமுறை யொழுக்கினி லமர்ந்தோர்
சேண்படு நிரப்பி னெய்திஞேர் புரப்போர்
தீர்ந்தவர் தந்தைதாய் குரவர்
காண்டகு'முதவி புரிந்துளோ ரிணையோ
ரொன்பதின் மருமளங் களிப்ப
வேண்டுறு நிதிய மளிப்பின்மற் றென்றே
கோடியா மெனமறை விளம்பும்.

கஎ

பகவற்கீதை

244 முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே
முடித்திதனுற்
பின்பொருநற் பொருள்விளையு மென்பதுவும்
பேணுதே
நன்குடைய காலத்தே நல்விடத்தே நல்லவர்க்குத்
தன்பொருளைக் கொடுக்குமது சாத்துவிக தானமே.

கஅ

245 கொண்டுசெயத் தகுங்கரும மெனுங்குறிப்பொன்
றின்றியே
பண்டுசிலர் செய்ததற்காப் பரிவோடு
பண்ணினவு
முண்டிதனுன் மேல்விளைவென் றுணர்வோடிச்
செய்வனவு

மெண்டிசையு நிறைபுகழா யிராசதமாந் தானமே.

கக



246 வாயாத தொருபொருளை வழங்காத காலத்தே
யேயாத நிலத்திடையே யிழிந்தகுலத் தவர்களுக்கே
யாயாத வறிவினொடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல்
சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே.

உ௦

## பட்டினத்தடிகள் பாடல்

247 பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்துமண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடை நடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே.உக

248 நாயாய்ப் பிறந்திடி னல்வேட்டை யாடி நயம்புரியுந்
தாயார் வயிற்றி னரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க்

காயா மரமும் வறளாங் குளமுங்கல் லாவுமென்ன
வீயா மனிதரை யேன்படைத் தாய்கச்சி
யேகம்பனே. உஉ 249 முற்றொடர்பிற் செய்த
முறைமையால் வந்தசெல்வ
மிற்றைநாட் பெற்றோமென் றெண்ணாது
பாழ்மனமே
யற்றவர்க்கு மீயாம லரன்பூசை யோராமற்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறந்து விட்டனையே.
உங

தருமதீபிகை

250 இலையென்று சொல்ல இசையான் குமணன்
தலையிந்தா வென்றருளித் தந்தான்—மலையென்று
சொல்லும் படிசெல்வம் துன்னி யிருந்தாலும்
இல்லையென்பர் புல்ல ரிசைந்து.

உச

புறநானூறு

251 ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிது
மீத லெளிதே மாவண் டோன்ற
லதுநன் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.
உரு
252 மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர்

தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ
ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே.

உகூ

எ. ஈகை

41

253 தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கு
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கு
முண்பன நாழி யுடுப்பன விரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.

உஎ

254 ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ

தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை.

உஅ

255 கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழ
நெருந லுண்டன மென்னுது பின்னுஞ்
செலவா னுவே கலிகொள் புள்ளின
மனையர் வாழியோ விரவல ரவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவ
ருடைமை யாகு மவருடைமை
யின்மை யாகு மவரின் மையே.

உகூ

256 கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினுந்
தொல்லது விளைந்தென நிலம்வளங் கரப்பினு
மெல்லா வுயிர்க்கு மில்லால் வாழ்க்கை
யின்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்
முன்னுங் கொண்டிரென நும்மனோர் மறுத்த
லின்று தம்ம வியறே ரண்ண
லில்லது நிரப்ப லாற்று தோரினு
முள்ளி வருநர் நசையிழப் போரே
யனையையு மல்லை நீயே யொன்று
ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்

பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே.

௧0
257 ஈயென விரத்த லிழிந்தன் றதனெதி
ரீயே னென்ற லதனினு மிழிந்தன்று

கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற லதனி னுயர்ந்தன்று



தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட லுண்ணு
ராகுப நீர்வேட் டோரே
யாவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேறொடு பட்ட சிறுமைத் தாயினு
முண்ணீர் மருங்கி னதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
யுள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்
புலவேன் வாழிய ரோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.

௧௧ 258 நின்னயந் துறைநர்க்கும் நீநயந்

துறைநர்க்கும் பன்மாண் கற்பினின் கிளைமு த லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே

பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே.
௩௨

புறப்பொருள் வெண்பாமாலை

259 முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையு
மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
யிரவாம லீந்த விறைவர்போ னீயுங்
கரவாமை யீதல் கடன்.

௩௩ 260 ஆயா தறிவயர்ந் தல்லாந் தகலிடத்து
மாயா நிதிய மனைச்செறீஇ—யீயா
திறுகப் பொதியன்மி னின்றொடு நாளைக்
குறுக வருமரோ கூற்று.
௩௪

சீவக சிந்தாமணி

261 மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளி
னூசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்

பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்.

௩௫

பெரும்பொருள் விளக்கம்

262 மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு
மோரினமாய்ப் ... பொன்னின் பெயர்படைத்தாற்
போலதே—கொன்னே



யொளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு.

௩௬

இராமாயணம்

263 வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லா
லெள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்
கொள்ளுத றீது கொடுப்பது நன்றால்.

௩௭

264 மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு
மீந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

ரு-அ

## பாகவதம்

265 மூவடி மண்வந் தேற்ருேன் முதல்வனென் றறிந்து மீந்த மாவலி சீர்த்தி யின்னம் மன்னுபு நிலவு மம்மா
யாவரே யானு மாக ஈகுது மிரந்த தென்ருக்
கோவரு குருதி வைவேல் கொற்றவன் கருத்துக் கொண்டான்.

ரு-கூ

## நைடதம்

266 உரவுநீர்க் கருங்கட லுடுத்த மாநிலத்
தருளுட னிம்மையி லளித்த வான்பொருள்
மருவிய மறுமையில் வழங்கு பான்மையால்
இரவலர் தமரினு மினிய ராவரே.

உ0

267 உடைப்பெரும் பொருளினை யுலகி லூதியம்
கிடைப்பதற் களித்தலிற் கிளர்நி ரப்பினுல்
அடுத்துவந் தேற்குநர்க் கார்வ மீதுறக்
கொடுக்கிலொன் றேபல கோடி யாகுமால்.

உக

## குசேலோபாக்கியானம்

268 ஒருசிறு தரும மேனு முஞற்றிடா ரிரப்போர் வந்து
தருநிகர் கரத்தா யென்று சாற்றினுங் கொள்ளா ராகிக்

கருணைசற் றின்றி யெல்லை கடந்திடத் துறந்து மீள்வர்
மருவுபல் கிளையு மோம்பார் வளம்படைத் தென்பெற்றால்.

சஉ

நாலடியார்

269 உண்ணா னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்
றுன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
விழந்தானென் றெண்ணப் படும்.

சரு



270 உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி.

சசா

271 †உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.

சஞ

272 முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள

பின்னரும் பீடழிக்கு நோயுள—கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து.

சகூ

273 ஏற்றகை மாற்ருமை யென்ஞனுந் தாம்வரையா
தாற்ருதார்க் கீவதா மாண்கட—ஞற்றின்
மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகட னென்னும் பெயர்த்து.

சஎ

274 துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன்
றீகலான்
வைத்துக் கழியு மடவோனே—வைத்த
பொருளு மவனை நகுமே யுலகத்
தருளு மவனை நகும்.

சஅ

275 கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்ரு விடுக்குடை
யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வ—மில்லத்
துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தா
லேதிலான் றுய்க்கப் படும்.

சகூ

276 எனதென தென்றிருக்கு மேழை பொருளை
யெனதென தென்றிருப்பன்
யானுந்—தனதாயிற்
ருனு மதனை வழங்கான் பயன்றுவ்வான்
யானு மதனை யது.

௨௦

277 வழங்காத செல்வரி னல்கூர்ந்தா ருய்ந்தா
ரிழந்தா ரெனப்படுத லுய்ந்தா—ருழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலு முய்ந்தார்தங் கைந்நோவ
யாப்புய்ந்தா ருய்ந்த பல.

௨க

278 தினதாகத் தான்கொடான் றுயத் தவருந்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பி னவர்கடியார் தான் கடியான்
பின்னை யவர்கொடுக்கும் போழ்து

௨உ

* உறக்கல் — விரலாற் கிள்ளுதல்.

45

எ. ஈகை

279 பெயற்பால் மழைபெய்யாக் கண்ணு முலகஞ்
செயற்பால செய்யா விடினும்—கயப்புலால்
புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப
என்னை யுலகுய்யு மாறு.

௨௩

280 இல்லா விடத்து மியைந்த வளவினால்
உள்ள விடம்போற் பெரிதுவந்து—மெல்லக்

கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்
கடையாவா மாண்டைக் கதவு.

௫௪

281

நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தற் றுய்ப்பினு மீண்டுங்கா—லீண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்.

௫௫

282 இம்மி யரிசித் துணையானும் வைகலும்
நும்மி லியைவ கொடுத்துண்மின்—உம்மைக்
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்து
அடாஅ அடுப்பி னவர்.

௫௬

283 வழங்கலுந் துய்த்தலுந் தேற்ருதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வந் — தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வஃதன்ரோ
நாய்பெற்ற தெங்கம் பழம்.

கஎ

284 இரப்பவர்க் கீயக் குறைபடுமென் றெண்ணிக்
கரப்பவர் கண்டறியார் கொல்லோ — பரப்பிற்
றுறைத்தோணி நின்றுலாந் தூங்குநீர்ச் சேர்ப்ப
இறைத்தோறு மூறுங் கிணறு.

கஅ

285 கரப்புடையார் வைத்த கடையு முதவா
துரப்புடைய மன்னர்க்கே துப்புரவ தல்லால்
நிரப்பிடும்பை மிக்கார்க் குதவவொன் றீதல்
சுரத்திடைத் தீரப் பெயல்.

கக

286 அடுத்தொன் றிரந்தாற்கொன் றீந்தானைக் கொண்டான்
படுத்தேழை யாமென்று போகினும் போக
அடுத்தேற லம்பாலா யாவர்க்கே யானுங்
கொடுத்தேழை யாயினு ரில்.

கூ௦

சிறுபஞ்சமூலம்

287 கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சா
னிகழ்ந்தவை யின்புரு னில்லார்—மொழிந்தவை



மென்மொழியா லுண்ணெகிழ்ந்
லின்மொழியா லேத்தப் படும்.

தீவானேல் விண்ணோரா

கூக

மூதுரை

288 நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரங்
கன்மே லெழுத்துப்போற் காணுமே—யல்லாத
வீரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகார
நீர்மே லெழுத்திற்கு நேர்.

கூ௨

நல்வழி

289 சாதி யிரண் டொழிய வேறில்லை சாற்றுங்கா
னீதி வழுவா நெறிமுறையின்—மேதினியி
லிட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

கூ௩

290 ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டு—மேற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலு
மில்லையென மாட்டா ரிசைந்து.

சுசு

291 செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை
நொந்தக்கா
லெய்த வருமோ விருநிதியம்—வையத்
தறும்பாவ மென்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்.
சுகூ

292 மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாவருமங்
கில்லை—சுரந்தமுதங்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரே
லுற்றா ருலகத் தவர்.

சுசு

## நன்னெறி

293 பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேரும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

சுஎ

294 எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் யீகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி.
*சுஅ



நீதிநெறி விளக்கம்

295

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோ
னல்குரவே போலு நனிநல்ல—கொன்னே
யருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.
சுகூ

நீதிவெண்பா

296

தாமுங்கொ டார்கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமஞ்செய் வாருஞ் சிலருண்டே—யேமநிழ
லிட்டுமலர் காய்கனிக ளீந்துதவு மாமரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண்.

எ0

297 தானறிந்தோ ருக்குதவி தன்னு லமையுமெனிற்
றுனுவந் தீத றஸியாமே—யானதனுற்
சொன்னுற் புரிதலிடை சொல்லியும்பன்
னுண்மறுத்துப் • பின்னுட் புரிவதுவே பின்.

எக

தமிழ்நாவலர் சரிதை (தனிப்பாடல்)

298 தண்டாம லீவது தாளாண்மை தண்டி
யடுத்தக்கா லீவது வண்மை யடுத்தடுத்துப்
பின்சென்ரு லீவது காற்கூலி பின்சென்றும்
பொய்த்தா னிவனென்று போமே லவன்குடி
யெச்ச மிறுமே லிறு.

எஉ

திருக்குறள்

299 நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

எங

300 அற்ரு ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி.

எச

301 ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.
எஇ

302 சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.
எசு

---

# அ. இல்லறம்

கந்தபுராணம்

303 துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புரவு நல்கி
யிறந்தவர்கள் காமுறு மிருங்கட னியற்றி
யறம்பலவு மாற்றிவிருந் தோம்புமுறை யல்லாற்
பிறந்தநெறி யாலுளதோர் பேருதவி யாதோ. க

விநாயகபுராணம்

304 வருவாய்க் கியைய வாழ்தலுறு மறுவில்
பொருள்யா வுளவா மதுவன்றிப் புகழும்

கற்பின் மனையாள்போற்
பயனு மிகவுண்டாங்

கருதா ரெதிரே யிமிலேற்றுக் காமர் நடையு
முறுமதனு

லொருவா தவளோ
டொப்புறவே யுற்று வாழ்த லறனாகும். உ

## பேரூர்ப்புராணம்

305 உரம்பெறு பிரம சரிவனத் துறைவோ
ருலகனைத் தையுமற நீத்தோர்
பரம்பரன் றெனுது புலத்தவர் விருந்து
பசையுடை யொக்கன்மன் றுறந்தோ
ரரம்புசெ யிலம்பாட் டினரிறந் தாரென்
றையிரு வரையுநன் ருேம்பி
வரம்பெறு தமைப்பி ஞேம்புந ரல்லா
தவர்மனை யறத்தவ ணிலரே. ௩

## திருக்குற்ருலப் புராணம்

306 இத்தகைய நால்வர்களின் மூவருக்கு மிறந்தார்க்கு
மத்தமுத லற்ருர்க்கு மாதார மாதலினு
லுத்தமமா மில்லறமே வாழ்வினுக்கு முயர்கதிக்கும்
வித்துமாந் துறவறத்தின் வேருமா மெனும்வேதம். ௪

307 தருமமெனும் பண்டமிடுஞ் சகடமா மனை வாழ்க்கை
கருமநுகம் பிணித்துமனைக் காதலியுந் தானுமென
விருவராய் முறைசெலுத்தி னெத்துணைத்தூ ரமுஞ்செல்லு
மொருவராய்ப் பூண்டிமுப்பி ஞேரிறையுஞ் செல்லாதால். ௫

### கூர்ம புராணம்

308 தரும மாற்ற னன்னெறியிற்
பொருள்க ளீட்ட றம்மொழுக்கின்
மருவு காமந் துய்த்தறம்மூர்
வாழ்த்த வாழ்த விகழ்வனகள்

புரிதல் செய்யா துவப்பனவே

புரித லுலகத் தொடுமொழுகல்
கருணை யொடுமில் லறம்புரிவோர்
கடனென் றெவருங் கட்டுரைத்தார்.
க

காசிகண்டம்

309 குரவனைத் தாயைத் தந்தையை மனையைக்
குற்றமில் புதல்வனை விருந்தை
இரவுநண் பகலும் வழிபடு வோனை
அதிதியை எரியினை யீங்குக்
கருதுமொன் பதின்மர் தம்மையு நாளும்
கருணைகூர்ந் தினிதளித் திடாது
மருவுமில் வாழ்க்கை பூண்டுளோன் தன்னை
மக்களுட் பதடியென் றுரைப்பார்.
எ

மாயூரப் புராணம்

310 தகுகுணந் தவிரில் லானைச் சார்ந்துல குள்ளோர் யாரு
நகுமுகத் தினரே யாக நயந்துவாழ் வதினுஞ் சீவன்

உகுதிற மெதனு லேனு முடம்பினை யொறுத்த னன்றுஞ்
செகுதிறற் றுன்பம் யாவுஞ் சேராதுன் மரண மென்றே. அ

## சிவ-பரமார்த்ததரிசனம்

311 துறந்தவர் மூவர் தேவர் துளக்கமில் பிதிரர் நோயர்
அறந்திகழ் விருத்தர் பால ரந்தணர் நல்வி ருந்தர்
சிறந்ததாய் தந்தை சுற்றந் திருத்தமுற் றதற்பின் மிக்க
அறந்தரு மில்லா ளோடு மருந்தவில் லறம தன்றே. க

312 கொலையொடு களவுகட் காமங் கோபமென்
புலைகடிந் தைவகைப் புலனு மோம்பின
னிலையினி லணுவது வழுவி னில்லறம்
அலைவுறு நரகிடை யடைக்கு மல்லவோ. கூ

## சிதம்பர மும்மணிக்கோவை

313 நல்லற நூல்களிற் சொல்லறம் பலசில
வில்லறந் துறவற மெனச்சிறந் தனவே
அந்நிலை யிரண்டினுண் முன்னது கிளப்பிற்
கற்றநூற் றுறைபோய்க் கடிமனைக் கிழவ
னற்குண நிறைந்த கற்புடை மனைவியோ

டன்பு மருளுந் தாங்கி யின்சொலின்

† அன்று, ஏ: அசைகள்.





விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியு மாற்றி யிவ்வகை
நல்லற நிரப்பிப் பல்புகழ் நிரீஇப்
பிறன்மனை நயவான் றன்மனை வாழ்க்கைக்கு வரையா
நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலந் துய்க்கும் பெற்றித் தன்றே.
கக

வளையாபதி

314 தார நல்லிதந் தாங்கித் தலைநின்மின்
ஊரு நாடு முவத்த லொருதலை
வீர வென்றி விறன்மிகு விண்ணவர்
சீரி னேத்திச் சிறப்பெதிர் கொள்பவே.
கஉ

நாலடியார்

315 மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த
காப்பா

யிழைவிளக்கு நின்றிமைப்பி
னென்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை யில்லாதா னில்லகங்
காண்டற் கரியதோர் காடு.

கந

நான்மணிக்கடிகை

316 கல்லா வொருவர்க்குத் தம்வாயிற் சொற்கூற்ற
மெல்லில வாழைக்குத் தானீன்ற காய்கூற்ற
மல்லவை செய்வார்க் கறங்கூற்றங் கூற்றமே
யில்லத்துத் தீங்கொழுகு வாள்.

கச

317 மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையுந்
தவமிலா ரில்வழி யில்லை தவமும்
அரசிய லில்வழி யில்லை யரசனும்
இல்வாழ்வா னில்வழி யில்.

கரு

318 எண்ணெக்குஞ் சான்றோர் மரீஇயாரிற்
றீராமை
புண்ணெக்கும் போற்று
ருடனுறைவு—பண்ணிய
யாழொக்கு நட்டார் கழறுஞ்சொல்
பாழொக்கும்
பண்புடையா ளில்லா மனை.

கசு

319 பிச்சையு மையமு மிட்டுப் பிறன்றுர
நிச்சலு நோக்காது
பொய்யொரீஇ—நிச்சலுங்
கொல்லாமை காத்துக் கொடுத்துண்டு
வாழ்வதே
யில்வாழ்க்கை யென்னு மியல்பு.

கஎ

அ. இல்லறம்

51

✓ 320 விருந்து புறந்தரான் வேளாண்மை செய்யான்
பெருந்தக் கவரையும் பேணன்—பிரிந்துபோய்க்
கல்லான் கடுவினை மேற்கொண் டொழுகுமேல்

இல்வாழ்க்கை யென்ப திருள்.

கஅ

✓ 321 மருவிய காதன் மனையாளுந் தானு
மிருவரும் பூண்டீர்ப்பி னல்லா—லொருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடஞ்
செல்லாது தெற்றிற்று நின்று.

கக

322 விளைகாத்து வந்த விருந்தோம்பி நின்றான்
மனைவாழ்க்கை நன்று தவத்திற்—புனைகோதை
மெல்லிய னல்லாளு நல்லள் விருந்தோம்பிச்
சொல்லெதிர் சொல்லா ளெனில்.

உ0
✓ 323 கொண்டான் குறிப்பொழுகல் கூறிய
நாணுடைமை
கண்டது கண்டு விழையாமை—விண்டு
வெறுப்பன செய்யாமை வெஃகாமை நீக்கி
யுறுப்போ டுணர்வுடையாள் பெண்.

உக ✓ 324 மடப்பதூஉ மக்கட் பெறுவதூஉம்
பெண்பான்
முடிப்பதூஉ மெல்லாருஞ்
செய்வர்—படைத்ததனை
விட்டுண்டில் வாழ்க்கை புரிந்துதா
நல்லறத்தே
நிற்பாரே பெண்டிரென் பார்.
உஉ
325

வழிபா டுடையளாய் வாழ்க்கை நடாஅய்

முனியாது சொல்லிற்றுச் செய்தாங்—கெதிருரையா
தேத்திப் பணியுமே லில்லாளே யாண்மகன்
போற்றிப் புணையும் பரிந்து.

உரு

326 அட்டுண்டு வாழ்வார்க் கதிதிக
ளெஞ்ஞான்றும்
அட்டுண்ணு மாட்சி யுடையவ—ரட்டுண்டு
வாழ்வார்க்கு வாழ்வா ரதிதிக
ளென்றுரைத்தல்
வீழ்வார்க்கு வீழ்வார் துணை.

உச

ஏலாதி

327 துறந்தார் துறவாதார் துப்பிலார் தோன்று
திறந்தாரீ டற்று ரிளையார்—சிறந்தவர்க்குப்
பண்ணுளுஞ் சொல்லாய்
பழிப்பிலூண் பாற்படுத்தான்
மண்ணாளு மன்னனு மற்று.

உ௫

திரிகடுகம்

328 நோவஞ்சா தாரொடு நட்பும் விருந்தஞ்சும்
ஈர்வளையை
யில்லத் திருத்தலுஞ்—சீர்பயவாத்.

தன்மையி லாள ரயலிருப்பு மிம்மூன்றும்

நோயே யுரனுடை யார்க்கு.
உக

## சிறுபஞ்சமூலம்

329 புல்லறத்தின் நன்று மனைவாழ்க்கை
போற்றுடைத்தே
நல்லறத்தா ரோடு நடக்கலார்—நல்லறத்தார்க்
கிட்டுண் டினிதேத்தி வாழ்ந்தாரே யிம்மையில்
அட்டுண்டே யாற்றவாழ் வார்.
உ௨

## தண்டலையார்சதகம்

330 புல்லறிவுக் கெட்டாத தண்டலையார்
வளந்தழைத்த பொன்னி நாட்டில்
சொல்லறமா தவம்புரியும் சவுபரியும்
துறவறத்தைத் துறந்து மீண்டான்
நல்லறமாம் வள்ளுவர்போல் குடிவாழ்க்கை
மனைவியுடன் நடத்தி நின்றால்
இல்லறமே பெரிதாகுந் துறவறமும்
பழிப்பின்றே லியற்கை தானே.
உ௩

நன்னெறி

331 காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண்.

உகூ

முதுரை

332 இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
யில்லாளு மில்லாளே யாமாயி—னில்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூருய் விடும்.

௩0

தனிப்பாசுரத்தொகை

333 விழுப்பஞ் சான்ற வியத்தகு மில்லறம்

ஒழுக்க வியலறி வுறுத்துஞ் சாலையாய்
நன்மை தழைத்து ஞயக்கொடை நிழற்றி
மென்மை யரும்பி மேன்மை மலர்ந்துபே
ரன்பு காய்த்துநல் லருள்கனிந் தலகிலா
இன்ப நறை பிலிற்று மினியகற் பகமாய்
இலகிடு முண்மை மலையிலக் கன்றோ
ஏத்துறுந் தகைய இல்லற மெனுமிம்

மாத்தடந் தேரினை வாழ்க்கையாம் போர்க்களஞ்
செலுத்துபு துன்பத் தீயரை யெறிந்து
தொலைத்திட லறியார் துறவு துறவென
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
மயக்கினு மாழ்கலீர் மாந்தர்காள் !
உயக்கமின் றில்லற முற்றுமெய் யுணர்மினே.

௩௧

## திருக்குறள்

334 அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

௩௨ 335 அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற்
புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.
௩௩

336 அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.
௩௪

## கூ. விருந்தோம்பல்

காசிகண்டம்

337 தேவர்தென் புலத்தோர் துறந்தவர்க் களித்த
சேடம்நல் அமுதினு மினிதாம்
யாவரே யெனினும் அதிதிய ரிறந்தோ
ரிமையவர் ஈங்கிவர்க் கன்றிக்
கூவல்போ லாழ்ந்த பாழ்வயி றதனிற்
கொட்டுதற் கமைத்தவெண் சோறு
நாவுறை புழுவாம் எனமறை யனைத்தும்
நவின்றிடு மென்பர்நன் குணர்ந்தோர்.
விருந்தின ருக வொருவன்வந் தெதிரின்

வியத்தல்நன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென வுரைத்தல்
எழுதல்முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற் றவன்றன் னருகுற விருத்தல்
போமெனிற் பின்செல்வ தாதல்
புரிந்துநன் முகமன் வழங்கலிவ் வொன்பான்
ஒழுக்கமும் வழிபடும் பண்பே.

திருக்குற்றுலப் புராணம்

338 அருந்தளவம் மூரலிட வம்புயம்பா சடைவிரிப்பக்
கரும்புதீம் பால்வார்ப்பக் கதலிநறு நெய்வார்ப்பச்
சுரும்பினங்கள் விருந்தூட்டும் சொலவரிதா மந்நாட்டில்
விருந்துபுறந் தருவாரே வியப்பாரைந் தருவாரே.

339 திருவிருந்த வீடுகடை திறந்ததெனக்
கொட்டாரந் திறந்து திங்கள்
உருவிருந்த சடைப்பெருமான் அடியவர்நா
வலர்மறையோர்க் குதவி மேன்மேல்
வருவிருந்து வழிபார்த்துச் செல்விருந்து
முறையோம்பி வரையா தியார்க்கும்
தருவிருந்த தெனவளித்துத் தங்கள்கிளை
தழைப்பவளம் தழைப்பர் யாரும்.

திருவிளையாடற்புராணம்

340 அருந்தின ரருந்திச் செல்ல அருந்துகின் றுரு மாங்கே
இருந்தினி தருந்தா நிற்க வின்னமு தட்டுப் பின்னும்

## கூ. விருந்தோம்பல்

55

விருந்தினர் வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணேக்கு மோரே ருழவர்போல் வாடி நிற்பார். ௩

கூர்மபுராணம்

341 விருந்தினர்க்குங் கடவுளர்க்கு மதிதிகட்கும்
அல்லாமல் விரும்பித் தாமே
அருந்துதற்கென் றுக்குநரு மகவிழைவி
னன்றியின்ப மருந்து வோருந்

திருந்துமுதுக் குறைவெய்தக் கற்பதன்றித்
திருவெய்தக் கற்கின் றோரும்

பொருந்தவரி தாடழக்கட் பதடியெனக்
கற்றுணர்ந்தோர் புகல்வ ரன்றே.

அ

### சீவகசிந்தாமணி

342 நறையும் நானமும் நாறு நறும்புகை
விறகின் வெள்ளி யடுப்பினம் பொற்கலம்
நிறைய வாக்கிய நெய்பயி லின்னமு
துறையும் மாந்தர் விருந்தொடு முண்பவே.

ஆ

### இராமாயணம்

343 பெருந் தடங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே.

அ

### பெருந்தேவனார் பாரதம்

344 வருந்தி யொருவன்பால் மற்றொருவன் வந்தால்
பொருந்தி யகமலர்ந்து
போற்றி—விருந்தேற்றுத்
தன்னா லியன்றளவுந் தானுதவா னாகினவற்
கின்னா நரகே யிடம்.

க

## திரிகடுகம்

345 விருந்தின்றி யுண்ட பகலும் திருந்திழையார்
புல்லப் புடைபெயராக் கங்குலும் இல்லார்க்கொன்
றீயா தொழிந்தகன்ற காலையு மிம்மூன்றும்
நோயே யுரனுடை யார்க்கு. க0

## இன்னிசை

விருந்தோம்பல் தென்புலம் தெய்வம் விரும்பல்
மருந்தாறு மொக்கலுட னுண்டு மகிழ்தல்



பெருந்தவ ராதியோர்ப் பேணலிவை யில்லத்
திருந்தார்க் குரிய வியல்பு.
கக

## நீதிவெண்பா

347 தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க
லென்றிவரோ
டின்புறத்தா னுண்ட வினிதாமே—அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்டல்
தான்கவர்மீன்
கொக்கருந்த லென்றே குறி.
கஉ

## தண்டலையார்சதகம்

348 திருவிருக்குந் தண்டலையார் வளநாட்டி

வில்வாழ்க்கை செலுத்து நல்லோர்
ஒருவிருந்தா கிலுமின்றி யுண்டபகல்
பகலாமோ வுறவாய் வந்த
பெருவிருந்துக் குபசாரம் செய்தனுப்பிப்
பின்னுமெங்கே பெரியோ ரென்று
வருவிருந்தோ டுண்பதல்லால் விருந்தின்றி
யுணுஞ்சோறு மருந்து தானே.

கஙு

நீதிநூல்

349 அருந்தவே கூழும் பூண வாடையும் வீடு மின்றி
வருந்துவோ ரெண்ணி லார்நம் மருங்குளா
ரெனவ றிந்தும்
விருந்திடாய் மணிமா டத்து மேவிநீ யொருவன்
வாழப்
பொருந்தினாய் மனமே
மக்கட் போலிநீ விலங்கா னுயே. கச
விவேகசிந்தாமணி

350

ஒப்புடன் முகம லர்ந்தே யுபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலு முண்பதே யமிர்த மாகும்
முப்பழ மொடுபா லன்ன முகங்கடுத் திடுவ ராகில்
கப்பிய பசியின் போக்கிற் கடும்பசி நல்ல தாமே.

கஙி

351 மண்ணுற் சட்டி கரத்தேந்தி மறநாய் கவ்வுங் காலினராய்
அண்ணுந் தேங்கி யிருப்பாரை யறிந்தோ மறிந்தோ மம்மம்மா
பண்ணுர் மொழியார் பாலடிசில் பைம்பொற் கலத்திற் பரிந்தூட்ட வுண்ணு நின்ற
போதொருவர்க் குதவா மாந்த ரிவர்தாமே.

கசு

## திருக்குறள்

352 இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

கஎ

கூ. விருந்தோம்பல்

353 விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.
கஅ 354 வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.
கக 355 அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.
உ0
356 செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.
உக 357 மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.
உஉ

## க0. பசிதீர்த்தல்

### சிவமகாபுராணம்

358 அன்ன முன்னதென் றமரரு மறவரு மறைவார்
இன்ன தன்னிடத் தேயெலா மிலங்குற விருந்த
பன்னு சற்சன ரன்னதா னம்பண விருப்பு
மன்ன வைத்தன ரிதற்கிணை மாநிலத் திலையே.

359 தனதிற் சார்தரு மதிதிக்குஞ் சந்நியா சிக்கும்
மனம கிழ்ந்திட வோதனம் வழங்கிடு வானேல்
அனது மேலுல கடைதரப் பெருந்துணை யாகும்
இனிய கீர்த்திதற் கெய்திட விச்சையெய் திடுவான். ௲

இகபரமெய்ஞ்ஞானசாரம்

360 கரிபரி யாயி ரங்கள் கனத்தகோ தானம் பூமி
பரிவொடு ரசிதஞ் சொர்ணம் பாத்திரம் பண்பா மென்றும்
இருகுல மொத்த கன்னி கோடிதான் இருந்திட் டாலும்
அரிதிது என்றே யன்ன தானமே யதிக மாகும். ௲

மணிமேகலை

361 ஆற்று நர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்
ஆற்று மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை.

சூளாமணி

362 கடைநின் றவுரு கண்கண் டிரங்கி

உடையதம் மாற்றலின் உண்டி கொடுத்தோர்
படைகெழு தானைப் பல்களி யானைக்
குடைகெழு வேந்தர்க ளாகுவர் கோவே.
ரு

சிறுபஞ்சமூலம்

363 பஞ்சப் பொழுதின்கண் பாத்துண்பான்
காவாதான் அஞ்சா துடைபடையுட்
போந்தெறிவான்—எஞ்சாதே உண்பதுமுன் னீவான்
குழவி பலிகொடுப்பான் எண்பதின் மேலும்வாழ் வான்.
அ

௬௦. பசிதீர்த்தல்

59

அறநெறிச்சாரம்

364 சோரப் பசிக்குமேல் சோற்றூர்திப் பாகன்மற்
றீரப் படினு மதுவூரான்—ஆரக்
கொடுத்துக் குறைகொள்ளல் வேண்டு மதனல்
முடிக்குங் கருமம் பல.
எ

365 வாழ்நாள் உடம்பு வலிவனப்புச் செல்கதியும்
தூமாண் நினைவொழுக்கம் காட்சியும்
—தாமாண்ட
உண்டி கொடுத்தோன் கொடுத்தலால்

ஊண்கொடையோ

டொன்றுங் கொடையொப்ப தில்.

அ

ஔவையார்

366 பொன்னும் முத்தும் மணியுங் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினு மக்கொடை
ஒருபொழு தொருவ னுணவருள் நிலைக்கு
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே.

கூ

செய்யுட்கோவை (தி-ல)

367 ஏறுபொருள் கொடுத்தாலும் இடம்பெரிது
கொடுத்தாலும் இருப்ப தற்குக்
கூறுடைய வீடுபல கொடுத்தாலும்
பரிமளநீர் குளிப்பித் தாலும்
வேறுபட வுடைசிறக்க வணிந்தாலும்
பணியிலா மிடியுற் றோர்க்குச்
சோறுகொடுப் பதுபோல நூறுகொடுத்
தாலுமுண்டோ சுகந மக்கே.

க0

திருக்குறள்

368 ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.

கக

369 அற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி.

கஎ

370 பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்டல் அரிது.

கஅ

---

## கக. கற்பு

### கந்தபுராணம்

371 காண்டகைய தங்கணவ ரைக்கடவு ளார்போல்
வேண்டலுறு கற்பினர்த மெய்யுரையி னிற்கு
மீண்டையுள தெய்வதமு மாமுகிலு மென்ரு
லாண்டகைமை யோர்களு மவர்க்குநிக ரன்றே

க

372 மேனவியல் பான்வரையு மெல்லியலே மேவிற்
ருனமுள தாகுமரி தானதவ மாகும்

வானமுள தாகுமிவண் மண்ணுமுள தாகு
மூனமில தாகுமரி தொன்றுமிலே யன்றே.

உ

373

காவன் மன்னவ னிறந்தன னெனுமுரை கன்னத்துண்
மேவு மெல்லையி லசனியே றுண்டவெம் பணியேபோற்

ரேவி யாகிய *பதுமகோ மளையெனுந் திருமங்கை
யாவி நீங்கின டலையளி யாகிய ததுவன்றே.

க

திருக்குற்றலப் புராணம்

374 சிறுகாலை யட்டில்புக லருத்தியுறச்
சமைத்தல்சுவை திருத்தி யூட்டன்
மறுகாலை யெண்ணுது விருந்தழைத்தன்
மகப்பெறுதன் மடநா ணச்சம்
பெறுகாலை யின்புறுதன் மூன்னுறங்கப்
பின்னுறங்கல் பின்னெ ழாத
லுறுகாலை தொழுதெழுதல் பன்னிரண்டு
மந்நகர்க்கற் புடையோர் செய்கை. 12

திருக்கூவப் புராணம்

375 மிடியினர் குணமிலர் விருத்தர் நோயினர்
வடிவில ருறுப்பிலர் வஞ்சர் மூடர்வெங்
கொடிய வராயினுங் கொழுநர் தம்மிடை

மடிவில ரன்புகற் புடைய மாதரே.

திருக்குடந்தைப் புராணம்

376 கொழுநனமு துண்டதன்பின் ருமுண்பார் குலவுபணி

யொழுகியவன் றுயின்றதன்பின் ருந்துயில்வா ருறங்கியவ

பதுமகோமளை = சூரபதுமன் மனைவி.

கக. கற்பு

61

னெழுவதன்மு னெழுந்திருப்பா ரில்லறத்திற் குரியவராய்ப்

புழுதகல்கற் புயர்நெறிகொள் பண்புமிகு பாவையரே.

377 வனைதருபொற் கலனனைத்து மாற்றவளுக் கீதரினுந்

தினையளவு முனியார்க டனிவழியுஞ் செல்லார்க

ளனையினுமோர் முதுமாதர் துணையன்றி யயலகத்து

நினைதரார் புகுதல்செய நீடியகற் புடைமாதர்.

378 ஆயகறை மேற்கிடக்கு மம்மியின்மே லுலக்கையின்மேற்

பாயவெழி னிறைவாயிற் படியின்மேன் மரீஇயமரிற்

றாயதிரு வகலுமென றுண்ணிந்திரா ரெஞ்ஞான்று
நேயமிகு பெருங்கற்பு நிறைந்தகுல மடமாதர்.
அ

379 புறமாகு முந்நாளு நோக்குறுர் புருடன்முக
மறமாகும் விரைந்தென்றேர் மொழியேனும் வசனியா
ரறமாகும் படிபுனலிற் றேய்ந்தனயன் முகம்பார்ப்பார்
திறமாகுங் கற்புநெறி திறம்பாத சேயிழையார். கூ

380 புண்ணியநன் னீராடல் போற்றுமொரு நோன்புகொள
லெண்ணியநான் முகன்முதலோ ரிமையவரைத் தொழுதேத்த
லண்ணியநா யகனனுஞை யல்லாது செயத்துணியார்
கண்ணியவான் பெருங்கற்புக் கடப்பாட்டுக் காரிகையார். கo

381 கடவுளா ரியனீன்றுன் காமருறப் பெற்றெடுத்தா
ளுடனுதித்தார் மற்றுமுள வுற்றுர்க ளெல்லோரு
மடமகனு யகனேயென் றெருப்பாட்டின் வாழ்தருவார்
திடமிகுவண் பெருங்கற்பிற் சிறந்துவளர் சேயிழையார். கக

வாயுசங்கிதை

382 கணவர்தம் மேவல் பூண்டு

கற்பினி லொழுகி டாதார்

நணுகருங் கொடிய வெய்ய நரகினு ளழுந்து வாராற்

பணிவுறுங் கணவர் தம்மை யிழந்துநற் பான்மை யின்றி

யணிகலன் றுறந்த மாதர் தன்மையை யறைகு வாமே. கஉ

383 தரையினிற் கிடத்த ருன நல்கிட றயங்கு நீரி லரியவெண் ணீற்றின் மூழ்க லண்ணலைப் பூசை செய்த

லொருபக லுண்டு வைக லட்டமி பதினன் கோடு

மருவுபூ ரணையி லுண்டி யொழிந்திடல் வழக்க தாமால். கஙு

காசி கண்டம்

384 கொழுந னுண்டபின் ருனுகர் கொள்கையும்

விழிது யின்றபின் றுஞ்சலு மென்றுயி

லெழுதன் முன்ன மெழுதலு மேயன்றே
பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே.

கச

385 எரிம ணிப்பொலம் பூண்சுமந் தின்னுயிர்க்
குரிய கேள்வ ருவப்பமு னெய்துவார்
பிரியுங் காலயிற் பெய்கலன் யாவையு
மொருவி மாசுட லுண் டிட வைகுவார்.

கரு 386 இனிய கேள்வர் முனியி னெதிர்நின் று
துனிகொ ணெஞ்சொ டெதிர்மொழி சொல்கிலா
ரனைய கேள்வ ரெறியினு மன்பொடு
கனிவர் நெஞ்சகங் கற்புடை மாதரே.

கசு

387 எய்து மிற்றுறந் தேகல ரில்லக
றைய லார்முகங் காணினுஞ் சாம்புவார்
மையில் காதலர் வந்தெவை யாயினுஞ்
செய்தி ரென்றலுஞ் செய்தன மென்பரால்.

கஎ

388 விழவு கண்ணுறன் மேதகு நோன்புறல்
பழுதி றூநதி யாடுதல் பண்ணவர்த்
தொழுது வாழ்த்துத ரேமறு கற்பினோர்
கொழுந ரேவலி னன்றிக் குறிக்கொளார்.

கஅ

389 வனையுந் தங்கலன் மாற்றவட் கீயினு
முனிவு செய்கலர் மூப்பினர் சேர்வுருத்

தனியிற் சேர்கலர் தாம்பிற ரிற்புகார்
புனித நெஞ்சுடைப் புண்ணிய மாதரே.

க௯

390 திருந்து மாயுள் சிதையுமென் றெண்ணித்தம்
பொருந்து காதலர் நாமம் புகன்றிடா
ரிருந்தபோ தன்றித் தாமு னிருந்திடா
ரருந்து மிச்சி லமிழ்தி னுகர்வரால்.

உ0

391 அறந்த வாத்தம தன்ப ரருளினுற்
றுறந்து ளோர்பிறப் போர்தொழில் செய்குநர்
சிறந்த தொல்குலத் தெய்வம் பசுவிருந்
திறந்து ளோர்க்கும் பகுத்தினி துண்பரால்.

உக

392 மேவு காதல ருள்ளம் விழைந்தன
வேவு முன்னர்க் குறிப்பி னியற்றுவார்
தாவி லன்பர் தமையலர் தூற்றிடும்
பூவை யன்னவர் புன்முக நோக்கிலார்.

உஉ

கக. கற்பு 63

393 இல்ல றத்திற் கியைவன வீட்டுவா
ரல்ல செய்தே வறிதி னழித்திடார்
புல்லு காதல ராயுள் பொரவிவுற

மல்ல லோங்கணி மஞ்ச ளணிவரால்.

உ௩ 394 கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவி னல்லறம் வான்றவ மாற்றுத
ரெழுது தெய்வம் பராய்மலர் தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக் கென்பவே.

உ௪ 395 அழகின் வீக்கஞ் சிறிதில ராயினு
*மொழிவி னேய்நிரப் புற்றன ராயினுங்
கிழவுத் தன்மைய ராயினுங் கேள்வரைப்
பழுது சொல்கலர் பண்பின் முயங்குவார்.

உ௫ 396 அன்பர் துஞ்சிடிற் றுஞ்சுத லாங்கவர்
துன்ப மெய்திடிற் றுமுமத் துன்புற
லின்ப முற்றிடி லின்புற் றிருத்தலே
மன்பெ ருந்தவங் கற்புடை மாதர்க்கே.

உ௬
397 வாள்வி ழிக்குல மங்கைய ரன்பர்பொற்
றுள்வி ளக்கிய தண்புனல் கங்கையக்
கேள்வ ரேகிளர் தேவர்கண் மூவரி
லாளு மெய்ம்மை யடிகளென் றெண்ணுவார்.

உ௭ 398 ஆன்ற கற்பினர் பூப்பி னகன்றுறை
மூன்று நாளு முகமலர் காட்டலர்
தோன்ற யாதுஞ்சொல் லார்புன றோய்ந்தபின்

சான்ற காதலர் தம்முக நோக்குவார்.

உஅ

399 புனித மாநதிப் பூம்புன லாடுநா
ளினிய காதலர் வேற்றிட மெய்திடி
லனைய கேள்வரை யன்பின் மனக்கொடு
பனிவி சும்பிற் பரிதியை நோக்குவார்.

உகூ

400 வசையில் காதலர் தாய்தந்தை வைகுறி
†லசதி யாடில ரன்ப ரழைத் திடின்
மிசையு நல்லமு தேனும் விடுத்துள
நசையி னேடும் பொருக்கென நண்ணுவார்.

௩0 ✓ 401 தாதை தன்னினுந் தன்னையர் தம்மினு
மாதர் மென்மொழி மைந்தர்க டம்மினுங்

---

* ஒழிவினேய் = தொழு நோய் முதலியன.
† அசதி = சிரித்துப் பேசுதல்.



கோதில் கற்புடை யார்தங் கொழுநர்பாற்
காதல் கூர்ந்து களிமகிழ் வெய்துவார்.

௩க

402 உரவி லம்மியி லோங்கு முலக்கையிற்
பாவம் வாயிற் படியின் முறத்தினிற்

றிருவ கன்றிடு மாலெனச் சேர்ந்திரார்
பொருவில் கற்புடைப் புண்ணிய மாதரே.

கஉ

403 உரிய கேள்வ ருவந்து பணிந்திடா
கரிய நோன்பொடு பூசனை யாற்றுவார்

கரிய கூற்றுவன் றூதர் கடிந்திட
வெரியுந் தீநர கத்திடை யெய்துவார்.

கக

404 கடிம ணஞ்செயுங் காதலர் தம்பழி
மடமை யோடு மொழிபவர் மற்றவ
ருடன்வெ குண்டுரை யாடுந ரோரியாய்
*முடுவ லாகப் பிறப்பர் முடிவினே கச

405 கொழுநர் சீறிற் குறுகிமுன் வைபவ
ருழுவை யாகப் பிறப்பரு ருத்துநெஞ்
சழல மாற்றவட் சீறு மறிவிலோர்
கழல்கட் கூகைப் பிறப்பிற் கழிவரால். கஞ

406 ஏதி லான்ற னெழில்கண் டுவப்பவர்
பேது செய்துழல் பேயுரு வெய்துவார்
காத லன்பசிக் கக்களித் துண்பவர்
பாத கஞ்செயும் பன்றியிற் றேன்றுவார். ௩௬

407 மருவு காதல ராருயிர் மாய்ந்திடி
லெரியின் மூழ்கி யிறந்து படுவதற்
கருநெ றித்தலை வைக்கு மரிவையர்
புரவி நன்மகப் பேறு பொருந்துவார். ௩௭

408 முற்று செந்தழன் மூழ்கிய கற்பினோர்
புற்ற ராக்கொடு புள்ளர சேகல்போ
லெற்று கால படர்க்கை பறித்தினி
துற்ற கேள்வரோ டும்பரி னேகுவார். ௩௮

409 கொழுநன் பாவி யெனினுங் கொழுநனோ
டழலின் மூழ்கினள் கற்புடை யாளெனின்
விழியி லன்னவட் காணின்வெங் கூற்றுவ
னுழுவ லன்பனைக் கைவிடுத் தோடுமே. ௩௯

* முடுவல் = பெண் நாய்.

## ௧௧. கற்பு

410 வடபு லத்து வயங்கு மருந்ததிக்
கடவுட் கற்பினர் காந்திதங் கண்ணுறிற்
படர்சி கைக்கனல் வெங்கதிர் பான்மதி
சுடர்ம ழுங்கிப் பொலிவில தோன்றுமால்.

411 நீடு காதல ஞேடுயிர் நீத்திடும்
வீடில் கற்பினண் மெய்ம்மயி ரொன்றினுக்
காட கப்பசும் பொன்னிலத் தாயிரங்
கோடி காலங் கொழுநஞே டின்புறும்.

412 கற்பு மேய கனங்குழை மாதரைப்
பெற்று ளோர்த மரபும் பெருந்தவக்
கற்பி ஞட்கொண்ட காதல ஞருயிர்ச்
சுற்றம் யாவுந் துறக்கத்தி னெய்துமால்.

413 பொருவில் கற்பின் வழீஇயபுன் மங்கையர்
ஊரிய மூன்று மரபினுள் ளோரையும்

வெருவந் தேங்கி விழுங்கி யுமிழ்கலா
எரியுந் தீநர கிற்குடி யேற்றுவார்.

414 நண்ணு கற்புடை நங்கையர் சீறடி
மண்ணி னெவ்விடந் தோயினு மற்றஃ
தெண்ணு கின்ற தலங்க ளெவற்றினும்
புண்ணி யத்தல மென்று புகல்வரால்.

பிரபுலிங்கலீலை

415 குரவர்தா மியைந்து கொடுத்தில ராயிற்

குமரவே ளனையவ ரேனும்
அருவரா நிற்பர் தந்தைதாய் தங்க
ளாணையி னொழுகுகன் னியர்தாம்
உருவிலா ரெனினும் குரவருண் மகிழ்வுற்
றுதவுறி னனையவர் தம்மைப்
பரவுவான் கடவு ளாகவே நினைந்து
பண்பொடும் பயிலுவ ரன்றே.

பிரபோதசந்திரோதயம்

௩௫

416

இற்பிறப் புடைய மாதர் யாதுரை செயினுங் கேள்வன்
சொற்பணி புரிந்து தெய்வந் தொழாதவற் றொழுது பேணிப்

பிற்பட நுகர்ந்து துஞ்சிப் பிறர்பழிப் பகற்றி
முற்றுங் •
கற்பினில் வழாது நிற்றல் கடனவர்க் காகு மன்றே.
ப. பா.—5

௪௬

## சீவக சிந்தாமணி

✓417 சாமெனிற் சாத லேதை றன்னவன் றணந்த காலைப்
பூமனும் புனைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்
தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்ல நீர்ப்பார்.
சஎ

## சிலப்பதிகாரம்

✓418 கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
யின்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடன் பூண்ட வித்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டி ரிருந்தநா டென்னும்
அத்தகு நல்லுரை யறியா யோநீ.
சஅ

## மணிமேகலை

419 காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா
தின்னுயி ரீவ ரீயா ராயின்
நன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
நளியெரி புகாஅ ராயி னன்பரோ
டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர்.
௪௯

வளையாபதி

420 நாடு மூரு நனிபுகழ்ந் தேத்தலும்
பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலுங்
கூட லாற்றவர் நல்லது கூறுங்காற்
பாடு சான்மிகு பத்தினிக் காவதே.
௫0

இராமாயணம்

421 மெய்க்கொண்ட வுள்ளத்து மேலோரே யாயிடினும்
பொய்க்கொண்ட சிந்தையா ரேனும் பொதுவாய
மைக்கொண்ட கண்ணார் மனைவியரா கத்தம்மைக்
கைக்கொண் டிருந்தார்க்குத் தப்பக் கடனன்றால்.
௫௧

௧௧. கற்பு 67

422 வெங்கனன் முழுகியும் புலன்கள் வீக்கியும்

நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவ நவிலற் பாலதே.

இஉ

423 மல்லடு திரடோள்
வஞ்சன் மனம்பிறி தாகும் வண்ணம்
கல்லொடு தொடர்ந்த நெஞ்சங் கற்பின்மேற் கண்ட துண்டோ
இல்லொடுந் தொடர்ந்த மாதர்க் கேய்வன வல்ல வெய்ய
சொல்லிது தெரியக் கேட்டி துரும்பெனக் கன்று
சொன்னாள்.

இக

## பெருந்தேவனார் பாரதம்

424 எப்பணியா லின்புறுவர் காதலரக் காதலரை
யப்பணியா லப்பொழுதே யன்புறுத்தி—யொப்ப
மனங்குழையும் வண்ண மகிழ்விப்ப தன்றே
கனங்குழையார் தங்கள் கடன்.

இச

## குசேலோபாக்கியானம்

425 மணமக னுடம்பு போற்ற வல்லவள் மனைவி
யேயென்
றுணர்வினர் மொழியு மாற்ற மூவள்செய
னேக்கிப் போலும்
தணவரு மன்புஞ் சாந்தத் தன்மையு நன்மை
யான

குணமுமோ ருருவங் கொண்டோர் குடிப்பிறந்
தனைய நீராள். ௫௫

426 மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப
ஆட்டும்
நேசமிக் குடையாள் கொண்கன் நினைப்பறிந் தொழுகு நீராள்
தேசுறு வாய்மை யுள்ளாள் சினந்திட லென்று மில்லாள்
பேசுதிண் கற்பு வாய்ந்தாள்

பெற்றதே கொண்டு வப்பாள். ௫௬

## நள வெண்பா

427 குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம்
பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கான் மழைபொழியா நொந்து.

௫௭

## நாலடியார்

428 அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெருநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணும்
நறுநுதலா ணன்மைத் துணை.

௫அ



429 குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடன்நீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

௫௯

430 எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
யட்டில் புகாதா ளரும்பிணி—யட்டதனை
உண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

௬௦ 431 கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையா ளூர்நா ணியல்பினாள்—உட்கி
இடனறிந் தூடி யினிதி னுணரும்
மடமொழி மாதராள் பெண்.

௬௧

## திரிகடுகம்

432 நல்விருந் தோம்பலி னட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலி னீன்றதாய்—தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன்றும்

கற்புடையாள் பூண்ட கடன்.

சுஉ

## சிறுபஞ்ச மூலம்

433 வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்விருந் தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

சுந

434 மக்கட் பெறுதல் மடனுடைமை மாதுடைமை
ஒக்க வுடனுறைத லூணமைவு—தொக்க
அலவலை யல்லாதாட் கைந்திவை கண்டீர்
தலைமகனைத் தாழ்க்கு மருந்து.

சுச

435 கற்புடைய பெண்ணமிர்து கற்றடங்கி னனமிர்து
நற்புடைய நாடமிர்து நாட்டுக்கு—நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனும்
ஆகவே செய்யி னமிர்து.

சுரு

## அறநெறிச் சாரம்

436 தலைமகனிற் றீர்ந்துறைத ருன்பிறரிற் சேர்தல்
நிலைமையி றீப்பெண்டிர்ச்
சேர்தல்—கலனணிந்து
வேற்றூர்ப் புகுதல் விழாக்காண்ட னோன்பிடுதல்
கோற்றொடியாள் கோளழியு மாறு.

437 அயலூ ரவன்போக வம்மஞ்ச ளாடிக்
கயலேர்கண் ணார வெழுதிப்—புயலைம்பால்
வண்டோச்சி நின்றுலாம் வாளேர் தடங்கண்ணாள்
தண்டோச்சிப் பின்செல்லுங் கூற்று.
௬௭

## நீதிநெறி விளக்கம்

438 கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தங்
கேள்வர்க்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கினாளர்
யாவர்க்குங் கேடுசூ ழார்.
௬௮

## தனிப்பாடல்

439 கொண்ட கணவன் குரூபியே யானாலும்
பண்டுதான் செய்த பலனெனவே—கண்டுகொண்டு
குற்றமென வெண்ணிமனங் கோணா தவன்பணியைப்
பற்றிமிகச் செய்வார் பரிந்து.
௬௯

## செய்யுட்கோவை—(தி. ல.)

440 பெண்ணெனன் பாளவள் கண்ணெனப்

பேணுவாள்

பித்த ளுகிலுந் தன்கண வன்தனை
விண்ணின் தேவரும் வேம்பெனக் காணுவாள்
பெண்ணலள் பெண்கள் தெய்வமென்
றெண்ணுமே. எ0

## திருக்குறள்

441 பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

௭௧
442 தெய்வந் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

௭௨
443 தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்
தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

௭௩ 444 சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

௭௪

---

# ௧௨. மக்கட்பேறு

## கந்தபுராணம்

445 தந்தை யாயிஞே ரினிதுவீற் றிருப்பதுந் தமது
மைந்தர் தங்குடி பரித்தபி னன்றிமற் றுண்டோ
எந்தை வந்துநந் தொன்முறை போற்றலால் யானுஞ்
சிந்தை தன்னிலோ ரெண்ணமு மின்றியே சிறந்தேன்.

## காஞ்சிப் புராணம்

446 மகவே மேலாங் கதியாக்கு மகவா னுலகந் தனைவெல்லு
மகவின் மகவான் முடிவின்மை யெய்து மகவின் மகவழித்த
மகவான் மேலைப் பதமுறுந்தென் புலத்தார் கடனை மாற்றுவது
மகவா னன்றி யில்லையென வகுத்தான் றெரித்துக் கண்ணுவினே.

## விநாயக புராணம்

447 எழுமைப் பிறப்புந் தீவினைவந்
தெய்தாச் சிறப்புந் தென்புலத்தார்
முழுது முவக்குங் கடன்சால
முடிக்கு மாண்பும் பெறுதலிறைற்
பழுதி றவங்கண் மிகப்புரிந்தும்
பயந்து மைந்தர் தமையவர்க்குக்

குழுமு மவையின் முந்திருப்ப

வறிவு கொளுத்தல் வேண்டுமால்.

## சீகாளத்திப் புராணம்

448 இம்மை யின்பொடு மறுமையின் இன்பமென்
றிரண்டும்

அம்மென் மைந்தரை யில்லவர்க் கில்லைமற் றதனுல்
எம்மை யாளுடை முருகவே ளடிமல ரிறைஞ்சிச்
செம்மை நன்மகற் பெறுகுவ

மெனச்சிந்தை செய் தான். ௬

449 கண்ணில் யாக்கையுந் திங்களில் கங்குலுங்
கண்போல்

அண்ணன் மந்திரி யில்லர சாட்சியு மருளில்
திண்ணெ னெஞ்சமும் புலவரி லவையுமொண்
டம்பால்

வண்ண வாயிள மக்களில் வாழ்வுமொப் பாமால்.

௯

450 சேற ஊந்தமென் சீறடித் தளிரொடு தீம்பாற்
சோற ஊந்தகைத் தாமரை யோடுசெந்

துகிர்வாய்

ஊறு நீர்நனை மார்பினே டிளமகா ருந்தி
ஏறு மின்பமுள் ளதனையே யுடம்பென விசைப்பார்.

கா

451 அரிகொள் பொன்புனை கிண்கிணி தண்டையோ
டணிந்த தருண மென்றளிர்ச் சீறடித் தளர்நடைச்
சிறுவர் மருவ ருதசெவ் வாம்பல்வாய் மழலையா ரமுதம்
பருகி லாச்செவி பாவையின் செவியெனப் படுமால்.

எ

திருக்கூவப் புராணம்

452 இல்லொ ழுக்க மியைந்து பிதிர்க்கடன்
ஒல்லும் வண்ண முஞற்றி மரபுளோர்
செல்லும் வானிர யத்துயர் சிந்துவான்
வல்ல மக்கட் பெறற்கிணை மற்றிலை.

அ

453 மெத்து கின்ற விழுமிய சீர்த்தியோ
டெய்த்த லின்றி யிருமையின் புந்தரும்
புத்தி ரற்பெறும் புண்ணிய வாழ்க்கைதா
னத்த வத்தினு மாற்றச் சிறந்ததே.

கூ

திருக்கழுக்குன்றப் புராணம்

454 இறைவர் ஞானமு மேதமி லாமையும்
பொறையும் பூண்ட புதல்வர்ப் பெறுவரேன்
மறவ ரே னு மவரையவ் வல்வினை
பிறவி யேழினும் பின்றொட ராதரோ.
கo

## காசி கண்டம்

455 எத்திரு வுடைய ரேனு மின்கனி மழலைச் செவ்வாய்ப்
புத்திர னிலாதோ ரென்றும் பொறியில ராய வாற்றான்
மெய்த்தவம் புரிந்து மைந்தர்ப் பெறுவதே விழைவர் யாரும்
உய்த்தநன் மகவு மோரேழ் பான்மையா
யுரைப்பர் மேலோர்.

கக

456 மனைவிதன் கொழுநற் கீன்றோன் மற்றவ னருளி
னாலே
யனையவ ளயலாற் கீன்றோ னரும்பொருள்
கொடுத்துக் கொண்டோன்
இனிதுறு தெத்து மைந்தன் மகவெனப் புகுந்த
மைந்தன்
தனையைசேய் தன்னை லாவி யுய்ந்தவன் றனைய
ராவார். கஉ
457 நெறியி கந்துதம் மரபினி னீரல செய்யு
மறுவின் மைந்தரைப் பெறுதலின் மகப்பெரு
தனுற்
றுறைத னன்றுமற் றொருவனு லுயர்குல முழுதுஞ்

சிறுமை யெய்திலாங் கவற்றுறந் துறுபழி
தீர்ப்பார். கூ-



பிரமோத்தர காண்டம்

458 உந்து நீர்க்கட லுடுத்தபார் முழுவது மொருங்கே
வந்து தாடொழு மரசியல் வளமெலாம் பெறினும்
இந்தி ராதியர் பெரும்பதத் திருக்கையெய்
திடினும்
மைந்த ரின்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே.

கசு

புறநானூறு

459 படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே.

கரு

வளையாபதி

460 பொறையிலா வறிவு போகப் புணர்விலா

விளமை மேவத்

துறையிலா வனச வாவி துகிலிலாக் கோலத்

தூய்மை

நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை

நன்னீர்ச்

சிறையிலா நகரம் போலுஞ் சேயிலாச் செல்வ மன்றே.

கசு

## சூளாமணி

461 தொக்கிள மலர்துதை விலாத சோலையும்
புக்கிளந் தாமரை நகாத பொய்கையு
மிக்கிளம் பிறைவிசும் பிலாத வந்தியு
மக்களை யிலாததோர் மனையு மொக்குமே.

கஎ

462 சூழிநீண் முகத்தன துளைக்கைம் மாவொடு
மாழைநீண் மணியிவை யெளிய மாண்பினுல்
வாழுநீர் மக்களைப் பெறுதல் மாதரார்க்
காழிசூழ் வையகத் தரிய தாவதே.

கஅ

## இராமாயணம்

463 மன்ன ரானவ ரல்லர்மேல் வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழற் புரந்தரன் போலிய ரல்ல

ர்

பின்னு மாதவந் தொடங்கிநோன் பிழைத்தவர்

பிறரார்

சொன்ம ருமகற் பெற்றவ ருருந்துயர் துறந்தார்.

464 கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சுஞ்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து
பற்றி

௧௨. மக்கட்பேறு

73

மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு
மனைவாழ்வி னினிமை யென்னும். ௨௦ 465
மென்பா லகரைப் பயவாதவர் மெய்ம்மை யாகத்
தென்பா லவர்தம் பசித்தீநனி தீர்க்க மாட்டார்
என்பா னிகழ்ந்த வினையாலிட ரெய்தி நின்றேன்
நின்பா லருளுண் டெனிறுய்வ னெடுங்க
ணல்லாய். ௨௧ 466 மெய்தானம் வண்மை விரதந்
தழல்வேள்வி நாளுஞ்
செய்தாலு ஞாலத் தவர்நற் கதிசென்று சேரார்
மைதாழ் தடங்கண் மகவின் முகமன்னு பார்வை
எய்தா தொழியிற் பெறுமின்ப மிவணு மில்லை.

467 சொன்ன கலியின் றுறையனைத்துந் தோய்ந்தாலு
மென்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.

௨௩

468 கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ்
செய்தாலு—மைதீர்
மகப்பெறு மானிடர்கள் வானவர்தம் மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து.

௨௪

469 பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—வின்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

௨௫

## நைடதம்

470 விரிகட லமிழ்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையும் எளிதி னெய்தலாம்
அருமகப் பெறுதல்மற் றரிய தென்பவே.

### நாலடியார்

471 சிதலை தினப்பட்ட வால மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.



### பழமொழி

472 எந்நெறி யாலு மிறைவன்றன் மக்களைச்
செந்நெறிமேல் நிற்பச்
செயல்வேண்டும்—அந்நெறி
மான்சேர்ந்த நோக்கினா யாங்க வணங்காகுந்
தான்செய்த பாவை தனக்கு.

### தண்டலையார் சதகம்

473 நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங்
குலமுழுதும் நன்மை யுண்டாம்
அன்றியறி வில்லாத பிள்ளையொரு

நூறுபெற்று மாவ துண்டோ
மன்றில்நடம் புரிவாரே தண்டலையா
ரேசொன்னேன் வருடந்தோறும்
பன்றிபல வீன்றென்ன குஞ்சரமொன்
றீன்றதனுற் பயனுண் டாமே.

நீதிநெறி விளக்கம்

உஅ

உக

474 கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயின்
இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.
௩௦

நீதி வெண்பா

475 பொற்பறிவில் லாதபல புத்திரரைப்
பெற்றதிலோர்
நற்புதல்வ னைப்பெறுத

னன் ருமே—பொற்கொடியே
பன் றிபலகுட்டி பயந்ததனு லேதுபய
ஞென் றமையா தோகரிக்கென் ருேது.

௧௪

476 கண்ணுக் கினிய சபைக்குமணி கற்ருேரே
விண் ணுக் கினியமணி
வெய்யோனே—வண் ண நறுஞ்
சந்த முலேயார் சயனத் தினியமணி
மைந்தன் மனேக்கு மணி.

௧௨ வெண்பாமாலே

477 கருங்கழல் வெண் குடைக் காவலற்குச்
செவ்வாய்ப்
பெருங்கட் புதல்வன் பிறப்ப—பெரும்பெயர்
விண்ணேர் மலிந்தார் வியலிடத்தா ரேத்திஞர்
எண்ணு ரவிந்தா ரிகல்.

௧.௧

தியாகராச லீலே

478 இனிய மக்களே யெய்திய பின்னரே யிதயம்
கனிய மெய்ப்பொருள் யாவையுங் கண்டவ ஞ
கி

கஉ மக்கட்பேறு

75

வணயு மாமுடி அயோத்தியர் மன்னவன்
மகிழ்ந்தான்
தனய ரென்பவர் தவமருள் தனமெனுந் தகையார்

க௬

479 புரையிலா மழலைமொழிப் பொருளிலா மனைவாழ்க்கை
விரையிலா வொண்மலரும் விதுவிலா வானகமும்
கரையிலா மலர்த்தடமும் கருணையிலாத் தவமுஞ்சீர்
உரையிலா வுற்பவமு மொக்குமென வுளம்நைவான். க௫

நீதி நூல்

480 மாவினு விருவரும் மருவி மாசிலாப்
பாலனைப் பயந்தபின் படிப்பி யாதுயர்
தாலமேற் செல்வமா வளர்த்தல் தங்கட்கோர்
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமே.
க௬

481 தீதுநன் கறிகிலாச் சேய ரென்செய்வார்
கோதற வவரைநன் னெறியிற் கூட்டிடா
தேதங்க ளவர்முன்செய் திழிவைக் கற்பிக்குந்
தாதைதாய் புதல்வர்க்குச் சத்து ருக்களே.
க௭

482 கலைபயிற் றுதுகா தலர்க்கு மாநிதி
நிலையென வளிக்குத னெறியில் பித்தர்க்குக்
கொலைசெய்வா ளீவதுங் குழவி தன்னைமா
மலையினே ரத்துவைப் பதுவு மானுமே.
க௮

483 தீயராய் வறியராய்ச் சிலர்வ ருந்தலுந்

தூயராய்ச் சிலர்புவி துதிக்க வாழ்தலும்
தாயினால் தந்தையால் சமைந்த தன்மையால்
சேயரை நன்னெறி செலுத்தல் மேன்மையே.

௩௯

திருக்குறள்

484 பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

௪0

485 எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

௪௧

486 மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு

௪௨

---

## ௧௩. உடன்பிறந்தார்

கந்த புராணம்

487 பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய இளையானே யிப்பிறப்பில்

| உன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே.

க

## சீவக சிந்தாமணி

488 திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செகுக்க லாகும்
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகும்
ஒண்பொரு ளாவ தையா
உடன்பிறப் பாக்க லாகா
எம்பியை ஈங்குப் பெற்றேன் என்னெனக் கரிய தென்றான்.

உ

## இராமாயணம்

489 கம்ப மதத்துக் களியானைக்
காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பு மென்பா லினிவந்து
குறுகி ஞளென் றகங்குளிர்ந்தேன்
வம்பு செறிந்த மலர்க்கோயின்
மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பி யுடையான் பகையஞ்சா
னென்னு மாற்றந் தந்தனையால்.

ந

## நல்வழி

490 நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக் கழகுபாழ்—மாறில்

உடற்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை.

ஈ

நீதிநூல்

491 தந்தைதா யொருவர் தம்மைத் தாங்கிய வுதர மொன்று
முந்தவின் பாலருந்து முலையொன்று வளரு மில்லொன்
றிந்தவா றெல்லா மொன்று யியைந்தசோ தரரன் புற்றுத்
சிந்தைவு

மொன்றிப் பாலுந் தேனும்போல் விளங்கல் நன்றே.

ஐ

கரு. உடன்பிறந்தார்

77

492 ஒற்றையொண் சுடரினை யொழிக்கு மெல்வளி
கற்றையாப் பலசுடர் கலப்பின் மாவளி
சற்றும்வெல் லாதுசூழ் தமர்ச கோதரர்
பற்றெடு மருவிடிற் படரு ரூர்களே.

சு 493 ஓரிழை யறுத்திட லெளிதொன் ருகவே
சேரிழை பலவுறத் திரித்த தாம்பினை
யாருமே சிதைத்திடா ரமைச கோதரர்

சீரொடு பொருந்திடிற் றிறல்கொள் வாரரோ.

எ

494 ஆதரை மிசைநர ராய யாவருஞ்
சோதர ரெனமிகத் துன்ன னன்றென
வேதமே யோதுமால் விளங்குஞ் சோதரர்
மீதமை நட்பிணை விளம்பல் வேண்டுமோ.

அ

---

## கச. பெற்றோர்ப் பேணல்

### கந்த புராணம்

495 மைந்த னைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி யன்பொடு போற்றி வளர்ப்பதுந்
தந்தை மாண்டுழித் தம்முறைக் கேற்றிட
வந்த மில்கட னாற்றுதற் கேயன்றோ.

க

### கூர்ம புராணம்

496 தாயினிற் சிறந்த தெய்வ மிலையுயர் தந்தை தன்னின்
ஏயநற் குருவு மில்லை யென்னின்மற் றிவர்க டாளில்
தூய்மலர் தூவி நாளுந் தொழுதிடு மறிஞர் தாமே

ஆய்கதிர் பரப்பும் பொன்னுட் டமரரா யினிது வாழ்வார். ௨௬

## உபதேச காண்டம்

497 ஈன்ற தாயினை யீன்றெடுத் திருபுயத் தணைக்கும்
ஆன்ற தந்தையை யரந்தைசெய் தகன்றுபோ யடவி
தோன்றி மாதவந் தொடங்கினே ரிவர்களைத் தொல்லை
மூன்று தேவரு முனிவுற நிரயமுற் றிழிவார். க

## காசி கண்டம்

498 தந்தைதாய் பணித்தல் செய்யுந் தவமலாற் றவம்வே றில்லை
மைந்தருக் கெதிக ளேனும் வணங்குவர் தாயைத் தந்தை
யந்தமைந் தனையே போற்றல் வேண்டுமற் றுத றன்னுற்
சிந்தையுற் றுணரிற் றுயே தந்தையிற் சிறந்தாண் மன்னே. ௲

## பிரபோத சந்திரோதயம்

499 அன்னையா னவடா தைக்கு மதிகமன் னையும்பி தாவு
முன்னேயோர் தெய்வ மென்ற மொழிக்கெவர் முதன்மை பூண்டார்
பின்னொராச் சிரமத் தேகிப் பிதாவையும் வணக்கங் கொள்ளுஞ்

சந்நியா சிகளு மந்தத் தாயரைத் தொழுவ
ரன்றே. ௫

## இராமாயணம்

500 நைந்தடி யற்ற வால நடுங்கிவீழ் கின்ற தென்று
வந்தவீ ழூன்றி வீழா வகைநிலை விளக்கு
மாபோன்
மைந்தர்க டமக்கு நல்ல வறிவினான் மகிழ்ந்து
சேர்ந்து
தந்தையைத் தளரா வண்ணந் தாங்குவர்
தவத்தி னென்றான்
௬

## ௧௪. பெற்றோர்ப் பேணல் 79

501 புத்திர னாவோ னீதி பொருந்தித்தன் குலத்தி
னுள்ளோர்
அத்தனை வரையுந் தீய வருநர குறாமற் காத்துச்
சுத்தமாங் கதியி னுய்ப்பா னென்றுசொல் வார்க
டூயோர்
இத்தைநீ யுணர்ந்தென் மூப்பா மிடும்பையைத்
தீர்த்தி யென்றான்
௭

## நான்மணிக் கடிகை

502 கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கொண்டானில்
துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்

ஒண்மைய வாய பொருளில்லை யின்றுளின்
எண்ணக் கடவுளு மில்.

அ

## ஆசாரக் கோவை

503 வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து
வாய்வதில் • •தந்தையுந் தாயுந் தொழுதெழுக
வென்பதே
முந்தையோர் கண்ட முறை.
கூ

## தனிப்பாடல்

504 ஈன்று வளர்த்த தாய்தந்தைக் கெவரே கைம்மா
றியற்றிடுவார்
ஆன்ற மதலை நூறுவய தளவு மடிமைத்
திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருண் முற்று மளித்து
முறைமுறையே
ஏன்று வழிபா டியற்றிடினு மொருநாள்
வளர்த்தற்
கியையாதே. க0

## நீதிநூல்

505 சின்னவோர் பொருட்ந் தோரைச் சீவனுள் ளளவு
முள்ளத்
துன்னவே வேண்டு மென்ன வுரைத்தனர்
பெரியோர் தேகம்

தன்னை யா ருயிரைச் சீரார் தரணியின் வாழ்வைத் தந்த

அன்னைதந் தைக்குச் செய்யு மருங்கைமா றுளதோ வம்மா.

கக

506 கடவுளை வருந்திச் சூலாய்க் கைப்புறை யுண்டனந்தம்

இடர்களுற் றுதரந் தன்னில் ஈரைந்து திங்கள் தாங்கிப்

புடவியில் ஈன்று பன்னாள் பொற்றனப் பாலையூட்டித்

திடமுற வளர்த்து விட்ட செல்வியை வணங்காய் நெஞ்சே.

கஉ

507

எப்புவி களும்புரக்கு மீசனைத் துதிக்க வேண்டின்.

அப்பனே தாயே யென்போ மவரையே துதிக்க வேண்டின்.



ஒப்பனை யுளதோ வேலை யுலகிற்கட் புலனிற் றோன்றும்
செப்பருந் தெய்வ மன்னார் சேவடி போற்றாய் நெஞ்சே.

கரு

508 மனையவள் வீயின் வேருேர் மனைவியைக் கொளலாம் பெற்ற
தனையரா தியரி றப்பிற் றனித்தனி பெறலாம் பின்னும்
புனைபொரு ணீங்கின் மற்ருேர் பொருளையும் பெறலா மத்தன்
அனையிறந் திடின்வே றத்தன் அனைவரு வாரோ நெஞ்சே.

கசு

## திருக்குறள்

509 மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்ருன் கொல்லென் னுஞ் சொல்.

சுபு

---

# கரு. அன்பு

## விநாயக புராணம்

510 இடனும் பொருளு மேவலரு மிருந்தும் பயனென் லோவந்த
வுடலின் பயனு கியவன்மை யுருதவிடத்து நொதுமலரும்
படர்செய் பகையு முறவாக்கும் பற்று மளிக்கு மனைமைந்தர்

தொடர்பின் வளர்க்கு மன்பதனுற் சோர்ந்து
மன்பின் வழுவற்க

க

## திருமந்திரம்

511 என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை யெய்தவொண் ணாதே.

உ

512 அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே.

௩

513 அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி யமரு மரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே யணைதுணை யாமே.

௪

514 இன்னன் புருக்கி யிறைவனை யேத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியும்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே.

௫

## அருட்பா

515 அன்பெனும் பிடியு ளகப்படு மலையே

அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவு ளமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே.





இராமாயணம்

516 முன்பிற் சிறந்தாரிடை யுள்ளவர் காதன் முற்றப்
பின்பிற் சிறந்தார்குண நன்றிது பெற்ற யாக்கைக்
கென்பிற் சிறந்தாயதோ ரூற்றமுண் டென்ன லாமே
அன்பிற் சிறந்தாயதோர் பூசனை யார்க ணுண்டே. எ

517 என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
முன்பு பின்பின்றி மூவுல கத்தினும்
அன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ.
அ

518 என்பென்ப தியாக்கை யென்ப துயிரென்ப திவைக ளெல்லாம்
பின்பென்ப வல்ல வேறுந் தம்முடை நிலையிற் பேரா
முன்பென்ப வுளதென் ருலு முழுவதுந் தெரிந்த வாற்ருல்
அன்பென்ப தொன்றின் றன்மை யமரரு மறிந்த தன்ருல். ௯

## பிரபு லிங்க லீலை

519 துறவற மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோர்
உறவொடு மகங்க டான மொண்டவம் விரதம் பூசை
யறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயிற்
பெறுவன மெய்வ ருத்தம் பெரும்பொரு ளழிவு மாதோ. ௧௦

520 ஆதர வுடையான் செய்யு மல்லவு நல்ல வாகும்
ஆதர விலாதான் செய்யு நல்லவு மல்ல வாகு
மாதர வதனு லாவிக் கருந்துணை யின்ப முத்தி
யாதர வலாது வேறென் றளித்திடக் கண்டதுண்டோ. ௧௧

521 ஆசறு மனத்தெழு மன்பை யன்றியே
பூசனை யுவக்கிலன் புராரி சென்னிமேல்
வீசறு திரையினு மிக்க தோசொலாய்

ஊசல்செய் மனமுடை யொருவ னுட்டுநீர்.

கஉ

## மூலசித்தி

522 அன்பிலா நெஞ்ச மரும்பிணி யெனவும்
அளவிலாப் பகைநமக் கெனவும்
துன்பமார் சோக மோகமே முதலாம்
துயரெலாம் விளைநில மெனவும்
இன்பவீ டெய்தா திடற்கிடை யூறும்
இருளுமென் றியம்புவர் பெரியோர்

துன்பிலா விறைவர்க் கன்பிலா நெஞ்சே
துணையிலை துணையிலை யெனக்கே.

கநட கரு. அன்பு 83

## செய்யுட் கோவை

523 நாடாளி னென்ன நகராளி னென்ன
நரர்க்குச்செல்வம்
கோடானு கோடி யிருந்தென்ன மேனியிற்
கோட்டழகு

வாடா திருந்தென்ன வாயாத் திறம்பல
வாய்த்துமென்ன
ஈடாகு மோவுள்ளன் பில்லாக் குறைக்கவை
யெண்ணிடினே.

கச

524 துன்பில்லை யென்றல்ல வோவிழை வார்சுவர்க்
கப்பதவி
வன்பில்லை யாகில் வருமிந்த வாழ்க்கையில்
வான்மகிழ்ச்சி
இன்பல்ல இந்திரன் மாட்சியு முள்ளத்
தெழுச்சியின்றேல்
அன்பில்லை யேல்விண்ணும் வேண்டே னமர
ரழைக்கினுமே.

கரு

525 மெய்யான அன்பின்றித் தன்னயம் பேரிவை
மேவவெண்ணி
ஐயா யிரங்கொடை
யீந்தென்னை மீண்டொன் றடையவெண்ணிப்
பெய்யாது மாகடல் மொண்டுல குய்யப்
பெயுமழைபோல்
செய்யாது செய்த உதவியன் றேமெய்ச்
சிறப்புடைத்தே. கசு

526 மின்போய் மழைபுகை காந்தம்
விரியும் வெளிச்சமென்றும்
தன்போற் பொருளையல் லாது கலந்து
தழுவவில்லை

அன்பே யுருக் கொண்ட ஆரா வமுதை யடி
யவர்கள்

அன்பா முயர்பண்பி னூலன்றி யென்று

மடைவதின்றே. கள

திருக்குறள்

527 அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

கஅ

528 என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.

கசு

529 அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை
வன்பாற்கண்

வற்றன் மரந்தளிர்த் தற்று.

உ0

530 புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

உக

531 அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

உஉ

# கசுா. புகழ்

## சீவக சிந்தாமணி

582 ஊறுகொள் சிங்கம் போல வுயக்கமோ டிருந்த நம்பி
கூறினுன் கொற்ற வேந்தன் கொழுநிதி நிலத்து மற்றுன்
வீறுயர் புகழை வித்திக் கேண்மையை விளைத்தி யின்னே
நாறுபூங் கொம்ப ளுளை நோக்கென நம்பி சொன்ஞன். கூ

533 கூந்த லகிற்புகையும் வேள்விக் கொழும்புகையும்
ஏந்து துகிற்புகையு மாலைக் கிடும்புகையும்
ஆய்ந்து பொருளொருவர்க் கீயா வதிலோப
மாந்தர் புகழ்போல் தோன்ரு மறைந்தனவே. உ

## சூளாமணி

534 பொன்று மிவ்வுட லின்பொருட்
டென்று நிற்கு மிரும்புகழ்
இன்று நீரிகழ்ந் தீர்களால்
குன்றின் மேல்குடை வேந்திர்காள்.

ந—

## நான்மணிக் கடிகை

535 ஈத்துண்பா னென்பா னிசைநடுவான் மற்றவன்
கைத்துண்பான் காங்கி யெனப்படுவான் தெற்ற
நகையாகும் நண்ணார்முன் சேறல் பகையாகும்
பாடறியா தானை யிரவு.

ரு

## அறநெறிச்சாரம்

536 ஒன்ருக நல்ல துயிரோம்ப லாங்கதன்பின்
நன்ருய்ந் தடங்கிஞர்க்
கீத்துண்டல்—என்றிரண்டும்
குன்ருப் புகழோன் வருகென்று மேலுலகம்
நின்றது வாயில் திறந்து.

ஞ

## திரிகடுகம்

537 மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்
மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட்
பெற்ருனும்—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானு மிம்மூவர்
சாவா வுடம்பெய்தி ஞர்.

சு

## சிபி கதை

538 இறலுறு கின்ற பூத வுடம்பினை லிறத்தல்
செய்யார் ' ௳ வீறுபுகழ் உடம்பு கோட லுணர்ந்தவ
ருறுதி யன்ரே.

புறவினுக் காக மற்றோர் பொன்னெடுந் திகிரி வேந்தன்
நிறைபுகும் வண்மையின்றும் நிலத்தின்மேனின்ற தன்றே. எ

விவேக சிந்தாமணி

539 பூதலத்தில் மானிடராய்ப் பிறப்பதரி
தெனப்புகல்வார் பிறந்தோர் தாமும்
ஆதிமறை நூலின்முறை யருள்கீர்த்தி
யாத்தலங்க ளன்பாய்ச் சென்று
நீதிவழு வாதவகை வழக்குரைத்து
நல்லோரை நேசங் கொண்டு
காதவழி பேரில்லார் கழுதையெனப்
பாரிலுள்ளோர் கருது வாரே.

தண்டலையார் சதகம்

540 ஓதரிய தண்டலையா ரடிபணிந்து
நல்லவனென் றுலக மெல்லாம்
போதமிகும் பேருடனே புகழ்படைத்து
வாழ்பவனே புருட னல்லால்
ஈதலுட னிரக்கமின்றிப் பொன்காத்த
பூதமென விருந்தா லென்ன
காதவழி பேரில்லான் கழுதையோ

டொக்குமெனக் கழற லாமே.

திருக்குறள்

541 ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல
ஊதிய மில்லை யுயிர்க்கு.

அ

கூ

க0

542 உரைப்பார் உரைப்பவை யெல்லாம்

இரப்பார்க்கொன்
நீவார்மேல் நிற்கும் புகழ்.
கக
543 ஒன்று வுலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றுது நிற்பதொன் றில்.
கஉ
544 நிலவரை நீள்புக ழாற்றின் புலவரைப்
போற்றுது புத்தேள் உலகு.
கங
545 தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் ரேன்ருமை நன்று.
கச
546 புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்.
கரு

---

## கஎ. தற்புகழ்ச்சி

### பாரத வெண்பா

547 தன்னை நயந்தொருவன் செய்த கருமங்கள்
என்ன பயந்தனவோ என்றேதாய்—தன்னை
மதியா தவரோடு வாழ்வதென் கண்டாய்
விதியாகி லெய்தும் வினை.
க

### நாலடியார்

548 எம்மை யறிந்திலி ரெம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று—தம்மை
அரியராய் நோக்கி யறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

உ

சிவபோக சாரம்

549 நாம்பெரிய ரென்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரிய ரென்றுமறை
சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறிய ரிவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல்.

க

விவேக சிந்தாமணி

550 தன்னைத்தான் புகழ்வோருந் தன்குலமே
பெரிதெனவே தான்சொல் வோரும்
பொன்னைத்தான் றேடியருள் புசியாமற்
புதைத்துவைத்துப் பொன்றி னோரும்
மின்னைப்போன் மனையாளை வீட்டில்வைத்து
வேசிசுகம் விரும்பு வோரும்
அன்னைபிதாப் பாவலரைப் பகைப்போரு
மறிவிலாக் கசட ராமே.

நீதிநெறி விளக்கம்

551 தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்

நயவாமை யன்றே நலம்.

௬



552 சடமதைக் கழுவ வுன்னிச் சகதியில் தோய்தல் போலும்
சுடரினைத் தூண்ட வேண்டி யூதியே தொலைத்தல் போலும் ௧எ. தற்புகழ்ச்சி



மடமையிற் றன்னைத் தானே புகழுவோன் வசைக ளெல்லாம்
புடவியே யெடுத்துரைக்கப் பூணுவ னிந்தை யம்மா. ௬

553 தற்புகழ் வோன்றனைப் பழிக்குந் தாரணி
சொற்புகழ் விரும்பிடான் தனைத்து தித்திடும்
நற்புகழ் பெருவழி நன்ன டக்கையோ
டற்பமுந் தற்புக ழாமை யாகுமே.

௭

554 தன்றுதி பிறர்சொலத் தகுமன் ஞேர்புகழ்
இன்றியே தன்னைத்தா னேத்த லூர்தியில்
ஒன்றுமா பூட்டிடா தொருவன் உள்ளுறாஉம்
மன்றவே நடத்துவான் வலித்தன் மானுமே.

அ

555 தன்றுதி பிறர்சொலத் தகுந்தன் வாயினல்

ஒன்றுறத் தன்றுதி யோத லூர்ந்துதான்
சென்றிடு மூர்த்தியைச் சிவிகை யாரின்றித்
துன்றுதன் தோளினுற் சுமத்தல் போலுமே.
௬

---

## ௧அ. செய்ந்நன்றியறிதல்

### கந்த புராணம்

556 நோற்றிடு தவத்தினை நோக்கி யெண்ணிலாப்
பேற்றினை யுதவிய பிரானேர் தீமையான்
மாற்றிட வுன்னுமேல் வணங்கி மாறுரீஇப்
போற்றுத லன்றியே பொரவுஞ் செய்யுமோ.
௧

557 ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங்
கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.
௨

### விநாயக புராணம்

558 பயன்கா ரணத்தைக் குறியாமற் பரிந்து காலத்
தாற்செய்த
நயஞ்சேர் நன்றி சிறிதேனு நாடி னதற்கோ

ளவில்லை

பயன்கா ரணத்தைக் குறித்தினையும் பதத்திற்
புரிந்த நன்றியையும்

வியன்பூ தலத்திற் பெரிதாக விரும்பி மதித்தல்
வேண்டுமால். ௫

559 நன்றி புரிந்தோர் மற்றெருகா னவைகள் புரிந்தா
ராயிடினு

மொன்று முதவி யேமதித்திட் டோம்பா நவையை
மறந்தவரை

யென்று மறவா திருந்திடுக விகப்பிற் கருவான்
மறையோரைக்

கொன்று திரிவோர் பிழைசிறுகக் குன்ற
மெனவே பிழை

பெருகும். ௬

சேதுபுராணம்

560 யாப்பின் மன்னிய நன்றி தன்னை விடுத்த தீமை
யிதற்குயிர்

நீப்ப தேபரிகார மென்றிடு நீதி நூலரு
டாதைதாய்

காப்பு நேர்கிலர் குரவர் தக்கிணை காத லோடு
வழங்கிலார்

தீப்ப வங்களு மாற்று நன்றயர் தீங்கு நீங்குயிர்
தீர்க்குமால். ௫

புறநானூறு

561 ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்

மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
வறம்பா டிற்றே யாயிழை கணவ.

க௫. செய்ந்நன்றியறிதல் 89

பெரிய திருமொழி

562 மைந்நின்ற கருங்கடல்வாய் உலகின்றி
வானவரும் யாமு மெல்லாம்
நெய்ந்நின்ற சக்கரத்தின் திருவயிற்றில்
நெடுங்காலங் கிடந்த தோரீர்
எந்நன்றி செய்தாரா ஏதிலோர்
தெய்வத்தை யேத்து கின்றீர்
செய்ந்நன்றி குன்றேல்மின் தொண் டர்காள்
அண்டனை யேத்தீர் களே.

எ

சீவக சிந்தாமணி

563 தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்
பின்னை வெளவிற் பிறழ்ந்திடும் பூமகள்
அன்ன வன்வழிச் சொல்லினிம் மண்மிசைப்
பின்னைத் தங்குலம் பேர்க்குந ரில்லையே.

அ

564 பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாட்
குறைபடு மதியந் தேயக் குறுமுய றேய்வ தேபோல்
இறைவனுத் தன்னை யாக்கி யவன்வழி யொழுகி னென்றும்
நிறைமதி யிருளைப் போழு நெடும்புகழ் விளக்கு மென்றான். க

## பெருங்கதை

565 அடவியுள் வீழ்ந்த கடுநடை யிரும்பிடி
நம்மாட் டுதவிய நன்னர்க் கீண்டொரு
கைம்மா றுற்றுதல் என்று மின்மையின்
உதவி செய்தோர்க் குதவா ராயினும்
மறவி யின்மை மாண்பு டைத்து.

௧௦

566 பொன்னணி மார்பன் முன்ன ராற்றிய
நன்னர்க் குதவும் பின்னுப காரம்
அலைதிரைப் பௌவ மாடை யாகிய
நிலமுழுது கொடுப்பினும் நேரோ.

௧௧

## இராமாயணம்

567 சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்

பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவை
மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றன்
மாயூர
வுதவிகொன் ருற்கென் றேனு மொழிக்கலா
முபாய முண்டோ. கஉ



568

உதவாம லொருவன் செய்த வுதவிக்குக் கைம்மா ருக
மதயானை யனைய மைந்த மற்றுமுண் டாக வற்றே
சிதையாத செருவி லன்னுன் முன்சென்று செறுநர் மார்பி
லுதையானே லுதையுண் டாவி யுலையானே
லுலகின்
மன்னே. கங

569 நீர்க்கோல

வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற் குயிர்கொடா
தங்குப் போகேன்
தார்க்கோல மேனி மைந்த வென்றுயர் தவிர்த்தி

யாகிற்

கார்க்கோல மேனி யானைக் கூடுதி
கடிதி னென்றான். கஎ

## உத்தரகாண்டம் (இராமாயணம்)

570 மன்றுபறித் துண்டோரும் வழக்கல்லா
துரைத்தோரும் மனையாள் தன்னோ
டொன்றியுடன் வாழாதே யோராதே

பரதார முவந்துள் ளோரும்
கொன்றுடலந் தின்றோருங் கோட்சொல்லித்
திரிவோருங் கோலிச் செய்த
நன்றிதனை மறந்தோரும் நரகத்தின்
இடைக்கிடந்து நடுங்கக் கண்டான்.

கஅ

## வில்லி பாரதம்

571 அரவ மல்கிய பதாகை யாய்மதி
யமைச்ச ராயர சழிப்பினுங்
குரவர் நல்லுரை மறுக்கி னும்பிறர்
புரிந்த நன்றியது கொல்லினும்
ஒருவர் வாழ்மனையி லுண்டு பின்னுமவ
ருடனழன்றுபொர வுன்னினும்
இரவி யுள்ளளவு மதிய முள்ளளவு
மிவர்களே நரகி லெய்துவார்.

கசு

பெருந்தேவனார் பாரதம்

572 ஒருவ ரகத்தொருவ ருண்டுடுத்துத் தம்மின்
மருவி மனமகிழ்வா ராயிற்—செருமுனையின்

மன்னப்போர் செய்யு * மழைமதமால் யானையாய்
† பின்னைப்போர் தக்கதோ பேசு.

௧எ

* 'மழகளிற்ருய் மாநிலத்துப்' என்பது பாடபேதம்.
† 'பின்னப்போர்' என்பது பாடபேதம்.

## ௧அ. செய்ந்நன்றியறிதல் 91

வீர பாண்டியம்

573 ஒருநன்றி செய்தாரை யுள்ளத்தே
நினைந்தென்று முயிர்நட் பாகப்
பெருநன்றி யுடன்பேணிப் பெரியர்நிற்பர்

சிறியரன்றே மறந்து போவர்
தருநன்றி தனைமறந்துந் தாமவர்க்குப்
பிழைபுரிதல் சண்டா ளர்க்கே
வருமன்றி மற்றவர்க்கு வருங்கொல்லோ
வந்ததிவன் பாலீ தென்னே

௧அ

பழமொழி

574 நன்கொன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க வெறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயும்
ஒன்றிரண்டாம் வாணிக மில்.

கக.

575 நாடி நமரென்று நன்குபுறந் தந்தாரைக்
கேடு பிறரொடு சூழ்தல் கிளர்மணி
நீடகல் வெற்ப நினைப்பின்றித் தாமிருந்த

கோடு குறைத்து விடல்.

உ௦

நாலடியார்

576 தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர்
சான்றோர்—பனையனைத்
தென்றுஞ் செயினு மிலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு.

உக

மூதுரை

577 நன்றி யொருவர்க்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால்.

உஉ

திருக்குறள்

578 நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.
உங

579 கொன்றன்ன வின்னு செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.
உசு

580
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.
உ௲

## ௬௬. ஒழுக்கம்

### விநாயக புராணம்

581 தாழ்ந்த வருணத் துதித்தவருந்
தக்கோ ராவ ரொழுக்கத்தால்
வீழ்ந்த வொழுக்கத் தாரிழிவர்
மேலாம் வருணத் துதித்திடினுஞ்
சூழ்ந்து துணையாஞ் சிறப்பின்பஞ்
சுரக்கு மதனு லுயிர்தனினும்
வாழ்ந்த வொழுக்க மோம்பிடுக
வழுக்கி னிடும்பை யேதருமே.

582 எவ்வகை யுலகத் துள்ளா ரியல்புட னொழுகு
கின்றார்

அவ்வகை யொழுக்கி னின்றே யழிவன வருமுன் காத்துத்

அவ்வெனும் பழிபா வங்க டபுதியெய் தாமை யஞ்சிச்

செவ்விய நெறியி னுளுஞ் செலுத்துக பொறிக ளைந்தும்.

## திருவானைக்காப்புராணம்

583 ஏத்தலுறுந் தீக்கையுள்ளா ரெவரே யாக
வியம்புவரு ளுச்சிரம வொழுக்கந் தன்னை
நீத்தனரேற் றீக்கையிலா தவரோ டொப்பர்
நீத்தவொழுக் கத்தொருநால் வருமந் நான்மை
பாத்தியமா தருமவியுஞ் செவிடும் பித்தும்
பயில்குரு டுமையுந்தீக் கைக்குரிய வாகா
சூத்திரனு மொழுக்கமுறின் மறையோ னொப்பான்
சூத்திரனொப் பான்மறையோ னொழுக்கம் விட்டால்.

## திருக்குற்றாலப் புராணம்

584 பதித்துணைவி நீராடிற் பன்னிருநாட் படிகடவார்
விதித்தகுல தருமம்விடார் பிறர்மனையை விரும்பலுறார்
துதிப்பமனை யறத்திருந்துந் துறவோரே துறவோராய்க்

கதித்தமனஞ் சுழிபட்டா ரிருவகைக்குங் கழிபட்டார்.

### சேது புராணம்

585 மெய்த்தி ருத்தவம் வீரம் படைக்கினும்
எத்தி றத்திட ரெய்திய தாயினும்
உத்த மக்குல மேன்மை யொழுக்கமார்
தத்த நீதி பிழைப்பர்கொல் சால்புளோர்.

## கசு. ஒழுக்கம்

586 யாரொருவிப் பிரனிணங்காப் பாதகரோ
டொருதினமுண் டிணங்கி ஞனேற்
பாரமரர் குலக்குரிய பண்பதனி
ளுலிலொரு பங்கு நீங்கு
மோரிரண்டு தினத்திலதிற் பாதிகெடு
நாண்மூன்றி லொழியு முக்கா
லீரிரண்டின் முழுதுமறு மீப்படுமேற்
பூரியரோ டிரண்டி லானும்.

### கூர்ம புராணம்

587 பொறைகொடை கருணை தானம் பொய்மொழி யழுக்கா றின்மை
யுறையுமுட் கரணங் காத்தல் பயில்புறக் கரணமோம்பல்

குறளைசொல் லாமை நாளு முனிவின்மை யுயிர்கொல் லாமை

பிறர்மனை நயத்த லின்மை நன்மொழி பிறழா வாய்மை. எ 588 புண்ணிய நன்னீ ராடல் கடவுளர் பூசை யாற்றல்

உண்ணிறை மகிழ்ச்சி வேத பாரகர்க் கூட்டல் தீய

கண்ணய வாமை கள்ளா தொழுகுதல் கடுஞ்சொ லின்மை

யெண்ணிய விவைக ணன்கு குலத்திற்கு மியைந்த வாமால். அ

589

புரிந்த பாவ மறையாது புகறல் வேண்டு மியாவருக்கும்
வருந்தின் ருக வியைவனகள் செய்ய வேண்டு மகிழ்தந்தை

திருந்து மொழுக்கந் திறம்பாம னிற்றல் வேண்டு மடகெனினும்
விருந்தி னோடு நுகர்வதல்லா வாளா நுகர்தல் விடவேண்டும். கூ

590

காமம் வெகுளி மயக்கமுதற் றீமை யெவையுங் கடிந்திடுதல்
ஓமச் செந்தீ யூட்டியன்றி யுண்ணு தொழித ருய்தந்தை

தோமில் பசுநான் மறைக்கிழவர் போற்றித்தொழுத றுய்ப்பனகள்

பாமாண் கிளைஞர் மகிழ்சிறப்ப வரையா

தென்றும் பாத்தருந்தல்.
கO

591 அல்லல் புரிந்து பொருளீட்டல் காமந் துய்த்த லிவையாகா
வொல்லும் வகையி னறமியற்றுங் காலத் துன்ப முற்றிடினும்
புல்லுந் தருமம் விடாதொழுக புகலு முயிர்க ளனைத்தினுக்கு
நல்ல செய்க கடவுளரை மறையை யிகழ்த னவையாமால். கக

## இலிங்க புராணம்

592 கருத்தி னுணர்வா லறிந்ததுவுங் கண்ணுற் றெரியக் கண்டனவும்
தெரித்த வொலியாற்கேட்டதுவுந் திறம்பா துரைத்தல் பொய்யாமை
விரித்த மறைநூல் விதித்தவிடத் தன்றி வீடா வுயிரனைத்தும்
அருத்தி கூரக் கொல்லாமை கொல்லா விரத மாகுமால். கஉ

93

சு



593 எனைத்துப் பொருளு மொருகாலு

மிரவா திருத்த லிரவாமை

மனத்தி னுனும் பிறர்பொருளை வெளவ
வெனவே சிறிதேனு
நினைத்தி டாமை கள்ளாமை யாமா னிகழ்த்து
மியமமே
வினைப்பற் றறுக்கு நியமத்திற் கேது
வாகும் விளம்புங்கால். கக

594 மகளிரைக் கோற லடாதுதொன் மறையின்
வழியினி னடந்திடா தொருவி
யிகழ்தரு பாசண் டத்துறை வோர்க
டமையிரு கண்ணிணை ணோக்கிற்
பகலவன் றன்னை நோக்கிட வேண்டும்
பகர்ந்தபா சண்டரை யேனும்
அகலுறப் போக்க லன்றிவெங் கொலைசெய்
திடுதனன் றன்றென வறைவார்.
கச

595 தீதறு வழியிற் செல்லுதல் வேண்டுந்
தீம்புனல் வடித்ததை யல்லா
தேதமற் றெழியக் குடித்திட லாகா
படிறெழிந் தியம்பிட லாமாற்
கோதறு வேள்வி தன்னிலுஞ் சிராத்தந்
தன்னிலு மருந்துதல் கூடா
மாதுயர் செய்யுங் கோறலெஞ் ஞான்று
மனக்கொளா தகற்றிடல் வழக்கே.

கரு

596 துயின்றெழு காலுந் தும்மிய பொழுதுஞ்
சொன்னவை யருந்திய பொழுதும்
பயன்படு சுத்தா சமனமே பண்ணல்
பான்மையா மனைவியர் முலைமேன்
முயங்கிய காலும் வாயசங் கோழி
முதிர்சின நாய்பன்றி கழுதை
யியங்கு மொட்டகமா மிவற்றோடு பதிதற்
றொடினுநீ ராடலே யியையும்.

கசுு

597 நெறியலா நெறிசெல் பதிதனும் வானப்
பிரத்தனு நீளிடை தன்னி
லுறைதரு வோனு மிறந்திடி னிடுகா

டாற்றிடு மளவுள தென்ன
வறைகுவர் தாயத் தார்க்குமா சௌச

மரிறப வருமறை தன்னை
முறையினி லுரைத்தோன் குரவனீங் கிவர்க
ளிறந்திடின் மூன்றுநா ளுளதால்.

கஎ



598 மாதுல னிறக்கின் மூன்றுநா ளுளதால்
வாளம ரிடையினி லிறந்தோர்க்

கோதுமா சவுச மிலதென வுரைப்பா
ருயர்ந்தநான் மறையினை யுணர்ந்த
வேதியர் தமக்கோர் பத்துநாள் வேந்தர்க்
கீரறு நாண்மிகு வணிகர்க்
கேதமி லுண்மூ வைந்துபின் னவர்க்கு
முப்பது நாளென விசைப்பார்.

599 உரைத்திடு பூப்புற் றிருக்குநன் மகளி
ரொளிநகை விளக்குதல் வாசம்
விரித்திடு மாலை சந்தன மணிதல்
மெய்யினை விளங்கிடத் திமிர்தல்
திரைத்தெறி புனலி லுடிட லமுத
லூர்தியி னிவர்ந்துசே ணகறல்
வருத்துசூ தாடல் புணர்ந்திட லிவற்றை
மனத்தினு நினைத்திட லாகா.

600 ஓதிய நான்கா நாளினீர் மூழ்கி
யொருவர்தங் களையுநோக் காதே
தீதற விரவி தன்னையே நோக்கல்
வேண்டுமாற் றிகழநோக் கியபின்
கோதறு தருப்பை தோய்த்தநீ ரேனுங்
கோட்டவான் பொழிந்தபா லேனு
மேதமில் பஞ்ச கவ்விய மேனு
மருந்திடல் வேண்டுமென் றிசைப்பார்.

மச்ச புராணம்

601 தயவுநற் பொறுமை யுள்ளந் தனிலழுக் காறி லாமை
இயல்சுசி கிலேச மின்மை இயையுநற் சுபவா சாரம்
பயனுறு மீகை யோடும் பரர்பொருள் பரதா ரங்கள்
நயவினை வெறுத்த லெட்டும் ஆன்மநற் குணமே யாமால். உக

மாயூரப் புராணம்

602 பூத்த காலை மனையாளைப் புணர்ந்தா னிரத்த கூடத்தில்
யாத்த நூறு யுகமழுந்து மிரியும் புலைச்சி முலைதோய்ந்தான்
மூத்த விருத்த யோனியிடை முயங்கும் படிசுக் கிலங்கவிழ்த்தான்
சீத்த† கயினி முலைதிளைத்தான் வலிந்து பரமா தரைச் சேர்ந்தான். உஉ

† கயினி — விதவை.

60 3

இன்ன கொடிய பாதகத்தோர் நாயூ னுகநா றெடுத்தருந்திப்
பின்ன மருவிக் காலொடுகை பெயர்க்கக் கூடா விதங்கிடப்பார்
சொன்ன விரதத் துபவாசத் தோகை யரைச்சேர்ந் தவனுப்புத்
துன்ன நிறைகூ பத்திலுகந் துளைந்து செந்நா
யாய்ப் பிறப்பான்.

உ௩

காசி ரகசியம்

604

இழிந்த சாதிய ராயினும் புண்ணிய மியற்றிற்
கழிந்த மேன்மைகூர் சாதிய ராகுவர் கடையா
யொழிந்த பாதக மியற்றுந
ருயர்ந்தவ ரெனினும்
பொழிந்த தீமைசால் புலைத்தொழிற் புன்மைய
ராவர். உச

## வாயுசங்கிதை

605 பொறையொடு சாந்தி யுள்ள மகிழ்வுமெய் புகறல் வெய்ய
நெறியில்கள் ளாமை ஞான நிலவநீ றணித றுன்னி
யுறைதரு குழுவி னீங்க லுற்றவைம் புலன்கள் வென்று
மறுவறு பிரம சாரி யொழுக்கமன் னிடுதன் மாண்பே. உடு

## காசி கண்டம்

606 சத்தியந் தானஞ்‡ சம்மத மின்சொற்
சாற்றுத லொருவழிப் படுதல்
புத்தியே முதல கரணமோர் நான்கு
மடக்குதல் புலன்கள்போம் வழியி
னுய்த்திடா தமைத்தல் பொறைதிட ஞான
முயிர்க்கெலாந் தண்ணளி புரித
லித்திற மனைத்து மானத தீர்த்த
மெனவெடுத் தியம்பினர் மேலோர்.
உசு

607 அறத்துறை பயிலு மானத தீர்த்த
மாடல ராகிநீ ராடிற்
புறத்தழுக் கொழிவ தல்லது புனித
ராகிலர் பூந்திரை சுருட்டுஞ்
சிறைப்புன லதனின் முழையுறழ் பகுவாய்த்
தீவிழிக் கூரெயிற் றிடங்கர்
சுறக்குல முதல வளப்பருங் காலந்

தோய்ந்ததாற் றுறக்கமுற் றனவோ.

உஎ

---

‡ சம்மதம்—யாரிடத்தும் பகையின்மை.



608 இணங்குரு வாய்மை மெய்ம்மையே யெனினும்
இயம்பொறு விணங்குவ தெனினும்
அணங்குநோய் செய்யும் பொய்சொலா தொழிக
அறிஞரோ டிணங்குக நாளுங்
குணங்களே மொழிக வுளத்திலெஞ் ஞான்றும்
நன்மையே குறிக்கொளல் வேண்டும்
பிணங்குவெஞ் சூதிற் சூறளையிற் றாதிற்
பெறுபொருள் கோடறீங் குறுமால்.

உஅ

609 பிறர்மனை விழைத னிலைபிழைத் தொழுகல்
பொய்ம்மொழி பிதற்றுதல் சீற்றம்
மறமிகு வயிரங் குறளையே வாத
மொழியினை நவிலுதன் மாயை
‡கிறிபகர்ந் தொழுக லாயவொன்பானுங்
கீழ்மையோ ரொழுக்கமில் வாழ்வின்
உறைகுந ரிவற்றை விடுகவென் றினிதி
னுரைத்தனர் நூன்முறை யுணர்ந்தோர்.

உகூ

610 மெய்ம்மைநற் பொறைவெங் கொலைசெயா

தொழுகன்

மேவுமெக் கரணமு மடக்கல்
செம்மைசேர் தூய்மை வரைவுரு தளித்தல்
சீற்றநீங் குதல்கள வின்மை
யம்மவென் றெவரு மாற்றுதல் பரியா
வருள்செய லாயவொன் பானும்
வம்மென வமர ரெதிர்புகுந் தழைப்ப
வானிடை விடுத்தது தாமால்.

௩௦

## சிவதரு மோத்தரம்

611 கன்னிகையை விற்பார்கள் பரதாரந் தன்னைக்
காமுறுவார் மனைவிகுறை கண்டறிந்துந்
துறவார்
பொன்வினைசெய் கொல்லர்மரக்
கொல்லர்பொருட் பெண்டிர்
புலைவிலைஞர் மதுவிலைஞர் புரந்தாரை
மறந்தார்
தென்னெனவே பாடுமவ ராடுமவர் வாளாற்
சேவிப்பார் பூவிற்பார் செக்கார்சொக்
கிடுவார்
என்னுமிவ ரெழுவரவர் ரன்னுதி யருந்தே
லிழுக்கான அனமுளத்தை யழுக்காக்கி
விடுமே. ௩௧

## சிவ—மெய்ம்மொழி

612 சத்திய முரைக்க நாளுஞ் சகலபல் லுயிர்கட் கெல்லாம்
நித்தலு மிதமே செய்க நினைப்பது சிவத்தை யென்றும்

‡ கிறி—பொய்.

ஐ. பா.—7



பாடற்றிரட்டு

அத்தன்வே தாக மத்தி னருளிய பொருளிம் மூன்றும்
எத்திறச் சமயத் தோர்க்கு மெம்மதங் களுக்கு மிட்டம். ௧௨

613 தம்மின்மூத் தாரை யெல்லாந் தந்தைதா யெனவே காண்க
தம்முடற் கிளையோர் தம்மைத் தமதுபுத் திரர்போற் காண்க
எம்மத மென்ன வேண்டா மெங்குநன் குளதே கொள்க
செம்மையொன் றுணரிற் றம்மைத் தெரிவுறு நெறிவே றின்றே. ௧௩

சிவ—தத்துவதரிசனம்

614 நீக்கரு மவாவ றுக்க நிலையாமை முழுதுங் காண்க
வாக்கினை வருந்திக் காக்க மன்னுயிர்க் கிதமே செய்க
தாக்கிய தனக்கின் னாத தான்பிறர்க் கொழிக வென்றும்
ஆக்கமு மறிவுஞ் சேரு மழகுறு நெறியீ தென்றே. ௧௪

615

நற்றவர் தம்மைச் சேர்மின் னல்லவ ரஞ்சிற் றஞ்சிப்
பெற்றதி லமைந்து வாழ்மின் பிறர்பொருள் வெஃகா தேன்மின்
மற்றவர் நலந்தீங் கும்மில் வந்தன போலக் காண்மின்

கற்றவ ரெல்லாம் போன கருதரு நெறியு
மீதால். ௩௫

## சிவ—மெய்ஞ்ஞான விளக்கம்

616

கூறுக வாய்மை கோறல் களவுகட் காமம் பொய்ம்மை
மாறுக வெவர்க்குந் தம்மால் வல்லவா பகுத்தே யுண்க
ஆறுக வாசை யைந்து மடக்குக வறிஞர்ச் சேர்க
தேறுக விதுவே முத்தி செறிவுறு நெறிவே றின்றே. ௩௬

## ஞானாமிர்தம்

617 பொய்ப்பொறி புணர்க்கு முப்பொறி யுள்ளும்
உள்ளச் செய்தி தெள்ளிதிற் கிளப்பின்
இருடீர் காட்சி யருளொடு புணர்தல்
பெரும்பொறை தாங்கல் பிறன்பொருள் விழையாமை
செய்தநன் றறிதல் கைதவங் கடிதல்
பால்கோ டாது பகலிற் றேன்றன்
மானம தாணி யாணிற் றுங்கல்

அழுக்கா றின்மை யவாவிற் றீர்தல்
அருந்துய ருயிர்கட் கிருந்த காலை
யழலேய் வன்ன ராகி யானுக்
கழலு நெஞ்சிற் கையற் றினைதல்
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்
கறிவும் பொறியுங் கழிபெருங் கவினும்
பெறற்கருந் துறக்கமு மிறப்ப வூங்குத்



தம்மினும் வேண்டுமென் றெண்ணரும் பெருங்குணம்
வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள
அறம்பெரி தறைதல் புறங்கூ றுமை
வாய்மை கல்வி தீமையிற் றிறம்பல்
இன்மொழி யிசைத்தல் வன்மொழி மறத்த
லறிவனூல் விரித்த லருமறை கூழற
லடங்கிய வறைதல் கடுஞ்சொல் விடுத்தல்
பயனின்ற படித்தல் படிற்றுரை விடுத்தல்
காயத் தியைந்த வீயா வினையு
ளருந்தவந் தொடங்க றிருந்திய தானங்
கொடைமடம் படுதல் படையுடன் படாமை
அமரர்ப் பேண லாகுதி யருத்த
லொழுக்க மோம்பும் விழுப்பெருங் கிழமை
யுடம்பிடி யேந்தி யுடறடிந் திடுமா
நடைந்த காலை யவணிய றுயரந்
தேரா ரல்லர் தெரிந்து மாருயிர்
பெரும்பிறி தாக விரும்பிண மிசைஞரி

ஞோராங்குப் படாஅ மாசில் காட்சி
யைம்பெரும் பாதகத் தாழி நீந்த
லிந்தியப் பெரும்படை யிரிய நூறும்
வன்றறு கண்மை வாளிட் டாங்கு
நோவன செய்யினு மேவன விழைதல்
தவச்சிறி தாயினு மிகப்பல விருந்து
பாத்தூண் செல்வம் பூக்கம ழிரும்பொழில்
தன்மனைக் கிழத்தி யல்லதைப் பிறர்மனை
யன்னையிற் றீரா நன்ன ராண்மை
கார்கோ ளன்ன கயம்பல கிளைத்தல்
கூவ றொட்ட லாதுலர் சாலை
யறங்கரை நாவி னுன்றோர் பள்ளி
கடவுள் கண்ணிய தடவுநிலைக் கோட்டம்
இனையவை முதல நினைவருந் திறத்த
புரத்தன் மாதோ வறத்துறை மறத்துறை
யிவற்றின் வழிப்படா தெதிர்வன கெழீஇ
உஞற்றன் மொழிப வுணர்ந்திசி னோரே.

கஎ

618

பட்டினத்தடிகள் திருப்பாடல்

ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் லறமுநட்பு
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
யென்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே.

## திருமந்திரம்

619 விழுப்பமுங் கேள்வியும் மெய்ந்நின்ற ஞானத்
தொழுக்கமுஞ் சிந்தை யுணர்கின்ற போது
வழுக்கி விடாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி யெண்ணிலி காலம தாமே. கூகூ

620 செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசா லுரைமின்கள் வாய்மையை
யில்லை யெனினும் பெரிதுள னெம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீரே.
௨௦

## சூளாமணி

621 காதலரிற் பிழையாராய்க் கள்ளுன் *றேன் கடிந்தகற்றி
யீதலோ டில்லிருக்கு மிளம்பிடியர் முதலாயா
ரோதினமுத் தேவரா யுயர்ந்தவர்க்கு ளுயர்ந்துளராய்ச்
சோதியும்பே ரெண்குணனுந் துப்புரவுந் துன்னுவரே ௨௧

### சீவக சிந்தாமணி

622 நற்றுனஞ் சீல நடுங்காத்
தவமறிவர் சிறப்பிந் நான்கு

மற்றுங்குச் சொன்ன மனைவியரிந்
நால்வரவர் வயிற்றுட் டோன்றி

யுற்று ளெருமக்னே மேற்கதிக்குக்
கொண்டுபோ முரவோன் றன்னைப்

பெற்ருர் மகப்பெற்ரு ரல்லாதார்
பிறர்மக்கள் பிறரே கண்டீர்.

சஉ.

623 உறுவர்ப் பேண லுவர்ப்பின்மை
யுலையா வின்பந் தலைநிற்றல்
அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்ப
லழிந்தோர் நிறுத்த லறம்பகர்தல்
சிறியா ரினத்துச் சேர்வின்மை
சினம்கை விடுதல் செருக்கவித்தல்
இறைவ னறத்து ளோர்க்கெல்லா
மினிய ராத லிதுதெளிவே.

சங.

## சிலப்பதிகாரம்

624 பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் றெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமி
னூனூண் டுறமி னுயிர்க்கொலை நீங்குமின்

---

* தேன் — மயக்கப் பொருளிலொன்று.



தானஞ் செய்ம்மின் றவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் றீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்

அறவோ ரவைக்கள மகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேளத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென.

சுஅ

## வளையாபதி

625 ஆற்று மின்னரு ளாருயிர் மாட்டெலாந்
தூற்று மின்னறந் தோம்நனி துன்னன்மின்
மாற்று மின்கழி யாயமு மானமும்
போற்று மின்பொரு ளாவிவை கொண்டுநீர்.

சுஞ

## இராமாயணம்

626 தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே.

சுசு 627 கால மின்றியுங் கனிந்தன கனிநெடுங் கந்த
மூல மின்றியு முகிழ்த்தன நிலனுற முழுதுங்
கோல மங்கைய ரொத்தன கொம்பர்க ளின்பச்

சீல மன்றியுஞ் செய்தவம் வேறுமொன்
றுளதோ. ௬௭

நாலடியார்

628 அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது.

௬௮ 629 பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த்—தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா வவற்கு.
௬௯



630 அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின்
வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ்
ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.
௭௦

நான்மணிக்கடிகை

631 திருவொக்குந் தீதி லொழுக்கம் பெரிய
அறனொக்கு மாற்றி னொழுகல்—பிறனைக்
கொலையொக்குங் கொண்டுகண் மாறல்
புலையொக்கும்
போற்றுதார் முன்னர்ச் செலவு.

௫௧

632 இன்னுமை வேண்டி னிரவெழுக விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

௫௨

633 கன்றுமை வேண்டுங் கடிய பிறர்செய்த
நன்றியை நன்றுகக் கொளல்வேண்டு—மென்றும்
விடல்வேண்டுந் தன்கண் வெகுளி யடல்வேண்டும்

ஆக்கஞ் சிதைக்கும் வினை.

௫௩

634 கள்ளாமை வேண்டுங் கடிய வருதலால்
தள்ளாமை வேண்டுந் தகுதி யுடையன
நள்ளாமை வேண்டுஞ் சிறியரோ
டியார்மாட்டுங்
கொள்ளாமை வேண்டும் பகை.

௫௪

635 எல்லா விடத்துங் கொலைதீது மக்களைக்
கல்லா வளர விடறீது—நல்லார்

நலந்தீது நாணற்று நிற்பிற் குலந்தீது
கொள்கை யழிந்தக் கடை.

௫௬

## திரிகடுகம்

636 பிறர்தன்னைப் பேணுங்கா ஞணலும் பேணுர்
திறன்வேறு கூறிற் பொறையு—மறவினையைக்
காராண்மை யாக வொழுகலு மிம்மூன்று
* மூராண்மை யென்னுஞ் செருக்கு.

௫௮

## சிறுபஞ்சமூலம்

637 கள்ளான்சூ தொன்றுங் கழூஉமான் கரியாரை
நள்ளா னுயிரிரங்க நாவாடா—னெள்ளாது
மூன் மறுத்துக் கொள்ளானே லூனுடம் பெஞ்ஞான்றுந்
தான்மறித்துக் கொள்ளான் றளர்ந்து.

௫எ

* ஊராண்மை—உதவிபுரியுந்தன்மை.



## பழமொழி

638 தூய்மை மனத்தவர் தோழர் மனையகத்துந்
தாமே தமியர் புகல்வேண்டா—தீமையால்
ஊர்மிகி னில்லை கரியே ஒலித்துடன்

நீர்மிகி னில்லை சிறை.
௫அ

## ஆசாரக் கோவை

639 நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொல்லொ
டின்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாமை
கல்வியொ
டொப்புர வாற்ற வறித லருளுடைமை
நல்லினத் தாரொடு நட்ட லிவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து.
௫௯

640 பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றம் கல்விநோ யின்மை
இலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்ப
ஒழுக்கம் பிழையா தவர்.
௬0

641 உடுத்தலா னீராடா ரொன்றுடுத் துண்ணார்
உடுத்தாடை நீருட் பிழியார் விழுத்தக்கார்
ஒன்றுடுத் தென்று மவைபுகா ரென்பதே
முந்தையோர் கண்ட முறை.
௬க

642 தலையுரைத்த வெண்ணெயா லெவ்வுறுப்புந் தீண்டார்
பிறருடுத்த *மாசுணியுந் தீண்டார் செருப்புக்
குறையெனினுங் கொள்ளா ரிரந்து.
௬௨

643 நீராடும் போழ்தி னெறிப்பட்டா ரெஞ்ஞான்று
நீந்தா ருமியார் திளையார் விளையாடார்
காய்ந்த தெனினுந் தலையொழிந் தாடாரே
யாய்ந்த வறிவி னவர்.

௬௩

644 அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்முன்
நிகரில் குரவ ரிவரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி.

௬௪

645 காலினீர் நீங்காமை யுண்டிடுக பள்ளியு
ளீரம் புலராமை யேறற்க வென்பதே
பேரறி வாளர் துணிபு.

௬௫

---

* மாசுணி—அழுக்காடை.



646 விருந்தினர் மூத்தோர் பசு *சிறை பிள்ளை
யிவர்க்கூண் கொடுத்தலா லுண்ணாரே
யென்றும்
ஒழுக்கம் பிழையா தவர்.

௬௬

647 கிடந்துண்ணார் நின்றுண்ணார் வெள்ளிடையு
முண்ணார்

சிறந்து மிகவுண்ணுர் கட்டின்மே லுண்ணுர்
†இறந்தொன்றுந் தின்னற்க நின்று.

௬௭

648 முன்றுவ்வார் முன்னெழார் மிக்குரு
ரூணின்கண்
என்பெறினு மாற்ற வலமிரார் தம்மிற்
பெரியார்தம் பாலிருந்தக் கால்.

௬௮

649 சுடரிடைப் போகார் சுவர்மே லுமியார்
இடரெனினு மாசுணி கீழ்தம்மேற் கொள்ளார்
பலரிடை யாடை யுதிராரே யென்றுங்
கடனறி காட்சி யவர்.

௬௯

650 பிறர்மனே கட்களவு சூது கொலேயோ
டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார் திறனிலரென்
றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்

செல்வுழி யுய்த்திடுத லால்.

௭௦

651 பொய்குறளே வெளவ லழுக்கா றிவைநான்கும்
ஐயந்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பின்
ஐயம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும்.

௭௧

652 தமக்கென் றுலேயேற்ருர் தம்பொருட்டூன்

கொள்ளார்

அடுக்களை யெச்சிற் படாஅர் மனைப்பலி
யூட்டினமை கண்டுண்க வூண்.

எஉ

653 படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்றும்
அசையாத வுள்ளத் தவர்.

எங

## அறநெறிச்சாரம்

654 அறங்கூறு நாவென்ப நாவுஞ் செவியும்
புறங்கூற்றுக் கேளாத வென்பர்—பிறன்றாரத்
தற்றத்தை நோக்காத கண்ணென்ப

யார்மாட்டுஞ்

செற்றத்தைத் தீர்ந்ததா நெஞ்சு.

எச

655 ஒழுக்க மிலனாகி னோர்த்துடைய னேனும்

புழுப்பொதிந்த

புண்ணிற் கொடிதாங்—கழுக்கிரையை

---

* சிறை—பட்சி.

† இறந்து—நெறிதவறி.

யோம்பிமற் றென்னை யிறுதிக்க ணில்லாக்கால்
தேம்பி விடுதலே நன்று.

எரு

656 ❋தண்டாமம் பொய்வெகுளி †பொச்சாப் பழுக்கா றென்
றைந்தே கெடுவார்க் கியல்பென்ப பண்பாளா
யீத லறித ‡லியற்றுத லின்சொற்கற்
றுய்த லறிவார் தொழில்.

எசு

657 இருளே யுலகத் தியற்கை யிருளகற்றுங்
கைவிளக்கே கற்ற வறிவுடைமை கைவிளக்கின்
நெய்யேதன் னெஞ்சத் தருளுடைமை நெய்பயந்த
பால்போ லொழுக்கத் தவரே பரிவில்லா
மேலுலக மெய்து பவர்.

எஎ

## சோமேசர் முதுமொழி வெண்பா

658 தீயனவே சொல்லுஞ் சிசுபாலன் முன்புகண்ணன்
தூயதலாச் சொல்லுரையான் சோமேசா —ஆயின்
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

எஅ

## நீதிநெறி விளக்கம்

659 பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காது—மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்று
நலமன்றே நல்லா றெனல்.
எக

## புறப்பொருள் வெண்பா மாலை

660 அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை.
அO

661 குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கம்—கெடுக்கும்
அழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ டெட்டும்
இழுக்கா வவையின்க ணெட்டு.
அக

## ஞானவாசிட்டம்

662 செயலருந் துயருற் ருலுஞ் செயத்தகாச் செயல்க ளாகா
இயல்பலா வழியா லுண்ண விராகுவை யமுதங் கொன்ற

---

* தண்டாமம் மானம்

†பொச்சாப்பு—மாயை.

‡ இயற்றுதல்—தருமந்தேடுதல்.



தயலெலாம் வசமா யாபத் தனைத்தும்போ யென்று நன்ரு
முயலுநற் குணங்க ளாலே மொய்புக ழெய்தி னோர்க்கே.

அஉ

இன்னிசை

663 செல்வமுங் கல்வி யிலேயேற் சிறப்பில்லை
கல்வியு நுண்ணறி வின்றேற் கணிப்பில்லை
எல்லா மிருப்பினு நல்லொழுக்க மில்லாயின்
வல்லார்க்கு மில்லை மதிப்பு.

அக

திருக்குறள்

664 ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

அசு 665 ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

அ௫ 666 ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி.

அசு 667 ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய

வழுக்கியும் வாயாற் சொலல்.
அஎ

---

## உ௦. தீயொழுக்கம்

### கந்தபுராணம்

668 தந்தைசொன் மறுப்பவர்க டாயுரை தடுப்போர்
அந்தமறு தேசிகர்த மாணையை யிகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கண் மாருச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார்.
க

669 மெய்ம்மை நீங்கியே கொலைகள வியன்று மேலுள்ள
செம்மை யாளரைச் சீறியே யணங்குசெய் தீயோர்
தம்மி லாற்றரும் பழிசுமந் தொல்லையிற் றமரோ
டிம்மை வீடுவ ரெழுமையுந் துயரினு டிருப்பார்.
உ

[redacted] இங்ங னந்திரு நீங்கியே துயருழந் திறப்பர்
அங்ங னம்பெரி தாரிருண் மூழ்குவ ரதற்பின்
உங்ங னம்பிறந் தயருவ ரென்றுமீ துலவார்
எங்ங னுய்வரோ பிறர்தமக் கல்லல்செய்

திடுவோர்.   ௩

671 குரவ ரைச்சிறு பாலரை மாதரைக் குறைதீர்
விரத நற்றெழில் பூண்டுளோர் தம்மைமே
லவரை
யரும றைத்தொழி லாளரை யொறுத்தன ரன்றோ
நிரய முற்றவுஞ் சென்றுசென் றலமரு
நெறியோர்.   ச

672 கேட்டியா லந்த ணாள கேடிலா வெம்பி
ரான்தன்
மாட்டொரு சிறிது மன்பு மனத்திடை நிகழ்ந்த
தில்லை
காட்டுறு புள்ளின் சூழல் கவருவான் புதல்மேற்
கொண்ட
வேட்டுவ னியல்போல் மேலான் வேடநீ
கொண்ட தன்மை. ௫

காஞ்சிப் புராணம்

673 தவத்தினுற் செருக்கல் கண்டது விளம்பல்
பொய்யுரை சாற்றுத லந்து
மவித்தவந் தணரை யிகழுதல் யாது
மளித்தது புகழ்ந்தெடுத் துரைத்தல்
எவற்றினை யானுங் கொலைசெயல் பிறர்பா
லிடுக்கணை யுறுத்துதல் குறளை
செவிப்புகப் புகறல் பூப்புடை மனையைத்
தீண்டலும் வழுவெனப் படுமால்.

674 மனைவியோ டுண்ட லவளுடன் றுயிறன்
மனைவியயா வித்துழிப் பசிப்பில்
வினையிகந் தியல்பா னிருப்புழி யுண்ணும்
வேலையு மாங்கவட் பார்த்தல்
கனைகதிர்த் தேவைக் கிழக்கெழுங் காலை
மேற்கடற் பால்விழுங் காலைப்
பனிவிசும் புச்சி யுற்றிடுங் காலைப்
பார்த்தலும் பழுதெனப் படுமால்.

எ

675 உடையொழிந் திருநீ ராடுத லாடை
யொன்றுடுத் துண்டலீ ரியக்க
நடைவழிச் சாம்ப ராலிலை தீநீர்
நள்ளுற விடுதலாங் குமிழ்த
லுடையிலாமாதை நோக்குத லிருகா
லொளிர்ந்தசெங் கனலிடைக் காய்ச்ச
லிடையுறு மந்தி வேலையி னருந்த
லிவைகளும் விலக்கெனப் படுமால்.

அ

676 இந்திர திருவில் விசும்பிடை நோக்கி
யேனையர்க் கறிவுறக் காட்டல்
நிந்தையின் வாளா பேரிகல் விளைத்தல்
கையினைக் குவித்துநீ ரருந்தல்
செந்தமிழ்க் கடவுள் வான்பசுப் பார்ப்பார்
தேவர்கண் ஞாயிறு குரவ
ரிந்துவின் முன்ன ரிச்சையா றிருத்த
லின்னவுந் தீங்கெனப் படுமால்.

கூ

677 கேழுகி ருரோமந் துணித்திட லுகிராற்
பல்லினைக் கினைத்திட றனியே
பாழ்மனைத் துயிறல் கண்படை யெழுப்பன்
முடிவட பாலின்வைத் துறங்கல்
தாழ்துரும் பொடித்த லோட்டினை யடித்த
றனிவழிச் செலல்பிற ரணிந்த
காழகஞ் செருப்பு முதலிய வணித
லினையவுங் கடிந்திடப் படுமால்.

கO

தணிகைப் புராணம்

678 ஐந்தெனப் படுமா பாதக மவைதா
மருமறை யாய்ந்தவந் தணனைச்
சிந்துற வடர்த்த றேறல்வாய் மடுத்தல்
செம்பொனைக் கரந்தனர் வெளவல்

*ஆவித்தல்—கொட்டாவியிடல்.



கொந்தெழிற் குரவன் மனைவியைக் கலத்தல்
கோடுமிவ் வினைஞரைக் கூடல்
இந்தவல் வினையின் மருங்கியல் வினையு
மிவற்றினு ளடங்குவ மாதோ.

கக

679 பிறனில் விழைதல் பொருள் விழைதல்
பிறர்தம் பொருட்கே டெண்ணலுயிர்கட்
கிறுதி யெண்ணல் மனத்த னவாம்
ஏங்கும் அழுகை கோளுரைபொய்
அறைதல் புறங்கூ றுதல் வாக்கின்
ஆவபிற னில்புணர்ச்சி யுயிர்
தெறுதல் பழியூண் உணல்பி றர்சீர்
தெவ்வல் நான்கும் வடிவினவே.

கஉ

விநாயக புராணம்

680 பாயபல் பகைக்குந் தப்பிப் பாரிடை யுய்ய லாகு
மேயவக் கதிசென் ருலும் விளிதரா துடங்கு சென்றே
யாயநன் றனைத்துங் கொன்றங் கருந்துயர் பலவு நல்குந்
தீயவல் வினையின் யாதுஞ் செய்யற்க வேம கண்டா.

கந

681

அருந்தவர் குரவர் முன்னோ ரந்தண ருயர்ந்தோர் தம்பாற்
றிருந்திய வணக்க மின்மை செருக்குவேண் டியபக் கத்தும்

பொருந்திய பொருள்கொ டாமை பொங்கிய வெகுளி காமம்
விருந்துசெய் கழிகண் ணோட்ட மிவையெலாம் விடுக மைந்தா
கஅ

682

குற்றம் புரியா திருந்துபிறர் குற்றங் களைக சிறிதேனுங்
குற்றம் புரியிற் சிற்றெரிவைக் குவையை யழிக்கு மாறேபோற்
பற்றும் பெருவாழ் வினையழிக்கும் பகைவர்க் காக்க மிகப்பெருக்கு
முற்றும் பெருநோ யுழப்பிக்கு முனியா ரானு முனிவிக்கும். கடு

கூர்ம புராணம்

683 மாதவ ரைக்குர வன்றனை
வேதிய ரைச்சது மாமறை

மேதகு வாேனாரை
யைப்புகன் மெய்ந்நூலை

யேதமு ரைத்தவ ரிம்மையின் வெந்துய ரிடைமூழ்கிப்
பாதக ருற்றிடு பாழ்நர கத்திடை படிவாரால்.

கசு

684 தன்றம ரிழித்த ருன்பிறர்க் குரைத்த
றவறிலான் றனைத்தவ றுரைத்தன்

மன்றவே ரொருவன் றனையவ ணூட்டல்
கனகணீ யென்னவந் தடைந்தோர்க்



கொன்றிய துயர மியற்றுதல் பறவை
விலங்கின மொன்றொடொன் றிகலிப்
பொன்றிட விடுத்தல் பிறர்மனை நயத்தல்
பொறிவழி யொழுகுத லாகா.

கஎ

685 உரைநனி பகர்ந்து நகைத்துநின் றுலவி
யுண்குதல் புனலிடை வாளா
மருவியே கிடத்தன் மகவினைக் குரிய
ரல்லரை மகம்புரி வித்த
லிருளிடை யேனுந் தமியனு யேனுந்
தொடுகழ வின்றியும் வேடர்
தருமமொன் றறியார் தம்மொடு நெறியிற்

போதனற் றருமமன் ருமால்.

கஅ

686 அந்தணர் நிழலைச் சினகரத் தோங்கு
மவிரொளிச் சிகரநன் னிழலை
நிந்தையிற் கடத்தல் யோகியை யதியை
நிகரறு முனிவரை யிகழ்தல்

வெந்தொழி கரியிற் சாம்பரின் மயிரின்
மிதித்திடல் விளக்கிய தூளி
வந்துமே லடைய நிற்றரேய் துகினீர்
மேற்பட வதிந்திட றீதாம்.

கக

கருவூர்ப் புராணம்

687 அந்தணர்ச் செகுத்தல் கோவை யாவைவாம் பரியைக்கோறல் தந்தைதாய் மொழிதி றம்ப றமர்க்கலக் கண்ணி ழைத்தன் மைந்தரை வதைத்தல் வாதை மருவுதல் விருத்தர்க் கோறன் முந்தையோர் மொழிநூல் பொய்ம்மை மொழியென முனிவுகூறல்.

உ0

688 பன்னியை நீத்தல் கூத்தி யோர்ப்புணர் படிற்ரெுழுக்கம் வன்னியை யிகழ்தல் கற்பு மகளிரை வலிதிற் ரேய்தல் பொன்னிறு லெழிலான் மூத்த பூவையின் போகந் துய்த்தல் அன்னிய மாதர் நீச மகளிர்பா லன்பு பூத்தல். உக

689 பூப்பினள் போக மற்றை விலக்குநாட் போகந் துய்த்தல்
பார்ப்பன மகளிர் கொங்கை நோக்குவெம் பாவம் வெய்ய
தீப்பதி தொறும டுத்துச் சிதைத்திடுந் தீய வஞ்சந்
தோப்பலர்த் துடவை கூவல் சூழியைத் தடித றூர்த்தல். உஉ

690 உயிர்குறைத் திடலூன் விற்றல் கொண்டுண லுண்ணுமுள்ளச்
செயிர்குறைத் திடவி டுத்தோன் றனையுணச் செப்பல் செப்பும்



பயில்வினை மருமை யுண்டல் பாதகர் குழுவிற் போகித்
தயவறப் பேசல் பேசி நடுவையோர் சார்பிற் கூறல்.
உ௩

691 பிறர்மனை விழைதல் வேறு புறத்தொழுக்
கியையும் பெண்டீர் திறனெருங் குணர்ந்து மன்ன
மவளிட வுண்ணுந் தீமை அறனில புரிதல் போரி
லரசரை விடுத்துப் போதல் கறவைகன் றூட்டுமுன்னர்க்
கறந்துபால் களிப்ப வுண்டல்.

உ௪

692 அதிதியர்க் குணவு நல்கா தருந்துதல் பலியி டாமை
முதியசூன் மகளிர் கொங்கை முயங்குத லவரைக் காய்தல்
கதிர்வெயில் விரிகா லத்தி லரிவையர் கலவி வேட்டல்
பொதிகலன் கழித்து மாசு புனைமட வாரைப் புல்லல். உ௫

693 நட்பிடத் திடர்வி ளைத்த னண்பகற் பசிக்கூட் டாமை
கட்குடித் துழலுந் தீமை பலபொருள் களவிற் கோடல்
புட்குலம் விலங்கு சோரக் கண்ணியிற் படுக்கும் புன்மை
கொட்புற வரைவில் லாமே கொலைத்தொழி லாற்றுங் குற்றம்.

உகூ

694 நஞ்செனக் குறளை பேசி யாரையு நலிவு செய்தல் தஞ்சென வடைந்தோர்க் காற்றும் பாதகம் தாவில் கற்பு
வஞ்சியர் தம்மை விற்றல் பற்றியில் வாழ்க்கை யாற்றல்
நெஞ்சிலொன் றிணையி ருத்தி வாக்கிலொன் றிணை நி கழ்த்தல்.

உஎ

695 விரதமேற் கொடுவி டுத்தல் விரதத்துக் கழிவு செய்தல் பரவையிற் கலனிற் போகல் பழிபடக் கோறற் பார்த்தல்
அரவுகைப் பிடித்த லாட்ட னீர்விளை யாட லேற்கும்
இரவலர்க் கீத லின்மை யீதலை விலக்கும் புன்மை. உஅ

696 உடனிருந் துணவு மாந்திப் புறனுரைத் துழலும் பாவம்

அடல்கெழு மமைச்சன் வேந்தை யடக்கிநா
டளிக்கும் பாவம்
விடலரு மமைச்சை வீணில் விழுங்குவா
ளரையன் பாவங்
கடலுல கதிற்செங் கோல்வெங் கோன்முறை
காட்டும் பாவம். உசு

திருக்கழுக்குன்றப் புராணம்

697 குரவரைப் பிழைத்தவர் கொண்ட
நோன்பரைப்
பருவரச் செய்தவர் பழித்தல் சொற்றவ
ரிரவலர்க் கிதந்தப விரங்கு கிற்றிலாக்
கரவடத் தியற்கையர் கதியுங் காண்பரோ.
நூ௦



698 தேவருக் கெனவிரந் துண்ணுந் தீயவர்
யாவருக் கும்படு நிந்தை யேறுநர்
காவெனப் பிறர்வைத்த நிதியங் கைக்கொளும்
பாவமுற் செய்தவப் பழியொ ழிப்பரோ.
நூகூ

699 கற்றதற் கியைந்த வொழுக்கமில் லவனுய்க்
களவினுற் பிறர்பொருள் கவர்ந்து
முற்றவிற் றுழலு முலைமட மாதர்
முயக்கிடை யழுந்தியு மனைக்குஞ்
செற்றமிக் காக்குந் தீயகள் ளுண்டுஞ்
செறிபல துரோகமே பயின்று
முற்றவெங் கொலையும் புரிதரத் துணிந்தா
னுரைக்கருங் கொடியமா பாவி.

௬௨

700 பரரடிசில் புசித்திடுதல் பரதார
வாஞ்சையுறல் பரர்பொன் வெளவல்
பரரவவா தங்கோட லநாசாரந்
துவேசமுறை படிறி ராகம்
பரரிகழப் புலாலுண்டல் கள்ளுண்டன்
மறையவர்முற் பலரைக் கோறல்
பரருயிருந் தன்னுயிர்போற் பேணுமை
யிவையாதி பலவுங் குற்றம்.

௬௩

701 பரர்பொரு ளபக ரித்தல் பரதார கமனஞ்
செய்தல்
வரமிகு பரம னிந்தை வயக்குதல் கடுஞ்சொற்
கூறல்
விரவுபொன் னுதி வாங்கி மீட்டுத வாமை யின்ன

தரமுளோர் வடுகப் புத்தே டண்டிக்கப் படுவர்
மாதோ. ௩௪

702 வெஞ்சினம் பொருளாக் கொள்வோர் விடுபடாப்
பொருமை யாள்வோர்
வஞ்சக நட்போர் பாலும் வயக்குவோர் பிறரு
றஞ்சி
நெஞ்சநெக் குருகா ரெங்க ணின்மலப்
பெருமான் ருளே
தஞ்சமென் றடையா ரின்னோர் தண்டிக்கப்
படுவர் மாதோ.

௩௫

## சூதசங்கிதை

703 மறையவற் செகுத்தோன் கடிமது நுகர்ந்தோன்,
வயங்குசெம் பொற்கள வுண்டோன்
நிறையருட் குரவன் பன்னியைப் புணர்ந்தோ
னிகரிலிக் கொடியரை யாரு

-

## ௨௦. தீயொழுக்கம்

113

மறைவரான் மாபா தகரென விவரை
யடுத்தொரு வருடநட் டவரு
முறைதரு மாபா தகர்களே யென்ன
மொழிவதற் கையமொன் றின்றே.

௩௬

## பிரமோத்தர காண்டம்

704 கோறல் களவு கள்ளுண்டல்

குருவைப் பிழைத்தல் கூட்டென்னத்
தேறும் பஞ்ச பாதகத்தை
யொழியா தியற்றுஞ் சிறியோரும்
ஆறி லொன்று தாங்கொள்ளா
தநீதி யியற்றி யறமிகந்த
பாறு படிவேன் மன்னவரும்
பயந்தோர்க் கொன்ற பாதகரும்.

௧௭ 705 செய்த நன்றி மறந்தோருந்
தீவைத் தில்லஞ் சிதைத்தோருங்
கொய்து பசுவைத் தின்றோருங்
கொண்டோர்ப் பிழைத்துத் திரிந்தோரும்
நொய்திற் கரிபொய்த் துரைத்தோரு
நோன்பை யிகழ்ந்து நொடித்தோரும்
வைது பழித்துப் பொய்யென்று
முன்னூ லிகழ்ந்த வஞ்சகரும்.

௧௮
706 கருப்பம் வீழ்த்தித் திரிந்தோருங்
கலவா தவரைக் கலந்தோரும்
பரித்த வொருதே வினைவருத்திப்
பலதே வரையும் பழித்தோரும்
அருத்தி விடத்தாற் கொன்றோரும்
அற்றோர்க் கீயா திருந்தோரும்
விருத்தர் பாலர் மடவார்கள்
நடுங்க வினைகள் செய்தோரும்.

௧௯
707 அடைந்தோர்க் கருளா திருந்தோரு மமரிலரசன்

படவெருவி
மிடைந்து வெரிநிட் டோடினரும் வெறிய குறளை
பகர்ந்தொரும்
இடைந்த வறியோர்க் கீயாம னிதிய மீட்டி
யிருந்தோருங்
குடைந்து நீருண் கூவல்குளங் குட்டஞ் சிதைத்த
கொடியோரும்

௪௰

708 ஆரா மங்க ளழித்தோரும்
அதிதி வருந்த வயின்றோருந்
தீரா விடும்பை பனவருக்குந்
தவசீ லருக்குஞ் செய்தோருஞ்





சேரா நிலையைச் சேர்ந்தொழுகித்
தீவேட் டுண்ணுந் திறன்றிறம்பிப்
பாரா வாரங் கலத்தேறி
நிதிவேட் டுழன்ற பார்ப்பாரும்.

௪௧

பிரபுலிங்க லீலை

709 கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி
கொடுஞ்சொல்பொய் பயனில் கூறல்
நிலையழீஇ யொருவன் செய்ந்நன்றி மறத்தல்
நிந்தனை வஞ்சனை பிறர்தம்

சிலைநுதல் மடவார்க் கருதலென் றினைய
தீமைகள் யாவும்போ யினவால்
நலமலி தரும மூர்த்தியா கியநல்
நந்திவா னவன்புவி வருநாள்.
சஉ

710 வந்தநல் விருந்தி ருப்ப மனையினுற் றருந்து
வானும்
பந்தியி னுணவு வேறு பண்ணுபா தகனுந்
தாயுந்
தந்தையு முணவுண் ணுத சழக்கனு முச்சிப்
போதில்
நொந்தவர் தமைநோக் காம னுகர்ந்திடு
கொடியன் ருனும். சங

711 நிந்தைசெய் யுணவி னுனு நிருமலன் பூசை
யின்றி
வந்துண வருந்து வானு மறுத்தவூ னுகர்விப்
பானுந்
தந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர்
தம்மைக் கண்டு
சிந்தனை பொருத முங்கித் தீர்வினுண் மகிழ்வான்
ருனும். சச

712 கன்றுண விடாம லான்பால் கறந்துகொள்
பவனுஞ் செய்த
நன்றிகொல் பவனுங் கோடி நடுநிலை தவறு
வானுங்
கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும்

போர்க்களத்தில்
தன்றலை வனைவிடுத்துச் சாய்ந்துபோ மடமை
யானும். ௬௫
713 அடைக்கல மெனவந் தானை யளித்திடா தகற்று
வானுங்
கொடுக்குது மெனவுரைத்துக் கொடானுமொண்
கொடைவிலக்கி
விடுக்குறு மவனும் பாவ வினையிடத் துதவி யாகி
நடக்குறு மவனுந் தேர்ந்து நட்டபின் வஞ்சிப்
பானும். ௬௬
714 குரவர்தம் முரைகடக்குங் கொடியனுந் துறந்து
ளார்தம். வரவெதிர் கண்டெ ழாத மறவனு
மறிந்தான் போன்று
கரவினி லருநூல் கற்குங் கயவனும் புதிய ராகி
இரவினில் வந்த நல்லோர்க் கிடங்கொடா
தகற்று வானும். ௬௭
715 முன்புகழ்ந் துரைத்துப் பின்னர்
முறுவல்செய் திகழ்வான் றானுந்
தன்பெருங் கிளைநல் கூர்ந்து
தளர்வுற வாழ்கின் றானும்

உ௦. தீயொழுக்கம் 115

அன்புகொண் டொருவன் வைத்த
வரும்பொருள் கவர்கின் றானுந்

துன்புறுந் தொழில்செய் வித்துச்
சொல்பொரு ளிலேயென் பானும்.
சஅ 716 கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனு
மற்றோர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற்
கெண்ணு வானுஞ்
சொற்பொரு ளுணர்த்தி னானைத் தொழவுள
நாணு வானும்
விற்பன வலாத விற்று மெய்வளர்த் தழிகு
வானும். சக
717 நலமலி வயலி லாற்றி னந்தனத் தால யத்திற்
சலமல மொழிப்போன் றானுந் தனிவழி விலங்கு
வானும்
விலைமொழி பொய்த்து விற்கும் வெய்யவா
ணிகனுந் தாழ்ந்த
குலமிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று
வானும். ௬0 718 உறவுசெய் தறிந்த சொல்லை
யுவர்த்துமிக் கூறு வானும்
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசு
வானும்
—மறைவழு வுறுகொ டுஞ்சொன் முனிவிடை
மொழிகு வானும்
அறிவழி மனைவி சொல்லின் வழிநிற்கு மறிவி
லானும். ௬க 719 கலந்தவர் தமைப்பி ரித்துக்
கலகங்கண் டிடவல் லானும்
புலந்தரு நூலி னில்லாப் பொருளினைக் கூறு

வானும்
நலந்தனை யழுக்கா றெய்தி நகைத்திகழ்
கிற்போன் ருனும்
மெலிந்தவ ரிடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு
வானும். ௯௨ 720 புண்ணியம் பிறர்பொ ருட்குப்
புரிபவன் ருனு மிந்த
மண்ணிடை யின்பத் திற்கா மறுமைசெய்
தொழில்வி டுக்குந்
தண்ணிய வறிவி லானுந் தவத்தரை யிகழ்கிற்
பானும்
பண்ணிய வினையி லென்றும் பாவமே பயில்கின்
ருனும். ௯௩

பிரபோதசந்திரோதயம்

721 அகங்காட்டுந் தங்கபட மவரவருள்
ளொளித்தாலு மடுத்த பேர்க்கு
முகங்காட்டு மல்லவெனின் மொழிகாட்டும்
விழிகாட்டு முறுவல் காட்டுஞ்
சுகங்காட்டு வதுபோன்று துக்கமிகப்
பின்காட்டுந் தொழிலா மாபோல்
இகங்காட்டு நமதியன்மே லெண்ணிலா
நெடுந்துயருக் கேது வாமால்.

௯௪

சிவ—தத்துவரத்நாவளி

722 தன்னெஞ்சந் தனக்குச்சான் றதுவாகச்
சத்தியநன் குணராதே

வன்னெஞ்ச னுய்க்கூட மேபுரிவோன்
வஞ்சகக்கூற் றினுங்கொடியோன்



பன்னுங்கா லவன்றெரிச னம்பரிசம்
பழுநிரய வேதுவாகும்
புன்னெஞ்சா லவனும்போய் நரகெய்திப்
பூமியுள் ளளவுமேருன்.
௬௫

சிவ—ஞானசாரம்

723 வேதமா கமங்கண் மிருதிநூல் புராண
மிக்கவெக் கலைகளும் பயின்று
போதமே சொல்லிப் போதமங் குணராப்
புலையருங் கழுதையு நிகராங்
கோதிலா வாரங் குங்குமம் பளிதங்
குலவிய புழுகடை* பாணி
யேதமே சுமந்த கழுதையீங் கிவனி
னேற்றமாம் வஞ்சமின் மையினுல்.
௯கூ

சிவ—ஞானசித்தி

724 மறைமுதற் கலைக ளியாவையு முணர்ந்து
மாசற வுரைத்துமா சொடுந்தான்

கறையுறும் விடயக் கடுவெனுங் கடலிற்
கருத்தரு ததின்விழு மாகில்
அறைதரு மவனே கன்மசண் டாள
னறிவற விருமையு மிழந்த
பொறியிலி யிவனைப் போலும்பா தகரிப்
புவியினி லொருவரு மிலையே.

ுள

சிவ—தத்துவதரிசனம்

725 நற்றவ வேடங் கொண்டற முரைத்து
நானிலத் துணவதின் பொருட்டாற்
பற்றறு மவர்கள் போலவே நடித்துப்
பற்றவா வொடும்பிறர் கடையின்
முற்றவே யுழலு மூடரு மவரை
யடைந்திடு மூடரு மொக்கச்
சுற்றியே பாசப் பவக்கடற் பட்டுக்
கறங்கெனச் சுழல்வர்வீ டிலரே.

ுஅ

திருமந்திரம்

726 வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடம்மெய் வேடமே

---

* பாணி—பலபண்டம்.

வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தல் வீடது வாகுமே.
ஞக

727 தவமிக் கவரே தலையான வேடர்
அவமிக் கவரே யதிகொலை வேடர்
அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடம்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே.
சுo

728 ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
யீனம தேசெய் திரந்துண் டிருப்பினும்
ஆன நலங்கெடு மப்புவி யாதலால்
ஈனவர் வேடங் கழிப்பித்த லின்பமே.
சுக

## வைராக்கிய தீபம்

729 கான்றசோ றதனிற் கண்டுபொய்ப் போகம்
அனைத்தையுங் கைவிடுத் திடினும்
தோன்றுல கினைமெய் யெனக்கொடு மீக்கூற்
றுறவிருப் படையினத் துறவோன்
சான்றதா யுளதன் னுளமிலை யெனவுந்
தற்பரா னந்தமுற் றவனைப்
போன்றிரு விழிமேற் செருகியீண் டுரைக்கும்
பொய்யையெவ் விதத்தினாற் போக்கும்.
சுஉ

## ஒழிவிலொடுக்கம்

730 வேட்டியுந் தாழ்வடமும் வெண்ணீறும்

வெண்பல்லுங்
காட்டுவது ஞானக்
களவுகாண்—தேட்டமற்றேன்
பூரணன்காண் சிற்றறிவன் பொய்ப்பாச
மென்றறிந்தார்க்
கோர்வடிவும் வார்த்தையுமுண் டோ ?
சஙு

## மெய்ஞ்ஞான விளக்கம்

731 காதல் வேசியர் தம்மொடு முயங்கிய கங்குல்
போத கன்றபின் னிவர்சிதேந் திரியரிப் புருடர்
வேத வேதிய ரிவர்யோ கியரிவர் விரத
மாத போதன ரெனச்சிலர் புரிவர்நல் வஞ்சம்.
சஉசு

732 தூசுநீர்க் காவி யுறப்புனைந் தணிந்து
துளசிதா மரைமணி தோள்மேல்
ஆசில்மூப் பிளமை சாதிவேற் றுமைகள்
அகன்றெவர்க் காயினு மடியேன்
தாசனென் றிறைஞ்சிப் பிறர்பொருள் கவர்ந்து
சாத்திமேல் முத்திரா தானம்
மாசிலா தவர்போ லிருந்தன ரிவர்போல்
வஞ்சனை யாவரே வல்லார்.

## புறநானூறு

733 பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே.

சுசு

## சீவக சிந்தாமணி

734 குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர்
நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்
பிழைப்பிலாட் புறந்தந் தானுங் குரவரைப் பேணல் செய்யா
திழுக்கினா ரிவர்கள் கண்டா யிடும்பைநோய்க் கிரைக ளாவார்.

சுஎ

785 நட்பிடைக் குய்யம் வைத்தான் பிறர்மனை நலத்தைச் சேர்ந்தான்
கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கி

ஞனும்
அட்டுயி ருடலந் தின்ற னமைச்சனு யரசு
கொன்றுன்
குட்டநோய் நரகந் தன்னுட் குளிப்பவ
ரிவர்கள் கண்டாய்.
சு அ
736 கொல்வதே கன்றி நின்றூர் கொடியவர் கடிய
நீரார்
இல்லையே யிம்மை யல்லா லும்மையு முயிரு
மென்பார்
அல்லதுந் தவமு மில்லை தானமு மிழவென்
பாருஞ்
செல்பவந் நரகந் தன்னுட் டவினைத் தேர்க ளூர்ந்தே.
சு கூ
737 மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணுப் பாவிகளும்
அல்குல் விலைபகரு மாய்தொடிய ராதியார்
வில்பொருதோண் மார்ப விலங்காய்ப்
பிறப்பவே. எo
738 ஒழுக்கமே யன்றித் தங்கள் உள்ளுணர் வழிக்கு மட்டும்
புழுப்பயில் தேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி
விழுப்பய னிழக்கு மாந்தர் வெறுவிலங் கென்று மிக்கார்
பழித்தன வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் கென்றுன்.
எக

## வளையாபதி

739 பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்

ணவயன் மின்வடி வல்லன சொல்விநீர்

## உ.௦. தீயொழுக்கம்

119

உய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன.

எஉ

740 கள்ளன் மின்கள வாயின யாவையுங்
கொள்ளன் மின்கொலை கூடி வருமறம்
எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையு
நள்ளன் மின்பிறர் பெண்ணோடு நண்ணன்மின்.

எஙு

741 பீடில் செய்திக ளாற்கள விற்பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயனெனக்
கூடிக் காலொடு கைகளைப் பற்றிவைத்
தோட லின்றி யுலையக் குறைக்குமே.

எச

## குண்டலகேசி

742 போர்த்தலுடை நீக்குதல் பொடித்துகள்மெய்
பூசல்
கூர்த்த பணி யாற்றுதல் குளித்தழலுள் நிற்றல்
சார்த்தரிடு பிச்சையர் சடைத்தலைய ராதல்
வார்த்தையிவை செய்தவம் மடிந்தொழுக
லென்ருன். எ௫

இராமாயணம்

743 அறங்கெட முயன்றவ னருளி னெஞ்சினன்
பிறன்கடை நின்றவன் பிறரைச் சீறினேன்
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்
துறந்தமா தவர்க்கருந் துயரஞ் சூழ்ந்துளோன்.

எகூ

744 குரவரை மகளிரை வாளிற் கொன்றுளோன்
புரவல னுறுபொருள் புனவில் வாரினேன்
விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்
இரவல ரருநிதி யெறிந்து வெளவினன்.

எஎ

745 தாய்பசி யுழந்துயிர் தளரத் தான்றனி
பாய்பெரும் பாழ்வயி றளிக்கும் பாவியும்
நாயகன் படநடந் தவனு நண்ணுமத்
தீயெரி நரகத்துக் கடிது செல்கயான்.

எஅ

746 தாளினி லடைந்தவர் தம்மைத் தற்கொரு
கோளுற வஞ்சினன் கொடுத்த பேதையும்
நாளினு மறமறந் தவனு நண்ணுறும்
மீளரு நரகிடை விரைவின் வீழ்கயான்.

எகூ

747 பொய்க்கரி கூறினேன் போருக் கஞ்சினேன்
கைக்கொளு மடைக்கலங் கரந்து
வெளவினேன்
எய்த்திடத் திடர்செய்தோ னென்றின் னேர்புகு
மெய்க்கொடு நரகிடை விரைவின் வீழ்கயான்.

அ0



748 அந்தண ருறையுளை யனலி யூட்டினேன்
மைந்தரைக் கொன்றுளோன் வழக்கிற் பொய்த்துளோன்
நிந்தனை தேவரை நிகழ்த்தி னேன்புகும்
வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே.
அக

749 கன்றுயி ரோய்ந்துகக் கறந்துபா லுண்டோன்
மன்றிடைப் பிறர்பொருண் மறைத்து வௌவினேன்
நன்றியை மறந்திடு நயமி னுவினேன்
என்றிவ ருறுநர கென்ன தாகவே.
அஉ

750 ஆறுதன் னுடன்வரு மஞ்சொன் மாதரை
யூறுகொண் டலைக்கத்தன் னுயிர்கொண் டேகினேன்
சோறுதன் னயலுளோர் பசிக்கத் துய்த்துளோன்
ஏறுமக் கதியிடை யானு மேறவே.
அந.

751 எஃகெறி செருமுகத் தேற்ற தெவ்வருக்
கொஃகின னுயிர்வளர்த் துண் ணு மாசையான்

அஃகலி லறநெறி யாக்கி யோன்பொருள்
வெஃகிய மன்னன்வீழ் நரகின் வீழ்கயான்.

அ௫

752 கன்னியை யழிசெயக் கருதி னேன்குரு
பன்னியை நோக்கினேன் பருகி னேனறை
பொன்னிகழ் களவினிற் பொருந்தி னேனென
வின்னவ ருறுகதி யென்ன தாகவே.

அ௬

753 ஊணல வுண்வழி நாயி னுண்டவன்
ஆணலன் பெண்ணல ஞர்கொ லாமென
நாணல னரகமுண் டென்னு நல்லுரை
பேணலன் பிறர்பழி பிதற்றி யாகயான்.

அ௭

754 மறுவிறெல் குலங்களை மாசிட் டேற்றினேன்
சிறுவிலை யெளியவ ருணவு சிந்தினேன்
நறியன வயலவர் நாவி னீர்வர
வுறுபத நுங்கிய வொருவ னுகயான்.

அ௮

755 ஏற்றவர்க் கொருபொரு ளுள்ளதின் றென்று
மாற்றல னுதவலன் வரம்பில் பல்பகல்
ஆற்றின னுழற்றுமோ ராத னெய்துமக்
கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான்.

அ௯

756 நாரங் கொண்டார் நாடு கவர்ந்தார்
நடையல்லா வாரங் கொண்டார் மற்றொரு

வர்க்காய் மனைவாழுந் . தூரங் கொண்டா
ரென்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய் கண்டக ருய்ந்தா
ரெவரையா. அக

## உ௦. தீயொழுக்கம்

121

757 உய்யநிற் கபய மென்ரு னுயிரைத்தன் னுயிரி
ஞேம்பாக்
கையனு மொருவன் செய்த வுதவியிற் கருத்தி
லோனும்
மையற நெறியி ஞேக்கி மாமறை நெறியி னின்ற
மெய்யினைப் பொய்யென் ருனு மீள்கிலா நரகில்
வீழ்வார். க௦

### வில்வி பாரதம்

758 மீதெடுத்த வஞ்ச ராகி வெகுளி செய்தல்
பிறர்பெருங்
கோதெடுத் துரைத்த னண்பு கொண்ட
யிர்த்தல் கொடியவெஞ்
சூதெடுத்து விழைத லுற்ற சூள்பி ழைத்த
வின்னவே
தீதெடுத்த நூலின் முன்பு தீய வென்று
செப்பினர். கக

759 இரவல ரிளையவ ரேத்து நாவலர்
விரவிய தூதுவர் விருத்தர் வேதியர்
அரிவையர் வெஞ்சம ரஞ்சு வோர்பெருங்
குரவரென் றிவர்களைக் கோறல் பாவமே.
கூஉ

## பெருந்தேவனார் பாரதம்

760 தன்னைச் செருதானைக் காய்வான் தகாக்கொலையன்
பின்னைக் குரவரைப் பேணாதான்—முன்னொருவன்
இல்லாளைக் காதலித்தா னிந்நால்வர் வெந்நரகத்
தல்லா லழுந்தா தவர்.
கூங

761 அற்றங்கள் பார்த்தங் கடைத்திருந்து சொல்வானுங்
குற்றம்பொய் கோவுக் குரைப்பானுஞ்—செற்றத்தே
நின்றானுஞ் செய்ந்நன்றி நீத்தானு மந்தணரைக்
கொன்றாரோ டொப்பர் குறித்து.
கூச

## குசேலோ பாக்கியானம்

762 உயிர்க்கொலை புரித லுண்ணு முணவுமா றுட்டஞ் செய்தல்

அயிர்ப்பிலா நண்பர் மாட்டு மமைதரக்
குய்யஞ் செய்தல்
பயிர்ப்புமிக் குறநல் லோரைப்
பழித்தல்பொய்க் கரியுரைத்தல்
செயிர்ப்பிலா லயத்தி டத்துஞ் சென்றுபட் டிமை
யி யற்றல், ௧௫

763 ஓங்குபெரு ஞானியர்போற் பேசுவா
ரவருண்மை வேடம் போலப்
பாங்குபெற வுடற்புனைவார் சற்கருமஞ்
செய்வார்தம் பக்க மேகி
நீங்குகவென் றெழிப்பாரிந் நிலைமேலாம்
பிரமத்தி னிலையே யென்பார்
ஈங்கிவர்க டாங்கெடுவ தன்றிமற்றோ
ரையுங்கெடுக்கு மெண்ணம் பூண்டோர். ௧௮



764 பொன்முதல பொருளிடத்து மிச்சையற்றார்
போற்றுறவு பூண்டு பின்னர்
வன்மைசெறி மனத்தபக்கு வர்க்குபதே
சமுநவிற்றி வருவ தெல்லாம்
நன்மைதரு முன்னேரெண் காமெருழுகப்

பிள்ளையென நயந்தோ ராயன்
புன்மையறப் பற்றியஃ துடனழிந்தா
னென்றகதை போலு மாதோ.

கஎ

765 மிக்கவறி வுடையாரைப் போன்றுமுடற்
பற்றனைத்தும் விடுத்தார் போன்றுந்
தக்கவழக் கிடத்தினுயர் திணைவினையஃ
றிணைவினையாச் சமையச் சொற்றுந்
தொக்கபடர்க் கைப்பெயர்முன் னிலைப்பெயரா
கிடவுரைத்துஞ் சூழ்வ தெல்லாம்
பக்குவமின் மடவோரை மயக்கியவர்
கைப்பொருளைப் பறித்தற் கன்றே.

கஅ

## நளவெண்பா

766 காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்ம்மொழித
ல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்—போதிற்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

கக

767 அறம்பிழைத்தார் பொய்த்தா ரருள்சிதைத்தார் மானத்
திறம் பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையிற்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா

நின்ருள் விதியை நினைந்து.

கOO

திரிகடுகம்

768 தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலு—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையு மிம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் படை.

கOக

769 நன்றிப் பயன்றூக்கா நாணிலியுஞ் சான்ரோர்முன்
மன்றிற் கொடும்பா டுரைப்பானு—நன்றின்றி
வைத்த வடைக்கலங் கொள்வானு மிம்மூவர்
எச்ச மிழந்துவாழ் வார்.

கOஉ

உ௦. தீயொழுக்கம்

123

நல்வழி

770 வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலீ படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்ருரஞ் சொன்ஞர் மனே.

கOஙநீதிநெறி விளக்கம்

771 நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை

கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.
கOச

நீதிநூல்

772 வாயில் தேனுந்தன் வாலிற் கொடுக்குஞ்சேர்
ஈயின் வாயினி லிங்கிதச் சொல்லொடுந்
தீய செய்கையு ளானேத் தினஞ்சிறு
சேயு மெள்ளுந்தன் சிந்தையு மெள்ளுமே.
கOரு

இந்தியத் தாய்நிலை

773 பூமியார் போகங்கள் புல்லிதென
அருவருத்துப் போதம் மேவி
நாமியா ரெனவாய்ந்து நவையகன்று
தவமுயன்று நண்ணு வார்போல்
சாமியார் வேடங்கள் சதுருடனே
தரித்துவருஞ் சார்பு ளோங்கி
மாமியார் பலரடைய மாலடைந்து
மடிகின்றார் மதியென் னம்மா.
கOசு

திருக்குறள்

774 தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.
கOஎ

775 மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்

அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.
கoஅ

776 இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகு மற்றும் பெயர்த்து.
கoகூ

777 தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று.
கூo



778 தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.
ககக

779 வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும்.
ககஉ

780 தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.
ககங

781 பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.
ககச

## உக. பொருமை

விநாயக புராணம்

782 ஒழுக்கா றெழிக்கும் பொருளனைத்தும்
ஒழிக்கு மிம்மை மறுமையினும்
வழுக்கா றனைத்து முறுக்குவிக்கும்
மருங்கு ளார்க்கும் கேடுறுக்கும்
இழுக்கா றுடைய வெரிநிரயத்
தேய்க்கு மிதனல் ஏமகண்டா
அழுக்கா றுய பெரும் பகையை
அமர ரிடத்தும் புரியற்க.

விவேக சிந்தாமணி

783 மாங்கனி வாயிற் கவ்வி மரத்திடை யிருந்த மந்தி
பாங்கர்நீர் நிழலை வேறோர் பழமுணுங் குரங்கென் றெண்ணித்
தாங்கரு மவாவில் தாவிச் சலத்திடை யிறந்த தொப்ப
நீங்கரும் பொருமை யுள்ளோர் நிலத்திடைக் கெடுவர் நெஞ்சே.

உ

## தண்டலையார் சதகம்

784 அள்ளித்தெண் ணீறணியுந் தண்டலையார்
வளநாட்டி லாண்மை யுள்ளோர்
விள்ளுற்ற கல்வியுளோர் செல்வமுளோர்

அழகுடையோர் மேன்மை நோக்கி
உள்ளத்தில் அழன்றழன்று நமக்கில்லை

எனவுரைத்திங் குழல்வா ரெல்லாம்
பிள்ளைப்பெற் றவர்தமைப்பார்த் திருந்துபெரு
மூச்செறியும் பெற்றி யோரே.

## நீதி நூல்

785 ஆண்டெ லாம்பிற ராக்கம் நோக்கியே
மீண்டு மீண்டுநெட் டுயிர்ப்பு வீங்கினும்
தாண்டி யவர்தனந் தாழ்ந்துன் கைமிசை
ஈண்டுச் சேருமோ விதய மேசொலாய்.

786 மக்கள் பலருளார் மகிவி சாலமாம்
பக்க மவர்தினம் படைப்ப ரோர்நலம்
ஒக்க வதுபொரு துள்ளம் நைந்திடில்
துக்க மொழியுமோ சொல்லென் னெஞ்சமே.



787 தாரணியி லெவரேனும் துயருறிற்றன்
தலையில்முடி தரித்த தொப்பாம்
சீரணியுஞ் செல்வமவர் படைக்கிற்றன்
தாய்மனைசேய் செத்த தொப்பாம்
காரணமே யொன்றுமின்றிச் சுகதுக்கம்

தனநினைவால் கணத்துக் குள்ளே
பூரணமா யாக்கிடுவோன் பொருமையுளோன்
அன்றியெவர் புவியில் வல்லார்.

சு

788 வவ்விடலே முதலாய வினையாலொவ்
வோர்பயன்கை வந்து கூடும்
அவ்வினைக ளியற்றவெவ்வே றிடங்கருவி
சமயமும்வந் தமைய வேண்டும்
எவ்விடத்து மெப்பொழுதும் ஒழியாமல்
எரியென்ன விதயந் தன்னைக்
கவ்வியுண்ணும் அவ்வியத்தால் கடுகளவு
பயனுளதோ கருதுங் காலே.

எ

திருக்குறள்

789 ஒழுக்காருக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

அ

790 அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

கூ

791 கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

கo 792 அவ்வித் தழுக்கா றுடையானைச்
செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

கக

793 அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

கஉ

794 அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

கங

---

## உஉ. களவு

### வளையாபதி

795 களவி னாகிய காரறி வுள்ளன்மின்
விளைவில் வெவ்வினை வீவில் கதிகளுள்
விளைய வுள்ளழித் தொன்றல வேதனை
வளைய வாங்கி வருத்த முறுக்குமே.

க

### தரும தீபிகை

796 கள்ள னெனும்பேர்தான் காதிலுறக் கேட்டாலும்
உள்ளங் கசந்துள் உளையுமே—கள்ளப்
பழிமக்கள் அந்தப் படுவினையைச் செய்தேன்
அழிகின்று ரந்தோ வவம்.

உ

### சீயகங்கம்

797 மணிகொண்ட களவினுல் மந்திரிதன்
மாண்பதம்போய் மானங் கெட்டுப்
பிணிகொண்ட பேயனுய்ப் பேதுற்றுப்

பேருலகம் பழிக்கப் போனுன்
அணிகொண்ட அறிவெல்லாம் ஆற்றலெல்லாம்
அணுவளவு களவால் அந்தோ
துணிகொண்ட தீயாகித் தொலைந்தனவே
கள்ளத்தின் துயரம் என்னே.

௧

இன்னிசை

798 பிறர்பொரு ளன்ற ருணராது பெட்பின்
சிறிய கொளினு மவை நஞ்சிற் றீய
இறைவன் ஒறுக்கும் பிழைப்பினும் என்றும்
உறைப இருள்சேர் உலகு.

௨

நீதி நூல்

799 களவு செய்குதல் மனத்தினில் நினைக்குதல் கவரென்
றுளம கிழ்ந்துப தேசித்த லுதவிசெய் தொழுகல்
வளமி லாப்பொருள் மாறுதல் மிகுவிலை வாங்கல்

அளவி னும்நிறை தனினும்வஞ் சித்தப கரித்தல்.

௩

800 கண்டெ டுத்தவோர் பொருளனு பவித்தலுங்

களவின்
பண்டம் வாங்கலும் வாங்கிய கடன்கொடாப்
பழியும்



மண்டு வண்பொரு ளாசையாற் பொய்வழக்
கிடலும்
தொண்டு செய்பவர் கூலியைக் குறைக்கின்ற தொழிலும்.
கூ

801 நட்ட மேபிறர்க் கெய்திடச் செய்தலு நம்பி
இட்டர் வைத்தநற் பொருளப கரித்தலு மிறப்ப
வட்டம் வட்டிகள் வாங்கலுஞ் சூதில்பொன்
பெறலும்
இட்ட வேலைசெய் யாதுகைக் கூலிகொள் ளியல்பும்.
எ

802 கன்னம் வைத்தல்செல் லாப்பணம் வழங்குதல்
கள்ள
மன்னு சீட்டையுண் டாக்குதல் கைலஞ்சம்
வாங்கல்
என்னும் யாவுமே களவதா மித்தொழிற்
கியைவோர்
மன்ன ராக்கினை வசைநர கடைந்துவா
டுவரால். அ

## திருக்குறள்

803 உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

௬

804 களவினுல் ஆகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும்.

௧0

805 களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

௧௧

806 அருள்கருதி அன்புடைய ராதல்
பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.

௧௨

807 அளவின்கண் நின்ருெழுக லாற்ருர்
களவின்கண்
கன்றிய காத லவர்.

௧௩

808 கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

௧௪

## உ௩. அடக்கமுடைமை

திருமந்திரம்

809 அடங்காத என்னை அடக்கி அடிவைத்

திடங்காண் பரானந்தத் தேயென்னை யிட்டு
நடந்தான் செயும்நந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான் செய்துள்ளுட் படிந்திருந் தானே.

க

## சீவக சிந்தாமணி

810 பொருந்தலாற் பல்லி போன்றும்
போற்றலால் தாய ரொத்தும்
அருந்தவர் போன்று காத்தும்
அடங்கலால் ஆமை போன்றும்
திருந்துவேல் தெவ்வர் போலத்
தீதற வெறிந்து மின்ப
மருந்தினால் மனைவி யொத்தும்
மதலையைக் காமி னென்றான்.

உ

## மெய்ஞ்ஞான விளக்கம்

811 இழிகுலத்தோ ராயினுந்தம் இயலடக்கம்
உயர்குலத்தில் ஏற்றுந் தீய
பழியகற்றும் புகழ்பெருக்கும் பண்புநண்பு
மிகவிளைக்கும் பைம்பொன் னாட்டின்
வழிபுகுத்தும் என்றினைய பிறவுமித
முறப்பகர்ந்து மருந்தால் பித்தர்
கழிமதத்தை அடக்குதல்போல் நற்குணஞ்சிற்
சிலர்க்குவரக் கற்பித் தாரால்.

ந

## பகவற்கீதை

812 ஆமைதன் னுறுப்போ ரைந்தும்

தன்னுளே யடக்கு மாபோல்
தீமைசெய் புலன்க ளைந்தும்
தன்னுளே செறியச் சேர்த்தி
வாய்மையுள் நிகழு மின்னே
வழுத்தவும் படுகின் ருனல்
தூய்மைசெய் தெவையு நாளும்
சொல்லு தவன்றன் சொல்லாம்.





ஞான வாசிட்டம்

813 எழுந்தெழுந்து சீறுகின்ற இந்திரியப்
பாம்புகளை யிதயந் தன்னில்
அழுந்துவிவே கத்தடியால் வச்சிரங்கொண்
டிந்திரன்வெற் படர்வ தென்ன
விழுந்திடமோ துறல்வேண்டும் சாந்தியினுல்
சமமேவி யிடர்தீர் நெஞ்சம்
முழுந்துசுக வடிவாந்தற் பதநிலையைப்
பெறுமிதுவே முத்தி யென்ன.

வைராக்கிய சதகம்

814 ஆமை யாருறுப் பைந்தையு மோர்மெயுள்
அடக்க லிற்புல னைந்தும்

தீமை சேர்விட யங்களிற் செலாதமைத்
துள்ளமே சிவை பாகச்
சோம சேகரன் சரணமே சரணெனத்
தொழுது நின்றழு தன்ஞேன்
நாம நாவிஞல் செபித்திலே அவத்திலே
நாளெலாங் கழித் தாயே.

௬

நீதி சாரம்

815

சிற்றுணர்வோ ரென்றுஞ் சிலுசிலுப்ப ரான்றமைந்த
முற்றுணர்வோ ரொன்று மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தி ஞேசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தி னுண்டோ வொலி.

௭

இந்தியத் தாய்நிலே

816 ஐம்புலன்கள் அடங்கிநின்ருன் எதிராக
அகிலமெல்லாம் அடங்கி வந்து
தம்புலன்கள் அடங்கிநிற்கும் தருமங்கள்
ஓங்கிநிற்கும் தலைமை யான
உம்பரெலாம் உள்ளமுவந் துரிமையொடு
புகழ்ந்துநிற்பர் உண்மை யென்னே
எம்பெருமான் ஐம்பொறிவாய் அவித்தவர்பால்

இருக்கின்ற னின்ப மூர்ந்தே.

அ

திருக்குறள்

817 அடக்கம் அமரருள் உயக்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

கூ

உரு. அடக்கமுடைமை 131

818 காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

கo 819 நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

கக 820 ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

கஉ 821 கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.

கரு

---

## உச. புறங்கூறாமை

### விநாயக புராணம்

822 கேளிர் பிரிவர் நட்பினராய்க்
கெழுமு வாரு மிலராவர்
மூளும் வடுச்சொன் னேராக
மொழிவ ரெவரு மாதலினால்
நாளு மறத்தைக் கொன்றனந்த
நவைகள் செயினு மெதிர்நின்று
மாள வுரைசெய் யினுஞ்செய்யேல்
மைந்தா மறந்தும் புறங்கூறல்.

௬

காசி கண்டம்

823 வெம்மை யோடுபிறர் தம்பழி விளம்பி யுழலுஞ்
செம்மை யில்லவர்க டயுமிழும் வாயி லயலார்
தம்மில் வாழ்பவரை நோக்கினர் தடங்கண்
மிசையும்
அம்ம வோவென விருப்புமுளை கொண்ட
றைதியால். ௨
824 மின்னு நக்ககதிர் வேல்விகட பத்திர மிகவும்
புன்மை யில்லவர் தமைப்பழி புகன்ற விவரைத்
துன்னு மூளைதசை சோரிநிறை பாழ்நர
கின்வாய்ச்
சென்னி கீழுற மடுத்தனல் செறித்தி டுதியால்.
௩

வளையாபதி

825 ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்குந்

காக்கப் படுவன விந்திரிய மைந்தினும்
நாக்கல தில்லை நனிவெல்லு மாறே.

௬

நாலடியார்

826 கணமலை நன்னாட கண்ணின் றொருவர்
குணனேயுங் கூறற் கரிதாற்—குணனழுங்கக்
குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்
கெற்றா லியன்றதோ நா.

௭

பழமொழி

827 பண்டின்ன ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்

உ௪. புறங்கூறாமை

133

விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பி
னஃதாலவ்
வுண்டவில் தீயிடு மாறு.

௧

828 தாக்குற்ற போழ்திற் றமரேபோல்
நன்குரைத்துப்
போக்குற்ற போழ்திற் புறனழீஇ
மேன்மைக்கண்
நோக்கற் றவரைப் பழித்தலென் னென்னும்

மூக்கற்ற தற்கில் பழி.

எ

ஏலாதி

829 பொய்யுரையான் வையான் புறங்கூருன் யாவரையும்
வெய்யுரையா னுள்ளனவும் விட்டுரையான்—எய்யுரையான்
கூந்தல்மயி லன்னுய் குழீஇயவான் விண்ணேர்க்கு
வேந்தனும் இவ்வுலகம் விட்டு.

அ

அறநெறிச்சாரம்

830 முன்னின் ருெருவன் முகத்தினும் வாயினுங்
கன்னின் றுருகுக் கலந்துரைத்துப்—பின்னின்

றிழித்துரைக்குஞ் சான்ருேரை யஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலே.

கூ

831 பொல்லாது சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லானே தன்னேத் துயர்ப்படுக்கு—நல்லாய்
மணலின் முழுகி மறைந்து கிடக்கு
†நுணலுந்தன் வாயாற் கெடும்.

கO

நன்னெறி

832 உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய்
வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி.

கக

சோமேசர் முதுமொழி வெண்பா

833 கூனியிரா மன்பிரிந்து போமாறே கூறினளே
தூ நறும்பூங் கொன்றையணி
சோமேசா—தானே
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்ரு தவர்.

கூஉ

நீதிநெறி விளக்கம்

834 பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக்
கொள்வான்—பயமின்றி

---

† நுணல்—தவளை.

---



மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக்
கொல்வான்போற்

கைவிதிர்த் தஞ்சப் படும்.

கந

## நீதிநூல்

835 நலத்தின்மிக் கார்சொலார் நயமில் சொல்லையே
சொலத்தகாப் பழிபிறர் மீது சொல்லுவோன்
குலத்தினு நலத்தினுங் குறையு ளானெனத்
தலத்தவன் வாய்மொழி சாட்சி யாகுமே.

கச

836 உள்ளவங் கணங்கசிந் தோடல் போலொரு
கள்ளநெஞ் சினன்புறங் கழற லன்னவன்
உள்ளமார் புரையெலாம் ஒழுகி வாய்மொழி
வெள்ளமாய் வழிகின்ற விதத்தை மானுமே.

கரு

837 ஒருவ னொருவன் குறையையுரைத்
திடவே யதனைக் கேட்டோர்கள்
பெருக பத்தங் கலந்துபல
பேருக் குரைக்க விவ்வாறே
மருவி யெங்கும் பரவுதலான்
மண்ணின் முன்னந் தூறுமவன்
குருநோ யொப்பா னவனைக்கோ
னூர்விட் டகற்றல் நன்றேயாம்.

கசா

## திருக்குறள்

838 அறங்கூறு னல்ல செயினு மொருவன்
புறங்கூறு னென்ற லினிது.

கஎ

839 புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
லறங்கூறு மாக்கந் தரும்.
கஅ
840 கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.
கக
841 அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.
உ0

---

# உரு. பிறனில் விழையாமை

## தணிகைப் புராணம்

842

இந்திரன் பிறனில் காமுற் றிழிகுறி முழுதும் பெற்றுன்
சந்திரன் குரவ னில்லாட் டழுவிவெந் துயரத் தாழ்ந்தான்
அந்தரத் தவரு மண்மே லவருமிவ் வாறு பட்ட
வெந்துயர்க் களவின் ருக்கை நோய்க்கும்வே றவதி யின்றே.க

## விநாயக புராணம்

843 காமங் குறித்துப் பாவத்திற் கலந்த பேதை யாருள்ளும்
வாமங் கனிந்த பிறன்மனையை மதிக்கும் பேதை யோர்பயத்தால்
தாமங் கிழிக்கு மரும்பொருள்போற் சற்று மின்ப முறாதனுல்
தோமங் குதிப்பப் பிறன்மனைவி தோள்கா முறுதல் சூழேலே. உ

844 பகையே பழியே பாவமே
பயமே நான்குந் தினங்கொடுக்குந்
தகையார் பெருமை முழுதழிக்குஞ்
சார்ந்த பிறனில் விழைவொழிந்தோர்
தொகையா ரறமே பொருளின்பந்
தோலாப் பெருமை யுடன்வாழ்வர்
நகையா லதனைக் கனவிடத்து
நவிற்றி யிடினுந் தீங்காமே.
க

## திருக்கூவப் புராணம்

845 மிக்க மென்றசை யிருந்திட வெற்றெலும் பதனைத்
தக்க தென்றுபுன் ஞமலிகள் கறித்தன தளர்ந்து
துக்க மொன்றுமி றம்மனை துறந்துபோய்ப் பிறரில்
புக்கு வெந்துயர்க் கடற்படு மிழுதைகள் போல.

௬

## கூர்ம புராணம்

846 வெற்பெடுத் துயர்ந்த திண்டோ ளிராவணன் விரகத்தெய்திப்
பொற்புடைச் சீதை நெஞ்ச மெலிவுறப்

புன்மை செய்து

கற்பெனுங் கனலி பற்றக் கிளையொடுங் கரிந்தா னென்னில்

அற்புடை யவர்க்குத் தீமை புரிவரே னரகி ளுழ்வார். இ

காசி கண்டம்

847 பிறர்மனைக் குரிய பேதைய ரிடத்து விழைவாய்க்

குறுகு காலிணை குறைத்திடுதி கொம்மை முலைமே



லிறுகு றத்தழுவு கையிணையை யீர்தி யவர்மேல்
உறுசி னத்திறெடு மூசிக ணிறுத்தி டுதியால்.

ஃ

திருமந்திரம்

848 ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

எ

சீவகசிந்தாமணி

849 காதலாள் கரிந்து நையக் கடியவே கனைந்து கன்றி ஏதிலான் றார நம்பி யெளிதென விறந்த பாவத்

தூதுலை யுருக வெந்த வொள்ளழற் செப்புப் பாவை
யாதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே.

அ 850 மடத்தகைய நல்லார் மனங்கரிய மாற்றார்
பிடர்த்தலையொள் வாள்போல் பிறர்மனைகள் சேரின்
எடுப்பரிய துன்பத் திடைப்படுவ ரின்று
நடுப்புடைய காமம் விடுத்திடுதல் நன்றே.

க

## வளையாபதி

851 பெண்ணி ளுகிய பேரளுர் பூமியுள்
ளெண்ண மிக்கவ ரெண்ணினு மெண்ணிலார் பின்னி
நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின்.

க0

## இராமாயணம்

852 ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்குந் தருக்கதோ.

கக 853 மறந்தி றம்பல் வலிய மெனுமனம்
புறந்தி றம்ப லெளியவர்ப் பொங்குதல்

அறந்தி றம்ப லருங்கடி மங்கையர்
திறந்தி றம்ப றெளிவுடை யோர்க்கெலாம்.

கஉ 854 இச்சைத் தன்மையி னிற்பிற ரில்லினை

நச்சி நாளு நகையுற நாணிலன்
பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉங்

கொச்சை யாண்மையுஞ் சீர்மையிற் கூடுமோ.

கங

உரு. பிறனில் விழையாமை
137

நாலடியார்

855 அம்ப லயலெடுப்ப வஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமையி னெஞ்சத்தான் றுப்புரவு பாம்பின்
தலைநக்கி யன்ன துடைத்து.

கச

856 அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவா
னிச்ச னிணையுங்காற்
கோக்கொலையா—னிச்சலுங்
கும்பிக்கே கூர்த்த வினையாற் பிறன்றார
நம்பற்க நாணுடை யார்.

கரு

857 அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றார

நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

கசு

858 புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சந்
துய்க்குமிடத் தச்சந் தோன்றுமற் காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
உட்கான் பிறனில் புகல்.

கஎ

859 காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும்
மாணின்மை செய்யுங்கா லச்சமா—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றுச்சாரி நீகண்ட
இன்ப மெனக்கெனைத்தாற் கூறு.

கஅ

860 செம்மையொன் றின்றிச் சிறியா ரினத்தராய்க்
கொம்மை வரிமுலையா டோண்மரீஇ—யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே யிம்மை
அலியாகி யாடியுண் பார்.

கசு

## அறநெறிச்சாரம்

861 அறனு மறனறிந்த செய்கையுஞ் சான்றோர்
திறனுடைய னென்றுரைக்குந் தேசும்—பிறனில்
பிழைத்தா ளெனப்பி றராற் பேசப் படுமேல்
இழுக்கா மொருங்கே யிவை.

உ0

## திரிகடுகம்

862 கொல்யானைக் கோடுங் குணமிலியு மெல்லில்

பிறன்கடை நின்ருெழுகு வானும்—மறந்தெரியா
தாடுபாம் பாட்டு மறிவிலியு மிம்மூவர்

நாடுங்கால் தூங்கு பவர்.

உசு



குமரேச வெண்பா

863 தன்தார மல்லாத மங்கையரைத்
தாயரெனத் தரும நோக்கால்
நின்ருலு மிருந்தாலுங் கிடந்தாலும்
நடந்தாலும் நினைந்து நீதி
ஒன்ருலுங் குறையாமல் ஒருவழியும்
வழுவாம லொழுகி ஞயேல்
பொன்ருத புகழோடு புண்ணியமும்
பொருந்திநீ புனித ஞவாய்.

உஉ

வீரபாண்டியம்

864 பிறர்மனை நயந்திடாப் பெற்றி யாளனை
அறமெலா நயந்துவந் தடையு மன்னவன்
விறலினைப் பகைவரும் வியந்து போற்றுவார்
உறவினை யும்பரு முவந்து பேணுவார்.

உரு

865

அரிய பேறுக ளனைத்தையு மெளிதினி லெய்திப்
பெரிய மேன்மைகள் பெறவொரு வழியுள ததுதான்
உரிய தன்மனை யன்றிமற் றுள்ளவ ரெல்லாம்
பிரியம் மேவிய தாய்தங்கை யென்றுபே ணுதலே.

உச

## தரும தீபிகை

866 உன்னுடைய வில்லாளை யுற்றொருவன் பார்த்தாலும்
தின்னும் படிசினந்து சீறுகின்றாய்—அன்னபடி
கண்டும் பிறர்மனையைக் காதலிக்கி னுய்தியுனக்
குண்டோ சிறிதுள் ளுணர். உரு

## இன்னிசை

867 தமதில் பிறர்தொடினுந் தாம்பொறா ரென்றே
அமைவின் றயலாள்தோள் சேரற் கமர்வர்
நமனுல கெய்தி நலிவெய்தற் கன்றே
சுமையா யிவர்தோன்றி னார்.

உசு

## நீதிநெறி விளக்கம்

868 பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே யாயினு மாக—சிறுவரையு
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

உஎ

உரு. பிறனில் விழையாமை

139

## நீதிநூல்

869 பண்டோராண் பெண்ணமைத்தவ் விருவருக்கு
மணமியற்றிப் பரனி ரக்கங்
கொண்டளித்த முறைகடந்து கள்ளவழிப்
புணர்ச்சிசெயுங் கொடியோர் தம்மை
மண்டலமே வாய்பிளந்து விழுங்காயோ
வவர்தலைமேல் வானு லாவுங்
கொண்டலே பேரிடியை வீழ்த்தாயோ
விதுசெய்யிற் குற்ற முண்டோ.

உஅ

870 உணர்வறுஞ் செல்வமு முயர்வு மேயறுங்
குணமறுங் குலமறுங் கொடிய நோயெலாம்
அணவுறு நரகுறு மாயுள் தேயுமால்
கணமறு மாதர்தோள் கலக்குந் தூர்த்தர்க்கே.

உகூ

871 ஓர்பிழை குருவே செய்யி னொன்பது பிழைகள் செய்ய
நேர்சிறு சீடரென்ன நிதம்பதி பலமின் ஞர்தோள்
சேர்வது காணு மில்லாள் தினம்பல புருடர்ச் சேர்தல்

சீரென வுன்னி யன்ஞன் செலவுபார்த்
திருப்பள் மாதோ. ௧௦

872 தன்னைப் போற் பிறரை யெண்ணல் தகுதியாந் தான்மணந்த

மின்னைப்போ லிடையி ஞளை விழியினுல் நோக்கு வோரைத் தின்னல்போல் முனிவு கொள்வோ ரயலவன் தேவி தன்னை

அன்னைசோ தரிபோ லெண்ணு தணைந்திட விரும்ப லென்னே.

௧௧

திருக்குறள்

873 அறன்கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை
நின்ருரிற் பேதையா ரில்.
௧௨

874 எனைத்துணைய ராயினு மென்னுந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.
௧௩

875 பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.
௧௪

876 பிறன்மனை நோக்காத பேராண்மை சான்ருேர்க்
கறனென்ருே வான்ற வொழுக்கு.
௧௫

877 நலக்குரியார் யாரெனி னமநீர் வைப்பிற்

பிறர்க்குரியா டோடோயா தார்.
௩௫

# உகூ. பொறை

## கந்த புராணம்

878 பெற்றிடு திருவினிற் பிறந்த வெஞ்சினங்
கற்றவ ருணர்வையுங் கடக்கு மன்னது
முற்றுறு கின்றதன் முன்ன மன்பினோ
ருற்றன கூறியே யுணர்த்தல் வேண்டுமால்.
௪

879 சிறியவ ரொருபிழை செய்யின் மேலவர்
பொறையொடும் பின்னரும் போற்ற லல்லதை
யிறையதும் வெகுள்வரோ யானுஞ் செய்பிழை
அறிவனீ யன்றியே யார தாற்றுவார்.
௨

## காஞ்சிப் புராணம்

880 வெகுளியே யுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத மாய்க்குமால்
வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறென் றில்லையால்.
௧

## தணிகைப் புராணம்

881 அறிவினிற் பெரிய நீரா ரறிந்தரும் பிழைகள்
செய்யார்

அறிவினிற் சிறிய நீரா ரறிந்தறி யாமை யானுஞ்
செறிபிழை யிழைப்ப வவ்வத் திறத்தின துண்மை
நாடிச்
சிறுமையி னீங்கி னோர்கள் செயிர்த்துள வயிரங்
கொள்ளார். ௬

விநாயக புராணம்

882 வெறுப்ப வொருவன் காரணத்தான்
மிக்க மடத்தாற் புரிபிழையைப்
பொறுப்பி னதுவே பேரறமாம்
புகழு நிறையு மிகவளருங்
கறுப்பொன் றறியா வறிவினர்கள்
கருத்தின் மகிழ்ச்சி யுளவாகும்
ஒறுப்பின் வருவ தொன்றில்லை
யதனுற் பொறுமை உயிர்த்துணையாம்.
௯

பிரபோத சந்திரோதயம்

883 வலியோர்மேல் வரும்வெகுளி மறித்துடனே
தமைக்கெடுக்கும் வறிதே கோப
மெலியோர்மேல் வரிலிகத்தில் வெம்பழியு
மேனரகும் விளைக்கு மல்லால்



நலிவோர்தம் முவப்பினுக்கு நகைக்குமுறுங்
கேடினிய நட்பு மாற்றும்

புலியோகம் பசுவினம்போற் பல்காமை
யதன்சினத்தின் பொருட்டா லன்றோ.

௬884 வந்தவர் வாழ்த்தினும் வசையு ரைக்கினுஞ்
சந்தனம் பூசினுந் தசையைக் கொய்யினும்
முந்துறு வினையினுன் மூண்ட தாமெனச்
சிந்தையி லுன்னியான் சினத்தை வெல்வனே.

எ

## சேது புராணம்

885 சினத்தி னால்வருந் தீமையத் தீமைதீப் பிறப்பு
மனத்தி னீடிய மருட்கையும் வறுமையு நரகும்
அனைத்து நல்கிடு மாதலா லொருபொழு
தயர்த்துந்
தனக்கு நல்லவன் வளர்ப்பனோ சீற்றமாந்
தழலை. அ

## செவ்வந்திப் புராணம்

886 சிலையின் பிளவு நிலப்பிளவு மணலின் பிளவுஞ்
சிறந்தபுனல்
தலையின் பிளவு மெனநான்கு வகையாம் வெகுளி
தனையுடையோர்
தொலைவி னுகம் புள்விலங்கு நரராய்ப் பிறந்து
துயருழப்பர்
மலையுந் தகர நிழலுடனே மலையுங் களிற்று
மன்னவனே. கூ

## அரிச்சந்திர புராணம்

887 சிறுத்தவர்க ளறியாமல் செய்தபிழை

யத்தனையுஞ் செவ்வி யோய்நீ
பொறுத்தருளா யாமாகிற் பொறையென்னும்
முறையென்னும் புலமை யென்னும்
ஒறுத்திடினும் வெறுத்திடினும் உனக்களித்த
அரசுரிமை யொருகா லத்தும்
மறுத்தினியான் வாங்கேனென்
றெடுத்துரைத்தான்
மன்னன்முனி வாட்ட முற்ருன்.

கo

பிரபுலிங்க லீலை

888 சிறப்புப் பெற்றநல் யோகிதன் மனத்தெழு
சினந்தன்
னறத்தைக் கொன்றிடு முன்புபஞ் சியிற்புகு
மழல்போல்
ஒறுக்கப் பட்டவன் பவம்பிணை யொழித்திடு
மதனுற்
பொறுத்தற் கொப்பிலை யென்றுநன் றறிந்தனை
போலும். கக

889 வலியவ னிடத்து மொத்தான்
மாட்டினும் வெகுளி காத்தல்
பொலிவுசெ யறம தென்னப் பொருந்துரு
தனையர் தம்பால்
நலிவுறு வெகுளி செல்லா தாதலா னவிய லாற்ரு
மெலியவ ளிடத்துக் காக்கும் வெகுளியே யறம
தென்பர். கஉ

890 வைதவன் றன்னை நன்று வாழ்த்தின னெனவுந் தீய
செய்தவன் றன்னை நல்ல செய்தவ னெனவுங் கொள்வோன்
கைதவ மகன்ற முத்தி கண்டவ னவ்வா றுன்னுன்
பொய்தவ னென்ப தென்று புகன்றனர் புலவ ரன்றே. கஅ

891 பெரியவர் தம்மைக்காய்ந்தான் பிறங்கல்கல் லியகோ லொப்பான்
எவன புரியப் பட்டுப் புலம்புவ னொத்தார்க் காய்ந்தான்
னெரிநர கதனில் வீழ்வ னிழிந்தவர்க் காய்ந்தா னென்றால்
ஒருவர்தம் மிடத்துஞ் சீற்ற முருமையே நன்று மாதோ. கசு

892 ஒறுப்பவ னிழிந்தவ னொருவன் செய்தநோய்
பொறுப்பவன் நடுவுளன் பொறுக்கும் நெஞ்சமும்
மறப்பவ னுயர்ந்தவ னென்று வாய்மையால்
சிறப்பவ ரிம்முறை செப்பு வாரரோ.
கஐ

சிலப்பதிகாரம்

893 நெறியி னீங்கியோர் நீரல கூறினும்

அறியா மையென் றறிதல் வேண்டும்.

கசு

இராமாயணம்

.894 ஒள்ளிய தவத்தாற் கல்வியா லுணர்வா
லுண்மையா லுணர்ந்தவ ருயர்ந்தோர்
எள்ளிய குற்ற மில்லவ ரெய்தும்
வெகுளியா லிப்படிப் பட்டார்
தெள்ளிய வீரச் சிலையினுய் புறத்துத்
திறற்பகை வெல்லலாஞ் சினமாம்
உள்ளுறு பகையை யறிந்தவ ருலகத்
தொருவரும் வென்றவ ரில்லை.

கஎ

.895 மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கின்
முதலற முருக்குமா போலத்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுறு கிளையெலாந் தகிக்கும்
ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையா
லதனையுள் ளடக்கவு மடங்கா
தோங்கிய கோபத் தீயினை யொக்கு
முட்பகை யுலகில்வே றுண்டோ.

கஅ

.896

பெருமையும் வண்மைதானும் பேரெழி லாண்மை தானும்
ஒருமையி னுணர நோக்கிற் பொறையின தூற்ற மன்றே

அருமையு மடர்ந்து நின்ற பழியையு மயர்ந்தாய் போலும்
இருமையுங் கெடுத்தா யன்றே யென்னினை ந் தென்செய்தாய்கொல்.

கக உசு. பொறை 143

897 அயர்த்திலன் முடிவு மஃதே யாயினு மறிஞ
ராய்ந்த
நயத்துறை நூலி னீதி நாந்துறந் தமைத னன்றோ
புயத்துறை வலிய ரேனும் பொறையொடு பொருந்தி வாழ்தல்
சயத்துறை யறனு மஃதே யென்றிவை சமையச் சொன்னான்.
உ0

898 நிறையி னீங்கிய மகளிர் நீர்மையும்
பொறையி னீங்கிய தவமும் பொங்கருள்
துறையி னீங்கிய வரமுந் தொல்லையோர்
முறையி னீங்கிய வரசின் முந்துமோ.

வில்லிபாரதம்

899 ஞால முற்றுமுடை யவன்மொ ழிந்திட
நகைத்து வண்துவரை நாதனும்
சால முற்றுமினி யவர்க ருத்தென

நினைந்து பேரவைத ணந்துபோய்
கோல முற்றசிலை விதுரன் வாழ்வுபெறு
கோயில் சென்றுநனி குறுகினன்
சீல மற்றவர் சினந்த போதுமொரு
தீதி லாதவர் செயிர்ப்பரோ.

## பெருந்தேவனார் பாரதம்

900 அற்றவுறுப் பெல்லா மறுவையி னன்மறைப்ப
மற்றொருவர் காணு மறையுமால்—வெற்றி
யறையார் கழலா யவமாய வெல்லாம்
பொறையான் மறைக்கமேற் போம்.
உங

### பகவற்கீதை

901 எரிநிகர் வெகுளி பொங்க மயக்கம்வந் தெய்து மெய்தத்
தெரிபவை சிதையு முள்ளந் தெரிந்தவை சிதைந்த போதே
யுரியதன் னுணர்வு மாயு முணர்வுமாய்ந் தொழிந்த வாறே
யரியவென் றறிஞர் பேசு மனைத்துமாய்ந் தொழியு மன்றே. உச

### நாலடியார்

902 தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை

எரிவாய் நிரயத்து வீழ்வார்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்
உரு

903 காவா தொருவன்தன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால்—ஓவாதே

உக

உஉ



ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து.
உசு

904 நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்

துள்ளித்தூண் முட்டுமாம் கீழ்.

உஎ

905 இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே
கொடைப்பயன்—எல்லாம்
ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை.

உஅ

906 கல்லெறிந் தன்ன கயவர்வாய் இன்னாச்சொல்
எல்லாருங் காணப் பொறுத்துய்ப்பர்—ஒல்லை
இடுநீற்றால் பைஅவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு.

உகூ

907 மாற்றாராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
ஆற்றாமை என்னார் அறிவுடையார்—ஆற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்கால்
தாம்அவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று.

௩௦ 908 நெடுங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கெடுங்காலம் இன்றிப் பரக்கும்—அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்.

௩க

909 உபகாரம் செய்ததனை ஓராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
தாம்செய்வ தல்லால் தவத்தினால் தீங்கூக்கல்

வான்தோய் குடிப்பிறந்தார்க் கில்.

கஉ

910 கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினர் ஈங்கில்லை —நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம்வாயான் மீட்டு.

கங

911 பாடமே ஓதிப் பயன்றெரிதல் தேற்ருத
மூடர் முனிதக்க சொல்லுங்காற்—கேடருஞ்சீர்ச்
சான்ருேர் †சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்ருட் கிறப்பப் பரிந்து. கச

† சமழ்த்தல்—பொறுத்தல்.

## உரு. பொறை

145

912 எய்தி யிருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதான் ஒருவன் ஒருவனை—வைய
வயப்பட்டான் வாளா இருப்பனேல் வைதான்
வியத்தக்கான் வாழும் எனின்.

கடு

913 இறப்பவே தீய செயினுந்தன் நட்டார்
பொறுத்தல் தகுவதொன் றன்ருே—நிறக்கோங்கு
உருவவண் டார்க்கு முயர்வரை நாட

ஒருவர் பொறையிருவர் நட்பு.

௩௬

## பழமொழி

914 கறுத்தாற்றித் தம்மைக் கடியசெய் தாரைப்
பொறுத்தாற்றிச் சேறல் புகழால்—ஒறுத்தாற்றின்
வானோங் குயர்வரை வெற்ப பயமின்றே
தானோன் றிடவருஞ் சால்பு.

௩௭ 915 தெரியா தவர்தந் திறனில்சொற்
கேட்டாற்
பரியாதார் போல விருக்க—பரிவில்லா
வம்பலர் வாயை யவிப்பான் புகுவாரே
அம்பலந் தாழ்க்கூட்டு வார்.

௩௮

916 நோவ வுரைத்தாரைத் தாம்பொறுக்க
லாற்றுதார்
நாவி னொருவரை வைதால் வயவுரை
பூவிற் பொலிந்தகன்ற கண்ணா யதுவன்றோ
தீயில்லை யூட்டுந் திறம்.

௩௯

917 நற்பால கற்றாரும் நாடாது சொல்லுவரால்
இற்பால ரல்லா ரியல்பின்மை நோவதென்
கற்பா லிலங்கருவி நாடமற் றியாரானுஞ்
சொற்சோர் விலாதாரோ வில்.

௪0

## சிறுபஞ்ச மூலம்

918 பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை

இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்—இழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வதும் நன்று.

௪௧

## நான்மணிக்கடிகை

919 கற்றார்முற் றோன்றா கழிவிரக்கங் காதலித்தொன்
றுற்றார்முற் றோன்றா உறாமுதல்—தெற்றென
அல்ல புரிந்தார்க் கறந்தோன்றா வெல்லாம்
வெகுண்டார்முற் றோன்றாக் கெடும்.

௪௨





920 கண்டதே செய்பவாங் கம்மிய ருண்டெனக்
கேட்டதே செய்ப புலனாள்வார்—வேட்ட
வினியவே செய்ப வமைந்தார் முனியாதார்
முன்னிய செய்யுந் திரு.

௪௩

921 கொடுப்பி னசனங் கொடுக்க விடுப்பின்
உயிரிடை யீட்டை விடுக்க வெடுப்பிற்
கிளையுட் கழிந்தா ரெடுக்க கெடுப்பின்
வெகுளி கெடுத்து விடல்.

௪௪

## அறநெறிச்சாரம்

922 தன்னை யொருவ னிகழ்ந்துரைப்பிற் றனவனைப் பின்னை யுரையாப் பெருமையோர்—முன்னை வினைப்பயனு ஞயிற்று மென்றதன்கண் மெய்ம்மை நினை த்தொழிய நெஞ்சினேை யில். ௬௫

923 எள்ளிப் பிறருரைக்கு மின்னுச்சொ
றன்னெஞ்சிற்
கொள்ளிவைத் தாற்போற்
கொடிதெனினும்—மெள்ள
வறிவென்னு நீரா லவித்தொழுக லாற்றிற்
பிறிதெனினும் வேண்டாந் தவம்.

௬௬

## தண்டலையார் சதகம்

924 கறுத்தவிட முண்டருளுந் தண்டலையார்
வளநாட்டில் கடிய தீயோர்
குறித்துமனை யாளரையில் துயிலுரிந்து

மைவர்மனங் கோபித் தாரோ
பறித்துரிய பொருள்முழுதுங் கவர்ந்தாலும்
அடித்தாலும் பழிசெய் தாலும்
பொறுத்தவரே யரசாள்வர் பொங்கினவர்
காடாளப் போவர் தாமே.

௬௭

## மூதுரை

925 கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும்

போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்.

௪அ
926 சாந்தனையுந் தீயனவே செய்திடினுந்
தாமவரை
யாந்தனையுங் காப்ப ரறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்.
௪௧

—உகூ. பொறை 147

## நன்னெறி

927 உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளந் தடுத்த
லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.
௯௦

## சோமேசர் முதுமொழி வெண்பா

928 வன்மைச் சுயோதனற்கும் வானோர்
சிறைமீட்டான் தொன்மை நெறித்தருமன்
சோமேசா—பன்முறையும் இன்னாசெய் தார்க்கு
மினியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு.
௯௧

## நீதி வெண்பா

929 அன்னமனே யீர்குயிலுக் கானவழ
கின்னிசையே
கன்னன்மொழி யார்க்கழகு
கற்பாமே— மன்னுகலே
கற்ருேர்க் கழகு கருணேயே யாசைமயக்
கற்ருேர்க் கழகுபொறை யாம்.

௫௨

## நீதிநூல்

930 எப்பிழைக்கா நீபிறரைச் சினந்தவர்க்கின்
ஞவியற்ற வெண்ணி ஞயோ
அப்பிழைநீ செய்திலேயோ வுன்னேப்போ
லவர்பிழைக்க லாகா தோமா
வெப்பமுற நாணிலேயோ நீயொருவன்
பிழைபுரிய விண்வேந் தன்கை
ஒப்பமுட னதிகாரம் பெற்றனேயோ
மனமேநீ யுரைசெய் வாயே

௫௧ 931 பிழையிலான் கடவுளன்றி மக்களில்தப்
பில்லாதார் பிறரு முண்டோ
மழையினுமே யசனியுண்டு மதிக்குமோர்
மறுவுண்டு மலர்க்கு முள்ளாம்
கழையினுமே சக்கையுண்டு கனியினுந்தோல்
கொட்டையுண்டு கதிக்குங்காம
விழைவினுன் மறம்புரிதல் நரர்க்கியல்பா
தலினவரை வெறுக்கொண் ணுதே.

௫௪

932 நாவையே கடித்ததெனப் பல்தகர்க்கும்
பேருளரோ நடக்கும் வேளை
பூவையே பொருவுகழல் சருக்கியதென்

றதைக்களைவோர் புவியி லுண்டோ



காவையா ருலகமெனும் பேருடலி
னவயவம்போற் கலந்த சீவர்
தாவையே செய்யினுமிக் கறிவுடையோர்
கமைசெய்தல் தகுதி யாமால்.
ருக

933 உனையொருவ ரிகழ்ந்தனரே லேதுக்கா
விகழ்ந்தனரென் றுன்னி யுன்பால்
தினையளவு தப்புளதே லதைநீக்காய்
தப்பின்றேற் சினமு றூதே
கனைகழையை வேம்பென்னிற் கழைக்குமோர்
குறையுண்டோ கல்லின் மோதித்
தனையுடைப்போர்க் குணவுதரும் தேங்காய்போ
லெவர்க்குநன்மை தனைச்செய் வாயே.

ருக

934 தீதொருவர் செய்தனரென் றதற்கெதிராய்
நீயவர்க்கோர் தீங்கு செய்யில்
சாதுநீ யவர்தீய ரென்பதற்குக்
கரியென்ன சக்கி லாதார்

ஓதவிட முண்ணின்விழி யுடையாரு
முண்ணுவரோ வுலப்பில் செந்நெல்
சேதமுற வவைத்தடுவோர்க் குணவாதல்
போனலமே செய்வாய் நெஞ்சே.

௯எ

935 இன்னலெமக் கிழைத்ததனுல் வீடிழந்து
நரகாழ்வா ரெனநி னேந்து
பன்னரிய பெரியர்பிழை பொறுப்பர்பொருர்
தம்பிழையைப் பரம ஞற்ருன்
முன்ஞெருவன் செய்தனனென் றவற்கிறப்பச்
செயுமிடரம் முறையி லான்சேய்
பன்னிதம ரையுஞ்சேரு மவர்நமக்கெப்
பிழைசெய்தார் பகராய் நெஞ்சே.

௯அ

திருக்குறள்

936 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

௯௯

937 ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

௧0

938 மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

சுக

939 உண்ணது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னச்சொ னேற்பாரிற் பின்.

சுஉ

## உஎ. சினம்

விண்டு புராணம்

940 வெங்கதந் தவத்தை மாய்க்கும்
வினைவிளை விக்கு மேன்மை
தங்கிய புகழைப் போக்கும்
தபோதனர்க் கடுப்ப தன்றல்
இங்கிது சுவர்க்கம் மோக்கம்
இரண்டையுந் தீர்க்கு மென்றே
பொங்குவெஞ் சினத்தை நீத்தார்
புண்ணிய முனிவ ரையா.

பிரபுலிங்க லீலை

941 யாவர்க்கு மொப்ப நன்ரு
மென்னினுஞ் சினமி லாமை
மூவர்க்கு மரிய செய்யும்
முனிவர்க்குச் சிறந்த தென்று
தேவர்க்கு மரிய வின்பஞ்
சித்தரா மப்பே ரண்ணல்
மேவற்கு வடிவங் கொண்டு
மேவிய விமலன் சொன்ஞன்.

## மேருமந்தர புராணம்

942 ஆக்குவ தேதெனி லறத்தை யாக்குக
போக்குவ தேதெனில் வெகுளி போக்குக
நோக்குவ தேதெனின் ஞானம் நோக்குக
காக்குவ தேதெனில் விரதங் காக்கவே.
க

943 வலியரைச் சினப்போர் வரையினின் மோது
மட்கல மெனவுடைந் தழிவார்
பொலிவுறத் தமையொப் பவர்களைச்
சினப்போர்
புலியிரண் டொன்றையொன் றடித்து
மெலிவொடு மிரண்டுங் கெடுதல்போற்
கெடுவார்

மெலியரை வெகுளுவோர் வேங்கை
எலியினை யெதிர்த்த தன்மைபோ லிழிவுற்
றெரிநர கிடையிழிந் தழிவார்.



வைராக்கிய தீபம்

944 எய்துவ னுறமற் றேவையென் னேவ
தெனவுல குரைத்தலி னொருதாஞ்
செய்துள வினைக்குத் தக்கபே ரிறைவன்
சேர்குத றணைமறந் தென்னோ
உய்தவ மறியாக் கைதவ ரையம்
உதவிடார் தமையுத வினரை
வைதல்வாழ்த் திடுதல் செய்துமற் றொருசாண்
வயிறுநா டொறும்வளர்ப் பதுவே.

ஞான வாசிட்டம்

945 எவனுடைய மனப்புற்றில் இராகமுனி
வெனும்பணிக ளியக்க மில்லை

அவனெனுங்கற் பகதருவா லணுகாத
தொன்றுண்டோ வறிவின் மிக்கோய்
கவனமற வறிவினல் மதத்தோராய்ப்
பலகலைநூல் கல்வி மிக்குத்
தவமறுகா மம்வெகுளி நிறைந்தோரே
வேசரிபோற் றள்ளத் தக்கோர்.

சு

தரும தீபிகை

946 அறிவு குலைய வமைதி யழியச்
செறிவுயர் வெல்லாஞ் சிதைய—நெறிகேடு
மூண்டெதிரே தோன்ற முடுகிவரு கோபம்போல்
ஈண்டெதி ரில்லை யிடர்.

எ

அறநெறிச் சாரம்

947 உயிரு முடம்பும் பிரிவுண்மை யுள்ளிச்
செயிருஞ் சினமுங் கடிந்து—பயிரிடைப்
புற்களைந்து நெற்பயன் கொள்ளு
மொருவன்போல்
நற்பயன் கொண்டிருக்கற் பாற்று.

அ

நீதி நூல்

948 கண்சி வந்திட மெய்யெலா நடுங்கிடக் காலால்
மண்சி வந்திட வுதைத்துநாக் கடித்திதழ்
மடித்தே
எண்சி தைந்திடச் சினங்கொள்வீர் நும்முடை

யிதயம்

புண்சு மந்ததாற் பிறர்க்கென்ன குறையது புகல்வீர்.

௯ 949 சினமு ளோன்மனை மைந்தர்கள்

அவன்வெளிச் செல்லும்

தினமெ லாந்திரு விழவுகொண் டாடுவர்

செல்லா உஎ. சினம்

151

தினையன் றங்குநா ளிழவுகொண் டாடுவ ரிறப்பின்

மனையி லோர் பெரு மணவிழா வந்தென மகிழ்வார்.

௧0 950

நாளு நாங்கொளுந் துயர்க்கெலாங் காரண நாடின்

சமளங் சீற்றத்தின் விளைவதாம் முனிவக முடையோர்

கேளும் பாம்பும்வெஞ் சினவிலங் கினங்களு

நனிவாழ்ந்

தாளுங் கானில்வாழ் பவரெனத் தினமருர்

திருக்குறள்

அடைவார். ௧௧ 951 நகையும் உவகையுங்

கொல்லுஞ் சினத்தின்

பகையும் உளவோ பிற.

௧௨ 952 தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க

காவாக்கால்

தன்னையே கொல்லுஞ் சினம்.

௯௩ 953 சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்

ஏமப் புணையைச் சுடும்.

௯௪ 954 சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

௯௫ 955 செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்

காக்கிலென் காவாக்கா லென்.

௧௬

# உ௮. இன்சொல்

## விநாயக புராணம்

956 வந்த விருந்து மலராத வதன நோக்கு முன்குழையும்
அந்த வடைவா லகத்தன்பை யலர்ந்த முகத்தால் வெளிப்படுத்திச்
சந்த மணிவா யினுந்தோன்றச் சற்றும் வஞ்சங் கலவாமே
உந்துஞ் சுவையின் மொழியென்று முரைத்தல் வேண்டும்
பயன்வேண்டின். க

## வீர பாண்டியம்

957 இனியன பேசி யார்க்கு மிதஞ்செய விசைந்த நாவைத்
துனியுறு வன்சொல் லாடித் துகளுறச் செய்தல் நல்ல
கனிதரு தருவை வாளால் கடிந்தருங் கிளைக ளீந்து

பனிபடு தீயிற் பெய்யும் பான்மைபோ லாகு மன்றே. உ

958

பொய்புறங் கூறல் புன்சொற் புகலுதல் வன்சொ லாடல்
ஐயகோ நரகி லாழ்த்து மருந்துய ராகு மன்றே
வெய்யவத் தீமை யாதும் மேவிடா தின்சொல்லோடு
மெய்யுரை நாவே யின்பம் விளைத்தருள் விமல நாவே. ௩

## பழமொழி

959 புன்சொல்லு நன்சொல்லும் பொய்யென் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொ லிடர்ப்படுப்ப தல்லா லொருவனை
யின்சொ லிடர்ப்படுப்ப தில்.
௪

## நான்மணிக் கடிகை

960 இன்சொலா ளுகுங் கிளைமை யியல்பிலா
வன்சொலா ளுகும்
பகைமைமன்—மென்சொல்லின்
ஆய்விலு ளரரு ளவ்வருளி ளுமனத்தான்
வீவிலா வீடாய் விடும்.
௫ 961 மலர்ந்தமுகத் தானு மதுரவுரை யானும்

நலந்தந் திடுவர்கள் நல்லோர்—புலந்திருந்த
இன்னு முகத்தா னருளா திடும்பொருள்
தன்னுற் பயனுண்டோ தான்.

௬

உ௮. இன்சொல்

153

## சோமேசர் முதுமொழி வெண்பா

962 இன்சொ லிராம னியம்ப விரேணுகைசேய்
துன்பமொழி யேபுகன்ருன் சோமேசா—அன்புடைய
இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. எ

## நன்னெறி

963 மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனயவர்
பேசுற்ற வின்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

௮

964 இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற்

றண்ணென்

கதிர்வரவாற் பொங்குங் கடல்.
௯

நீதிநெறி விளக்கம்

965

இனியவர் என்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியும் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்

சிங்கி குளிர்ந்துங் கொலும்.
௧0

966 ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட்
டிடப்படின்மற்
ருவா விவரென்செய் வார்.
௧௧

நீதி வெண்பா

967 மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னாலிகழு

மண்ணுலகம்—நன்மொழிசேர்
ஓதுகுயி லேதங் குதவியது கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று.
க௨

968 நாவி னுனியி னயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரு
நண்ணுவார்—நாவினுனி
யாங்கடின மாகிடி லத்திருவுஞ் சேராண்முன்
ஞுங்கே வருமரண மாம்.
க௩

## தனிப்பாடல்

969 கெட்டகழு தைக்குரல தென்பர் குயில்கூவின்
நட்டவர்கள் போன்மகிழ்வர் நண்பதனெ டென்னை



பட்டபொருள் சொல்லலுற லுண்டெனினும் யாரும்
வெட்டென வுரைத்தலை விடுத்திடுமி னென்றான்.
க௭

## நீதி நூல்

970 வட்டவுல கெட்டுமிசை மட்டற நிரப்பும்
வெட்டவரு துட்டரை விலக்கிவச மாக்கும்

நட்டமிலை யெட்டணையு நட்டுநர ரெல்லாம்
இட்டமுறு கட்டுதவும் இன்மொழிய தன்றே.
கரு
971 வன்மொழி யுரைக்கி னெதிர் வன்மொழி கிடைக்கும்
இன்மொழி யுரைக்கின்வரு மின்மொழி யெமக்கும்
நன்மொழிக ளேபல விருக்கநவி லாமற்
புன்மொழி யுரைப்பவர்கள் பூரியர்க ளன்றே.
கசு
972 உருமையின் னிணைத்தன் பாற்கொண் டுதகமன் னுயிர்க்கு நல்கும்
கருமுகி லெனக்கண் ணுலென் காணினுங் கேட்பி னுஞ்சூழ்
பருவர லேதி லார்க்குப் பயக்கும்வன் சொல்லை நீத்து
மருவிய நலங்க லந்த வசனமே பகர்வர் நல்லோர். கஎ

திருக்குறள்

973 துன்புறூஉம் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.
கஅ
974 பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்
கணியல்ல மற்றுப் பிற.
கசு
975 அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

976 சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையும்
இம்மையு மின்பந் தரும்.
உசா

977 இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.
உஉ

---

## உகூ. நடுவு நிலைமை

### விநாயக புராணம்

978 ஆக்க மொடுமைந் தரையளிக்கு
மவற்றை மருமான் வழிக்குநிலை
ஆக்கு மனைய நடுநிலையை
யடுத்தோர் முதன்மூ வரினெப்ப
நோக்கு மதுசெய் யாதிகப்பி
னுனித்துக் கருவி னமைத்தபயன்
போக்கி யிடையே பயன்வேறு
பொருந்தா பொருந்தும் பெரும்பிழையே.
க

### திருமந்திரம்

979 நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்

நடுவுநின் ருர்வழி நானுநின் றேனே.
உ

980 நடுவுநின் ருர்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் ருர்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் ருர்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் ருரொடு நானுநின் றேனே.
ந

## இராமாயணம்

981 நாரங் கொண்டார் நாடுக வர்ந்தார் நடையல்லா
வாரங் கொண்டார் மற்றொரு வர்க்காய் மனைவாழுந்
தாரங் கொண்டா ரென்றிவர் தம்மைத் தருமந்தான்
ஈருங் கண்டாய் கண்டக ருய்ந்தா ரெவரய்யா.
ச

## பழமொழி

982 சுற்றத்தார் நட்டா ரெனச்சென் றொருவரை
யற்றத்தாற் றேரு ரறிவுடையார்—கொற்றப்புள்
ஊர்ந்துலகந் தாவின வண்ணலே யாயினுஞ்
சீர்ந்தது செய்யாதா ரில்.
இ

## இன்னிசை

983 செய்யாமற் பேருதவி செய்தார்கொன் றன்னவிடர்

செய்தா ரயலா ரெனுந்திறன் தேராமே



எய்துவ கேடெனினு மாக்கமென் றெண்ணிநடு எய்தலே மேலோ ரியல்பு.

நறுந்தொகை

984 இருவர்தஞ் சொல்லையு மெழுதரங் கேட்டே
இருவரும் பொருந்த வுரையா ராயின்
மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்
மனமுற மறுகிநின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி யீர்வதோர் வாளா கும்மே.

எ

விவேக சிந்தாமணி

985 ஆரம் பூண்ட மணிமார்பா வயோத்திக் கரசே அண்ணலே கேள்
ஈர மிருக்க மரமிருக்க இலைக ளுதிர்ந்த வாறேது
வாரங் கொண்டு வழக்குரைத்து மண்மேல் நின்று வலுப்பேசி
ஓரஞ் சொன்னூர் குடியதுபோ லுதிர்ந்து கிடக்குது தம்பியரே.

986 நாரிகள் வழக்க தாயி னடுவறிந் துரைத்தார் நல்ல
ஏரிபோற் பெருகி மண்மே லிருகண்ணும் விளங்கி வாழ்வார்
ஓரமே சொல்வா ராகி லோங்கிய கிளையு மாண்டு
தீரவே கண்ணி ரண்டுந் தெரியாமற் போவர் தாமே. கூ

## திருக்குறள்

987 நன்றே தரினும் நடுவிகந்தா மாக்கத்தை
அன்றே யொழிய விடல்.

கo 988 கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

கக 989 கெடுவல்யா னென்ப தறிகதன்
நெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

கஉ 990 கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

கங
991 சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல்
கோடாமை சான்றோர்க் கணி.

அமைந்தொருபால்
கச 992 செப்ப முடையவ னுக்கஞ்
சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

கரு

### சூதசங்கிதை

993 அத்திரசத் திரமுகிரா திகளினு லடர்ந்தெதிர்ந்து
நெய்த்தோருண் ணின்றெழப்புண் ணிறுவுதல்கூ டாதம்ம
எய்த்திரங்கப் பிராணிகளுக் கிடையூறு செய்திடுவோர்
கொத்தழலார் வெந்நிரயக் குழிவீழ்வ துண்மையேயாம். ௯

### மச்ச புராணம்

994 துன்னிய சீற்றத் தோற்றமி லாதான்
துகளறு சத்திய வாதி
பின்னமி லாம லுறுதிட விரதன்
பெட்பினெ டிப்புவி தன்னில்
தன்னுயிர் போல மன்னுயிர்க் கிரங்கும்
தயவினேன் ருமிவர் நால்வர்
உன்னிய தீர்த்த பலத்தினை யுறுவர்
ஓதுமீ துண்மைய தாமால்.
௨

### பிரபுலிங்க லீலை

995 ஆதர விலையேல் வேண்டும் அறத்தினிற் பொருளோர் செம்பொன்
பூதர வளவ ளித்தும் பொருளழி வளவே யாகும்

ஆதர வுளதேல் நல்கும் பொருளணு வளவென்
ருலும்
பூதர மெனவ ளர்ந்து புண்ணியப் பொருள
ளிக்கும். ௩

996 துறவறம் மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி
நல்லோர்
உறவொடு மதங்கள் தானம் ஒண்டவம் விரதம்
பூசை
அறிவிவை யனைத்து மில்லை ஆதர வில்லை
யாயின்
பெறுவன மெய்வ ருத்தம் பெரும்பொரு ளழிவு
மாதோ. ச

997 ஆதர வுடையான் செய்யும் அல்லவும் நல்ல
வாகும்
ஆதர விலாதான் செய்யும் நல்லவு மல்ல
வாகும்
ஆதர வதனு லாவிக் கருந்துணை யின்ப முத்தி
ஆதர வலாது வேருென் றளித்திடக் கண்ட
துண்டோ. ரு

யசோதர காவியம்

998 இவ்வுலகி னெவ்வுயிரு மெவ்வுயிரி னேரென்
றவ்விய மகன்றருள் சுரந்துயிர் வளர்க்குஞ்
செவ்விமையி னின்றவர் திருந்தடி பணிந்துன்

வெவ்வினை கடந்துயிர் விளங்குவிறல்
வேலோய். ௬



999 அருளுடை மனத்த ராகி யறம்புரிந் தவர்கட் கல்லால்
மருளுடை மறவ ருக்கெம் வாய்மொழி மனத்திற் சென்று
பொருளியல் பாகி நில்லா புரவல கருதிற் றுண்டேல்
அருளியல் செய்து செல்க ஆகுவ தாக வென்றான். ௭

1000 அருள்புரி மனத்த ராகி யாருயிர்க் கபயம் நல்கிப்
பொருள்கொலை களவு காமம் பொய்யொடு புறக்க ணித்திட்
டிருள்புரி வினைகள் சேரா இறைவன தறத்தை யெய்தின்
மருள்செய வருவ துண்டோ வானவ ரின்ப மல்லால். ௮

மேருமந்தர புராணம்

1001 வதங்கள்பன் னிரண்டு மேவி
வையகத் துயிர்கட் கெல்லாம்
இதஞ்செய்து வருந்தில் வெந்தீ

யிடுவெண் ணெய் போன்றி ரங்கிச்
சிதைந்தின்று தனசெய் தார்க்கும்
இனியவே செய்து சிந்தை
கதங்கடிந் தொழுகல் நல்லோர்
கருணையைக் கொடுத்த லாமே.

கூ

பதிபசுபாச விளக்கம்

1002 கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத்
தெளிந்தா னேனும்
மலையென உயர்ந்தா னேனு மனமய லகன்று
னேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கைய
னேனும்
இலகிய விரக்க மின்றே லெழுநர கடைவ
னன்றே. கO

தாயுமானவர் பாடல்

1003 எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி
யிரங்கவுநின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே.
கக 1004 தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று
தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன்
பராபரமே. கஉ

அருட்பா

1005 மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒருசிறி தெனினும்

கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும்நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறு மெனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தம் தவிர்க்கநல் வரந்தான்
நல்குத லெனக்கிச்சை யெந்தாய்.

கரு

## ௯0. அருள்

1006 எவ்வுயிர்த் திரளு மென்னுயி ரெனவே
எண்ணிந லின்புறச் செயவும்
அவ்வுயிர் களுக்கு வருமிடை யூற்றை
அகற்றியே அச்சம்நீக் கிடவும்
செவ்வையுற் றுனது திருப்பதம் பாடிச்
சிவசிவ என்றுகூத் தாடி
ஒவ்வுறு களிப்பா லழிவுறு திங்கே
ஓங்கவு மிச்சைகாண் எந்தாய்.

கச

1007 கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த
கடுந்துய ரச்சமா திகளைத்
தருணநின் னருளால் தவிர்த்தவர்க் கின்பம்
தரவும்வன் புலைகொலை யிரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க
உஞற்றவும் அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்.

கரு

சீவக சிந்தாமணி

1008 அறவிய மனத்த ராகி யாருயிர்க் கருளைச் செய்யிற்
பறவையும் நிழலும் போலப் பழவினை யுயிரோ டாடி
மறவியொன் றுனு மின்றி மனத்ததே சுரக்கு நல்லான்
கறவையிற் கறக்குந் தம்மாற் காமுறப் பட்ட வெல்லாம். கசு

1009 தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோன்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனு மின்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துய்ந்து போகுமே.

கஎ

வளையாபதி

1010 உயிர்க ளோம்புமி னூன்விழைந் துண்ணன்மின்
செயிர்க ணீங்குமின் செற்ற மிகந்தொரீஇக்
கதிக ணல்லுருக் கண்டனர் கைதொழும்
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர்.

கஅ

சூளாமணி

1011 பொருளில்லார் இவ்வழிப் பொறியின் போகமும்
அருளில்லார்க் கறத்தினும் பயனு நூல்வழி
உருள்விலா மனத்தவர்க் குணர்வும் போல்மனம்
தெருளிலார்க் கிசைவிலள் திருவின் செல்வியே.

கக



1012 கற்றவர் கடவுட் டானஞ் சேர்ந்தவர் களைக
ணில்லார்
அற்றவ ரந்த ணாள ரன்றியு மனைய நீரார்க்
குற்றதோ ரிடுக்கண் வந்தா லுதவுதற் குரித்தன்
றுயிற்
பெற்றவிவ் வுடம்பு தன்னாற் பெறுபய னில்லை
மன்னோ. உ௦ 1013 ஆருயிர் யாதொன் றிடருறு
மாங்கதற்
கோருயிர் போல வுருகி யுயக்கொள்ள

நேரி னதுமுடி யாதெனி னெஞ்சகத்
தீர முடைமை யருளி னியல்பே.

உக

## இராமாயணம்

1014 ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்

யாவர்க் கேனு மெளியவர்க் காயினுஞ்

சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழு தேவர்க ளாகுவார்.

உஉ

## பெருந்தேவனார் பாரதம்

1015 இறப்ப நுமக்கடுத்த வெவ்வநோ யாவும்
பிறர்க்குமஃ தாமென்று
கொண்மின்—உறக்கருதி
எவ்வா றுமக்குறுதி யெண்ணுதிர் நீ
ரெல்லார்க்கும்
அவ்வாறே யெண்ண லறம்.

உங 1016 மெய்தகளி யாகப் பொறையாந்
திரிக்கொளீஇ
நெய்தவ மாக நிறைதரப்—பெய்தாங்
கருளாம் விளக்கேற்றி யம்மைப்பாற் செல்ல
இருள்போய் வெளியாய் விடும்.

உச

அறநெறிச் சாரம்

1017 தன்னெக்குந் தெய்வம் பிறிதில்லை தான்தன்னைப்
பின்னை மனமறப் பெற்றனேல்—என்னை
இருட்கண்ணே நோக்கா திருமையும் பெற்றுங்
கருட்கண்ணே நிற்ப தறிவு.
உ௫

பழமொழி

1018 அற்றுக நோக்கி யறத்திற் கருளுடைமை
முற்ற வறிந்தார் முதலறிந்தார்—தெற்ற
முதல்விட் டஃதொழிந்தா ரோம்பா வொழுக்கம்
முயல்விட்டுக் காக்கை தினல்.
உ௮

சிறுபஞ்ச மூலம்

1019

பொருளுடையான் கண்ணதே போக மறனு
மருளுடையான் கண்ணதே யாகு—மருளுடையான்



செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து.
உ௭

நன்னெறி

1020 தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகி
னிறையிருளை நீக்குமே னின்று.
உஅ

1021 பெரியவர்தந் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ள
மெரியி னிழுதாவ ரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.
உகூ

1022 பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.
கூ0

## செய்யுட் கோவை (தி.ல.)

1023 தனக்கென்று
வாழ்கின்ற தன்மை மனிதர் தமக்குமட்டோ
வனக்குன்றில் வாழும் விலங்குக்கு முண்டு மனிதர்தங்கள்
மனக்கிளர் வால்வரும் மாட்சியென் னேதம் மதி செலுத்தி
இனக்குழு வோருக் கியலின்பம் நாடி யிருக்கின்றதே. கூக

1024 மன்னுயிர்ப் பேணி யுழைக்கின்ற மேன்மை மனிதனுக்குத்
தன்னுயிர்ப் பேணி யுழைக்கக் கடனில்லை தாம்பிறக்கு
முன்னுயிர் யாவுமொன் றென்றறிந் துய்கின்ற மூதறிவோர்
இன்னுயிர்ப் பேணல்தம் மேற்கட னுயிறை யேற்குமன்றே.

௧௨

1025 கண்கொண்ட பல்லுயிர்க் கண்ணுங் கடவுள் கலப்பறிந்து
தண்கொண்ட பேரருள் மானிடர் ஆளத் தலைப்படிலவ்
விண்கொண்ட இன்பப் பெருக்க மனைத்தும் விரைவுடனே
மண்கொண் டிலங்குநம் மானிடர் தேவரை மானுவரே. ௧௩

திருக்குறள்

1026 நல்லாற்ரு ணடி யருளாள்க பல்லாற்ருற்
றேரினு மஃதே துணை.

௧௪

1027 அருள்சேர்ந்த நெஞ்சினூர்க் கில்லை
யிருள்சேர்ந்த
இன்ணு வுலகம் புகல்.

௧௫

1028 அருளில்லார்க் கவ்வுலக மில்லை
பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

௧௬

1029 பொருளற்ருர் பூப்பர் ரொருகா லருளற்ருர்

அற்ருர்மற் ருத லரிது.

௧௭

---

## ௧௧. பிறர்க்குத் துன்பஞ் செய்யாமை

### காசி கண்டம்

1030 பிறரிடை யின்ணு இயற்றிடின் றமக்குப்
பிழைப்பற வெய்துமென் பதனை
அறிகுந ரறிஞ ராதலா லுயிர்கள்

அனைத்தையுந் தம்முயிர் போல
நெறியினிற் கருத லினியவா மைந்து

புலனையும் நெறியலா வழியிற்

பொறியினிற் செலுத்தா தடக்க னன்குணர்ந்த
புலமையோ ரொழுக்கெனப் புகல்வார்.

க

கூர்ம புராணம்

1031

இருள்வயிற் றூர்ந்த புத்தேட் கினமெனக் கமலப் போதைக்
கருகவெம் பனியால் தீய்த்த கலைமதி தன்னை மீட்டு
மருவுமப் பனியே செவ்வி மறைத்ததால்
மனத்தி னேனும்
ஒருவருக் கின்னு செய்யின் றனக்கவை யுறுவ
தன்றே. உ

பாண்டியம்

1032 பிறர்க்கொரு சிறுநோய்செய்யின் பிறகது
பெருநோ யாகி
மறக்கொடுந் தீயாய் மண்டி வந்துனை வருத்து
மந்தோ
அறத்திறந் தெரியா தின்னு வாற்றிநீ யழிதல்

நஞ்சை
உறத்தின்று சாத லாகும் உறுதியை உணர்க
வேர்ந்தே. க

## சீவக சிந்தாமணி

1033 வெவ்வினை செய்யு மாந்த ருயிரெனும்
நிலத்து வித்தி
அவ்வினை விளையு ளுண்ணும் அவ்விடத்
தவர்கள் துன்பம்
இவ்வென வுரைத்து மென்று நினைப்பினும்
பனிக்கு முள்ளம்
செவ்விதிற் சிறிது கூறக் கேண்மதி செல்வ
வேந்தே. ௨

## பழமொழி

1034 பூவுட்குங் கண்ணுய் பொறுப்ப ரெனக்கருதி
யாவர்க்கே யாயினு மின்ன செயல்வேண்டா
தேவர்க்குங் கைகூடாத் திண்ணன்பி
ஞர்க்கேயும்
நோவச் செயினேன்மை யில்.

ஙு

## நீதி நூல்

1035 உரவுநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசை
பரர்வருந் திடவிடர் பண்ணு வோன்றனை

நரரெலாம் பகைசெய்வர் நண்ணு மாயிரம்
அரவுசூழ் கின்றவோர் தேரை யாவனே.
அ

திருக்குறள்

1036 இன்னுசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

எ 1037 அறிவினுன் ஆகுவ துண்டோ பிறிதின் நோய்
தந்நோய்போற் போற்ருக் கடை.

அ 1038 இன்னு எனத்தான் உணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

கூ 1039 தன்னுயிர்க் கின்னுமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னு செயல்.

க0 1040 பிறர்க்கின்னு முற்பகல் செய்யில் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்.

கக
1041 நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்

நோயின்மை வேண்டு பவர்.

கஉ

---

## ௬உ. கொல்லாமை

இலிங்க புராணம்

1042 ஒருயிர் தன்னைக் கோறல்செய் தோர்க
ளுயிரினை யவ்வுயி ரெய்திச்
சோர்வுறக் கொல்லு மாதலாற் கோற
லாதன்மற் றொழிந்திட வேண்டுந்
தேரிடிற் சிவஞா லயத்தினோர் புழுவா
யினுமுயிர் செகுத்தவர் திரைசெய்
வார்கட லுலக முழுவதுஞ் செகுத்த
பாவத்தை யடைகுவ ரன்றே.

உபதேச காண்டம்

1043 மாதி ரஞ்சுழல் புட்குலம் படுப்பவர்
மறிதிரைப்பொரு நீர்வாழ்
சாதி தூண்டிலிற் படுப்பவ ரணரியிற்
சங்கிலிமுடக் கேற்றி
மீது கற்றறி விட்டமிட் டசைத்தவர் கீழ்ப்பட
வெகுளித்தீ

யோது நெய்சொரிந் தெழுப்புவ ரவருடம்
புருகியநிணஞ் சோர.

உ

## சிவ தருமோத்தரம்

1044 உண்ண வூனை விரும்பி யுயிர்க்கொலை
யெண்ணு வான்கொலை கண்டிரங் கான்கொலை
பண்ணு வாரைத் தடுத்துப் பகர்கிலா
னண்ணு வானிவ ரோடெனு நால்வரும்.

உ 1045 வருந்து மேபதம் வைப்பின்
மரிக்குமே
பொருந்து மண்ணிற் புழுக்கண மென்றுளம்
வருந்தி யேபத மெல்லென வைத்திடா
தருந்த வத்தைப் பிரிந்த வரக்கனும்.

ஶ

## பழைய திருவிளையாடல்

1046 பிரிவறக் கொன்று தின்னுங் கடைப்படும் பிறப்பு
நாரை
வரனுறு தேவ ராகி வான்றொழ விருப்பக்
கண்டீர்
கருதுதி ரென்றும் பொல்லாக் கடையரா
யினுங்கொல் லாமல்
அரனைவந் திப்ப ரேல்வா னுள்வதற் கைய மின்றே.

ஶ

## திருமந்திரம்

1047 கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை

•

வல்லடிக் காரர் வலிக்கயிற் ருற்கட்டிச்

௬



செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே.

௬ 1048 கொலையே களவுகட் காமம்பொய் கூறல்
மலைவான பாதக மாமவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையா மிவைஞான னந்தத் திருத்தலே.
௭

மெய்ஞ்ஞான விளக்கம்

1049 அலமர லெவைக்குஞ் செய்யா அயிஞ்சையே பரம தன்மம்
இலகுமெத் தலத்து மென்ன வெண்ணருஞ் சீவ கோடி
உலகிலுள் ளவையெல் லாநம் உயிரொப்ப வுன்னி யாவும்
கொலைசெயா நியமஞ் செய்யுங் கொள்கைமேற் கொண்டுபின்னும்.

அ

சிவஞான தீபம்

1050 கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே

கூறரிய மேலான ஞான மாகும்

கொலையாதி யகன்றொழுகுந் தவங்க டாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்கு நூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந் தானே

கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே.

கூ

## பதிபசுபாச விளக்கம்

1051 கொலையிலா னுதவு மன்னங் கூறிற்பே ரமுத மாகும்
கொலையுளா னுதவு மன்னங் கூறில்வல் விடம தாகும்
புலையர்த மனையி லுண்போன் புலையனு மாறு போலக்
கொலைஞர்த மனையி லுண்போன் கொலைஞனே யாவனன்றே.

௩0

## சிவ—இதோபதேசம்

1052 கொல்லாதான் றன்மந் தன்மேற் கூறின்மற் றில்லை தன்மங்
கொல்லாதான் செல்வந் தன்மேற் குவலயத் தில்லை செல்வங்
கொல்லாதான் றுறவு தன்மேற் கொள்ளலாந் துறவு மில்லை

கொல்லாதான் ஞானந் தன்மேற் கூர்த்தமெய்ஞ்
ஞானமில்லை.

கக

1053 தன்னைத்தா னுக்க வெண்ணித் தான்பிறி
தொன்றைக்கொல்வான்
தன்னைத்தான் கொல்லு கின்றான் றன்னுயிர்
விடுத்து மொன்று
தன்னைத்தான் கொல்லா தான்காண்
டன்னைமுன்னோக்கு கின்றான்
தன்னைத்தா னோக்கு கின்ற தத்துவ ரிட்ட மீதால்.

கஉ



## தாயுமானவர் பாடல்

1054 கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
வெல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை
பராபரமே. கங

1055 கொல்லா விரதமொன்று கொண்டவரே
நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.
கச

## சிந்தாமணி

1056 மங்கை மனைவணைய மென்சூல் மடவுடும்பு
செங்கண் வரிவரால் செந்நீ ரிளவாளை

வெங்கருணை புல்லுதற்கு வேறுவே ருக்குறைப்ப
அங்காந் தழுகின்ற தார்கண்ணே நோக்குமே.

க ஙி

1057 சிலையினுன் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்ட மாடி
வலையினுன் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்ற மான
கொலைஞரைக் கும்பி தன்னுட் கொந்தழ லழுத்தி யிட்டு
நலிகுவர் நாளு நாளு நரகரை நாம வேலோய்.

க சு

1058 அறம்பெரிய கூறின் அலங்கலணி வேலோய்
மறம்புரிகொள் நெஞ்சம்வழி யாப்புகுதந் தீண்டிச்
செறும்பெரிய தீவினைகள் சென்றுகடி தோடி
உறும்பெரிய துன்ப முயிர்க்கொலையும் வேண்டா.

க எ

வளையாபதி

1059 உலகுடன் விளங்கவரு சீர்த்திநிலை கொள்ளின்
இலையில்கதி நான்கினிடை நின்றுதடு மாறும்
அலகிறுய ரஞ்சினுயி ரஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமி னென்றுநனி கூறின ரறிந்தார்.

க அ

சூளாமணி

1060 எல்லா விரத மியல்பொக்கு மாயினும்

அல்லா விரத மனையா யவர்கட்குக்
கொல்லா விரதங் குடைமன்ன வாமெனின்

வெல்லா வகையில்லை வீங்கெழிற் றேளாய்.
கக

1061 கொன்றுயிர் நடுங்கச் சென்று

கொலைத்தொழிற் கருவி யேந்தி
நின்றெரி நுடங்கு கண்ணுற் பாவமே நினைந்து
செத்தார்
சென்றெரி நரகில் வீழ்வர் செவ்வனே துன்ப
மஞ்சி
நன்றியில் கொலையி

னீங்கி நற்றவம் புரிமி னென்றான். உ௦

1062 கொலையி னீங்குமின் கொண்மி னுலகினுள்
தலைவ னல்லறந் தக்க தெனவுவந்
தலையி னீங்கிய வவ்வுல கெய்துதல்
முனைவர் சொன்ன முடிவிது வாகுமே.

உக



## இராமாயணம்

1063 கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து

விற்றவன்

ஒன்றிய பொருள்கொடுத் துவந்து கொண்டவன்
நன்றிது வென்றவன் நாவிற் பெய்தவன்
என்றிவ ரறுவரு நரக மெய்துவார்.

உஉ

பாகவதம்

1064 படுத்திடு மறிகள் வேள்வி புரிந்தவன் பனிவி சும்பில்
அடுத்திடுங் கால நோக்கி யழல்விழி யொழுகப் பாய்ந்து
வடித்தகா ரிரும்பிற் செய்த மருப்பினுல் வயிறு போழ்ந்த
தெடுத்துநா முரைக்குங் கேட்டி யிறைவவென் றுரைக்க
லுற்ருன். உங

பெருந்தேவஞர் பாரதம்

1065 இந்நோய் நமக்குண்டென் றெண்ணுதே யெவ்வுயிரும்
முன்ஞேவக் கொன்றுண்ணு மூர்க்கர்தா—மெந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவா ரிசைந்து.

உச 1066 கொன்ருன் கொலச்சொன்ஞன் கூசவறுத் தானட்டான்
தின்ருன் விலக்கிடான் சென்ருென்று—கொன்றவனைக்

குட்டவன்க ணிட்டெரிக்க வெந்துகொடு
வெந்நரகிற்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து.
உ௯ 1067 ஆனை யடியி லடங்கா வடியில்லை
தானதுபோ னிற்கின்ற
தன்மைதா—னூனுயிரைக்
கொல்லா வறத்தின் கொழுநிழற்கே
யுள்ளடங்கும்
எல்லா வறமு மிசைந்து.
உ௬

## யசோதர காவியம்

1068 யானுயிர் வாழ்த லெண்ணி யெளியவர் தம்மைக்
கொல்லின்
வானுய ரின்ப மேலால் வருநெறி திரியு மன்றி
ஊனுயி ரின்ப மெண்ணி யெண்ணமற் றொன்று
மின்றி,
மானுயிர் வாழ்வு மண்ணின் மறித்திடு மியல்பிற்
றன்றே. உஎ

## சிறுபஞ்ச மூலம்

1069 கொன்றான் கொலையை யுடம்பட்டான்
கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்
காற்—கொன்றதனை

அட்டா னடவுண்டா ஊனவரினு மேலுளவாக்
கட்டெறிந்த பாவங் கருது.
உ அ



## ௩உ. கொல்லாமை

1070 நசைகொல்லார் நச்சியார்க் கென்றுங் கிளைஞர்
மிசைகொல்லார் வேளாண்மை
கொல்லார்—இசைகொல்லார்
பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய்
நன்குணர்ந்தார்
என்பெறினுங் கொல்லா ரியைந்து.
௩௬

### நான்மணிக்கடிகை

1071 அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.
௩௦

### செய்யுட் கோவை

1072 எல்லா வறத்திற்குந் தலையா யிறைவ
னியற்கையில்வாழ்
பல்லா ருயிரமர் பான்மையைப் பார்த்த
பயனதுவாய்க்
கல்லா வுளத்தினுங் கற்பக மாயருட் கார்பயந்த

கொல்லாமை யோங்குவிப் பார்க்கேகண்
டீரெங்கை கூப்புவதே.

௩௮

## இன்னிசை

1073 எல்லா வுயிரு மிறைவனுட லாதலின்நாம்
அல்லல் பிறசெய்யின் துன்புறலின் ஆயுங்கால்
கொல்லாமை யொன்றே தலையாய
நல்லறன்மற்
றெல்லா மதன்பின் னெழும்.

௩௨

## கொலை மறுத்தல்

1074 ஊற்றமிகுஞ் சராசரத்து ளுயர்ச்சிசரம்
சரத்துணரர் நரர்தம் முள்ளும்
ஏற்றமுந்தாழ்ச் சியுமுளபல் லுயிர்செகுத்துண்
டுடலைவளர்த் திடுங்கீ ழும்மேல்
சாற்றுமுயிர்க் கொலைபுரிதல் துயர்நெடுநாள்
என்றுமுடல் தான்பொய் யென்றும்
தேற்றமிக்கேன் றுயிர்தமைவீட் டினுமவற்றின்
உயிர்புரக்குந் தீதி லோரே.

௩௩

## நீதி நூல்

1075 உயிரினை வதைத்திடல் வதைக்க வுன்னுதல்
அயிலெனக் கொடியசொ லறைத
லெற்றல்வெண்
தயிருடை மத்தெனத் தாபம் பல்புரிந்

தயலவ ராயுள்நாட் கிழிவுண் டாக்குதல்.

௧௪

1076 கருவினை யழிக்குதல் கயமிங் கேனையார்
மருவிட விரும்புதல் மற்றன் னோரிடர்



ஒருவிட வகைசெயா தொழிதல் வெவ்விடஞ்
சருவினி விடல்கொடுஞ் சமர்க்கு டன்படல்.

௧௫ 1077 முனைவுகட் காமம்வெம் மூரண்மு தற்கொலை
வினையினுக் கேதுவாம் வினைக்க மைந்திடல்
மனையினிற் றீயிடல் மண்ணில் தற்கொலல்
இனையயா வுங்கொலை யென்னும் வேதமே.

௧௬ 1078 பெறலரு முயிர்தரும் பிறப்பி லானதை
அறவொரு வழிசெய வாண்மை பூண்டனன்
பறவையை நரர்விலங் கினைப்ப டுக்குமோர்
மறவனுக் குலகெலா மறலி யென்பவே.

௧௭ 1079 கொலைபுரி வோரையுங் குடிவ ருந்தவே
அலைசெய் பவரையு மாவி நீக்கிடத்
தலைமுடி தரித்தவர் தமக்கு நீதியாம்
இலைகொலை செயுமுறை யிதர ரார்க்குமே.

௧௮ 1080 தீயிடை மூழ்கினோன் சிங்கி யுண்டவன்
மாய்விலா துய்யினும் வதனுய் யானமன்
ஆயதன் தொழில்புரி வோனை யன்பொடும்
மேயதன் னுலகினுக் கீண்ட ழைக்குமே.

௩௯ 1081 சீவனை வதைசெயல் சிறந்த தாயுங்காற்
பாவமோ ரைந்தினுங் கொலைசெய் பாவியைப்
பூவல யம்பொரு தெரியும் பூதிதான்

ஆவென வாய்திறந் தவனை நுங்குமே.

௭0 1082 அகந்தனை யுடையவ னழித்தல் நீதியெண்
இகந்தபல் லுயிரெலா மியற்றி னேற்கன்றிச்
சகந்தனி லவைகளைத் தம்மைக் கொன்றிட
உகந்தபே ருரிமையீங் கொருவர்க் கில்லையே.

௭௧

திருக்குறள்

1083 அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

௭௨
1084 நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

௭௩

1085 கொல்லாமை மேற்கொண் டொழுகுவான்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

வாழ்நாண்மேற்"

௬௬

1086 தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

---

௬௫

## ௫௫. புலான் மறுத்தல்

### சிவதருமோத்தரம்

1087

நாயினுக்கும் பேயினுக்கும் நரியினுக்குங் கழுகினுக்கும்
ஈயினுக்கு மினிதுபிண மெனிலதுதா னினியதுவோ
வாயினுக்கு மனத்தினுக்கும் மதிப்பரிய மாதேவன்
தேயினுக்கே சிவமதனைத் தினைப்பாரே சிறந்தாரே. ௧

### திருமந்திரம்

1088 கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினும்
ஊனிலை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

உ

1089 பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
யெல்லாருங் காண வியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே.
௩

## சிவஞான தீபம்

1090 எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகு
மிலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயில்
எவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி
யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை
வவ்வியம தூதருந் தண்டஞ் செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாரு
வேதனைசெய் திடுவரென வோது நூலே. ௪

## பட்டினத்தார்

1091 சடக்கடத் துக்கிரை தேடிப் பலவுயிர் தன்னைக் கொன்று
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல் வார்க டமைக்கரம் பற்றிநமன்
இடக்கடிக் கும்பொழு தேதுசெய் வார்கச்சி யேகம்பனே. ௫

## திருஅருட்பா

1092 மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்திற்
கண்விழித்து வாங்கு மப்பெண்
ணுருவாணை யுருவாக்கி யிறந்தவரை
யெழுப்புகின்ற வுறுவ னேனும்

கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்த னேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை
ஞானியெனக் கூறொ ணாதே.
அ

## சிந்தாமணி

1093 ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தி லுறைதல் நன்றோ வூன்றிஞ துடம்பு வாட்டித் தேவரா யுறைதல் நன்றோ வூன்றியிவ் விரண்டி னுள்ளு முறுதிநீ யுரைத்தி டென்ன வூன்றிஞ தொழிந்து புத்தே ளாவதே யுறுதி யென்றான். எ

1094 வெந்தடி தின்ற வெந்நோய் வேகத்தான் மீட்டு மாலைப்
பைந்தொடி மகளி ராடும் பந்தென வெழுந்து பொங்கி
வந்துடைந் துருகி வீழ்ந்து மாழ்குபு கிடப்பர் கண்டாய்
கந்தடு வெகுளி வேகக் கடாமுகக் களிற்று வேந்தே. அ

## வளையாபதி

1095 பிறவிக் கடலகத் தாராய்ந் துணரில்
தெறுவதிற் குற்ற மிலார்களு மில்லை
யறவகை யோரா விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தன்சுற்றந் தின்றன ராவர்.
கூ

1096 செந்தழலின் வெந்தசைகள் தின்றனை முனென்றே
கொந்தழலின் வெந்துகொது கொதுகெனவே யுருகும்
செந்தழலி னிந்திரர்கள் செம்புகள் திணிப்ப
வெந்தழலின் நைந்துருகி விண்டொழுகும் முகனே. ௪௰

வீர பாண்டியம்

1097 தானங்கள் செய்தா னேனுந் தருமங்கள் புரிந்தா னேனும்
வானங்கள் விழைந்து நோக்க மதங்களை வனைந்தா னேனும்
ஊனங்கள் விளையு மந்தோ வூனினை யுண்பா னாயின்
ஈனங்க ளெய்திப் பின்னர் இழிநர கடைவ னன்றே. ௧௧

1098 உன்னுயிர் போல நோக்கி உற்றுள வுயிர்க ளோம்பின்
இன்னுயிர் முதல்வ னான ஈசனின் அருளை யெய்தி
மன்னுயிர் வளங்க ளோடு மகிமைகள் பலவும் மல்கிப்
பொன்னுயி ராகி மேலாம் புனிதபே ரின்பம்

பூண்பாய். கஉ

1099 மானமார் மனித ளுகி மாநிலத் துதித்து வந்தாய்

ஊனினை நுகர நேரின் ஊனமா யுழல்வா யந்தோ

௩௩. புலான் மறுத்தல்

173

ஞானமுந் தயையு நீதி நலங்களும் மருவி வாழ்க

ஈனமா யிழிவ னென்று மிழிதுய ரெய்து மன்றே.

க௩.

பெருந்தேவனார் பாரதம்

1100 வாயிற் சுவைவெஃகி மான்கொன்று மீன்கொன்று

நாயொத் துழல்வார்க்கு நாவளவே—போயிழந்தால்

இன்னு தினிதென் றறியா ரிதற்காக

மன்னுஊன் தின்றல் விடு.

க௪

இதிகாசம்

1101 அம்மா வெனவலற ஆருயிரைக் கொன்றருந்தி

இம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றார்

அம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்

*வெம்மா நரகமென்றால் மென்றவர்க்கென் கூறுவதே.

## பழமொழி

1102 விடலரிய துப்புடைய வேட்கையை நீக்கிப்
படர்வரிய நன்னெறிக்க
ணின்ருர் — இடருடைத்தாப்
பெற்ற விடக்கு நுகர்தல் கடனீந்திக்
கற்றடியு ளாழ்ந்து விடல்.
கசு

## நாலடியார்

1103 துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு.
கஎ

1104 அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முறித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.
கஅ

## நான்மணிக் கடிகை

1105 கரப்பவர்க்குச் செல்சார் கவிழ்த லெஞ்ஞான்றும்
இரப்பவர்க்குச் செல்சாரொன் றீவோர்—பரப்பமைந்த
தானைக்குச் செல்சார் தறுகண்மை யூனுண்டல்
செய்யாமை செல்சா ருயிர்க்கு.

* "பொய்ம்மா நிரய மென்றால் புசித்த வர்க்கென் சொல்லுவதே" எனவும் பாடமுண்டு.



## அறநெறிச் சாரம்

1106 கொன்றா னுகருங் கொடுமையை யுண்ணினைந்
தன்றே யொழிய விடுவானேல் — என்றும்
இடுக்க ணெனவுண்டோ வில்வாழ்க்கைக்
குள்ளே
படுத்தானுந் தன்னைத் தவம்.

உ0

## திரிகடுகம்

1107 ஊனுண் டுயிர்கட் கன்புடையே மென்பானும்
தானுடன் பாடின்றி வினையாக்கு மென்பானும்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவர் தாங்கண்ட வாறு.

உக

## தரும தீபிகை

1108 பெற்ற மகவைப் பிறர்வையக் கண்டாலும்
உற்ற துயர முணர்ந்துள்ளாய் — பற்றிநீ
தாயலறக் குஞ்சுகளைத் தான்கொன்று

தின்கின்ருய்
நீயடைவ தென்ஞே நினே.
உஉ

## அருட் பிரகாசம்

1109 புலிநாரை யெண்குற வாதிகள் முன்னம் புலாலருந்தும்
குலஞ யிருந்து மருளோம்பி முத்தி குறுகியதென்
றுலகூ டுரைக்குஞ்சொற் கேட்டு மருளற் றுழன்றிருக்கும்
சிலர்மா னுடத்தென் செய்வான் புவியிற் செனித்தனரே. உகூ

## சிவவாக்கியர் பாடல்

1110 புலேபரைப் புலேய ரென்னும் புத்தியற்ற மாந்தரே
புலேயஞர் மலம்புசிக்க நாடுமீது புத்தியோ

புலேயருக்கு ளொக்கு மும்மை யென்றுரைத்த புல்லரும்
புலேயராகி நரகினுட் புகுவரைய ராணேயே.

உ௫

## தனிப்பாடல்

1111 ஒருமீன் புலவு வாய்ப்படுப்பி
ஞெழியுந் தசைக ளனேத்திஷேயும்
பரிவா னுகர்ந்தோர் வீழ்கின்ற

பாழ்வெந் நரகிற் படிவரெனும்
அருமா மறையின் பொருடேர்ந்தோ

வந்தா மரைநாண் மலர்பொதுளும்

விரிநீர் வாவி பயின்மீன்கள்

விழுங்கா துலவும் புள்ளினமே.

உ௯

## ௩௩. புலான் மறுத்தல்

1112 தவகதியை வேண்டுபவ ருயிரில்சடந்
தினறவிர்க தவம ழித்தாங்
கவகதியை வேண்டுபவர் கழுகுநரி
செயுந்தொழிலை யயரா நாட
சிவகதியுந் திருமாறன் றிகழ்கதியு
மயன்கதியுந் தெய்வ லோகத்
துவகதியு மிகந்தெரியுந் துர்க்கதியின்
வீழ்வர்பரஞ் சோதி யாணை.

# 175

## உரு

மழவுருவின் மறைத்தி லேமென்
றிந்தவுடை கொடுமறைப்ப தெற்றினுக்கென்

ளுளிர்பருவத் தெறிக லார்தஞ்
சிந்தையினுன் மிகுத்தணிவ ராதலினா
னுணவைமுனந் தின்று யேனு
நிந்தைசெய்திப் பொழுதகற்றத் தகுமிலையேற்
கெடுவாயுன் னினைவென் னுமே.
உஎ

1114 ஆசுறு மான்ம விச்சை யடக்குத லாகா தென்று
மாசுறு மூனைத் துய்த்து மதுயர் நரகத் தாழ்வீர்
பேசிய தந்தை தாய்மேற் பேசிய வாசை கூரிற்
கூசிடா தவர்க டம்மைக் கூடுதல் குணமோ கூறீர். உஅ

1115 முன்னைவே தனையை விட்டு முற்றிய வறிஞர் நெஞ்சிற்
பின்னொரு விகார மின்றி யிருப்பரிப் பிணைப்பு லாலை
நன்னெறி யறிந்த நாமு நாவழி யொழுகிக் கெட்டேந்
தின்னவே நயந்தே நம்போற் றீங்குளா ருண்டோ வின்றே.
உகூ

1116 அருமகத் தன்றி யூன்சுவைத் துடலம்

வீக்குவோ னதற்குடன் படுவோன்
கருவியிற் குறைத்தோன் பகர்ந்துளோன் கொணர்ந்தோன்
வியந்துளோன் கடிகென வேவுந்

திருவிலி யதனை யட்டவ னிவர்க
ளெண்மருந் தீநர கடைவர்
பரிவினுன் விடுத்தோர் நாடொறும் புரவி
மகம்புரி பலன்பெறு குவரால்.

1117 புழுவுந் தசையும் வெண்ணிணமும்
பொதிந்த குரம்பை வீக்குதற்குக்
கழியூ னுகர்ந்தோர் கொடுநரகிற்
கற்ப காலங் கிடந்தழுந்தி



விழைவின் முன்னர்த் தானுகர்ந்த
விலங்கு மவர்தம் மெய்த்தசையை
யழிவெம் பசியாற் பறித்தருந்து
மென்னும் பான்மை யறிந்தேயோ.

1118 கொன்று விலங்கின் றசை நுகருங்

கொடுமை யோரவ் விலங்கினுடல்
துன்று மயிரெத் துணையாமத்
துணைய காலம் வெந்நரகி
ஞென்றி நுகர்வாய் புழுவொழுக
வுழப்ப ரென்கை யுணர்ந்தேயோ

கன்று சினவெங் கொடுவிலங்கும்
புலவூன் றின்னக் கருதாவால்.

1119

இட்டவிரை யாசையா லெய்தியமீன் றூண்டில்வாய்ப்
பட்டதென நாவிரசம் பார்த்துலகர்—கெட்ட
விருளா ருலகத்தி லெய்துவர்க ளென்றார்
அருளாரு நெஞ்சத் தவர்.

1120

௩௩.

நாய்கழுகு கூகை நரிகாக மீயெறும்பு
பேயிவைக ளாவி பிரிந்தவூ—னேயமொடு
தானருந்த லல்லாது சற்கா ரியமனிதர்
தானருந்த லாவதோ தான்.
௩௪

1121

பிணங்கிடக்க நானுகரே னென்றுநீ பேசுங்
குணங்கிடக்க வேண்டியதென் கூருய்—பிணத்தைக்

கலத்திலே யிட்டுக் கலந்துநா வாரப்
புலத்திறுற் றின்ருய் புகல்.

உ௬

1122 அருந்திச்சின் ஞளா னதன்மேல் விடுக்கின்
வரும்பயனே தென்னின் மழலை—திருந்தறிவிற்
பித்தறிவு பிறங்கியபோ தும்மலத்தைத்
துய்த்திடுவ துண்டாயிற் சொல்.

௩௯ 1123 ஈவானே தெய்வ மிரப்பே

யிளிவரவென்

ருய்வானே நூலின்
பயனறிவான்—பேய்வாழுங்

காடே கரப்பவர்தம் மில்லங் கடும்புலையன்
வீடே விடக்குண்பான் வீடு.
௩௭

1124

தம்மினு முயர்ந்தோர் கீழோர் தமதிலத் தறலுண் டாரேல்

அம்மவங் கவருங் கீழென் றவர்மனைப் புனலு முண்ணு

இம்மனி தர்கடாஞ் சீச்சீ யினர்தம் மலத்தை யுண்டு
விம்முடற் பன்றி யாதி விரும்பியுண் டுவப்ப தென்னே.

௲அ

௲௯
௲௨

௲௲. புலான் மறுத்தல்

177

1125 பறையரைப் பறைய ரென்று பறைந்திடு மனிதர் கேளீர்

பறையர்தம் மலத்தைத் தின்ற பன்றியைப் புசிப்ப தென்னே

கறையதே யாகு மந்தக் கறிதனைக் கலத்தி னிட்டு

மறையவே வைத்துத் தின்னு மனிதரே பறையர் கண்டீர். ௲௧

1126 புலையென்னும் புலைதீரப் புனலென்னும் புனன்மூழ்கி

அலைகின்ற முழுமூட ரறிவென்ன வறிவென்ன
புலையன்றன் மலமுண்ணு மெமையுண்ணும் புலையர்க்குக்
குலமென்ன நலமென்ன கூகூவென் றனகோழி. ௪0

1127
உண்டிடுஞ் சோற்றி னூடே யோர்மயி ரெறும்பி யாதுங்
கண்டுமுன் பருந்தி லாய்முன் பயின்றதுங் கான்றிட் டாயான்
மண்டனிற் பன்றி யாதி மலத்தைமுன் பழக்கத் தாலுட்
கொண்டிட விரும்பு மாறென் கூறுதி யறிவி லாதோய். ௪௧

1128 ஊறுகா யாதி தன்னி னுதித்ததோர் புழுக்கண் டாயேல்
வேறவே வீசிச் சிந்தை மெய்மிகக் குலைந்துற் றுயால்
நாறுமுன் புழுத்த தேனு நனிமிக விரும்பி யுள்ளந்
தேறிநீ யுண்ட வாறென் செப்புதி தெளிவி லாதோய். ௪௨

1129 தகருன தெதிரே சிந்தத் தான்றெறித் திட்ட கோழை
புகலுமுன் மீதிற் றுக்கப் பொருதுளங் குலைந்துற் றுயாற்
பகர்தரு மவற்றி னூனைப் பற்றிய மூளை

யோடும்
அகமகிழ்ந் தயின்ற வாறென் னறைகுதி யறிவி
லாதோய். சங

1130 கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினர்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாய்ப்படி யிற்பிறந் தேழ்நர
கொன்று வாரா ஞணையீ துண்மையே.
சஈ

1131
கொலையஞ் சாதொரு வற்கஞ்சிக் கொன்றுளோர்
சிலர்சொல் லஞ்சிப் புலாலினைத் தின்றுளோர்
நிலையதாய்நர கத்திடை நிற்பரென்
றலகி னூன்மறை யாகம மோதுமே.
சஇ

இந்தியத் தாய்நிலை

1132 தன்னுடல் வளர்க்க மன்னுயி ரழிக்கும்
தாழ்வினை ஒழியவிட் டென்றும்
இன்னுயிர்க் கிரங்கி யிதம்புரிந் தருளின்
ஈசனி னருளெலா மெய்திப்
பொன்னுயி ராகி மணியுயி ராகிப்
புனிதபே ரின்பங்கள் பொருந்திப்
பின்னுயி ரென்றும் பிறவியை யடையாப்
பேறுவந் துமையடைந் திடுமே.
சசு

## திருக்குறள்

1133 தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்.

சஎ 1134 உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

சஅ

1135 தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

சகூ 1136 உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

௫௦

1137 அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

௫க 1138 கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

௫௨

## நசு. மனம்

### விநாயக புராணம்

1139 இல்லி னிருந்தே யைம்பொறியு மெல்லா நுகருங் காலத்துஞ் செல்லும் வழிமெய்ம் மொழிமனத்தைச் செல்லாதடக்கினெழுபி றப்பு நல்ல பயனே யாமேனை நல்ல வினைதீ வினையாகா அல்ல லறுக்கு மறக்கடவு ளடுக்கு மமர ருலகுறுமே. க

### காசி கண்டம்

1140 கற்றதங் கல்வியுங் கடவுட் பூசையும்
நற்றவ மியற்றலு நவையி ருனமும்
மற்றுள வறங்களு மனத்தின் பாலமுக்
கற்றவர்க் கேபய னளிக்கு மென்பரால்.

### பிரபுலிங்க லீலை

1141 துயிலை யின்பெனச் செல்லுத லிந்தியத்
தியலு நெஞ்ச மிலாமையி னலன்றே
பயிலு நெஞ்சம் பரந்து திரிதருஞ்
செயலி லில்லைச் சிறிதுஞ் சுகமரோ.

1142 மனமொ ருத்தன் வசப்படு மேலவன்
பிணவ ருத்தும் பிறப்பை யடைந்திடான்
மனமொ ருத்தன் வசப்படா தோடுமேல்

நனிபி றப்பிடை நாளுஞ் சுழலுமே.

1143 அறவி னுக்கு மரும்பொரு ளின்பொடு
பெறுவ தற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்குநல் வீரந் தனக்குமொண்
டுறவி னுக்குந் துணைமன மென்பவே.

1144 நல்ல செய்து நரரை யுயர்த்தவும்
அல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
இல்லை யென்ன வியம்பு மறையெலாம்.

1145 கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
யெடுக்க வல்லது மிம்மன மென்றதை
யடக்க வல்லவ ரைய பவக்கடல்
கடக்க வல்லவ ருவன் கடிதரோ.

1146 ஆயின் மிக்கோ ரரிய செயலெலா
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்

வாயு நிற்க மனமு முடனிற்குந்
தோய நிற்குறி னிற்குந் துரும்புமே.

அ

1147 ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும் வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமன நன்மனம்.

கூ

1148 ஆசு தீர்ந்த மனத்தினிடை அன்றி யறிவு தோன்றுது
மாசு தீர்ந்த ஆடியிடை அன்றி வதனந் தோன்றுமோ
பாசம் நீங்கு பரஞ்சுடரை நினைக்கும் நினைவால் பற்றுமனம்
காசம் நீங்கு கண்போலத் தன்னைக் காண

விளங்குமால். ௧0

1149 மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பிணைத்துணை யின்றது பெற்றன ஞயின்
தனிச்சிவ மேயொரு தானென வாழ்வன்
நினைத்து மறந்து நிலத்துழ லானே.
௧௧

1150 வாரண மாகு மனத்தை யடக்கின்
காரண மாயை கனைந்தொழி யாத
பூரண மாகிய போதம டைந்திட்
டாரண மோது மரும்பொரு ளாவன்.

௧௨
1151 மக்கள் மானிடர் என்று மனத்தினல்
மிக்க மேன்மை விளங்கின ரில்லெனின்
பொக்க மேவும் பொறிகளோ ரைந்தினல்
ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார்.
௧௩

1152 மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி யெறிவளி முன்சுடர்
என்ன வாடு மியல்மனம் தீமனம்
தன்னை யாருந் தடுக்கத் தகாதரோ.
௧௪

திருமந்திரம்

1153 மனம்வாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனம்வாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்ன
மனம்வாக்குக் கெட்டவர் வாதனை தன்ஞல்

தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே.



## தாயுமானவர் பாடல்

1154 சொல்லான திற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டி யாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப
மொன்றிற்
றெடுக்குந் தொடுத்த ழிக்கும்
டொல்லாத வாதனை யெனும்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றி யாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றுனே
புறம்போந்து சஞ்ச ரிக்குங்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணது கேட்ட வெல்லாங்
கண்டதாக் காட்டியே யணுவாய்ச் சுருக்கிடுங்
கபடநா டகசா லமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்னு லடக்க வசமோ
விகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே.

௧௬ 1155 கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்

கரடிவெம் புலிவா யையுங்

கட்டலா மொருசிங்க முதுகின்மேற்
கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ
கத்தையும்
வேதித்து விற்றுண் ணலாம்
வேறொருவர் காணும லுலகத்து லாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாஞ்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும்புகுத லாஞ்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரிற் சித்தி பெறலாஞ்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தா கியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே

தேசோ மயா னந்தமே.

கஎ

1156 சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெலாம் பெற்றாலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

கஅ

பிரபோத சந்திரோதயம்

1157 பாலகன் வருடும் போது பால்சுரந்
துடைய கொங்கை
மாலுற முயங்குங் கேள்வன் வருடுங்கான் மயக்கு

மேலவர் தொழிலுங் கீழோர் செய்கையும் வேறன் றேனுஞ்
சாலவு மனத்தின் பான்மை வேறுறச் சாரு மன்றே. கக

## ஞானவாசிட்டம்

1158 இன்பமிதா மின்பமிதா மென்ற வெல்லா
மெரியெனநஞ் செனநினைக வேற்றத் தாழ்வாந்
துன்புறுபோ கம்பலவாற் றேர்ந்து நெஞ்சிற்
ரேயாம லெளிதருந்திற் சுகமே யாகும்
வன்புபயின் மனத்தோற்ற நாச மாகும்
மனத்தினது நாசமே மகத்தாந் தோற்ற
நன்பரம ஞானிகணெஞ் சிறந்து போகு
நடைவிலங்கா மறிவினர்க்கு நவைகூர் நெஞ்சம். உ0

1159 கடும்மனம்வன் பேய்கனலிற் கொடிதாகும் மலைகளினுங் கடத்தற் கொண்ணு
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்கினும் நிறுத்தரிது

புலன்முழுதுந் தோன்று மூலம்
கெடுமுலகீ துண்டெனிலுண் டிலதாகி
விலதிதனைக் கெடுத்தல் வேண்டும்.
உக

1160 மயலி லாமையால் நூல்களால் மகத்துவ முதலா
உயர்கு ணங்களால் வருந்தியு மனத்தினை
யுய்க்கின்
துயர்க ணீங்குமு வுலகுறு செல்வமுந் தொக்குப்
பயன ளிக்கினு முயர்வுறு மனமெனப் பயிலா.
உஉ 1161 மனநி றைந்திடி லமுதமாய் நிறைந்திடும்
வையம்
தனது தாள்செருப் புலகெலாந் தோல்முச்சுந்
தரம்போல்
கனநி ராசையால் நிறையுநெஞ் சாசையிற்
கவிழா
தினமு மாசையால் நிறைமனம் குறைவென்றுந்
தீரா. உங

1162 காதலெனும் மனைவியின்பின் செல்கின்ற
மனமென்னுங் கடிய ஞானி
பேதைமைமே வியவென்னைப் பிணந்தின்னு
மாறுபோல் பிடுங்கித் தின்னும்

மோதுபெருங் காற்றினல் முறிந்தெழுந்த
துரும்புபோல் மோக மெய்த
வாதைமனம் பெரும்பாழில் மிகவீழ

அதிதூரம் மலங்கத் தள்ளும்.

உச

௺

## கூச. மனம் 183

1163 மிகமுயன்று வருந்தாமல் சமமா கின்ற
வேண்டுகொளால் தன்முயல்வால்

விநோதந் தன்னுல்
பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்
பலபிறப்பில் பரிசயங்க ளகலப் பண்ணி
அகல்சுபவா தனையுதித்தால் முயற்சி பேரும்
ஐயுறினுஞ் சுபமடைவா யதுதீ தல்ல
திகழ்மனம்போய்த் தற்பவத்தைத் தெளியு மட்டும்
தேசிகனுல் சொல்வழியிற் செல்லு வாயே.

உரு

## வைராக்கிய சதகம்

1164 நின்றுரு தலைகுதல் விருப்புனக்
கதைநீத் திருக்குதல் நெஞ்சே
என்ற னக்குநல் விருப்புவா

ளாவிவண் இருத்தல்தீ துயர்வீடு
சென்று காண்குவல் எனநினைந்
தலைதியோ சிவன்திரு சியமன்றால்
ஒன்றும் நீயுறு திருப்பதே யதைத்தொட
ருபாய மென்றறி கண்டாய்.
உகூ

அறநெறிச் சாரம்

1165 பரிந்தெனக்கோர் நன்மை பயப்பாய்போல் நெஞ்சே
அரிந்தென்னை யாற்றவுந் தின்னல்—புரிந்துநீ
வேண்டுவ வேண்டுவேன் அல்லேன் வழுக்குணம்
பூண்டேன் பொறியிலி போ.
உஎ

/ 1166 தன்னைத்தன் னெஞ்சங் கரியாகத் தானடங்கின்
பின்னைத்தா னெய்தா நலனில்லை—தன்னைக்
குடிகெடுக்குந் தீநெஞ்சிற் குற்றேவல் செய்தல்
பிடிபடுக்கப் பட்ட களிறு.
உஅ

1167 உள்ளு ரிருந்துதம் முள்ளமறப் பெற்றாரேற்
கள்ளவிழ் சோலையாங் காட்டுளார் காட்டுள்ளு
முள்ள மறப்பெறு கல்லாரே னூட்டுள்ளு
நண்ணி நடுவூ ருளார்.
உகூ

1168 நின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
யறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற்
றீண்டே
துறக்கந் திறப்பதோர் தாழ்.
கூ0 184 பன்னூல்
பாடற்றிரட்டு

தனிப்பாசுரத் தொகை

1169 வாழிய மனனே மக்கடம் மாட்சியே
ஐம்பொறிப் பரியிவர்ந் திம்பர் நிலத்தின்முன்
உலக மனைத்தினு முலவித் திரிதியால்
புதியன வற்றுட் கதுமெனப் புகுதியால்
இனியவிவ் வுலகி னிருப்பன வாய்வுழி
மனிதனிற் சிறந்த மாண்பொரு ளில்லையம்
மனிதன் தன்னுள் வயங்கு மெவற்றினும்
மனனிற் சிறந்த மாண்பொரு ளும்மிலை
என்று கலைஞர்க ணன்றியம் பினரால்
பயனின் றியங்கலை வியன்மின் விரைவினிற்
சென்று சேர்தியால் துன்றிய துணையே
நின்ன மறவழி நிகழ்த்த லெங்ஙனம்
என்னை நின் விரைவு என்னை நின்
ஆற்றல் என்னுற் சாற்ற லரிதரோ.

கூக

நீதிநூல்

1170 ஏதிலார் பொருளுக்கி யிச்சையுறல்

கவர்ந்ததொப்பா மெழின்மின் ஞுரைக்
காதலாய் நோக்குதலே கலந்ததொப்பாம்
பிறர்கேட்டைக் கருத லன்ஞர்
வேதையுறக் கொன்றதொப்பா மிவ்வாருேர்
பயனின்றி மேவும் பாவம்
ஆதலினம் பொறிவழியே மனஞ்செலா
தடக்குவா ரறிவு ளோரே.

கஉ

## கரு. தவம்

### கந்த புராணம்

1171 உடம்பினை யொறுத்து நோற்பார் உலகெலாம் வியப்ப வாழ்வர்

அடைந்தவர்க் காப்ப ரல்லார்க் கழிவுசெய் திடுவர் வெஃகும்

நெடும்பொருள் பலவுங் கொள்வர் நித்தரா யுறைவ ரீது

திடம்பட வுமக்கோர் காதை செப்புவ னென்று சொல்வான். க 1172 ஆக்கமுந் திறலுஞ் சீரும் ஆயுவும் நலனும் மேலாய்

ஊக்கமும் வீடு மெல்லாம் தவத்தின தூக்க மன்ருே

நோக்குறு மிந்நாள் காறும் நோற்கலா தினைய வெல்லாம்

போக்குவ தென்னை கொல்லோ புகலுதி யிகலும் வேலோய். உ

1173 ஆற்றலை யுளதுமா தவம தன்றியே
வீற்றுமொன் றுளதென விளம்ப லாகுமோ
சாற்றருஞ் சிவகதி தனையு நல்குமாற்
போற்றிடி னனையதே போற்றல் வேண்டுமால்.

௩ 1174 அத்தவம் பிறவியை யகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை யாக்குறும்
இத்துணை யன்றியே யிம்மை யின்பமும்
உய்த்திடு முளந்தனி லுன்னுந் தன்மையே.

௪

1175 ஆதலிற் பற்பக லருமை யாற்புரி
மாதவ மிம்மையு மறுமை யுந்தரும்
ஏதுவ தாகுமா லிருமை யும்பெறல்
ஆதியம் பகவன தருளின் வண்ணமே.

௫ 1176 ஒருமைகொண் மாதவ முழந்து பின்முறை
அருமைகொள் வீடுபே றடைந்து ளோர்சிலர்
திருமைகொ ளின்பினிற் சேர்கின் றோர்சில
ரிருமையு மொருவரே யெய்தி னோர்சிலர்.

௬ 1177 ஆற்றலிற் றம்முட லலசப் பற்பகல்
நோற்றவ ரல்லரோ நுவலல் வேண்டுமோ

தேற்றுகி லீர்கொலா தேவ ராகியே
மேற்றிகழ் பதந்தொறு மேவுற் றோரெலாம்.
எ

1178 பத்திமை நெறியொடு பயிற்றி மாதவ
முத்திபெற் றரனடி முன்னுற் றோர்தமை
யித்துணை யெனலரி திருமை யும்பெறு
மெய்த்தவர் மாலொடு விரிஞ்ச னாதியோர்.
அ



1179 பல்லுயிர் தன்னையு மாய்த்துப் பாரினுக்
கல்லல்செய் தருந்தவ மாற்றி டாதவர்க்
கில்லையே யிருமையு மின்ப மாங்கவர்
சொல்லரும் பிறவியுட் டுன்பத் தாழ்குவார்.
கூ

1180 தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானு மில்லையாற்
றவந்தனி னரியதொன் றில்லை சாற்றிடிற்
றவந்தனக் கொப்பது தவம தாகுமே.
க௦

1181 மெய்யுற் றிடவே முயலுந் தவத்தினன்றிப்
பொய்யுற்ற வில்லொழுக்கம் பூண்டுவினை போக்குவது
மெய்யுற் றிடுதுகளை மிக்க புனலிருக்கச்
செய்யுற்சின் னீரிடத்துத் தீர்க்குஞ் செயலன்றே. கக

1182 ஆடல்வே லெறிதலோடு மாமிர வடிவா யண்ட
கூடமு மளைத்த கள்வ னரற்றெடு குறைந்து வீழ்ந்தும்
வீடில னென்ப மன்னோ மேலைநாள் வரத்தி னென்றற்
பீடுறு தவமே யன்றி வலியது பிறிதொன் றுண்டோ. கஉ

## காஞ்சிப் புராணம்

1183 தவமே மேலா நெறியாகுந் தவமே சிவனார் தமைக்காட்டுந்
தவமே துறக்க மடைவிக்குந் தவமே நரனைத் தேவாக்குந்
தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்க னயனு மாக்குவிக்குந்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ வென்று
சாற்றினனல். கங

## சேது புராணம்

1184 விஞ்சிய விசுவா மித்திர னலே

யஞ்சொ லரம்பை யருஞ்சிலை யானுள்
தஞ்சென நீடு தவத்தவர் தம்பால்
வஞ்ச மிழைத்தெவர் வாழ்ந்தவர் மண்மேல்.
கச

திருக்கூவப் புராணம்

1185 எவ்வகைப் பொருள்களு மீய வல்லது
செவ்விய தவமதே தெரியின் வேறிலை
இவ்வுல கத்திலக் ஷ்மி தியற்று கின்றதே
உவ்வுட லெடுத்தபே ருறுதி யென்பவே.
கரு

1186 தவத்தினி லமர்புரி சமனை வெல்லலாந்
தவத்தினி லெழுகட றமையு முண்ணலாந்
தவத்தினில் வடவரை களைந்து தாங்கலாந்
தவத்தினி லனலமுந் தரிக்க லாகுமே.

கசு கூ ரு. தவம்
187

திருமந்திரம்

1187 தன்னை யறியாது தானல்லா ரென்னுதிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யு நீரே.
கஎ 1188 இருந்து வருந்தி யெழிற்றவஞ் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
இருந்திந் திரனே யேவரே வரினுந்
திருந்துதஞ் சிந்தை சிவனவன் பாலே.

கஅ 1189 கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்
தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி
வாடித் தவஞ்செய்வ தேதவம் இவைகளந்
தூடிற் பலவுல கோரெத் தவரே.
கசு

பட்டினத்தடிகள்

1190 மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவரும்
காடும் மலையும் புக்குக் கோடையில்
கைம்மேல் நிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பி னழுவத்து நின்றும்
மாரி நாளினும் வார்பனி நாளினும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்
சடையைப் புனைந்தும் தலையைப் பறித்தும்
உடையைத் துறந்தும் உண்ணா துழன்றும்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன வருந்தியும்
களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும்
தளர்வுறும் யாக்கையைத் தளர்வித் தாங்கவர்
அம்மை முத்தி யடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவு மொறுப்பர்.

புறநானூறு

1191 பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே

வையமுந் தவமுந் தூக்கிற் றவத்திற்
கையவி யணைத்து மாற்றா தாதலிற்
கைவிட் டனரே காதல ரதனால்
விட்டோரை விடாஅ டிருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.

௨௰

சிந்தாமணி

1192

நஞ்சு குடித்தாலும் நவையின்று தவம்நின்றால்
அஞ்சி யொளித்தாலு மரணில்லை தவமுலந்தால்
குஞ்சரத்தின் கோட்டிடையு முய்வர் தவமிக்கார்

அஞ்ச லிலரென்று மறனே களைக ணென்பார்.

௨௨

1193 நற்றவம் பரவை ஞாலம்
நாமுடன் நிறுப்பின் வையம்
அற்றமில் தவத்திற் கென்றும்
ஐயவி யனைத்து மாற்றா
திற்றென வுணர்ந்து நிற்பின்
திருமக ளென்றும் நீங்காள்
பற்றொடே நிற்பி னென்றுந்
திருமகள் பற்றல் செல்லாள்.

௨௩

1194 ஆற்றிய மக்க ளென்னும்
அருந்தவம் இலார்க ளாகின்

போற்றிய மணியும் பொன்னும்
பின்செலா பொன்ன னீரே
வேற்றுவர் என்று நில்லா
விழுப்பொருள் பரவை ஞாலம்
நோற்பவர்க் குரிய வாகும்
நோன்மினம் நீரு மென்றான்.

௨௪

1195 ஒன்றாய வூக்கவேர் பூட்டி யாக்கைச் செறுவுழுது
நன்றாய்ந்த நல்விரதச் செந்நெல் வித்தி யொழுக்கநீர்
குன்றாமற் றாங்கொடுத்தைம் பொறியின்வேலி காத்தோம்பின்
வென்றார்தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோ ருலகீன்றே.

௨௫

## வளையாபதி

1196 தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கல தரிதே
மயக்க நீங்குதல் மனமொழி யொடுமெயிற் செறிதல்
உவத்தல் காய்தலொ டிலாதுபல் வகையுயிர்க் கருளை
நயத்து நீங்குதல் பொருடனை யனையது மறிநீ. உசு

1197 பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற வருந்தவஞ் செய்ம்மின்
இருளில் கதிச்சென் றினியிவண் வாரீர்
தெருள லுறினுந் தெருண்மி னதுவே. உஎ



1198 உய்த்தொன்றி யேர்தந் துழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குற லென்னொக்கும்
மெய்த்தவ மில்லான் பொருளொடு போகங்கட்
கெய்த்துழந் தேதா னிடர்ப்படு மாறே.
உஅ

## சூளாமணி

1199 பிறந்தனர் பிறந்து சாலப் பெருகினர் பெருகிப் பின்னை
யிறந்தன ரென்பதல்லா லியாவரு மின்று காறும்
மறைந்துயிர் வாழா நின்றா ரில்லையால் வாழி நெஞ்சே
சிறந்தது தவத்தின் மிக்க தின்மையே சிந்தி கண்டாய். உகூ

1200 தவஞ் செய்து வந்தார் தவநிலை நிற்பார்
அவஞ் செய்து வந்தார்க் கரிது பெரிது
பவஞ் செய்து மாக்கள் பரியு மதுதான்
எவன் செய்து மென்னை யீர்மலர்த் தாரோய்.

க௦

இராமாயணம்

1201 இறந்ததோ ருயிருடன் கருமத் தீட்டினுற்
பிறந்துள தாமெனப் பெயர்த்து மத்தலை
மறந்தில தெழுந்தது மடித்த வாயது
சிறந்தது தவமலாற் செயலுண் டாகுமோ.

1202 ஈட்டுவார் தவம லால்மற்
றீட்டினு லியைவ தின்மை
காட்டினுர் விதியா ரஃது
காண்கிற்பார் காண்மி னம்மா
பூட்டுவார் முலைபொ ருத
பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர்
ஆடுவா ரரக்கர் மாதர்.

1203 தேவ ரென்பவர் யாருமித் திருநகர்க் கிறைவற்
கேவல் செய்கிலா ரேவரே யெண்வகை
யுருவின்
மூவர் தம்மினு மதிகனென் றுலவன் முயலும்
தாவில் மாதவ மல்லது பிறிதொன்று தருமோ.

1204 தத்தமக்குக் கொண்ட குறியோ தவமல்ல
செத்துக சாந்து படுக்கமன—மொத்துச்
சமத்தனாய் நின்றொழுகுஞ் சால்பு தவமே
நுகத்துப் பகலாணி போன்று.



## திரிகடுகம்

1205 தூய்மை யுடைமை துணிவாந் தொழிலகற்றும்
வாய்மை யுடைமை வனப்பாகும்—தீமை
மனத்தினும் வாயினுஞ் சொல்லாமை மூன்றுந்
தவத்திற் றருக்கினர் கோள்.

## நாலடியார்

1206 ஊக்கித்தாங் கொண்ட விரதங்க
ளுள்ளுடையத்
தாக்கருந் துன்பங்கள் தாந்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்குந் திருவத் தவர்.

௧௬

1207 விளக்குப் புகவிருள் மாய்ந்தாங் கொருவன்
தவத்தின்முன் னில்லாதாம்
பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு
நல்வினை
தீர்விடத்து நிற்குமாந் தீது.

௧௭

## ஏலாதி

1208 அழப்போகான் அஞ்சான் அலறினாற்
கேளான்
எழப்போகான் ஈடற்று
ரென்னுன்—தொழப்போகான்
என்னேயிக் காலனெ டேற்பார் தவமுயலார்
கொன்னே யிருத்தல் குறை.

௧௮

## சிறுபஞ்சமூலம்

1209 உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட்செய்
யாமை—செயிர்நோய்

விழைவு வெகுளி யிவைவிடுவா ஞயி
னிழவன் றினிது தவம்.

௩௯

## அறநெறிச்சாரம்

1210 உடம்புங் கிளையும் பொருளும் பிறவுந்
தொடர்ந்துபின் செல்லாமை
தவத்தொடு தானம் புரியாது

கண்டு—மடங்கித்
வாழ்வார்
அவத்தங் கழிகின்ற நாள்.

௪0

## புறப்பொருள் வெண்பா மாலை

1211 நீர்பலகான்மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார்
கானகத்தே கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி. ௪௧



## திருக்குறள்

1212 உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண்
செய்யாமை
அற்றே தவத்திற் குரு.
௪௨ 1213 வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்
செய்தவம்

மீண்டு முயலப் படும்.

சரு 1214 தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு.

சச 1215 சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

சரு 1216 கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

சசு
1217 இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

சஎ

---

## கூசு. வாய்மை

காஞ்சிப் புராணம்

1218 மெய்யே சிறந்த பெருநலமா மெய்யே யெவையு நிலைநிறுத்தும்
மெய்யா லழல்கால் கதிர்பிறவுந் தத்தந் தொழிலின் விலகாவாம்
மெய்யே யெவைக்கும் இருப்பிடமாம் மெய்யே மெய்யே சிவமாகும்

மெய்யே பிரம பதமுமெனப் புகன்றான் வினைதீர் காசிபனே. க

## திருக்கூவப் புராணம்

1219

உவமந் தீர்ந்தடு வாய்மையொன் றேயுறி னுலகில்
தவமுந் தானமு மொருங்குறச் செய்தலிற் றலையாய்ப்
பவம கன்று நான் மறைமுடி வாகிய பரம
சிவன ரும்பதம் பெறும்படி யுயர்த்திடுந் தெரியின். உ

1220 மன்ன னாகியிவ் வுலகெலாம் புரந்திட வரினும்
இன்ன ருனுழந் துடலம்விட் டிறந்திட வரினும்
பன்னும் வாய்மையிற் பிறழ்ந்திடா தொழிகவிப் பவம்போய்
மின்னு லாஞ்சடை யெம்பிரான் பதம்புக வேண்டின். ங

## திருப்பரங்கிரிப் புராணம்

1221 மெய்யை யகன்று தனக்குறுதி விரும்புந் துணைவர் வேறில்லை
மெய்யைக் கெடுத்து நாடோறும் விளக்குந் தருமம் வேறில்லை
மெய்யைத் தவிர்ந்து புவிசூழ்ந்து மெலிந்து

தேடு நிதியில்லை
மெய்யை யகற்றி யுடல்வருந்தி விதிக்குந்
தவங்கள் வேறில்லை.
ல
1222 பகர்சத் தியத்தை விட்டுண்மை படுத்துங்
கேள்வி யாதுநலந்
தொகுசத் தியத்தை விட்டுழன்று தோயும்
புனித நீர்யாது
தகுசத் தியத்தை விட்டுநின்று தழலை வளர்க்கு
மகமியாது
திகழ்சத் தியத்தை விட்டவர்க்குத்தெரிசற்
குணங்கள் யாதுமன்று.
ரு
## காசி ரகசியம்
1223 மறைமுழு துணர்ந்தா ரேனு மகம்பல புரிந்தா
ரேனுங்
குறைவறு தான மெல்லாங் கொடுத்தறங்
கூர்ந்தா ரேனும்
நிறைபெருந் தீர்த்த மெல்லா
நிரம்புறத் துளைந்தா ரேனுங்
கீறையுறு மொருபொய்
கூறிற் கடுநர கழுந்து வாரே. ச : நடசு.

1224 பொருளுலோ பத்தி னலும் புரிதரு விஞதைத் தானும்
மருடப் வுயிரை யோம்பி வாழுதற் பொருட்டி னும்
இருளுறு மொருபொய் கூறி னெடுத்திடு பவங்க டோறுந்
தெருடப வந்து பற்றிச் செயிர்மிக விளையா நிற்கும். எ

1225 பொய்ம்மையே பாவ மெல்லாம் விளைதரு பூமி யாகும்
பொய்ம்மையே பிறவி யெல்லாம் புகப்புரி வித்து மாகும்
பொய்ம்மையே வறுமை யெல்லாம் போதரப் புரிவ தாகும்
பொய்ம்மையே நரக மெல்லாம் புகுதரப் புகுத்தா நிற்கும். அ

1226 ஏனை நல் லொழுக்க முற்ற இருப்பினு மின்மை செய்யும்
ஊனமில் வீன்ருண் மாட்டு மருவருப் பொருங்கு செய்யும்
மானமிக் கவராஞ் சான்றோர் மருங்குநான் புகல்வ தென்னே
ஈனமார் பொய்ம்மை கூற லெற்றைக்கும் பொல்லா தாகும். க

1227 பொய்யுளான் மறந்தோர் மெய்ம்மை புகலினும் பொய்ம்மை

உய்யுமா றென்று மில்லை யுறுதியென் பதுஞ்சா ராது [யாகும்

கொய்யுமா மலர்ப்பூஞ் சோலை சூழ்குவ லயத்து நாளும்

நையுமா றெதுசெய் தாலும் பொய்நவி லாமை வேண்டும். ௧௦

1228 கூற்றுவன் றண்ட மில்லைக் கோள்செயும் தீமை யில்லை

மாற்றரு மசனி தீய வளிமழை யராக்கள் செய்யுஞ்

சாற்றரும் வருத்த மில்லை தரித்திரஞ் சற்று மில்லை

யேற்றமார் மெய்யே கூறிப் பொய்யினை யிரித்து ளார்க்கே. ௧௧

1229 எடுத்தசன் மத்து மேன்மை யெவ்வள விருந்த போதுங்

கடுத்தவை மாற்ற லன்றிக் கழிந்தசன் மத்துஞ் செய்ய

விடுத்தபுண் ணியங்க ளெல்லா மழித்திடும் பொய்ம்மை யென்னில்

தொடுத்தமேற் பிறப்பி னூற்றுந் தொழிலினை யுரைப்ப தென்னே.

௧௨

கூர்மபுராணம்

1230 துறந்தோர் பொய்ம்மை யுரைத்திடுதல்

தீது தோமில் மாயையினுல்
மறந்தோர் பொய்ம்மை யுரைத்தாரேல்
வருந்தி யொருநாள் உண்டியொழிந்
தறங்கூர் பிராணு யாமமொரு
நூருற்றிடுக கள்ளுநரேல்
சிறந்த சாந்தி ராயணமோர்
வருடஞ் செய்ய வேண்டுமால்.

கக

பிரமோத்தர காண்டம்

1231 வாய்மை தப்பி ஞர்க ளிந்த மானி லத்தி லீனராய்த்
தீமை யுற்று மேலு ளோர்ப ழிக்கவே திரிந்துபின்





தூய்மை யற்ற கும்பி யுட்டுளைந்த ழுங்கு வாரெனு
வாய்மனுப் பகர்ந்த வேத சாகை முற்று மறையுமே. கஉ

திருமந்திரம்

1232 செய்தா னறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள்
மெய்தா னுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வான்

மைதாழ்ந் திலங்கு மிடறுடை யானே.

கசு

## சிந்தாமணி

1233 மெய்யுரை விளங்குமணி மேலுலக கோபுரங்கள்
ஐயமிலை நின்றபுகழ் வையகத்து மன்னும்
மையல்விளை மாநகர கோபுரங்கள் கண்டீர்
பொய்யுரையும் வேண்டா புறத்திடுமி
னென்றான். கசு 1234 மலங்கிமதி யின்றியயர்
வெய்திமயல் கூர
நலங்கியறி யாதுதுய ரெய்திநனி வாடும்
விலங்குறு கடுந்துயர் விலங்குதல் விரும்பிற்
புலன்கொள்வழி பொய்யுரை புறத்திடுமி னென்றான்.

கஎ

## சிலப்பதிகாரம்

1235 வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள்.

கஅ

## வளையாபதி

1236 பொய்யி னீங்குமின் பொய்யின்மை
பூண்டுகொண்
டைய மின்றி யறநெறி யாற்றுமின்
வைகல் வேதனை வந்துற லொன்றின்றிக்
கவ்வை யில்லுல கெய்துதல் கண்டதே.

கசு 1237 கல்வி யின்மையுங் கைப்பொருள்

போகலும்

நல்வில் செல்லல்க ளானலி வுண்மையும்
பொய்யில் பொய்யொடு கூடுதற் காகுதல்
ஐய மில்லை யதுகடிந் தோம்புமின்.

உ௦

இராமாயணம்

1238 வாய்மை யென்னுமீ தன்றி வையகந்

தூய்மை யென்றுமொன் றுண்மை சொல்லுமோ

தீய்மை தானதிற் றீர்த லன்றியே
'யாய்மெ யாகவே றறைய லாவதே.

உக



வில்லிபாரதம்

1239 அண்ணிய கிளையு மில்லு மரும்பெரு மகவு மன்புந்
திண்ணிய சீரு மிக்க செல்வமுந் திறலுந் தேசும்
எண்ணிய பொருள்கள் யாவு மியற்றிய தவமு மேனைப்
புண்ணிய மனைத்துஞ் சேரப் பொய்ம்மையாற்

பொன்று மன்றே.

உஉ

1240 உம்மையின் மறுமை தன்னி லுறுபய னிரண்டும் பார்க்கின்
இம்மையில் விளங்கும் யார்க்கு மவரவ ரியற்கை யாலே
மெய்ம்மையே யொருவர்க் குற்ற விபத்தினை மீட்கு மாயிற்
பொய்ம்மையு மெய்ம்மை போலப் புண்ணியம் பயக்கு மன்றே.

உ௩

## அரிச்சந்திர சரிதை

1241 சேய்மை யண்மையி லுயிர்க்கொரு துணையெனச் சிறந்த
வாய்மை யாலகந் தூய்மையா மற்றிலை புறத்தைத்
தூய்மை செய்வது நீரலாற் சொல்லின் வே றுளதோ
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெனக் கருதி. உ௪

1242 புலைய னும்விரும் பாதவிப் புன்புலால் யாக்கை
நிலையெ னுமருண் டுயிரினு நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேங்
கலையு ணர்ந்தநீ யெமக்கிது கழறுவ தழகோ.

உ௬

1243 இம்மை யம்மைவீ டெனமறை புலங்கொள வியம்பும்
மும்மை யுந்தரு முறையுடைத் தெனுநிலை முரணி
யெம்மை யாழ்வயிற் றடக்கிமீட் டுமிழ்கலா வெரிவாய்
வெம்மை கூர்நர குய்க்கினு மெய்ம்மையை விடேமால். உக

நாலடியார்

1244 தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பின்
ஊன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

உஎ

சிறுபஞ்சமூலம்

1245 இம்மை நலனழிக்கு மெச்சங் குறைபடுக்கும்
அம்மை யருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை
யறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய்.

உஅ

நீதிவெண்பா

1246 நீசனே நீச னிணையுங்காற் சொற்றவறும்

நீசனே நீச னவனேயே—நீசப்
புலையனு மென்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனு மென்றே புகல்.

உ௩

1247 சத்தியமெக் காலுஞ் சனவிருத்த மாகுமே
எத்தியபொய் யார்க்கும் இதமாகும்—நத்தியபால்
வீடுதொறுஞ் சென்று விலையா மதுவிருந்த
வீடுதனி லேவிலையா மே.

௩௦

தனிப்பாடல் (நீலகேசிப்பாயிர வுரை
மேற்கோள்) 1248 அற்றன் றுத லதுதான்
மனஞ்செய்தல்
சொற்றன் மாட்டு நிகழ்த்தல் பிறனேர்த்தன்
மற்றித் தன்மை படுமாயின் மாண்பிலாக்
குற்றப் பொய்யென் றுரைப்பர் குணமிலார்.

௩௯

தருமதீபிகை

1249 உள்ளத்தைக் கொன்றுன் னுயர்நாவைப்

பாழ்படுத்தி எள்ளப் படுபொய்
இயம்புகின்றாய்—கள்ளத்தே இட்ட வழியும் இருநாள்
கழியுமுன்னே

வெட்ட வெளியாய் விடும்.

கஉ

1250 பொய்யொன்று சொல்லப் புகுவீர் புகுமுன்னே
ஐயோநீ ரொன்றை யறிமினோ—வையமெங்கும்
கண்ணுடையான் நேர்நின்று காண்கின்றான்
நீர்துணிந்த எண்ணம்பி னென்னு மிடர்.

கக

## தனிப்பாசுரத் தொகை

1251 வாய்மையே சிறப்பொடு மாட்சிசேர் குணனே
மேற்கோ ளெவற்றினும் மேற்படு மியல்பே
உள்ளது சொல்லலா முண்மையே சிறிதும்
வேறுபா டுரையா மெய்ம்மையே மாந்தர்தம்
ஒவ்வோ ருறுப்பு மோரணி கலனே
வெவ்வே றாகச் செவ்வே யுடைத்து
கண்ணும் வாயு நண்ணுங்கொ லணிகலன்
கண்ணிற் கணிகலன் கண்ணோட்ட மென்ப
வாயினுக் கருங்கலம் வாய்மையே யென்ப
அறமெனுங் கடவு ளணிதரு முடியே

கஎ. வாய்மை



பிறவுயிர் தமக்குப் பெட்பொடு நன்மை
விளைத்தற் கோவினின் னளத்தல் நேரிதோ

என்னணம் பொய்மெயாத் துன்னும்
நன்றுந் தீது•மொன்றலில வாகவே.
கூ௲

நீதி நூல்

1252 முன்னமோர் பொய்யுரைக்க வப்பொய்வெளி

யாகாமல் மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க வதையுநிலை
நிறுத்தவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவமொன் றிருநூறு
கைதவத்துக் கிடமாம் வாய்மை
தன்னையே முன்பகரிற் சங்கடமொன்
றிலையதுவே தகைமை நெஞ்சே.

கூ௩ 1253 இழுதைசொல்லி மறைக்கலா
மெனுந்திடத்தால்
பாதகங்க ளெல்லாந் தீயர்
பொழுதெலாம் புரிதலாற் குற்றங்கள்
யாவுக்கும் பொய்பி தாவாம்
வழுதொன்றை நீக்கிடிற்றீ வினைகளெலாம்
நீங்கிடுநல் வாய்மை யொன்றே
முழுதுமுண ரறிஞர்க்குத் தோழனு
மவர்க்கதனுல் மோச முண்டோ.

கூ௪ 1254 அங்கதமே பொருளென்னக்
கைக்கொண்டோர்
மறந்தொருமெய் யறைந்திட் டாலும்
இங்கிதனை யெவருநம்பார் துணவியர்புத்

திரர்தமரும் இகழ்ச்சி செய்வார்
அங்கணுல கெங்கணுமே வசையாகு
நரரெலா மகித ராவார்
பங்கமுறும் பொய்யரைப்பொய் யருஞ்சேரார்
தம்முளமும் பழிக்கு மன்றே.

கூஎ 1255 ஏதேனும் பயன்வேண்டிப் பொய்சொல்லின்
அப்பொய்தா னெவ்வி தத்தும்
மாதரையில் வெளியாகும் அப்பொழுதப்
பயனழியும் வளருந் துன்பம்
சாதலின்மை வேண்டிவிட முண்ணலொக்கும்
பலன்கருதிச் சலமு ரைத்தல்
ஆதலினால் உண்மைதனைத் துணைக்கொள்ளின்
எப்பயனு மடைவோம் நெஞ்சே.

கூஅ

"மொன்ற லிலவே" என இருத்தல் வேண்டும்.



1256 மெய்யரெனப் பெயர்பூண்டார் வறிஞரே
யெனினுநிதி மிகவு மன்னர்
கையதனிற் கொடுத்துவைக்க எவருமஞ்சார்

பொய்யரெனக் கவ்வை பூண்டார்
செய்யபொருள் மிகவுளா ரெனினுமவர்
கையிலொரு செல்லாக் காசும்
அய்யமின்றி யொருவர்கொடா ரெனிற்படிறின்
தன்மைதனை யறைவ தென்னே.

௧௯

1257 பாரினிற்பொய்த் திடல்பொய்க்க
வுன்னுதல்பொய்
யினைப்பிறர்க்குப் பயிற்றல் யாதோர்
காரியஞ்செய் வேனென்னச் சொலித்தவிர்தல்
தனக்கேலாக் கருமந் தன்னை
வீரியமாய்ச் செய்வனென லற்பரையே
துதித்தல் பொய்யை வியந்து கொள்ளல்

சீரியரை யிகழ்தல்பிறர் மீதொருவன்
சொலும்பழியைச் செவியிற் கோடல்.

௨௦

1258 தற்புகழ்தல் புறங்கூறன் மிகவிருணம்
வாங்குதல் பொய்ச் சான்றுரைத்தல்
பற்பலவாக் கட்சாடை சிரகரகம்
பிதஞ்செய்து பசுமை பொய்போற்
பிற்பயன்றேன் றிடச்செய்தல் மெய்யுரைக்க
வஞ்சிவாய் பேசி டாமல்
சற்பனையா யிருத்தல்பொய்க் கதைகூறல்
கேட்டலெலாஞ் சலங்க ளாமே.

௨௧

1259 தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

௬௦

1260 உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

௬௧

1261 பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

௬௨

1262 புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

௬௩

1263 யாமெய்யாக் கண்டவற்று
ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

௬௪

---

## ௩௭. நிலையாமை

### கந்த புராணம்

1264 கலைபடு முணர்ச்சியுங் கற்பும் வீரமும்

மலைபடு வெறுக்கையும் வலியு மற்றதும்
அலைபடு புற்புத மாகு மன்னவை
நிலைபடு பொருளென நினைக்க லாகுமோ.
௪

## தேவாரம்

1265 தந்தையார் தாயா ருடன்பி றந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
வந்தவா றெங்ஙனே போமா றேதோ
மாயமா மிதற்கேது மகிழ வேண்டா
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
திகழ்மதியும் வாளரவுந் திளைக்குஞ்
சென்னி
எந்தையார் திருநாம நமச்சி வாய
என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்க
லாமே. ௨
1266 இன்றுளார் நாளை யில்லை யெனும்பொருள்
ஒன்று மோரா துழிதரு மூமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்டனூர் காட்டுப் பள்ளிகண் டுய்ம்மினே.
௩

## திருமந்திரம்

1267 அடப்பண்ணி வைத்தார் அடிசிலை யுண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேயிறை நொந்தது வென்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.
௪

## சிவஞானசித்தியார்

1268 கருவினு ளழிவ தாயுங் கழிந்திடா தழிவ
தாயும்
பரிணமித் தழிவ தாயும் பாலனு யழிவ தாயும்
தருணனு யழிவ தாயும் தானரைத் தழிவ
தாயும்
உருவமே யழிவே யானுல் உள்ளபோ தேபார்
உய்ய.

## சிவபோகசாரம்

1269 அநித்தியத்தை நித்தியமென் றுதரிக்கும்
பொல்லா
மனித்தருடன் கூடி மருவார்—தனித்திருந்து



மோனந்த மாஞ்சிவத்துள் மூழ்கி மலத்தையறுத் தானந்த
மாயழுந்து வார்.

## சிவ—குறுந்திரட்டு

1270 பாலனும் பருவ மாயும் பன்னிய குமார மாயுங்
கோலயவ் வனமு மாயுங் குலவிய நலமு மாயும்
வாலிய செல்வ மாயும் வலியுட னனைத்து மாயுஞ்
சாலவே நிலைஞா லத்துத் தானிலை யாமை
யன்றே. எ 1271 தேடிய செல்வ மாயுஞ்
சிறந்திடுங் கல்வி மாயும்

நாடிய வீர மாயு நலந்திகழ் குணமு மாயுங்
கூடிய சுற்ற மாயுங் கொண்டாடு மனைத்து மாயும்
நீடிய ஞால மெல்லா நிலையாமை மயமே யன்றே.

1272 இந்திரன் செல்வ மாயு மிமையவர் பதங்கண் மாயும்
மந்தரம் பொடியாய் வீழ மறிகடல் வறள தாகுஞ்
சந்திர னிரவி மாண்டு தரையது மழியு மென்று
லிந்தநீர்க் குமிழி யாக்கை யியல்பினை யிசைத்தற் குண்டோ.

க

பட்டினத்தடிகள் பாடல்

1273 மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந் தன் வாசல்மட்டே
இனமான சுற்ற மயான மட் டேவழிக் கேது துணை
தினையா மளவெள் ளளவா கினுமுன்பு செய்த தவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே. கo 1274 அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந்த ருஞ்சுடு காடுமட்டே

பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய
பாவங்களே. ௧௧
1275 நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்பு
பொம்மல்
ஆட்டமென் றேயிரு பொல்லா வுடலை யடர்ந்த
சந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக்
குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப
தேசமிதே. ௧௨ 1276 மையாடு கண்ணியு
மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
ஐயா நின் மாயை யுருவெளித் தோற்ற
மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல
வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப்
போனதுவே. ௧௩
1277 அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோபங்க யன்வகுத்த

௩௭. நிலையாமை
201

குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்

தடியா லடியுண்ட வாரெருக்கு மென்றினஞ் சார்ந்திலரே. ௧௪

1278 மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று
மகிழ்வதெல்லாம் கேடுண் டெனும்படி கேட்டுவிட்
டோமினிக் கேண்மனமே ஓடுண்டு கந்தையுண் டுள்ளே
யெழுத்தைந்து மோதவுண்டு தோடுண்ட கண்ட
னடியார் நமக்குத் துணையுமுண்டே. ௧௫

1279 ஊருஞ்
சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற பேருஞ்
சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ் சீருஞ்
சதமல்ல செல்வஞ் சதமல்ல தேயத்திலே யாருஞ்
சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே. ௧௬

## தாயுமானவர் பாடல்

1280 தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்ட மிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனை யுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரசா லக்கோலம்
வஞ்சனைபொ றாமை லோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனையி லாத கனவே
எந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லா விடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவு மூழ்கிச்

சிந்தைதான் றெளியாது சுழலும்வகை
யென்கொலோ
தேடரிய சத்தா கியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே.
கள 1281 தினமே செலச்செல வாழ்நாளு
நீங்கச் செகத்திருள்சொப்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும்
பாசபந்த
இனமே துணையென் றிருந்தோ நமன்வரி
னென்செய்குவோ
மனமேநம் போலவுண் டோசுத்த மூடரிவ்
வையகத்தே. கஅ
ஞானவாசிட்டம்
1282 நிதியுமர சுஞ்செயலு மிவ்வுடம்பும்
வேண்டுவன நிற்கினன்றே
• விதியில் வருகாலனுற் சிலநாளி
லிவையெலாம் வீந்துபோகும்

உதிரமொடு தசையுடைத்தா யுடைவதியல்
பாய்த்தாழ்ந்தோ ருயர்ந்தோ ரொத்தே
யதிகசரா மரணமுறுந் தரமறியா
திவ்வுடலி லழகென் கொல்லோ.
கக 1283 மண்ணுடு மன்னவரு மவர்தனமு

மாண்டனநுண் மணலை யொக்கும்
விண்ணுடு மிந்திரரு மவர்வாழ்வும்
போயினவிண் மீனை யொக்கும்
எண்ணுடும் பிரமருமண் டமும்பூதங்
களுமிறந்த வெல்லை யில்லை
கண்ணுடு மவையெங்கே நின்வாழ்க்கை
நிலையென்னே கவலு நெஞ்சே.

உ௦ சீவகசிந்தாமணி

1284 மன்னுநீர் மொக்கு ளொக்கு மானிட ரிளமை யின்பம் மின்னினுந் திறக்குஞ் செல்வம் வெயிலுறு பனியி னீங்கும் இன்னிசை யிரங்கு நல்யா ழிளியினு மினிய சொல்லாய் அன்னதால் வினையி னாக்க மழுங்குதற் கென்னை யென்றான்.

உ௧

சிலப்பதிகாரம்

1285 கடற்கடம் பெறிந்த காவல னாயினும்
விடற்சிலை பொறித்த விறலோ னாயினும்
நான்மறை யாளன் செய்யுட் கொண்டு
மேனிலை யுலகம் விடுத்தோ னாயினும்
போற்றி மன்னுயிர் முறையிற் கொள்கெனக்
கூற்று வரைநிறுத்த கொற்றவ னாயினும்
வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்
இகற்பெருந் தானையோ டிருஞ்செரு வோட்டி
அகப்பா வெறிந்த வருந்திற லாயினும்
உருகெழு மரபி னயிரை மண்ணி
இருகட னீரு மாடினோ னாயினுஞ்

சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ ஞயினு
மீக்கூற் ருளர் யாவரு மின்மையின்
யாக்கை நில்லா தென்பதை யுணர்ந்தோய்
மல்லன்மா ஞாலத்து வாழ்வோர் மருங்கிற்
செல்வ நில்லா தென்பதை வெல்போர்த்
தண்டமி ழிகழ்ந்த வாரிய மன்னரிற்



கண்டனை யல்லையோ காவல் வேந்தே
யிளமை நில்லா தென்பதை யெடுத்தீங்

குணர்வுடை மாக்க ளுரைக்கல் வேண்டா
திருஞெமி ரகலத்துச் செங்கோல் வேந்தே
நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் மறிக்கினு மறிக்கும்
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்

மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்
விலங்கின் யாக்கை விலங்கிய வின்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்
ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின் றியலாது

செய்வினை வழித்தா யுயிர்செலு மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை யாதலின்.
உஉ

வளையாபதி

1286 இளமையு நிலையாவா லின்பமு நின்ற வல்ல
வளமையு மஃதேயால் வைகலுந் துன்ப
வெள்ளம்
உளவென நினையாதே செல்கதிக் கென்று
மென்றும்
வினை நில முழுவார்ப்போல வித்துநீர் செய்து
கொண்மின்.உங

மணிமேகலை

1287 மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையும்
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்.
உச

சூளாமணி

1288 கொலையானை மேலோர் குளிர்வெண்
குடைக்கீழ்ப்
பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்
மலையாகம் போழாக மற்றிவனே சாய்ந்தான்
நிலையாமை சால நிலைபெற்ற தன்றே.
உரு

பெருந்தேவனார் பாரதம்

1289 பலதிரண்ட செல்வத்தைப் பார்க்கிற் கனவாம்

மலர்திரண்டாற் போலிளமை
வாடுஞ்—சிலநிகழ்ந்த
மின்னெக்கும் வாழ்நா ளிவையிற்றை
மெய்யென்றிட்
டுன்னக் களிப்பா ருளர்.
உக



குசேலோ பாக்கியானம்

1290 சாருறு தந்தை யாருந் தாயரு மனந்தஞ்
சன்ம
ஊருமோ ரனந்தம் வாய்த்த வுறவுமோ
ரனந்தம் பெற்ற
பேருமோ ரனந்தங் கன்மப் பெருக்கமு
மனந்தங் கொண்ட
சீருமோ ரனந்த மின்னுஞ் சேர்வது மனந்த
மாமால். உள

சாந்தி புராணம்

1291 விண்ணி லின்பமும் வீதல் கேட்டுமால்
மண்ணி லின்பமு மாய்தல் காண்டுமால்
எண்ணி லின்பமா மீறி லாததே
நண்ணி நாமினி நயக்கற் பாலதே.
உஅ

மேருமந்தர புராணம்

1292 இளமையு மெழிலும் வானத் திடுவிலி னீண்டை
மாயும்

வளமையுங் கிளையும் வாரி புதியதன் வரவு
போலும்
வெளியிடை விளக்கின் வீயு மாயுவு மென்று
வீட்டுக்
குளபக லூக்கஞ் செய்வ ருணர்வினுற் பெரிய
நீரார். உக

யசோதர காவியம்

1293 வந்துடன் வணங்கும் வானோர் மணிபுனை மகுட
கோடி
தந்திரு வடிக ளேந்துந் தமனியப் பீட மாக
இந்திர விபவம் பெற்ற இமையவ ரிறைவ
ரேனும்
தந்திரு வுருவம் பொன்றத் தளர்ந்தன ரனந்த
மன்றே. கூ௦

நாலடியார்

1294 இல்ல மிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லாம்—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு.

கூஅ

1295 தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு
செல்வதுமற்
றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—யாங்குத்தாம்
போற்றிப் புனைந்த வுடம்பும் பயனின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது.

கூஉ

நான்மணிக்கடிகை

1296 சாவாத வில்லை பிறந்த வுயிரெல்லாந்
தாவாத வில்லை வலிகளும்—மூவா
இளமை யிசைந்தாரு மில்லை வளமையிற்
கேடின்றிச் சென்றாரு மில். கக

கூஎ. நிலையாமை



நீதிநெறி விளக்கம்

1297 நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. க௨

நறுந்தொகை

1298 மணவணி யணிந்த மகளி ராங்கே
பிணவணி யணிந்துதங் கொழுநரைத் தழீஇ
உடுத்த ஆடை கோடி யாக

முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்.
கடு

## ஆசிரியமாலை

1299 நெருந லென்பது சென்றது நின்ற
இன்றுஞ் செல்லா நின்றது முன்சென்று
வருநாள் கண்டார் யாரே யதனால்
ஒருநாள் கைப்படுத் துடையோ ரின்மையின்
நல்லது நாடுமின் உள்ளது கொடுமின்
வழாஅ வின்பமும் புணர்மி னதாஅ அன்று
கீழது நீரகம் புகினு மேலது
விசும்பின் பிடர்த்தலை யேறினும் புடையது
நேமி மால்வரைக் கப்புறம் புகினுங்
கோள் வாய்த்துக் கொட்குங் கூற்றத்து
மீளிக் கொடுநா விலக்குதற் கரிதே.
கசு

## நீதிநூல்

1300 நெருநலோ வகன்றதின்று விடிந்துபக
லாயிற்று நிமிடந் தன்னில்
அருணனே யத்தமிப்பன் நிசிவரும்பின்
போமறுநா ளாமிவ் வண்ணம்
ஒருநாளாப் பலநாளாத் திங்களா
வாண்டுகளா வுருவு கொண்டிங்
கருநாளா மாயுள்நாள் கழிவதனை
யுணராயோ வவல நெஞ்சே.
கஎ

1301 வையாற்செய் புணைநம்பி யனலாழி
கடக்கவுன்னு மதியி லார்போற்
பொய்யாற்செய் மெய்ந்நம்பி யேதேதோ
நினைவுற்ருய் புரைசேர் நெஞ்சே



பையவோர் புட்பிடிக்கக் ககனமிசை
வட்டமிடும் பருந்து போல
ஐயோகூற் றுனேப்பிடிக்க வற்றம்பார்த்
தொளித்துநின்ற தறிகி லாயோ.
கூஅ

1302 தினம்விரே சனங்கொளினு மோயாமல்
மலமாரி திரளாப் பெய்யுங்
கனம்போலுந் தேகமிதைப் பிரித்துநோக்
கிடின்மலநீர் கசியுஞ் செந்நீர்

இனமாலை தோலென்பு தசைநரம்பு
குடரன்றி யினிவே றுண்டோ
மனமேநீ யிதையுமொரு பொருளென்ன
வுன்னவென்ன மருளுற் ருயோ.
கூக

1303 காடுசேர் மரஞ்செடிபார்த் தித்தனைநாள்
நிற்குமெனக் கணிக்க லாஞ்சீர்
நாடுநீர்த் தடநோக்கி யித்தனைநாட்
புனலென்ன நவில லாமோர்

வீடுதா னித்தனை நாள் நிற்குமென

விளம்பலாம் மெய்யென் னும்பொய்க்
கூடுதா னித்தனை நாள் நிற்குமெனப்
புவியிலெவர் கூறற் பாலார்.

1304 நெல்லறுக்க வோர்கால மலர்கொய்ய
வோர்காலம் நெடிய பாரக்
கல்லறுக்க வோர்கால மரமறுக்க
வோர்காலக் கணித முண்டு
வல்லரக்க னனைய நம னினைத்தபோ
தெல்லாம்நம் வாழ்நா ளென்னும்
புல்லறுக்க வருவனெனில் நெஞ்சமே
மற்றினியாம் புகல்வ தென்னே.

1305 முற்றியபின் கனியுதிரும் பழுப்புற்றுத்
தழையுதிரும் முழுது மேநெய்
வற்றியபின் விளக்கவியு மென்னவோர்
திடமுண்டு மக்கள் காயம்

பற்றியவக் கருப்பத்தோ பிறக்கும்போ
தோபாலப் பருவத் தோமுப்
புற்றபின்போ வீழ்வதென நிலையின்றே
லிதன்பெருமை யுரைப்ப தென்னே.

## ௬எ. நிலையாமை

207

1306 பொன்றுநா ளின்னதென நிலையுண்டே
லாழிசூழ் புவியோ ராயுள்
ஒன்றிரண்டு நாளெனினும் போதுநா
ளுண்டென்றோர் உரையுண் டேனும்
இன்றோஇக் கணமோபின் னுறுங்கணமோ
மாலையோ இரவோ சாவ
தென்றோவென் றோருறுதி யில்லாத
ஆயுளிதற் கென்செய் வோமே.

௪௬ 1307 விரியாழி நுண்மணலைத் தாரகையை
யெண்ணிடினும் வீந்தோர் தம்மைச்
சரியாவெண் ணிடத்தகுமோ இன்னமுநங்
கண்முன்னஞ் சாவோர் தம்மைத்
தெரியாது போல்தினமும் வீண்காலங்
கழிக்கின்றாய் திடமா யென்றும்
மரியாமை யுற்றனையோ அறியாமை
பெற்றனையோ வழுத்தாய் நெஞ்சே.

௪௭

1308 எமதெனுமெய் பிறக்குமுன னெங்
கிருந்ததின்னஞ்
சிலகாலத் தெங்கே செல்லும்

அமருயிர் நீங் கியபின்னோர் கணமுமனை
சேயரிதன் அருகே நில்லார்
தமர்சவமென் றெடுத்தெறிவார் பறவைவிலங்
கினங்கூடித் தத்திக் கொத்தி
அமர்செய்து புசிக்குமப்போ தென்னென்று
கேட்பவரார் அறிவில் நெஞ்சே.

சஇ

திருக்குறள்

1309 நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

சகூ

1310 நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

சள

---

## கஅ. யாக்கை நிலையாமை

கந்தபுராணம்

1811 காலனு கியதோர் சேர்ப்பன் காலமாம் வலையை
வீசி

ஞாலமாந் தடத்தில் வைகும் நல்லுயிர் மீன்கள் வாரி
ஏலவே யீர்த்து நின்றான் இறுதியாங் கரைசேர் காலை
மேலவன் கையுட் பட்டு மெலிவொடு வீடு மன்றே.
௪

## திருவிளையாடற் புராணம்

1812 நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் தனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே.
௨

1813 விடம்பயி லெயிற்றர வுரியும் வீநுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தே கொலாம்
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர் வாழ்
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ.
௩

1814 மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வருபயனை
உணர்வுடையா ருணர்வருணர் வொன்றுமிலார்க்

காஞ்சிப்புராணம்

1815 அருவினை யுலக மெல்லாம் படைத்தளித் தழிக்குங் காலங்
கருவுறு மெவையுங் கால வயத்தவாங் காலந் தான்மற்
றொருபொருள் வயத்த தன்று லுந்தியோன் கற்பத் தீரேழ்
பொருவிலிந் திரர்கண் மாய்வர் பொன்றுவர் மனுக்க டாமும்.

௯

1816 ஓதுமிக் கற்பம் வேதற் கொருதின மந்நாள் முப்ப
தாதலோர் மதியாந் திங்க ளாறிரண் டாயி னுண்டாம்
ஏதமில் வருட நூறே லிருவகைப் பரார்த்த மாகப்
போதரும் போதி லன்னோன் பொன்றுவன் மன்ற மாதோ. ௰

1817 அம்மலர்க் கிழவன் கால மரிக்கொரு தினமன் னோனு
மம்முறைத் திங்கள் கூடு மாண்டுநூ றெய்திற் பொன்றும்
அம்மவோ சீசீ யிந்த வநித்திய வாழ்வு வேண்டேன்

அம்மையில் வீடு பேற்றிற் குபாயமே யறிதல் வேண்டும். எ

## ௬அ. யாக்கை நிலையாமை

209

1318 படுங்கலை முகூர்த்தங் காட்டைக ளென்று
பகலிராப் பக்கமே திங்க
ளொடும்புண ரிருது வாண்டுகத் தொடக்கத்
தோதிய வவயவப் பகுப்பான்
இடும்பைதீர் காலங் கழிவுறுங் காலத்
தெல்லையில் யாவரு மிறுவர்
நெடும்புலக் குறும்பு கடந்துளீ ருலகில்
நிலைப்பதோர் பொருளுமற் றின்றால்.

அ 1319 என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோ யெவற்றி னுக்கு முறையுளாய்ப் புறந்தோன் மூடும்
வன்புலை யுடம்பே யாவி வருத்திடும் பிணிவே றில்லை. கூ

துணிகைப் புராணம்

1320 இளகுநெய்த் தோரு மிறுகுநெய்த் தோரு
மியம்புறிற் றெடியொரு மூன்றும்

வளமலி மூளை பன்னிரு தொடியா
மயிர்முத லனைத்தையுந் தொகுத்திட்
டளவிடி லாக்கை யாயிரந் தொடியா
மருவருப் புறுமியக் கங்கட்

களவிலை யிந்தப் புலையுடற் பொறையைப்
பொருளென மதிப்பரோ வறிந்தோர்.
க0

1321 தமனியக் கடமே யாயினும் பவ்வீத்
தங்குறின் விழைஞரும் பற்றார்
அமிழ்தமே யானுந் துய்ப்புறிற் பவ்வீ
யாக்குமிவ் வுடற்புக ரறிந்தும்
இமிழ்தரப் பற்று மடவருக் குரைத்து
மென்பயன் றீர்த்தமா டிடினும்
உமிழ்முடை யாக்கை சுசியுறு திறைவ
னுண்மைதேர்ந் துயிர்சுத்தி யுறுமே.
கக

1322 கருவினின் மழவிற் கற்குங் காலையிற் பருவ
மாறிற்
பெருகிய பொழுதி ழேயிற் பிரிவினிற் பகையி
னீட்டும்
பொருள்வயின் வேட்ட தெய்தாப் புன்மையின்
முதுமை தன்னின்
மருவிய திழப்பிற் சாவின் வன்றுயர் மனித்தற்

குண்டே. கஉ

1323 விதித்தன வாண்டு நூறு மேவரி தாண்டு

சில்ல
கதித்திடு மிளமை தின்னுங் காமநோய் சில்ல
தின்னும்
உதிக்கினல் லுணர்வு மேலே யுறுபிணி நாட
வொட்டா
மதித்தன ரொழுக லாறும் வழுவிக்கு மூப்பு
நண்ணில். கக





## திருப்பெருந்துறைப் புராணம்

1324 குடருமெலும் புங்கொழுவுங் குருதியுமீ
ருளுந்தசையுந்
தொடருநரம் பும்போர்த்த தோலுமூ
ளையும்வழும்பு
மடருமுவர் நீருநனி யருவருக்கும் பவ்வியும்
படருமுட லையும்பொருளா நினைப்பரோ
பண்புடையோர். கஉ 1325 மிதவையினேக்
கமைத்துழலு மீன்கொலைஞன் போற்கவரும்
பதமிதெனப் பார்த்துழலும் பாழ்ங்கூற்றுண்
மையினலெவ்
விதமுமுடம் பொழியுமதன் மேற்புரிவ
தொன்றுமிலை
யிதமகித மேயுயிர்க்குத் துணையாக வெய்திடுமே.
கங

1326 ஆனமுதுஞ் சருக்கரையு மருங்கனியும்
பசுந்தேனும்
ஊனமுறு மலமாத லுதரமதிற் புகுந்தன்றே
கானுலவு நறுந்தெண்ணீர் கடியுமுவர்ப்
புனலாதல்
ஈனமிகு முடைக்குரம்பை யிதிற்புகுதப்
பெய்தன்றே. கசு

1327 நறுந்தவளத் துயிலமுக்காய் நாறுதற்கு
நவையுடம்பில்
உறுந்தவறு தனையன்றி யொருநிமித்தம்
பிறிதுண்டோ
இறுந்தனையு முடற்சுமையா மிதுசுமத்தற்
கிளையாமற்
பெறுந்தகைய தெனக்கருதிப் பேணுவரோ
பெரியோர்தாம். கஎ

1328

மெய்யாக விளம்புகின்றேம் வினைநெறியால் வரும்புலனும்
உய்யாதோ ரொன்றுகி யுறுமஃது முறங்கவிலை
பொய்யாகும் வினையனைத்தும் பொறிமூன்றின்
றடுமாற்றம்
எய்யாத சிறையுடம்பா லின்படைவ

தெவ்வகையோ. கஅ 1329 ஊறியெழுஞ் சுக்கிலமு
முதிரமுமுற் றூன்றிரளாய்க்
கூறுபடு முறுப்பினெடுங் குழவியிளங்
குமரனென
வேறுபடா நாடோறு மிகப்பலித மெய்திரங்கி
மாறுபடு நிலைவந்தால் வாராத தோமரணம்.

கக 1330 இப்பிறப்பி விடும்பையன்றி
யின்பமிலை யேலிறந்த
அப்பிறப்பும் வருபிறப்பு மடங்கலுமப்
படியன்றே
மெய்ப்பொருணூல் விரித்துணர்ந்தோர்
வேண்டுவரோ
வைப்பனையா யினிமீண்டு மண்ணுலகில்

1331
விறன்மருத்தின்
வரும்பிறந்தை. உ0

விழியிழந்தான் போம்பொழுது விழுங்குழியின் மீண்டந்த
வழியதனில் வரும்பொழுது மறித்தும்விழுந் திடுவதுபோல்

இழிபுறு மச்சானத்தா லிறந்துபிறந் தெஞ்ஞான்றும்
ஒழிவிட ருயிரெய்து முதுநீங்கி லுறுமின்பம்.

கூஅ. யாக்கை நிலையாமை

211

1332 சூழ்ந்தனவெல் லாம்பிரியுந் தோன்றினவெல் லாநசிக்குந்
தாழ்ந்திடுமற் றுயர்ந்தவெல்லாந் தனிநகரு மாளிகையும்
பாழ்ந்துடவைப் படுமனுமான் பழுத்தபழந் தனக்கென்றும்
வீழ்ந்திடலே கதியானல் விளியாதோ சரீரந்தான். உஉ 1333 இன்றொழியி னுளையென்ப திருந்திடுமோ வித்திங்கள்
சென்றிடுமேல் வருமாதந் திரமாமோ வருடமிது
பொன்றிடுமே லெதிராண்டும் போமிதுதான் புதிதன்றே
மன்றநிலை யுடனிலையு மாரணமு மாருதியே. உங

1334 அடவிதனிற் புகுந்திடினு மடுக்கன்முழை நுழைந்தாலு
மிடைநிலவு சேய்மைநிலத் தெய்திடினு மெறிதரங்கக்
கடலதனின் மூழ்குறினுங் காலமது வருங்காலை
யுடலொழியு மிறப்பதனே டொற்றுமைய தாகலினல். உச

1335 ஓரிடத்தோ ருயிர்நெடுநா ளுறைவதிலை
யுதகியெனு
நீரிடத்துப் புரிவினையா னிலையிலுடம்
பிதுபோனற்
பாரிடத்திற் சுவர்க்கத்திற் பவர்க்கமதி
லெங்கெனினும்
சேரிடத்திற் சேருமிது திண்ணமெனத்
தெளிந்திடுதி. உரு
1336 உலகமே லிறந்தி டாத வுபாயமிங் கொருவர்க்
குண்டேல்
விலகுமோர் கிருமி யானும் விளிந்திடற் கேது
வுண்டோ
விலகுமிப் பொருண்மே லைய மென்பதொன்
றில்லை யிந்த
வலகிலா வுயிரு நிற்ப தந்தக னணை தன்னில்.
உசு
1337 பழித்திடுங் கோழை மூளை பற்றிய வழுக்கு
மற்றை
யொழித்திடு மலநீர் வெண்ணீ ருவையிற்றி
னுலகத் தொன்று
மிழிப்புறு பண்ட மில்லை யிவற்றினுக் கிடமா
யென்று
மழிப்புறு மியாக்கை காப்பா ரறிவுளா ராகு
வாரே. உஎ
செவ்வந்திப் புராணம்

1338 புழுச்சுமை மலக்குவை புலவு நாறிய
வழுக்குட லீரல்சீ வழியுஞ் செய்யக
முழுக்குட லுதிரநீர் மூளை யின்பொதி
யழுக்குட லதைப்பொரு ளாக வெண்ணுமோ.
உஅ

1339 உழுநரிக் கணங்களுக் குதவு மொண்பொருள்
கழுகினுக் குணவுகட் டியக ளஞ்சியந்
தழலினுக் கிந்தன மான சட்டகம்
எழிலுறப் புனையினு மிருப்ப தல்லவே.
உகூ

1340 நரம்புட லெலும்புதோ னட்ட புன்குடில்
வரம்பறு பிணியெலா மடுத்த வான்கலந்



திரங்குத னரையிடர் புதைத்த சிற்றறைக்
குரம்பையென் றறிந்திலை கொற்ற வேந்தனே.

கூ0

1341 மின்போ லழியும் வயிற்றுமை வடிவா யழியு மெய்யுருவாய்
முன்போ லெய்யும் பிறந்தழியு மடவா ருடனே முயங்கியதன்
பின்போ யழியு நரைத்தழியும் பேய்போற் றிரிந்து பெயர்ந்தழியும்
பொன்போல் வளர்த்து மிவ்வுடல நிலையா தழிந்து
போய்விடுமே. கூக

1342 பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீர்மெழுத்தை நிகரிலிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்தும்
நல்லார்கள் பொருளெனவே யொருகணமு நாடாரே.
கஉ

1343 தன்னுடலைத் தருவருப்பைத் தானறிந்துஞ் சரீரத்துள்
என்னிருப்பா மெனவதுளங்கி யிளையாத விழுதைக்குப்
பன்முறையா லுடற்பழுதைப் பாடித்தும் பயனில்லைச்
சொன்னிரையிற் றுணிவாரோ காட்சியினிற் றுணியாரே. கங

1344 பொற்கடத்துள் மலம்பொருந்திற் புல்லியரும் பொருணசையால்
அக்கடத்தைப் பற்றியிடா ரங்கையினு லவனிதனின்
மக்கடம துடலினைத்தா மலபாண்ட மெனவறிந்தும்
எக்கணக்கா லிகழாதே யருவருப்பற் றிருக்கின்றார். கச

பிரபுலிங்கலீலை

1345 பிறந்த வாகமொன் றிறந்திடாப் பெருமையு முடைத்தோ
எறிந்த வான்சிலை வீழ்ந்திடா திருப்பதிங் கில்லை
செறிந்த காரிய மென்பதென் றுயினுஞ் சிதையும்
இறந்தி டாதுகா ரணமெனப் படுமதே யென்றும். கரு

பிரமோத்தர காண்டம்

1346 பண்டை வாசனை தொக்க பயிற்சியாற்
கொண்ட காய நிலையெனக் கொள்வரோ
அண்ட ரேனும் பிறப்புள தாமெனின்
விண்டு காய மிறப்பது மெய்யரோ.
கசு

1347 படர்கி ரித்தலைப் பான்மதி போற்கரிப்

பிடர் நி மூற்று கவிகையிற் பேர்ந்தவர்
கடனி லத்திற் கவிழ்ந்தன ரன்றிமற்

றுடலெ டுதெவர் சாவை யொருவினர்.
கடள

கூஅ. யாக்கை நிலையாமை

213

நாரத சரிதை

1348

புழுமலக் குடருண் மூழ்கிப் புலால்கமழ் வாயிற் றேய்த்து
விழுபவை குழவி யென்றும் விளங்கிய காளை யென்றும்
பழுநிய பிறவு மாகிப் பலபெயர் தரித்த பொல்லாக்
குழுவினை யின்ப மாகக் கொள்வரோ குருடு தீர்ந்தார். கூஅ

பிரபோத சந்திரோதயம்

1349 எத்தனை யென்று சொல்கே னிப்படி
நித்திய மின்றித் தோன்றி நிமிடத்தி

யனந்த கோடி.

லொழிந்த வென்றுற்

சத்திய மியாது சுற்று சகடக்கால் பிறப்புஞ் சாவும்

இத்தகை யறிந்து மீங்க னிறந்தவர்க் கழுங்க லாமோ. ௯௯

## தேவாரம்

1350 நடலை வாழ்வு கொண் டென்செய்திர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்

உடலி னுர்கிடந் தூர்முனி பண்டமே.
௬0 1351 பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டர னும நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே.
௬௧

## திருமந்திரம்

1352 மண்ணொன்று கண்டீ ரிருவினைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணுவபோல்
எண்ணின்ற மாந்த ரிறக்கின்ற வாறே
௬௨ 1353 ஊரெலாங் கூடி யொலிக்க

வழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச்
சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே.

௪௯ 1354 வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றுங்
குளத்தின்மண் கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தாலவை யோடென்று வைப்பர்
• உடலுடைந் தாலிறைப் போதும்வை யாரே.

௫௦ 1355
காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையு ளின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனவிக் கூட்டையே.

௫௧



## பட்டினத்தடிகள் பாடல்

1356 காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுட னுடுங்
காதலுங் கருத்து மல்லானின் னிருதாட்

பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்
தங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகஞ்
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
வாதபித் தங்கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோய்க்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரண பஞ்சரஞ்
சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தங்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை
சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை
ஈமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு மணமாய்
நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமேல்
ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்

அந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருநிழல்
நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில் கனவிற் கண்ட காட்சி
அதனிலும் பொல்லா மாயக் களங்கம்
அமையு மமையும் பிரானே யமையும்
இமய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் னருளினுக் கழகே.

௪௬

௩அ. யாக்கை நிலையாமை
215

1357 வரிக்கோல வேல்விழி யாரனு ராக
மயக்கிற்சென்று
சரிக்கோது வேனெழுத் தஞ்சுஞ்சொ
லேன்றமி யேனுடல
நரிக்கோ கழுகு பருந்தினுக் கோவெய்ய
நாய்தனக்கோ
வெரிக்கோ விரையெதுக் கோவிறை வாகச்சி
யேகம்பனே.

௪௭

1358 ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை
யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந்

தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக்
காதல் செய்தே
ஏற்றுத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி
யேகம்பனே. ௬அ
1359 காம்பிணங் கும்பணைத் தோளார்க்கும்
பொன்னுக்கும் காசினிக்கும்
தாம்பிணங் கும்பல வாசையும் விட்டுத்
தனித்துச் செத்துப்
போம்பிணந் தன்னைத் திரளாகக் கூடிப்
புரண்டினிமேற்
சாம்பிணங் கத்துதை யோவென்செய்
வேன் றில்லைச்
சங்கரனே. ௬௯
1360 முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு
முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு
பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்
லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி
வாரில்லையே.
௭0
1361 எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கென்னு
மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ

வெனக்கென் னுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும்புன் ஞயெனக்
கென்னுமிந் நாறுடலைப்
பிரிய முடன்வளர்த் தேனித ஞலென்ன
பேறெனக்கே. ௬௧

1362 தாயாருஞ் சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத்
தாழ்ந்திடுநாள்
நீயாரு நாஞ ரெனப்பகர் வாரந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேகொண்ட
நோயுமொரு
பாயாரு நீயுமல் லாற்பின்னை யேதுநட்
பாமுடலே. ௬௨

1363 ஆயும் பொழுது மயிர்க்கால்க டோறு
மருங்கிருமி
தோயு மலக்குட்டை யாகிய காயத்தைச்
சுட்டுவிட்டாற்
பேயு நடன மிடுங்கட மாமென்று பேசுவதை
நீயு மறிந்திலை யோபொரு டேட
நினைந்தனையே. ௬௩

1364 நாய்க்கொரு சூலு மதற்கோர் மருத்துவ
நாட்டிலுண்டோ
பேய்க்கொரு ஞானம் பிடிபடு மோபெருங்
காஞ்சிரங்காய்
ஆக்குவ ராா தருந்துவ ராாது போலுடம்பு
தீக்கிரை யாவதல் லாலேதுக் காமிதைச்
செப்புமினே. ௬௪

1365* காடோ செடியோ கடற்புற மோகன மேமிகுந்த
நாடோ நகரோ நகர்நடு வோநல மேமிகுந்த



வீடோ புறத்திண்ணை யோதமி யேனுடல் வீழுமிடம்
நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின்பதமே.
௧௫ 1366 பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்துபட்
டாடைசுற்றி முத்தும் பவளமும் பூண்டோடி யாடி
முடிந்தபின்பு செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச்
சாம்பிணங்கள் கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக்
காளத்தியே. ௧௬ 1367 ஒன்பதுவாய்த் தோற்பைக்
கொருநாளைப் போலவே அன்புவைத்து நெஞ்சே
யலைந்தாயே—வன்கழுக்கள் தத்தித்தத் திச்சட்டை
கட்டிக்கட் டிப்புட்டுக்
கத்திக்குத் தித்தினக் கண்டு.
௧௭

1368 இன்னம் பிறக்க விசைவையோ நெஞ்சமே
மன்னரிவ ரென்றிருந்து வாழ்வாரை—முன்னம்
எரிந்தகட்டை மீதி லிளைக்கோ வணத்தை
யுரிந்துருட்டிப் போட்டது கண்டு.
௧௮

1369 முதற்சங் கமுதூட்டு மொய்குழலார் தம்மை

நடுச்சங்கு நல்விலங்கு பூட்டுங்—கடைச்சங்கம்
ஆம்போ தெனவூதும் அம்மட்டோ விம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம்.
௯க

1370 இப்பிறப்பை நம்பி யிருப்பரோ நெஞ்சகமே
வைப்பிருக்க வாயின்
மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு.
௧0

1371 மேலு மிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீல மறிந்திலையே சிந்தையே—கால்கைக்குக்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக் குத்திமொத்தப்
பட்டவுடல்
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு.
௧௧

தாயுமானவர் பாடல்

1372 காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமிகுந் தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை

முடங்க லார்கிடை சரக்கினே

கடஅ. யாக்கை நிலையாமை

217

மாக விந்திர தனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனுர்
வனைய வெய்யதடி கார ஞனயமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெ னக்கருதி
யைய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

சுஉ

1373 புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ
வென்பொ லாமணி யேயிறை யேயித்தால்
துன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே.

சுக

1374 சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப
தெந்நாளோ சுச 1375 நீர்க்குமிழி பூணமைத்து
நின்ருலு நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற் பற்றறுவ
தெந்நாளோ. சுஇ
1376 காக்கைநரி செந்நாய் கழுகொருநாட்
கூடியுண்டு

தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப
தெந்நாளோ. ௬௬ 1377 செங்கிருமி யாதி செனி
த்தசென்ம பூமியினை
யிங்கெனுட லென்னு மிழுக்கொழிவ
தெந்நாளோ. ௬எ 1378 என்று மழியுமிக்
காயம்இத்தை யேதுக்கு மெய்யென்
றிருந்தீ ருலகீர்
ஒன்று மறியாத நீரோ யமனேலைவந் தாற்
சொல்ல வுத்தர முண்டோ.

௬அ 1379 வயதும் படவெழுந்து
பிணியுந் திமிதிமென்று
வரலுஞ் செயலழிந்து—ளிருமலுமாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று—சரியெனநாடி

மனையின் புறவிருந்த வினமுங் குலகுலைந்து
கலகஞ் செயவிருண்ட—யமன்வருவேளை
யேது துணைபழி கார மனமே.
௬௯

இளசைப் பதிற்றுப்பத் தந்தாதி
1380 நாயினுக் கிரையோ நரியினுக் கிரையோ
நகுநடைக் குழிவிழிப் பிறழ்பற்
பேயினுக் கிரையோ கழுகினுக் கிரையோ
பெரிதுநா றியபுழுக் குரம்பை

ஈயினுக் கிரையோ யாதினுக் கிரையோ
யான்சுமந் துழன்றிடப் பணித்தாய்
தாயினுக் கழகோ குழவியை வருத்தல்
சாற்றிடா யிளசைவா னவனே.

எ0

1381 என்பினை நரம்பை மூளையை மயிரை
யிறைச்சியைக் குருதிசுக் கிலத்தைப்
பின்புறுந் துவக்கை வேறுவே ருகப்
பிரித்துப்பைம் மறியென நோக்கி
அன்புறு மறிவாற் பௌதிக மெனநீத்
தாண்டமா விளசைநா யகன்றன்
இன்பவா ரிதியிற் றுளைந்திடப் பெருதார்க்
கிறப்பதும் பிறப்பது மியல்பே.

எக

வைராக்கிய தீபம்

1382 இளமையிற் பிணியற் றெருகுடை நிழற்கீ
ழிருநிலம் முழுவதும் புரக்கும்
வளமைபெற் றுடைய மகற்குமெப் பொழுது
வருங்கொல்கூற் றெனும்பயத் தானும்

உளமிகப் பறைநின் றறையுமேற் புவிமீ
துடையரோ மற்றைய ரின்பங்
களிமிகுத் திருப்பர் தெளிவிலா மையின்மேற்

காரியங் கருதுரு நரரே.

எஉ

1383 கருமமொன் றியற்றப் பிறர்கையிற் கருவி
கவர்ந்துளோன் பினுமவர் கொளுமுன்
விரைவினெண் ணியசெய் யாதுமற் றதையே
மிகச்சிறப் பித்துநோக் குதல்போல்
புரையில்வீட் டின்ப மடைகுவா னதற்குப்
பொருந்திய வருந்தவம் புரியா
தொருகண மேனு நிலையிலிவ் வுடல்வைத்
தொப்பனை செய்துநோக் குதலே.

எங

தத்துவராயர்

1384 கொட்டாவி கொண்டவர் விட்டா ருயிரென்று கூடநின்று
நட்டார்கள் சுட்டு நடக்கும் வகையிது கண்டுகண்டும்
ஒட்டாதென் னெஞ்ச மொருகாலி தென்னென் றுணரவும்பர்க்
கெட்டா தவனென்னை யாளுடை யானரு ளில்லவர்க்கே. ௯ச

சீவகசிந்தாமணி

1385 பேதைமை யென்னும் வித்திற் பிறந்துபின் வினைக ளென்னும்
வேதனை மரங்க ணறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்

காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து
மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனியு மென்றான். ௭௫ 1386 தேன்சென்ற நெறியுந் தண்ணீர்ச் சிறுதிரைப் போர்வை போர்த்து
மீன்சென்ற நெறியும் போல விழித்திமைப் பவர்க்குத் தோன்றா
மான்சென்ற நோக்கின் மாதே மாய்ந்துபோ மக்கள் யாக்கை
யூன்சென்று தேயச் சிந்தித் துருவதோ தகுவ தென்றாள். ௭௬ 1387 பிறந்துநாம் பெற்ற வாளை ளித்துணை யென்ப தொன்றும்
அறிந்திலம் வாழ்து மென்று மவாவினு ளழுந்து கின்றாம்
கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கி னல்லால்
இறந்தநாள் யாவர் மீட்பா ரிற்றெனப் பெயர்க்க லாமோ. ௭௭ 1388 மைதிரண்ட வார்குழன்மேல் வண்டார்ப்ப மல்லிகைமென்
மாலை சூடிக்
கைதிரண்ட வேலேந்திக் காமன்போற் காரிகையார்

மருளச் சென்றுர்
ஐதிரண்டு கண்டங்கு ரைப்பவோர் தண்டூன்றி
யறிவிற் றள்ளி
நெய்திரண்டாற் போலுமிழ்ந்து நிற்குமிள
மையையோ
நிலையா தேகாண்.

எஅ 1389 இன்ன தன்மையி னருமையி னெய்திய
பொழுதே
பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென வயிற்றகம்
பொருந்தி
மின்னு மொக்குளு மென நனி வீயினும் வீயும்
பின்னை வெண்ணெயிற் றிரண்டபின்
பிழைக்கவும் பெறுமே.

எகூ

1390 வெண்ணெ யாயது வீங்குபு கூன்புற யாமை
வண்ண மெய்தலும் வழுக்கவும் பெறுமது
வழுக்கா
தொண்மை வாண்மதி யுருவொடு திருவெனத்
தோன்றிக்
கண்ண ஞரழக் கவிழினுங் கவிழுமற் றறிநீ.

அ0

1391 அழித லின்றியங் கருநிதி யிரவலர்க் கார்த்தி
முழுதும் பேர்பெறு மெல்லையுண் முரியினு
முரியும்
வழுவில் பொய்கையுண் மலரென வளர்ந்துமை
யாடிக்

கெழீஇயி ளுரொடுங் கிளையழக் கெடுதலுங்
கெடுமே. அக

1392 கெடுத லவ்வழி யில்லெனிற் கேள்விக
டுறைபோய்
வடிகொள் கண்ணியர் மனங்குழைந்
தநங்கனென் றிரங்கக்
கொடையுங் கோலமுங் குழகுந்தம் மழகுங்கண்
டேத்த
விடையிற் செல்வுழி விளியினு விளியுமற் றறிநீ.
அ௨

1393 எரிபொன் மேகலை யிலங்கரிச் சிலம்பொடு
சிலம்பும்
அரிபொற் கிண்கிணி யாயிழை யரிவையர்ப்
புணர்ந்து



தெரிவில் போகத்துக் கூற்றுவன் செகுத்திடச்
சிதைந்து
முரியும் பல்சன முகம்புடைத் தகங்குழைந்
தழவே. அ௩ 1394 கோதை மங்கையர்
குவிமுலைத் தடத்திடைக் குளித்துக்
காதன் மக்களைக் கண்டுவந் தினிதினிற்
கழிப்பப்
பேது செய்பிணிப் பெரும்புலி பாய்ந்திடப்
பிணமாம்

ஓத மாக்கட லுடைகலத் தவருற்ற துறவே.
அசு

1395 காமம் பைப்பயக் கழியத்தங் கடைப்பிடி சுருங்கி
யூமர் போலத்த முரையவிந் துறுப்பினி
லுரையாத்
தூய்மை யில்குளந் தூம்புவிட் டாம்பொரு
ளுணர்த்தி
ஈம மேறுத லொருதலை யிகலமர் கடந்தோய்.
அரு
1396 தேங்கொள் பூங்கண்ணித் திருமுடித்
திலகவெண் குடையோய்
ஈங்கி தன்றியு மிமையவ ரமையலர்க் கடந்த
தாங்கு மாவண்கைச் சக்கர மிக்குயர் பிறரும்
யாங்க ளுரவ ரூரொடு பேரெமக் குரையாய்.
அசு

சிலப்பதிகாரம்

1397 கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்.
அஎ

மணிமேகலை

1398 வினையின் வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்

புற்றடங் கரவிற் செற்றச் சேர்க்கை
அவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது
மக்கள் யாக்கை யிதுவென வுணர்ந்து
மிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்.
அஅ

399 நரைமூ தாட்டி யொருத்தியைக் காட்டித்
தண்ணறல் வண்ணந் திரிந்துவே றாகி
வெண்மண லாகிய கூந்தல் காணாய்
பிறைநுதல் வண்ணங் காணா யோநீ

நரைமயிற் றிரைதோற் றகையின் றாயது
விறல்விற் புருவ மிவையுங் காணாய்

இறவி னுணங்கல் போன்றுவே றாயின
கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன

கூஅ. யாக்கை நிலையாமை
221

குமிழ்மூக் கிவைகா ணுமிழ்சீ யொழுக்குவ
நிரைமுத் தனைய நகையுங் காணாய்
சுரைவித் தேய்ப்பப் பிறழ்ந்துவே றாயின
இலவிதழ்ச் செவ்வாய் காணா யோநீ
புலவுப் புண்போற் புலால்புறத் திடுவது
வள்ளைத் தாள்போல் வடிகா திவைகாண்

உள்ளூன் வாடிய வுணங்கல் போன்றன
இறும்பூது சான்ற முலையுங் காணாய்
வெறும்பை போல வீழ்ந்துவே றுயின
தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி
வீழ்ந்தன விளவேய்த் தோளுங் காணாய்
நரம்பொடு விடுதோ லுகிர்த்தொடர் கழன்று
திரங்கிய விரல்க ளிவையுங் காணாய்
வாழைத் தண்டே போன்ற குறங்கிணை
தாழைத் தண்டி னுணங்கல் காணாய்
ஆவக் கணைக்கால் காணா யோநீ
மேவிய நரம்போ டென்பு புறங்காட்டுவ
தளிரடி வண்ணங் காணா யோநீ
முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல்
பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத்
தூசினு மணியினுந் தொல்லோர் வகுத்த
வஞ்சகந் தெரியாய் மன்னவன் மகனென.

௯

வளையாபதி

1400 வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்
கோற்க ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதா
நாற்ப திகந்தா னரைத்தூது வந்ததினி
நீத்த றுணிவா நிலையா திளமையே.

௧௦

குண்டலகேசி

1401 பாளையாந்
காளையாம்

தன்மை செத்தும் பாலனுந் தன்மை செத்துங்
பருவஞ் செத்துங் காமுறு மிளமை செத்தும்
மீளுமிவ் வயது மின்னே மேல்வரு மூப்பு மாகி
நாளுநாட் சாகின் ருமா னமக்குநா மழாத தென்னே.

கக

1402

கோள்வலைப் பட்டுச் சாவாங் கொலைக்களங் குறித்துச்சென்றே
மீளினு மீளக் கண்டு மீட்சியொன் றுனு மில்லா
நாளடி யிடுத ரேன்று நம்முயிர் பருகுங் கூற்றின்
வாளின்வாய்த் தலைவைப் பார்க்குச்
செல்கின்ருன் வாழ்கின்

[ருேமே. கஉ :222 பன்னூல்
பாடற்றிரட்டு

1403 நன்கென நாளுமி தென்றிவ் வுடம்பு
நயக்கின்ற தாயின்
ஒன்பது வாயில்க டோறு முண்ணின் றழுக்குச்
சொரியத்
தின்பதோர் நாயு மிழுப்பத் திசைதொறுஞ்
சீப்பில்கு போழ்தின்
இன்பநன் ருற்ற மிதன்க ணெவ்வகை
யாற்கொள லாமே.

கங

சூளாமணி

1404 எரிபுரை யெழில தாய விளந்தளி ரிரண்டு நாளின்
மரகத வுருவ மெய்தி மற்றது பசலை கொண்டு
கருகிலை யாகி வீழ்ந்து கரிந்துமண் ணுதல் கண்டும்
வெருவிலர் வாழ்து மென்பார் வெளிற்றினை விலக்க லாமோ.

கூச

1405 தொகைமல ரலங்கல் சூடித் தூநறுஞ் சுண்ண மப்பிப்
புகைநனி கமழ வூட்டிப் புறஞ்செயப் பட்ட மேனி
சிகையினோர் சிறுமுட் டீண்டச் சிதைந்தழுக் கொழுகு மாயின்
நகைபெரி துடைத்து நாணு மிதனைநா மகிழ்த னெஞ்சே. கூஇ

1406 ஒழுகிய நடையு நீரு முதலகை யிகப்ப வூறும்
அழுகலிவ் வள்ளல் யாக்கை யகம்புற மாயிற் றுயிற்
கழுகொடு கவருங் காக்கை கைத்தடி கொண்டு காத்தும்
அழகுள சுழலு மன்னோ வாயிரச் சாதி மாதோ.

கூசு

இராமாயணம்

1407 அந்தர மதனி னின்ற வானவ ரருக்கன் வீழாச்

சந்திரன் வீழா மேரு மால்வரை தகர்ந்து வீழா
இந்திர சித்தின் பொற்றே ரிற்றிடை விழுந்த தென்றல்
எந்திர மனைய வாழ்க்கை யினிச்சில ருகந்தெ னென்றார்.

கள

பாகவதம்

1408 கனவைப் போலவும் கானலி னீருடன்
தனிசெ யிந்திர சாலத்தைப் போலவு
மனனின் கற்பனை யான்வரும் யாக்கையை
வினையின் கட்டற மெய்யெனற் பாலதோ.

கஅ 1409 இடையுறு மென்பினை நரம்பி
ஞர்த்திடாப்
புடையுறு மிறைச்சியாற் பொதிந்து போக்கற
மிடைதரு தோலினுன் வேயப் பட்டதோர்
உடலினை யானென வுரைக்க லொண்ணுமோ.

கக

குசேலோ பாக்கியானம்

1410 சளசள வெனவா யூற றடையின்றி
யொழுகப் பற்போய்த்.
தளர்வொடு மெலிந்து கூனித் தசையற வற்றி
முற்றிக்



கிளர்நடை யொழிந்து பாயல் கிடைகொளுங்

கிழவுத்தன்மை
யளவுகண் டிலர்கொ லுற்ற விளமையோர்க்
ககங்க ளிப்பார்.

கoo

1411 மானமற் றிழிவு பூண்டு வளமனைக் கடைதோ
றெய்தி
ஈனமுற் றிரந்தி ரந்திவ் வுடல்பருத் திடச்செய்
தாலுந்
தூநகைக் கரிய வாட்கட் சுடர்த்தொடி
நிலைப்ப தன்று
பேனமார் வெள்ள நீரிற் பிறந்திடுங் குமிழி
போலும். கoக

மேருமந்தர புராணம்

1412 என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்ந்
திறைச்சி மெத்திப்
புன்புறந் தோலின் மூடி யழுக்கொடு புழுக்கள்
சோரும்
ஒன்பது வாயிற் றூய வூன்பயில் குரம்பை
தன்மேல்
அன்பரு மாந்தர் கண்டா யறிவினற் சிறிய
நீரார். கoஉ

யசோதர காவியம்

1413 வந்துடன் வணங்கும் வானோர் மணிபுனை
மகுட கோடி
தந்திரு வடிக ளேந்துந் தமனியப் பீட மாக
இந்திர விபவம் பெற்ற விமையவ ரிறைவ

ரேனுந்
தந்திரு வுருவம் பொன்றத் தளர்ந்தன ரனந்த
மன்றே. கO௩
1414 மக்களிற் பிறவி யுள்ளு மன்னர்தம் மன்ன
ராகித்
திக்கெலா மடிப்ப டுத்துந் திகிரியஞ் செல்வ
ரேனும்
அக்குலத் துடம்பு தோன்ற வன்றுதொட் டின்று
காறும்
ஒக்கநின் றூர்கள் வையத் தொருவரு மில்லை
யன்றே. கO௪

நாலடியார்

1415 மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினு ரென்றெடுத்துத் தூற்றப்பட்
டாரல்லால்
எஞ்சினு ரிவ்வுலகத் தில்,
கO௫
1416 மன்றங் கறங்க மணப்பறை யாயின
வன்றவர்க் காங்கே
பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்.
கO௬
1417 சென்றே யெறிப வொருகால் சிறுவரை

நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக்
கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து.
கOஎ



1418 கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க்
கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னு முணர்வினாற்
சாற்றுமே
தொண்டொண்டொ டென்னும் பறை.
கOஅ

1419 நார்த்தொடுத் தீர்க்கிலென் னன்றாய்ந்
தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர்
பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால்.
கOகூ

1420 படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றக்
கெடுமிதோர் யாக்கையென்
றெண்ணித்—தடுமாற்றந்

தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி
வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்.
கக0

1421 புன்னுனிமே னீர்போ லிலையாமை
யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்று னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்று னெனப்படுத லான்.
ககக

1422 கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவாரான்
மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து.
ககஉ

1423 தோற்போர்வை மேலுந் தொளைபலவாய்ப்
பொய்மறைக்கும்
மீப்போர்வை மாட்சித்
துடம்பானுன்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்.
ககங

அறநெறிச்சாரம்

1424 ஆசையும் பாசமு மன்பு மகத்தடக்கிப்
பூசிப் பொழிந்த புலாலுடம்பு—ஊசல்

கயிறற்றாற் போலக் கிடக்குமே கூற்றத்
தெயிறுற் றிடைமுரிந்தக் கால்.
௧௧௪

1425 தெரிவி லிளமையுந் தீப்பிணியு மூப்பும்
பிரிவுந் துயிலு மொரீஇப்—பருவந்து
பத்தெட்டு நாளைப் பயனிலா வாழ்க்கைக்கு
வித்துக்குற் றுண்பார் பலர்.
௧௧௫

1426 மூப்புப் பிணியே தலைப்பிரிவு நல்குரவு
சாக்காடு மெல்லாஞ் சலமிலவாய்—நோக்கீர்
பருந்துக் கிரையாமிவ் யாக்கையைப் பெற்றான்
மருந்து மறப்பதோ மாண்பு.
௧௧௬

## ௫௮. யாக்கை நிலையாமை

225

### நல்வழி

1427 எல்லாப் படியாலு மெண்ணினு லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை—நல்லா
ரறிந்திருப்பா ராதலினு லாங்கமல நீர்போற்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.
௧௧௭

### நன்னெறி

1428 வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத ருனே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு.

கக அ

புறப்பொருள் வெண்பாமாலை

1429 ஆமினி மூப்பு மகன்ற திளமையுந்
தாமினி நோயுந் தலைவரும்—யாமினி
மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த
வையைந்து மாய்வ தறிவு.

ககூ 1430

ஆனந்தத் திரட்டு

மந்திரவாட் பெற்றும் பகைவெல்லான் மற்றது கொண்
டந்தோதன் மெய்யை
யரிந்தான்போன்—றிந்தவுடல்
கொண்டுமுத்தி செல்லுங் குறிப்பின்றிச்
சிற்றின்பம்
கண்டுவினைக் காளாங் கணக்கு.

கஉO

பெருந்திரட்டு

1431 நீரின்மே லெழுத்தை யதனின்மே லெழுந்த
மொக்குளை நிகரில்பேய்த் தேரைக்
காரின்மேன் மின்னை யென்னுடம் பென்று
கருதினேன் கடைப்பிடி காணேன்

மேருவே வில்லாய்ப் புரமொரு மூன்றும்
விண்ணெழச் செற்றவெண் காடா

ஆருநே ரொவ்வா ஐயனே யடியேன்
செய்வதென் னருளிச்செய் வரயே.

கஉஅ

செய்யுட் கோவை (தி. ல.)

1432 • பன்ன ளுழைத்துப் பலபாடு பட்டுப் பரதவித்து
மன்னுள் புவியிலிம் மண்ணுளும் ஆக்கையை வாழவைப்பீர்
பின்னுள் வருவதை யுன்ன திருக்கும் பிழைதவிர்ப்ப
தெந்நா ளுழைப்பதிங் கெந்நாள் நம் ஆத்மமெய் யின்பத்

ப. பா.—15

திற்கே. கஉஅ



1433 அன்னம் பயில்கின்ற வாக்கையி லாசை
யதிகரித்தோம்
தன்னந் தனித்துடல் சாகின்ற காலந்
தவிர்ப்பதுண்டோ
முன்னங் குடிகொண்ட முன்னவன் சந்நிதி
முந்துவதற்
கின்னம் பிறப்பெடுத் தாலுமுண் டோமனம்
எண்ணுவதே.

கஉக

திருக்குறள்

1434 குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு.
கஉச 1435 உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.
கஉ௯ 1436 புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.
கஉ௯

---

## ௩௧. செல்வ நிலையாமை

### கந்த புராணம்

1437 காடு
பாடு

போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கையீ தெம்பிரா னல்கும்
வீட தேயலாற் றுன்பறு மாக்கம்வே றுண்டோ.
௧

### திருமந்திரம்

1438

இயக்குறு திங்க ளிருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ
மாமே. உ 1439 தன்னது சாயை தனக்குத
வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்க ளேழைகள்
உன்னுயிர் போமுட லொக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே.
ரு 1440 ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமுங்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை
வைத்திடும்
ஓட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தவை கைவிட்ட வாறே.

## பட்டினத்தடிகள் பாடல்

1441 தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பி
விட்டாற்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும்
புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம்
மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங் கேயிது
கண்மயக்கே. ௲ 1442 வாதுற்ற திண்புய

ரண்ணு மலையர் மலர்ப்பதத்தைப்

போதுற்றெப் போதும் புகலுநெஞ் சேயிந்தப் பூதலத்தில் •

தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்

காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

## சீவக சிந்தாமணி

1443• முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடிசில் மகளிரேந்த

நல்ல கருயானை ளுள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள்

அல்ல லடைய வடகிடுமி ஞேட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ் • செல்வ நமரங்கா ணினையன்மின் செய்தவமே நினைமின் •

கண்டீர். எ 228 பன்னூல் பாடற்றிரட்டு

1444 அம்பொற் கலத்து வெம்பிப் பசிநலிய

ளடுபா லமர்ந்துண்ணு வரிவை யந்தோ வெவ்விளையின் வேருயோ ரகல்கையேந்திக்

கொம்பிற் கொளவொசிந்து பிச்சை யெனக்கூறி நிற்பாட் கண்டும்

நம்பன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே

நினைமின் கண்டீர்.

1445
வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட் டழுவதுபோல் வருந்து மல்குல்
நண்ணுச் சிறுகூறை பாகமோர் கைபாக முடுத்து நாளும்
அண்ணுந் தடகுரீஇ யந்தோ
வினையேயென் றழுவாட் கண்டும்
நண்ணன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே
நினைமின்
கண்டீர். கூ

வளையாபதி

1446 ஈண்ட லரிதாய்க் கெடுத லெளிதாகி
நாண்டல் சிறிதாய் நடுக்கம் பலதரூஉம்
மாண்பி னியற்கை மருவி லரும்பொருளை
வேண்டா தொழிந்தார் விறலோ விழுமிதே.
கO

1447 வெள்ள மறவி விறல்வேந்தர் தீத்தாயங்
கள்ளரென் றிவ்வாற்றிற் கைகாப்பத் தீர்ந்தகலும்
முள்ளி லுறுபொருளை யொட்டா தொழிந்தவா
றெள்ளும் பெருந்துயர்நோ யெவ்வ மிகப்பலவே.
கக

1448 இன்மை யிழிவா முடைமை யுயிர்க்கச்சம்
மன்னல் சிறிதாய் மயக்கம் பெரிதாகிப்
புன்மை யுறுக்கும் புரையி லரும்பொருளைத்

துன்று தொழிந்தார் துறவோ விழுமிதே.
கஉ

சூளாமணி

1449 திருமக ணிலைமையுஞ் செல்வர் கேட்டிரேன்
மருவிய மனிதரை யிகந்து மற்றவள்

பொருவறு புகழினர் புதிய காமுறும்

ஒருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே.
கங 1450 புண்ணிய முலர்ந்தபின் பொருளி லார்களைக்
கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல்
எண்ணில ளிகந்திடும் யாவர் தம்மையும்
நண்ணிய நண்பில ணங்கை வண்ணமே.
கச

பாகவதம்

1451 வெறுத்து வாரியி னொருபொருள் வீழ்த்தினும் விரும்ப
மறுத்து வந்துதன் மருங்குறு மவற்குரித் தாயின்
ரு கூ. செல்வ நிலையாமை
229

நிறுத்தொர் செப்பினுள் வைத்துறை நின்றுதான் றுனே
பொறுத்துக் காப்பினு மாய்ந்துபோம் போம்பொருள் மாதோ.

1452

முறைதவிர் கொடுங்கோன் மன்னர் முனிவிற்கு நனியு
கறைகெழ கரவு செய்வார் கரத்திற்கு மழற்கு மச்சம்

மச்சம்

மறைவது தாய மாக்கள் வெளவுவ ரென்று மச்சம்
அறைபொருள் பெற்று ரல்ல ரச்சமே பெற்றார் போலும்.

1453
கசு

ஒல்லொழுக் கினரைத் தீய வொழுக்கரென் றுரைக்கச் செய்யும்
புல்லொழுக் கினரைத் தூய புலத்தரென் றுரைக்கச் செய்யும்

நல்லகற் புடைய மாதர் நலத்தையஞ் சாமை செய்யும்
பல்வகைத் துயருஞ் செய்யும் பாழ்ம்பொருள் பற்று ளார்க்கே.
கஎ

1454 கோடிபொன் னளிப்ப னின்றே கோடிரோர் மாத்தி ரைக்குள்
ளூடிய கிளைக்கோர் வார்த்தை யுரைத்தடை குவனென் றுளுந்
தேடிய கால தூதர் சிமிழ்த்தல்விட் டொழிவ ரேகொல்
வாடிய மருங்கு னங்காய் மாண்பொருட் பயன்கண் டாயோ.
கஅ

1455 பொருவறு பந்த மெல்லாம் புணர்த்திடுந் தெய்வ சிந்தை
ஒருவமே விட்டு நிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண் டதனு லன்றே
விருநிலத் திடைவெ றுக்கை யென்மஞர் புலமை சான்றோர்.
கஅ

1456 பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
மல்லனீ ருலகிற் றோன்றி மறைந்திடு நும்மை விட்டுச்
செல்வமென் றுறுவ தற்குஞ் செல்வமென் றுரைக்கும் பேர்நன்
றல்லவே விளைப்ப தாகா தரும்பெறற் செல்வம் பாவாய். உ0 1457 இம்மை தனின்மற் றிரும் பொருளை யீட்டல் காத்த லிழத்தலென
வெம்மை புரிமூ வகைத்துயரும் விளையா நிற்கும் பாவத்தால்
அம்மை நிரயத் துயருமுறு மந்தோ சீசி யிப்பொருளச்
செம்மை யுடையோர் வேண்டுமெனச் சிந்தித் திடுவ
ரோமறந்தும். உக பெருந்தேவனார் பாரதம்

1458 தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள்

வைத்தார்கள்.

• எப்பொழுது நீங்கா ரிடர்.

உ௨



நாலடியார்

1459 அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற்
செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

உ௧ 1460 யானை யெருத்தம் பொலியக்
குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள.

உ௪

1461 செல்வர்யா மென்றுதாஞ் செல்வுழி யெண்ணாத
புல்லறி வாளர் பெருஞ்செல்வம் எல்லில்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற்
றோன்றி
மருங்கறக் கெட்டு விடும்.

உ௫

1462 ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பங்—காத்தல்
குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்.

உகூ

## சிவ-குறுந்திரட்டு

1463 துப்புறு பொருளினைத் தேடத் துன்பமாங்
கைப்பொரு ளுண்டெனிற் கருத்து மோகமாம்
அப்பொரு ளழிந்திடும் போது மல்லலாம்
எப்பொழு தோபொரு ளின்ப மாவதே.

உஎ

## ஆசிரியமாலை

1464 அரையது துகிலே மார்பின தாரம்
முடியது முருகுநாறுந் தொடையல் புடையன
பால்வெண் கவரியின் கற்றை மேலது
மாலை தாழ்ந்த மணிக்காற் றனிக்குடை
முன்னது முரசுமுழங்கு தானை யிந்நிலை
இனைய செல்வத் தீங்கிவர் யாரே
தேவ ரல்ல ரிமைப்பதுஞ் செய்தனர்
மாந்த ரேயென மயக்கம் நீங்கக்
களிற்றுமிசை வந்தனர் நெருந லின்றிவர்

பசிப்பிணி காய்தலி னுணங்கித் துணியுடுத்து
மாசுமீப் போர்த்த யாக்கையொடு
தாமே யொருசிறை யிருந்தனர் மன்னே.

உஅ

## கூசு. செல்வ நிலையாமை

பெருந்தொகை

1465

இல்லெனின் வாழ்க்கையு மில்லையுண் டாய்விடிற்
கொல்வர் கயவர் கொலப்பட்டும் வீடுவர்
இல்லையுண் டாய்விடி னிம்மை மறுமைக்கும்
புல்லென்று காட்டும் புணர்வது மன்றே. உக

நீதி நூல்

1466

சுழல்சக டக்கால் போலுந் தோன்றியே யழிமின்
அமன்மன வேசை போலு மருநிதி மேவி நீங்கும்

போலுந்

பழைமைபோ லதனை நம்பிப் பழியுறச் செருக்கன் மேக
நிழலினை நம்பிக் கைக்கொள் நெடுங்குடை நீத்த லொப்பே.
கூO

1467 தரித்திரந் தரித்திர மென்னுந் தாரணி
சிரித்திடச் செல்வமே செல்வ மென்னுமிச்
சரித்திர முணர்ந்துமே தரையிற் பொன்னெமக்

குரித்தெனச் செருக்குத லூரனன் றுள்ளமே.

திருக்குறள்

௧௬ 1468 கூத்தாட் டவைக்குழாத் தற்றே

பெருஞ்செல்வம்

போக்கு மதுவிளிந் தற்று.

௧௨

1469 அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றால்
அற்குப வாங்கே செயல்.

௧௩

---

## ௪௦. துறவு

### கந்தபுராணம்

1470 செம்மை யாகிய சிந்தையர் சீரியோர்
வெம்மை யென்பதை வீட்டி விளங்கினோர்
தம்மை யுந்துறந் தேதலை நின்றவர்
இம்மை தன்னினு மின்பத்தை மேவுவார்.

௪ 1471 இன்மை யாவ தியாண்டுமில் லாதவர்
நன்மை யென்ப தியல்பென நண்ணினோர்
புன்மை யான பொருள்விரும் பாரவர்

தன்மை யாவரே சாற்றவல் லார்களே.
உ

## காஞ்சிப்புராணம்

1472 துறவே யறங்க ளெவற்றினுக்கும் பெரிதாம்
விடையூர் தோன்றலுக்குந்
துறவே யுவகை வரச்செய்யுந் துறவே
யயன்மா லுலகளிக்குந்
துறவே யீச னிடத்திருத்து மெவரு
மேலாச் சொல்லுவதுந்
துறவே யாமென் றெழுந்துநின்று சொற்றான்
சைவத் துருவாசன்.
க

## தணிகைப்புராணம்

1473 மனைக்குரி மனையா டன்னை வாய்த்தநன் மைந்தர்
தம்மைக்
கனைத்தலை சுருட்டும் வேலைக் கடனிகர் செல்வந்
தன்னை
யெனைத்தையு மிலம்பா டென்றே யிம்மெனத்
துறந்து பெம்மான்
தனைச்சர ணடைந்து ளாரே தனைநிக ரில்லாச்
செல்வர். ௲ 1474 சிற்றிலிழைத் தாடுநர்பாற்
செறிந்தாடும் விளையாட்டுப்
பொற்றமனை யறம்புரிகாற் புந்திசெயி
னகைதரல்போ
லற்றமிலா வில்லறமென் றுதரிக்கப் படுவதருட்

பற்றுமிகும் போதுன்னிற் பழுதெனத்தோற்
றுவதன்றே. ஓ

திருக்கூவப்புராணம்

1475 உறவு தந்தைதா யொண்டொடி மாதரார்
சிறுவர் வண்புவி செல்வம் பெரும்புகழ்
பிறவி னும்படு மாசை பிரிந்த மெய்த்
துறவி னல்லது துன்ப மகலுமோ.



சிவதருமோத்தரம்

1476 மண்ணினுந் தனத்தினு மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினுந்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்.
எ

பிரமோத்தரகாண்டம்

1477 வாங்குதிரைக் கடலுடுத்த ஞால மீதில்
மண்ணாசை பொன்னாசை மகளி ராசை
தீங்குதரும் எனக்கருதித் துறந்து தங்கள்
சிந்தனையைப் புலனெறியிற் செலுத்தா
ராகிப்
பூங்கனக வரைச்சிலைகொண் டவுணர் மாயப்
புரமெரித்த கயிலைமலைப் புனிதன் தாளில்
ஓங்குமறை நெறியின்வழி பாடு செய்வோர்
உதரவழி வருங்கவலை யொழிப்பர் மாதோ.
அ

திருவாசகம்

1478 மைய லாயிந்த மண்ணிடை
வாழ்வெனும் ஆழியு ளகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப்
பட்டுநான் தலைதடு மாறுமே
பொய்யெ லாம்வீடத் திருவருள்
தந்துதன் பொன்னடி யிணைகாட்டி
மெய்ய ளுய்வெளி காட்டிமுன்
நின்றதோ ரற்புதம் விளம்பேனே.

திருமந்திரம்

1479 பிறந்து மிறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலவிருள் நீங்க மறைந்து
சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்கட்குச் சுடரொளி யாமே.

1480 அறவன் பிறப்பிலி யாருமி லாதான்
உறைவது காட்டக முண்பது பிச்சை
துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே.

தாயுமானவர் பாடல்

௬0

௯௪

1481 அந்தக் கரண மடங்கத் துறப்பதே

யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே.

கஉ



1482 நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்

சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே.
கரு

## சிவ மெய்யான விளக்கம்

1483 எவ்விடத் தினுமெக் காலு மியாவையுந் துன்ப மாஞல்
பொய்வகைப் பிறவி நீங்கப் போகுமா றதனை நாடி
ஐவகைத் துவந்து வங்கண் மயக்கினை யறத்து றந்தே
உய்வகைத் திறத்தை யோர்வா னெருப்பட லடுப்ப தையா.
கசு

## சிவ-விளுவிளக்கம்

1484 உடலினைப் பேணல் விட்டா ரொன்றிய செல்வம் விட்டார்
விடலருஞ் சுற்றம் விட்டார் வேட்கைவே ரோடும் விட்டார்
இடனுடைக் குலமும் விட்டார் யானென தறவே விட்டார்
கடனுடைக் கல்வி விட்டார் கற்பனை முழுதும் விட்டார். கஞ
1485 ஊரொடும் பேரும் விட்டா ருலகியன் முழுதும் விட்டார்
ஆரொடு மார்வம் விட்டா ரதனினுஞ் செற்றம் விட்டார்
பாரொடும் விண்ணுந் துன்ப மெனப்பழு

தறவே விட்டார்

தேரிய வெவையும் பொய்த்தே ரெனநகை செய்து விட்டார்.

கசு

## சிவானந்தமாலே

1486 உடம்பு மனைவிமக வுற்ருரோ டூர்கேள்
அடைந்ததனம் வீடடிமை காணி—தொடர்ந்தவினை
என்னவெனுஞ் சொன்னினைவு போரு விறையருளால்
மன்னியபே ரின்பம் வரும்.

கள

## சிவ-குறுந்திரட்டு

1487 கருப்ப மென்னுமக் காரிருட் சிறையினிற் கதுவு
நெருப்பில் வெந்துள நிலைகெடத் தலைதகர்ந் திடவே
பொருப்பி னின்றுவீழ் பவனெனப் போந்தமை நினையா
விருப்பு நெஞ்சினர்க் கென்னையா மினியியம் புவதே. கஅ

1488 குழவியி லறியாத் துன்பங் குரவராற் குமாரந் துன்பங்
கழிதரு காம நோயாற் காளையாம் பருவந் துன்பம்
விழைவுறு போகஞ் சுட்டி வெறுக்கையை விரும்பி மேவுந்
தொழிலினுற் றுன்ப மந்தத் தொழிலிடை யூருற்

றுன்பம். கக

1489 அல்லலாற் செல்வந் துன்ப மதினுநல் குரவு துன்பங்
கல்வியாங் காரந் துன்பங் கற்றில ஞயிற் றுன்ப
மல்லன்மா ஞாலந் தன்னில் வலிமிகு மதத்தாற் றுன்ப
மில்லையேல் வலியோர் தம்மா லீடழி வுறலாற் றுன்பம். உ0

## சo. துறவு

285

1490 சிறப்பறு நோயாற் றுன்பஞ் செடிகொண்மூப் பதனாற் றுன்பம்
மறப்புறத் துயக்கஞ் செய்யு மரணவே தனையாற் றுன்பம்
பிறப்பவ ரெக்கா லத்தும் பெறுவது துன்ப மானால்
துறப்பதே கருமந் துன்பப் பிறவியாந் துயர நீங்க. உக

### சீவகசிந்தாமணி

1491 ஏமநீ ருலகமோ ரிம்மிப் பாலென
நாமவேல் நரபதி நீக்கி நன்கலம்
தூமமார் மாலையுந் துறக்கின் றுனரோ
காமனர் கலங்கழிக் கின்ற தொத்ததே.
உஉ

1492 ஆளியாற் பாயப் பட்ட வடுகளி யானை போல
வாளிவில் தடக்கை மைந்தன் வாய்விட்டுப் புலம்பிக்
காமம் நாளினும் நஞ்சு துய்த்தேன் நச்சறை யாக
நன்பொன் தோளியர்த் துறந்து தூய்தாத் தவஞ்செய்வ
லடிக ளென்றான்.
உ௬

மணிமேகலை
1493 பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்ன
தற்றோ ருறுவ தறிகென் றருளி.
உ௭

வளையாபதி
1494 உற்ற வுதிர மொழிப்பான் கலிங்கத்தை
மற்றது தோய்த்துக் கழுவுத லென்னொக்கும்
பற்றினா னாகிய பாவத்தை மீட்டும்
பற்றொடு நின்று பறைக்குறு மாறே.
உ௮
1495 தானஞ் செய்திலந் தவமு மன்னதே
கானந் தோய்நில விற்கழி வெய்தினம்
நானந் தோய்குழல் நமக்குய்த லுண்டோ
மானந்தீர் கொள்கையார் மாற்றம்பொய்
யல்லவால். உ௯

இராமாயணம்
1496 இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்

மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடின்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ.
உள



1497 மக்களைக் குருக்கள்தம்மை மாதரை மற்று ளோரை
ஒக்குமின் னுயிரன் னுரை யுதவிசெய் தாரோ டொன்றத்
துக்கமித் தொடர்ச்சி யென்று துறப்பராற் றுணிவு பூண்டோர்
மிக்கது நலனே யாகி வீடுபே றளிக்கு மன்றே.
உஅ

நாரத சரிதை

1498 அருந்திய குறையிற் றுன்ப மாங்கவை நிறையிற் றுன்பம்
பொருந்து நோய் பொறுத்தல் துன்பம் பொருந்திய போகத் துன்பம்
மருந்தினுக் குழுற்றல் துன்ப மற்றவை யருந்தல் துன்பம்
இருந்தவா றிருத்தல் துன்பம் யார்கொலோ துன்ப மில்லார்.
உக

ஞானவாசிட்டம்

1499 வருத்தமற் றச்சஞ் சோக மதமின்றி நன்னூற் பின்போய்
ஒருத்தரா லேவ லின்றி யுலாவுக நசிக்க வேண்டா
வருத்தங்க ளநர்த்த மாகு மளவில்போ கங்க ளேயாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்ப நிராசை தானே. க௦

1500 இடும்பைகூர் சங்க மின்றி யியற்கையா சார மெய்திக்
குடும்பமாந் துயர்சிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணாள் செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே.
கக

ஒழிவிலொடுக்கம்

1501 நித்திரைசெய் வீட்டி னெருப்பும் பெரும்படையும்
முட்டிப் புறப்பட்டார் முற்றத்தே—பித்தரைப்போல்
நில்லென்று சொன்னாலு நிற்பரோ வப்படிக்காண்
இல்லறத்தை நீத்தா ரியல்பு.
கஉ

நாலடியார்

1502 நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்—புரைதீரா
மன்னு விளமை மதிழ்ந்தாரே கோலூன்றி
இன்னுங் கெழுந்திருப் பார்.

கடக

அறநெறிச்சாரம்

1503 நீக்கருநோய் மூப்புத் தலைப்பிரிவு நல்குரவு
சாக்காடென் றைந்து களிறுழக்கப்—போக்கரிய
துன்பத்துட் டுன்ப முழப்பர் துறந்தெய்தும்
இன்பத் தியல்பறியா தார்.

கசு



நீதிநெறி விளக்கம்

1504 பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.
கஇ

திருக்குறள்

1505 யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்.
கசு 1506 வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.
கஎ 1507 அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை

விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

கஅ 1508 மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க் குடம்பு மிகை.

கக 1509 யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

௨0 1510 தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

௨க

---

## ௨க. அவாவறுத்தல்.

### பெரிய புராணம்

1511 கேடு மாக்கமுங் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர்.
க

தணிகைப் புராணம்

1512 மன்னிய செல்வ ராகி வாழினும் வளமிக்

கீண்டித் தன்னின்மேம் பட்டார்க்கண்டு தழைத்தவர்
போறல்வேட்டுப் பின்னரு மீட்டி யீட்டிப் பேதுற லன்றிப்
பெற்ற நன்னிதி கொண்டு நீதி நடத்துத லேவர் வல்லார்
உ

## சேது புராணம்

1513 கழைகொள் சாறு நிம்பநெட்டி
லைக்கொள் வாரி காஞ்சிரம் பழம்வ ருக்கை யுதவுமிக்க
பழம ரங்கொள் பாவையாம் இழைகொ ளேம நாட்ட
ரம்பை யென்னு மங்கை யாயினும் விழைவ தில்லை
யாயின் மேரு வெற்பு மற்ப மாகுமால். ௩
1514 எவரை யும்மனந் திரிப்பது மீன்றவர் தமக்குத்
தவறி ழைத்திடப் புரிவதுந் தையலார் தங்கள் கவரில்
கற்பினை யழிப்பதுங் கற்குநூற் கலைகள் அவையெ
லாங்கெடக் கெடுப்பதும் பொருள்விருப் பன்றே. ௪

## திருக்கூவப் புராணம்

1515 ஈட்டுறுங் காலையி னேமஞ் செய்வுழிக்
கூட்டலிற் றுயரினைக் குறுகுஞ் சுற்றமும்
வாட்டிடும் பகைஞராம் வகைசெய் வித்தலின் வேட்டிடும்
வெறுக்கையை வெறுக்கை யின்பமே. ௫

## காசி ரகசியம்

1516 பெண்ணிடத் தாசையுட் சிறிது பெற்றிடின்
மண்ணிடத் தாசையும் வந்து கூடிடும்
எண்ணிடத் தஃதுற விரியத் தக்கதோ

கண்ணிடக் கொடியதாங் கனக வாசையே.

## சுக. அவாவறுத்தல்

1517 ஆசையில் லார்களே யறவர் மேலவர்
ஆசையில் லார்களே யருந்த வத்தினர்
ஆசையில் லார்களே யருட்க லப்பினர்
ஆசையில் லார்களே யரிய முத்தர்கள்.

1518 ஆசையுட் பட்டவ ரல்லற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரளற்றிற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரயர்விற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரரங்கப் பட்டவர்.

எ

அ

1519 மனைவியர் மக்களில் வாஞ்சை யுண்மையே
புனைதரு நலமெலாம் போக்கித் தாழ்த்திடும்
மனைவியர் மக்களில் வாஞ்சை யின்மையே
புனைதரு பரகதி பொருந்த வுய்க்குமே.

க 1520 ஆசைசற் றிருந்திடி னதினி மித்தம்வந்
தோசைசால் வெகுளியு மொருங்கு நண்ணிடும்
ஆசையா ரஃதுற மயக்க மும்முறும்
† ஈசையா ரடிக்கலப் பிரிக்கு மின்னவே.
௧௦

பிரபோத சந்திரோதயம்

1521 அண்டாத பேராவலைமையாத தென்னே
விண்டாவு மலைபோல வேண்டுங்கொல்
வெண்சோ
றுண்டாலும் வயிறுள்ள தொருசா ணிதற்கோ
கண்டார்கள் பின்சென்று கையேற்கு மாறே.
௧௧

சிவ தருமோத்தரம்

1522 ஆசை முதலா மாசனைத்தும்

அறுத்தே உடலும் வெறுத்தரிய
தேசன் சிவன்பொற் பாதமலர்
செறிந்தார் பிறப்பை மறந்தார்கள்
பேசற் கரிய பெருமையினைப்
பெற்றா ரல்லர் கற்றாலும்

மாசு மலிந்த ஆசையினால்
மயங்கித் தியங்கு மானிடரே.

கஉ

பிரபுலிங்கலீலை

1523 அந்தக் கரண சுத்தியே
அறிவை அறிதற் சாதனமவ்
வந்தக் கரண சுத்திதனக்
கறையுங் கருமம் ஆரணங்கள்

† ஈசையார் - பார்வதியை யுடையார்.



அந்தக் கரண சுத்திதான்
ஆவ தவாவற் றிடுதலே
அந்தக் கரண சுத்தியினால்
அடைவன் பிண்டப் பெயரன்றே.

கக 1524 ஆசை யறுதல் வீட்டின்பம்
நேரே யடையக் காரணமாம்
ஆசை யறுதல் அலதில்லைப்

பலநூ லனைத்தும் ஆய்ந்திடினும்
ஆசை யறுவோன் சிவனுதல்
திண்ணம் எனநன் றறிந்திருந்தும்
ஆசை யுறுத லென்கொண்டோ
அந்தோ மனிதர் அறியேமே.

கச

சாந்தி புராணம்

1525 கனிந்தநெய்க் கவளங் கையில் வைத்துடன் கழறு வாரை
முனிந்திடு களிறு போல்வார் முத்தியை விளக்கு நீரார்
மனங்கொளத் துறந்தி டாதே வால்குழைத் தெச்சிற் கோடுஞ்
சுணங்கனைப் போலு நீரார் பற்றிடைச் சுழலு நீரார். கரு

திருமந்திரம்

1526 வாசியு மூசியும் பேசி வகையினாற்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையும் அன்பும் அறுமி னறுத்தபின்
ஈச னிருந்த இடமெளி தாமே.
கசு

1527 மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே.

கஎ

1528 ஆசை யறுமின்க ளாசை யறுமின்கள்
ஈசனோ டாயினு மாசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட வானந்த மாமே.

கஅ

## பட்டினத்தடிகள் பாடல்

1529 உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங்
கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே
விடையேறு மீசர் திருநாம முண்டிந்த மேதினியில்
வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்
பிறைக்கே. கக



## தாயுமானவர் பாடல்

1530 ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளினுங் கடன்மீ திலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி

நெஞ்சுபுண் ணுவ ரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாக முடியும்
உள்ளதே போதுநா னெனக் குளறியே
யொன்றைவிட் டொன்று பற்றிப்
பாசக்க டற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற
நிறைகின்ற
பரிபூர ணனந் தமே.

உ0

1531 ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ்
செனவுமன தலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட்
டதுந்தூர்ந்து முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற்
கொடுமைபற்றி நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே
நிராசையின்றேற் றெய்வ முண்டோ.

உக

திருக்கழுமல மும்மணிக்கோவை

1532 பொருளாசை பெண்ணாசை பூவாசை
யென்னும்
மருளாசை யாமாசை மாற்றித்—தெருள்ஞான
வேந்தராய் வாழலாம் மெய்யன்பால் நன்னெஞ்சே
பூந்தராய் நாதரைநீ போற்று.

உஉ
## சிதம்பர மும்மணிக்கோவை

1533 கொடியு முரசுங் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பெருஅன் ருனே கொண்டு
பொதுநீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியிற் கண்டு கண்ணிற் கூறி

யிருநிலம் புரக்கு மொருபெரு வேந்தன்
மிக்கோ ஞெருவன் வெறுக்கை நோக்குழித்
தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற
ப. பா.—16



இழப்புறு விழும மெய்தியழுக் கறுத்து
மற்றது பெறுதற் குற்றன தெரீஇ
யயிற்சுவை பெறு அன் றுயிற்சுவை யுருஅன்
மாணிழை மகளிர் தோணலங் கொளாஅன்
சிறுகாற்று வழங்காப் பெருமூச் செறிந்து
கவலையுற் றழிவதூஉங் காண்டும் அதாஅன்று
விறகெடுத் தூர்தொறுஞ்

சுமந்துவிற்றுக்—கூலிகொண்டு

புற்கையு மடகு மாந்தி மக்களொடு
மனையும் பிறவு நோக்கி யயன்மனை
முயற்சியின் மகனை யிழித்தன னெள்ளி
யெனக்கிணை யிலையென வினையன்மற்

றொருவன்

மனக்களிப் புறீஇ மகிழ்வதுங்

காண்டும்—அதனால்

செல்வ மென்பது சிந்தையி னிறைவே
யல்கா நல்குர வவாவெனப் படுமே
ஐயுணர் வடக்கிய மெய்யுணர் வல்லதை
உவாக்கடல் சிறுக வுலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற் கரும்புணை யின்றே.

உக

ஞானவாசிட்டம்

1534 மனத்தில் முளைக்கும் ஆசையெலாம்
வடித்த குடாரத் தால்மரம்போல்
கனத்த வேரோ டறுமளவும்
கண்ணு ஞானம் பெறுமளவும்
மனத்த பேதம் போய்ச்சமமாம்
அளவும் போதம் உறுமளவும்
செனித்து மரிக்குந் துயரல்லால்
சிறந்த தன்மைத் திறமெங்கே.

உஉ

1535 பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவுற்
றுக்களித்துப் படர்ந்து மீண்டு
திரமான அகங்கார முகில்விவே

கக்காற்ருல் சிதறிப் போகும்
வரமான பதம்வேண்டின் தன்மனத்தின்
ஆசைமுதல் மாற்ற வேண்டும்
உரமான புவியைமுதல் உழுதன்றே
விளைப்பயன்கள் உறுகின் ருரே.

உஞ
1536 ஆதரித்த நற்குணங்கள் ஆகுவிஞல்

தந்திரிபோல் ஆசை யாலே
சேதமுறுஞ் சொருபநிலை செறிதரவல்

லமையில்லாச் சிந்தை யேங்கண்

## சுக. அவாவறுத்தல்

243

மீதுவலை யுறுபுட்போல் மெலியவரும்
ஆசைத்தீ வெதுப்ப நொந்தேன்
கோதிலமு திற்குளித்தும் குளிராதென்
றென்மனத்தில் குறிக்கின் றேனுல்.

உக
1537 பின்னுறுபக் கத்திருள்போல் பேராண்மைத்
தீரரையும் பீதி செய்யும்
நன்னயனங் குருடாக்கும் உபசாந்தத்

தோர்தமையும் நடுக்கஞ் செய்யுஞ்

சின்னமுறு காதலெனுங் கிழமடந்தை
ஒருபொருளுங் கிட்டா தேனும்
இன்னிதியம் நயந்தெவர்க்கும் பின்தொடரும்
மனோரதமும் எய்தா தாகும்.

உஎ 1538 மாளாத காதலெனும் வற்சநா

பிக்கொடியின் வனத்தைச் சுட்டு
நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்றோ
இப்பயன்தான் நேரா நிற்கும்
கோளான பொருளனைத்தின் முன்பொடுபின்
பினிமையிலாக் குற்றங் கண்டும்
.மீளாத பாவனையால் கட்டுண்பார்

வேசரியே வேறென் றன்றால்.

உஅ
1539 பிறவிக்
இறவுச்

கடலிற் காதலெனும் பெருவாய் முதலை பிடித்தீர்க்க
சுழியாற் சுழலுமவர்க் கிதய நாவா யெட்டாவா
மறமுற் றுளத்தை யுளத்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தாமல்
உறவுற் றுனைநீ யுய்விப்பா யுயிர்க்குப் பிறரா லுய்வுண்டோ.
உகூ

1540 வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாங்
குடும்பபரம் வெறும்பொய் யென்றே
இங்காசை யறநீக்கி யெல்லையிலாப்

பரமபதத் திருந்து வாழ்வாய்

சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந்தென்
சிதைவுற்றென் றீதோ நன்றே
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென்
கெட்டாலென் பாச மாயை.

௧௦ 1541 தாரதன மிகுமென்னிற் றனையாகும்
அப்பாசந் தனைத்துக் கொண்டால்
ஆரதனை யறுத்தகலும் விரகுடையா
ரறிவில்லா ராசை விஞ்சிக்



கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங்
கொடுந்துயரைக் குறித்த போதே
தீரதையா மறிஞர்க்கு விரத்தியுள
தாய்ச்சித்தந் தெளியு மன்றே.
௧௯

ஒழிவிலொடுக்கம்

1542 நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண்
மாடுகுலம் பொன்னுடம்பின்
வாதனைகள்—கூடத்

தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை
யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்.
கஉ.

வள்ளலார் சாத்திரம்

1543 ஆசையாற் சந்திர னங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சௌபரி யறிவை நீங்கினன்
ஆசையால் நராசுரன் ஆவி போக்கினன்
ஆசையால் வாலியும் அழிந்து போயினன்.
கங

வைராக்கிய சதகம்

1544 ஆமு னிச்சையே மேலுமே லும்பிறப்
பளிக்கும் வித்தென நெஞ்சே
நீம றுத்திடா சைக்கடல் சுவறுமே
நினைவெ னுந்திரை மாயும்
போமி றந்தெலாம் நினைவுமப் பொழுதிலப்
பொழுது பூரண மாய
சோம சேகரத் தெந்தை பொற்
கழலையுந் தொழல்ஐய மிலைநாமே.
கச

சிவபோக சாரம்

1545 துரத்தியுனை யாசை தொடராம லென்றும்
விரத்தியின லாங்கவற்றை
விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேர்ந்தபிர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய்.

௧_௬

1546 எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்

எத்தனைசா தித்தாலும் இன்புறு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்

பொய்யாகத் தோன்றாத போது.

௧_௭

1547 தேசமூர் பேர்காணி சீர்வரிசை சாதியெனும்
ஆசையால் நெஞ்சே யலையாதே—நேசப்



பொருப்பானை நின்னறிவிற் போக்கு வரவற்
றிருப்பானைப் பார்த்தே யிரு.

௧_எ

## குண்டலகேசி

1548 அவாச்சார்ந்து பற்றாகும் பற்றினால் வினைமுதிர்வாம்

தவாதவிவ் வினைமுதிர்வால் பிறப்பாகும் பிறப்பினால்

குவாவிய பிணிமூப்புச் சாக்காடின் கூட்டமாய்
உபாயவித் தடுமாற்றம் ஒழிவின்றி யுருளுமே.

௧_அ

1549 ஆசையா லருந்தா ராகி யருநிதி வருந்திப் பெற்ருேர்
நேசமா ரரசர் கள்ளர் நெடும்பகை முதலி ஞேராற்
காசுலாம் வெருவுட் கொள்வார் கண்படை சிறிதுங் கொள்ளார்
நாசமே யடைவார் காமம் விட்டவர் நலன்ருய்ப் பாரால். ௪௯ 1550 இருள்படு காட்டி னூடே யிருந்துழல் சிதட ராயோர்
தெருள்படு நகரந் தாமே சேரத ரறிக லார்போன்
மருள்படு காம முன்னி வருவினை முயலா நிற்போர்
பொருள்படு நலஞ்செய் வீட்டிற் புகுமத ரறிக லாரே. ௫0 1551 உடற்குள் வந்தெழு மொள்ளழல் போன்றுபின்
கிடைத்தி லாப்பொருண் மேற்கிளர்ந் தோடியே
நடக்கு மாசையை நண்ணு முவப்பினுல்
அடக்கு மந்தண ரேயறி வாளரால்.
௫௧

## குசேலோபாக்கியானம்

1552 மைந்தர்க டம்மைப் போற்ற வளநிதி வேண்டு மென்ருய்

நந்திய பறவை கான நயந்துறை விலங்கு முன்ற
வந்தபல் லுயிர்க்குச் சேம வைப்புண்டோ வருவா யுண்டோ
எந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானு முண்டோ. ௬௨
1553 அல்லது நாளைக் கென்செய் வாமெனுங் கவலை யுண்டோ
எல்லையி லொன்றி ஞலொன் றிடிப்புண்டு வாழ்த லுண்டோ
ஒல்லுமவ் வுயிர்க டம்மு ளுணவிலா திறந்த துண்டோ
சொல்லரி பரந்த வுண்கட் டுடியிடைப் பேதை மாதே. ௬௩
1554 தானல் லுடலை யானென்றுந் தன்னே டுரிமை யல்லாமை
என முறுபல் பொருளைத்து மென்ன தென்று முறநினைத்து
மான வயர்பற் றினுக்கேது மயக்க மதனை மாய்ப்பவனே
வான வருஞ்செல் லருமுலகம் புகுவா னென்னு மறைநூல்கள். ௬௪

1555 அற்று னென்று சொலப்படுவா னுசை யற்று னொருவனே
மற்று தரவி னஃதொன் றும் வைத்துப் பிறவே துக்களெலாஞ்
செற்று னெனினு மவையாக்குஞ் செயிர்த்துன் பகன்று னேயன்றி
உற்றுர் வணங்கு மவன்போல வொழிந்தான் கொல்லோ வுறுபிறவி.
௬௫

1556 மெய்யை யுணர்தன் முடிவாக வேண்டுங் கருவி யெலாம் பெற்றுச்
செய்ய முத்தி யடைவ தற்குச் சிறந்து ளோனை மறவிவழிப்
பைய நுழைந்து பவமீட்டும் பாய்த்திக் கெடுக்க வல்லதவா
ஐயவதனுக் குள நடுங்கி யஞ்சிக் காத்த லறிஞர் தொழில். ௬௬

## மேருமந்தர புராணம்

1557 மோக மேதிரி யக்கிடை யுய்ப்பது
மோக மேநர கத்தில் விழுப்பது
மோக மேமற மாவது மற்றவும்
மோக மேயற மாசற நிற்பதும்.
௬௭

## நாரத சரிதை

1558 பெற்றவை பெற்றுளி யருந்திப் பின்னரு
மற்றுமோ ரிடவயின் வயிறு தானிறைத்
திற்றைநாள் கழித்தன மென்று கண்படும்
ஒற்றைமா மதிக்குடை யரசு முண்டரோ.
௬௮

## நாலடியார்

1559 மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவினைக்—கைவாய்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்.

சசு

### சோமேசர் முதுமொழி வெண்பா

1560 கோவணமொன் றிச்சிப்பக் கூடினவே பந்தமெலாந்
தூவணஞ்சேர் மேனியாய் சோமேசா—மேவில்
இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.
௩௦

### நீதிவெண்பா

1561 ஆசைக் கடியா னகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியா னவானே—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பா துலகந்
தனையடிமை கொண்டவனுந் தான்.
௩க



### செய்யுட்கோவை (தி-ல)

1562 பொல்லாத ஆசை பொருளாசை யொத்த பொருள்கிடைத்தும்
நில்லா தொருநிலை நேர்பிற மூச்செயும் நேயமுக்கும்
சொல்லா லளப்பருந் துன்பந் தொடர்கினுந் தூயசுடர்

வல்லாது வண்டிழுக் கும்போ விழுத்து
வதைக்கு மன்றே. ௬௨
1563

இப்பா ருடைமையி லெல்லையில் லாவிச்சை யேற்றுகின்றோர்
தப்பா தியமன் வருநாள் தயங்குவர் தாரணியில்
எப்பா லுடைமையுந் தன்னீங்கற் பால
தெனநினைப்பார்
ஒப்பார் மலையை யவன்வலி யங்குற்
றுடைவதற்கே. ௬௩

திருக்குறள்

1564 அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ்
ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.
௬௪

1565 வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.
௬௫

1566 வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
ஆண்டு மஃதொப்ப தில்.
௬௬

1567 அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.
௬௭

1568 அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.
௬௮

1569 அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.
௬௯

1570 இன்ப மிடையறு தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.
௭௦

1571 ஆரா வியற்கை யவா நீப்பி னன்னிலையே
பேரா வியற்கை தரும்.
௭௧

## ௭௨. காலத்தின் அருமை

### திருவாசகம்

1572 ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்

தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய்.
க

செய்யுட்கோவை (தி-ல)

1573
நேரமன் றேபொருள் நேரத்தை நாம்நிறுத் தாற்றுமுப
காரமன் றேவுயர் வுந்தாழ்வு மீவது கர்த்தன்தந்த
வாரமன் றேவிந்த வாழ்விதில் நன்மையை
மன்னுவித்தல் பாரமன் றேநமக் கேனைய வாழ்விற்
பயனென்னவே. உ

1574 எந்நே ரமுமிறை தந்தத னலதெல் லாநமக்குப்
பொன்னேர மேயென் றறிந்துபொன் போலதைப்
போற்றியிங்கு
மன்னே ருயிர்கட்கு நம்மாற் செயத்தகும்
மாண்செயலால்
நன்னேர மாக்குதல் நங்கட னுமென்று
நம்புவமே. ௩ 1575 நாளென்ற வாழ்முதல்
வாளாக் கழித்திடின் நம்முயிர்க்கு
வாளென்று மாறி அறுத்தழிக்
குந்தெய்வ வன்கொடையின்
கோளென் றறிந்தறம் செய்யின் உயிருணுங்
கூற்றனுக்கே
கேளென் றிருந்துபின் வாளென்று மாறுங்
கிடையுடைத்தே. ௪

திருக்குறள்
1576 நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

௫

1577 நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு.

அ

---

## ௪௩. ஊழ்

### கந்தபுராணம்

1578 மெத்துதிற லாடவரு மெல்லியனல் லாருஞ்
சித்தமுற நன்கினொடு தீதுசெய லூழே
யுய்த்தபடி யல்லதிலை யாமுழவ ரொண்செய்
வித்துபய னேயலது வேறுபெற லாமோ.

க 1579 முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினு
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்.

உ

1580 திருவுறு கின்றுழி மகிழ்ந்துந் தீர்வுழிப்
பருவர லெய்தியும் பாசந் தன்னிடை
யரிதுணர் கேள்விய ரழுங்கு வார்கொலோ
வருவது வருமது மறுக்க லாகுமோ.

ங

1581 தீங்குவந் தடையு மாறு நன்மைதான் சேரு

மா றுந்
தாங்கள்செய் வினையி னாலே தத்தமக் காய வல்லா
லாங்கவை பிறரால் வாரா வமுதநஞ் சிரண்டி னுக்கு
மோங்கிய சுவையின் பேத முதவினர் சிலரு முண்டோ. ௪
1582 இன்பம தடைந்த காலை யினிதென மகிழ்ச்சி யெய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந் துன்பந் தானு மிவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை யோர்வார் முழுவது முணர்ந்த நீரார். ௫
1583 வறியவர் செல்வ ராவர் செல்வர்பின் வறிய ராவர்
சிறியவ ருயர்ந்தோ ராவ ருயர்ந்துளோர் சிறிய ராவர்
முறைமுறை நிகழு மீது முன்னையூழ் வினையே கண்டா
யெறிகதிர் வழங்கு ஞாலத் தியற்கையு மினைய தன்றே. ௬
1584 ஆக்கமும் வறுமை தானு மல்லலு மகிழ்வு மெல்லா
நீக்கமி லுயிர்கட் கென்று நிலையெனக் கொள்ளற் பாற்றே

மேக்குயர் கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவு நாளு
முறைமுறை பொருந்திற் றன்றே. எ

1585 ஆவது விதியெனி னனைத்து மாயிடும்
போவது விதியெனி னெவையும் போகுமாற்



றேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
வேவரு மறியொணு வீசற் கல்லதே.
அ

விநாயக புராணம்

1586 ஆமே யொருவ ரொருவர்க் கிடரை யாக்குவது
மாமே யொருவ ரொருவர்க் கிடைநன்மை யாக்குவதுந்
தாமே செய்தன ரன்னது தாமே புசிப்பதன்றிப்
போமே தலையிற் பொறித்தான் பிறழ்ந்து நினைப்பினுமே. கூ

தணிகைப் புராணம்

1587 இருவினை யென்ப மனமுதல் மூன்றின்
இயற்றுறு மிதமகி தங்கள்
பெருவினைப் பயன்கள் புண்ணிய பாவம்

பேசுமிக் கருமத்தின் பயன்கள்
மருவிடு மின்ப துன்பமா மவைதாம்
மாய்வினவ் விருவினை தோற்றும்
ஒருதனு விளைப்ப மற்றொரு தனுவின்
உணப்படுங் கெட்டுங்கே டிலவாய்.
கO

1588 இன்பமே பயக்கும் புண்ணிய மெல்லாம்
இழிதரு பாவங்க ளெல்லாந்
துன்பமே பயக்கும் புண்ணிய பாவம்
தொக்கதம் பயன்தரா தொழியா
கொன்படு வினைகள் ஒழியிரு வினையும்
குலாவுறு புண்ணிய பாவ

வன்புறு பயனை அப்பயன் போல
வழங்குறு தொழிவகை யிலையே.
கக

பேரூர்ப் புராணம்

1589

நன்னலம் பயப்ப துண்டேற் றீயவு நல்ல வாகுஞ்

சென்னல மிழப்ப துண்டே னல்லவுந் தீய வாகு
மின்னவால் வினையி ருக்க மெனினிடை யேது வான

வன்னவர் தம்மை நோவ வழகிலை வந்தோ
வந்தோ. கஉ

சேது புராணம்

1590 ஆலமது நல்குமவ ராரமுத முண்ணும்
பாலுடைய ராவது படிக்கணுள தாமோ
சாலுமது ரக்கனிக டானுகரு வாரோ

ஞாலமிசை யெட்டிமர நட்டவர்க டாமே.
கரு

சரு. ஊழ் 25

பிரமோத்தர காண்டம்

1591
ஊழ்வினை யுறுத்த காலத் துறுதவத் தீன்ற நற்றாய்
வீழ்முலை சுரந்த பாலு முண்டபின் வெய்ய
நஞ்சா
மாழ்கடற் பிறந்த நஞ்சு முண்டபின் னமிழ்த
மென்றால்
வாழிய மாந்த ரெல்லா மிருவினை வயத்தர்
மன்னோ. கசு 1592 இன்பம்வந் துற்ற காலை
யிருங்களி யெய்த ருனுந்

துன்பம்வந் துற்ற காலத் துயருழந் தழுத ருனு
மன்பதை புரக்கும் வேந்தே யறிவிலார் மாட்சி நல்லோர்
துன்பமு மின்பந் தானுந் தொல்வினைத் தொடர்ச்சி யென்பார்.

கரு

பிரபோத சந்திரோதயம்

1593 பேராசை யாலீனர் பின்செனறுழன்றுந்
தீராத மிடியாளர் சிலர்பாரி லுண்டே
நேராக வரில்வாழ்வு நினையாமல் வருமால்
வாராத தார்தாம் வருந்தினும் வராதே.

கசு

பிரபுலிங்கலீலை

1594 இன்ப நனிசெய் நல்வினையி னிறப்பி னிறப்ப வுடம்பினிடை
துன்ப மதுசெய் தீயவினை தோன்று மத்தீ வினைமாய்வின்
முன்பு செயுநல் வினைவருமிம் முறையா விரண்டு மாறிவரு
மென்ப வுலகி லொண்பகலு மிரவு மாறி வருதல்போல். கஎ

அரிச்சந்திர புராணம்

1595 கதிதரும் அயனு மாலுங்
கடக்கருங் கொடிய நீர்மை
விதியினை யெளிய நம்மால்
வெல்லலாம் தகைமைத் துண்டோ

அதிகம்வந் தெய்தா மேனுள்
அமைத்தவே அடுக்கு மல்லால்
மதிவலோய் இதற்கு வாடி
வருந்தலை யென்று சொன்னுன்.
௧௮

## மேருமந்தர புராணம்

1596 வருதிரை மணலினும் வளியி ஞற்றிரள்
சருகிலை போலவுஞ் சாயை போலவு
மருவிய வினைவசம் வருவ தல்லதிங்
கொருவர்க ளுறவொரு நாளு மில்லையே. ௪௧

1597 பேறிழ வின்பந் துன்பம் பிணிபகை பிறப்பி வற்றி
ஞறுந்தா முன்னஞ் செய்த வினைவழி
வருவ தல்லால்



வேறென்று லாவ துண்டோ வினையென்பா னின்ற
தொன்று மாறின்றய் நின்ற தல்லான் மற்றிவன் செய்த
துண்டோ. ௨0

## யசோதர காவியம்

1598 அஞ்சின மெனினு மெய்யே யடைபவந் தடையு
மாறு
லஞ்சுத லதனி லென்னை பயனமக் கதுவு மன்றி
யஞ்சுத றுன்பந் தானே யல்லது மதனிற்

சூழ்ந்த
நஞ்சன வினைக ணம்மை நாடொறு நலியு
மென்றான். உக 1599 கறங்கென வினையி னோடிக்
கதியொரு நான்கி னுள்ளும்
பிறந்துநாம் பெற்ற பெற்ற பிறவிகள் பேச
வாகா
விறந்தன விறந்து போக வெய்துவ தெய்திப்
பின்னும்
பிறந்திட விறந்த தெல்லா மிதுவுமவ் வியல்பிற்
றேயாம். உஉ

சிவஞான சித்தியார்

1600 மேலைக்கு வித்து மாகி விளைந்தவை யுணவு மாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக
ளெல்லாம்
மேலைத்தான் பலமாச் செய்யு மிதமகி தங்கட்
கெல்லாம்
மூலத்த தாகி யென்றும் வந்திடு முறைமை
யோடே. உக 1601 பேறிழ வின்ப மோடு
பிணிமூப்புச் சாக்கா டென்னு
மாறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுப
வத்தால்
ஏறிடு முன்பு செய்த கன்மமிங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்ம மேலுடற் சேரு
மன்றே. உச

பட்டினத்தடிகள் பாடல்

1602 அழுதாற் பயனென்ன நொந்தாற்

பயனென்ன வாவதில்லை

தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர்
சுடவுரைத்த

பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும்
பங்கயத்தோ

னெழுதாப் படிவரு மோசலி யாதிரென்
னேழை நெஞ்சே. உ௫

குகை நமச்சிவாயர்

1603 வையமுழு தும்படைத்து வாழும் அருணகிரி
ஐய னமைத்தபடி யல்லாமல்—நொய்யமனம்
நூரு யிரம்விதமாய் நொந்தாலும்
எள்ளளவும்
ஏரு ததிற்குறையா தே.
உ௬

சிவானந்த மாலை

1604 நீடுந் தலைகீழ்கால் மேலாகி நின்றாலும்
கூடும் படியன்றிக் கூடாதால்—ஓடி
வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
இருந்தாலோ நெஞ்சே யினி.
உ௭

சாரு. ஊழ் 253

வைராக்கிய சதகம்

1605 இணையில் ஞானபூ ரணன்முழு துணர்ந்தமைத்
திட்ட வாறல திங்கே
அணைவு ருதொரு தீதெமக் கவன்றரின்
ஆர்த டுப்பவர் நெஞ்சே
பணைகொள் தாவரம் மானமின் மையினுருப்
பற்றி நின்றில கொல்லோ
உணைவு ருதுடற் காவல்கை விடுதியூழ்
உள்ளவா விடா தென்றே.

உஅ

மகாராசா துறவு

1606 அவரவர் வினையின் அவரவர் வருவார்
அவரவர் வினையள வுக்கே
அவரவர் போகம் என்றதே யாயின்
ஆருக்கார் துணையதா குவர்கள்
அவரவர் தேகம் உளபொழு துடனே

ஆதர வாரென நாடி
அவரவ ரடைதல் நெறிகன்மத் தடையும்
ஆதர வாதர வாமே.

உக

புறநானூறு

1607 யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்த

வினிதென மகிழ்ந்தன் று மிலமே முனிவி
னின்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது

கல்பொரு திரங்கு மல்லற்பேர் யாற்று
முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்

பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.
க0

சீவக சிந்தாமணி

1608

சாதலும் பிறத்த றானுந் தம்வினைப் பயத்தினாகு
மாதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்

நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோழி யென்றான்.
கக

1609 நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுத மாகு
மில்லையே லமுது நஞ்சா மின்னதால் வினையி
னாக்கங்
கொல்வலியா னிவனை யென்று மிவன்கொல்லு
மென்னை யென்று
மல்லன நினைத்தல் செல்லா ரறிவினாற் பெரிய
நீரார். ௯௨
1610 அகப்படு பொறியி னாரை யாக்குவார் யாவ
ரம்மா
மிகப்படு பொறியி னாரை வெறியராச் செய்ய
லாமோ
நகைக்கதிர் மதியம் வெய்தா நடுங்கச்சுட்
டிடுத லுண்டோ
பகைக்கதிர்ப் பரிதி சந்து மாலியும் பயத்த
லுண்டோ. ௯௩
1611 புரிமுத்த மாலைப் பொற்கோல் விளக்கினுட்
பெய்த நெய்யுந்
திரியுஞ்சென் றற்ற போழ்தே திருச்சுடர்
தேம்பி னல்லா
லெரிமொய்த்துப்
பெருக லுண்டோ விருவினை சென்று தேய்ந்தாற்
பரிவுற்றுக் கெடாமற் செல்வம் பற்றியா ரதனை
வைப்பார். ௯௪
1612 இடுக்கண்வந் துற்ற காலை யெரிகின்ற
விளக்குப் போல
நடுக்கமொன் றுனு மின்றி நகுகதா னக்க

போழ்தவ்

விடுக்கணை யரியு மெஃகா மிருந்தழு தியாவ ருய்ந்தார்

வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்க ளன்றே.

கஉ

1613 ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கற் றெண்ணீர்

கூடகங் கொண்ட வாழ்நா ளுலந்ததேற் கொல்லும் பவ்வத்

தூடகம் புக்கு முந்நீ ரழுந்தினு முய்வர் நல்லோர்

பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தி னென்றான். கங

1614 ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணா

போம் பொருள்கள் போகுமவை பொறியின்வகை வண்ணந்

தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதர லின்றே

வீங்கு புனல் யாறுமழை வேண்டியறி யாதே.

கச

1615

அல்லித்தா ளற்ற போழ்து மருதநூ லதனைப் போலத்

தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்

புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப்

புக்குப் பின்னின்
றெல்லையில் துன்ப வெந்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே. ௧௮

1616 பெருமுழங்கு திரைவரைகள் நீந்திப் பிணியுறினுந்
திருமுயங்க லில்லையெனி னில்லைபொரு ளீட்டம்
ஒருமுழமுஞ் சேறலில ரெனினும்பொரு ளூர்க்கே
வரும்வழி விஞயுழந்து வாழ்கதவ மாதோ. ௧௯

சூளாமணி

1617 மதியினை மலரச் சூழ்ந்து வருந்தித்தாம் படைக்கப் பட்ட
நிதியினை நுகர்து மென்று நினைத்தினி திருந்த போழ்திற்



பதியினைக் கலக்கிச் சென்று பறித்துத்தாம் பிறர்க்கு நீட்டும்
விதியினை விலக்க மாட்டா மெலிபவால் வெளிய நீரார். ௨0

இராமாயணம்

1618 அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்பத் துன்பந்தான்

விதிவச மென்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ.
சக

1619

இறத்தலும் பிறத்த ருனு மென்பன விரண்டும் யாண்டுந்
திறத்துளி நோக்கிற் செய்த வினைதரத் தெரிந்த வன்றே
புறத்தினி யுரைப்ப தென்னே பூவின்மேற் புனிதற் கேனு
மறத்தின திறுதி வாழ்நாட் கிறுதிய துறுதி யென்ப. சஉ

குசேலோபாக்கியானம்

1620 மக்களுக் கிரங்கி வாடு மடத்தகை யணங்கு கேட்டி
தக்கமுற் பவத்தி லான்ற தருமநன் கியற்றி னோர்க
ளொக்கவிப் பவத்தி லின்ப மொருங்கனு பவிப்ப ரின்றேன்
மிக்கவெந் துயரத் தாழ்வ ரிதற்குள மெலித லென்னே. சங

1621 துப்பிதழ் மடந்தை நல்லாய் தோன்றிய சீவ ரெல்லா
மிப்புவி யிடத்துச் சால வெண்ணுவ ரெண்ணி யாங்கே
யெப்படி முற்று முற்ரு தெம்பிரா னொருவற் கன்றி

யப்படி முற்றிற் கீழ்மே லாம்பகுப் பிரண்டுண் டாமோ. சுச

1622 தேற்றமுற் பவத்திற் செய்த தீங்குநன் கெனுமி ரண்டு
மாற்றல்சால் கரும மென்ப ரக்கரு மத்தை நோக்கிச்
சாற்றுமிப் பிறப்பிற் றக்க தரித்திரஞ் செல்வ நல்கிப்
போற்றுவ னுயிரை யெல்லாம் பொலிசுடர்த் திகிரி வள்ளல். சுடு

1623 அலரவன் றீட்டி வைத்த வாயுளி னளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புஞ் வெறுப்பு ஞவு
மில்கவுண் டின்றே லின்ரு மின்னுயி ருடம்பின் வாழ்தன்
மலர் தலை யுலகத் தென்று வகுப்பர்நூ லுணர்ந்த வல்லோர்.

1624 நல்வினை யடைந்த சுசு

காலை நனிநலந் தினைப்பர் நன்மை
யல்விளை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய தாகுந் தோன்றனு பவங்க டந்தம்

புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் ருமால். சஎ



1625 தழைவிரி கற்ப நாடு சார்தலும் புவியில் யாரும்
விழைதகு போகந் துய்த்து மேவலு நல்லூ ழாமாற்
பிழைபட நிரயத் தாழ்ந்து பெருந்துய ருறலு மண்மேற்
குழைமிடி யாதித் துன்பு கூர்தலுந் தீயூ ழன்றே. சஅ

1626 கன்மத்தை ஞாலத் தவர்ஆ ருளரே கடப்பார்
பொன்மொய்த்த தோளான் மயல்கொண்டு புலன்கள் வேருய்
நன்மத்தை நாகத் தயல்சூடிய நம்ப னேபோல்
உன்மத்த ஞான் தனையொன்றும் உணர்ந்தி லாதான். சகூ

பாகவதம்

1627 விண்ணவ ரமுதம் உண்ண
வெகுண்டிழந் தவுணர் நொந்தார்
கண்ணனை நினைந்து ளோர்தாம்
கருதிய பயன்கொள் மாறும்
அண்ணலை நினையா தாசை
அடைந்தவர் அரிய போகம்
நண்ணினும் அடைந்தி டாது

நலிதலு மியற்கை யன்றே.

௰

## பழமொழி

1628 ஆற்றுந் தகைய வரசடைந்தார்க் காயினும்
வீற்று வழியல்லா வேண்டினுங் கைகூடா
தேற்ருர் சிறியா ரெனல்வேண்டா
நோற்ருர்க்குச்
சோற்றுள் ளும் வீழுங் கறி.

௰௧

## நாலடியார்

1629 பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

௰௨

1630 வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தன போக மவரவ ராற்ருன்
விளங்காய் திரட்டினு ரில்லை களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்.

௰௩

1631 ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு
மெத்துணையும்
வேண்டாமற் ரீய விழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால

தீண்டா விடுத லரிது.

௺ ௫௬

## ௨௩. ஊழ்

அறநெறிச்சாரம்

1632 இறந்த பிறப்பிற்குன் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக வினிப்பிறந்
தெய்தும் வினையின் பயன்.

மூதுரை

1633 ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானுழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்.

1634 எழுதியவா றேகா ணிரங்கு மடநெஞ்சே
கருதியவா ருமோ கருமங்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா
யீந்ததென்
முற்பவத்திற் செய்த வினை.

௫௪

1635 வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற்
போகா—விருந்தேங்கி
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

௩அ

1636 ஈட்டும் பொருண்முயற்சி யெண்ணிறந்த
வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாந்—தேட்ட
மரியாதை காணு மகிலத்தீர் கேண்மின்
றரியாது காணுந் தனம்.

௩௯

1637 ஆவாரை யாரே யழிப்பா ரதுவன்றிச்
சாவாரை யாரே தடுப்பவ—ரோவாம
லையம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்.

௪0

1638 ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகு

மன்றி யதுவரினும் வந்தெய்து—மொன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கு

மெனையாளு மீசன் செயல்.

சுக

1639 தாந்தாமுற் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்று
வெறுத்தாலும் போமோ விதி.

சுஉ

ப. பா.—17





நீதிவெண்பா

1640 தானே புரிவினையாற் சாரு மிருபயனுந்
தானே யனுபவித்த றப்பாது—தானூறு
கோடிகற்பஞ் சென்றாலுங் கோதையீர் செய்தவினை
நாடிநிற்கு மென்றார் நயந்து.

சுங

தண்டலையார் சதகம்

1641 ஆழியெல்லாம் பாலாகி அவனி யெல்லாம்
அன்னமய மாரு லென்ன
சூழவந்தே யிரப்பவர்க்குப் பசிதீர

உண்டிருக்குஞ் சுகந்தான் உண்டோ
ஏழுலகும் பணியவருந் தண்டலையா
ரேசொன்னேன் எந்த நாளும்
நாழிநெல்லுக் கொருபுடைவை விற்ருலும்
நிருவாணம் நாய்க்குத்தானே.

கச

தனிப்பாடல்

1642 சந்திரனுக் குடலூனந் தனதனுக் கோர்
கண்ணூனந் தருவி னிழல்
இந்திரற்கோ பகக்குறியாம் இயமனுக்கோ
புழுக்காலா மிரவி யீன்ற

மைந்தனுக்கோ கால்முடமாம் வனசனுக்கோர்
தலைகுறைவாம் வரலாறீ தேல்
பந்தமுள மானிடரை விதிவிடுமோ
ஆலவாய்ப் பதியு ளானே.

கரு

மோகவதைப்பரணி

1643 தொகுத்தநிதி பலகோடி யுண்டெனினுந்
தொலைவிலே

வகுத்தவகை யல்லாது துய்ப்பவரார்
மண்ணினிலே கக - 1644 ஒன்றிரண்டே
யுடுப்பதுவு முண்பதுவு நாழியே
என்றுமொரு வன்கிடையு மிருசாணுக்
கெண்சாணே. கஎ

ஊழ்வாதம்

1645 வாழ்வினல் மந்திரத்தால் யந்திரத்தால்
மருந்தினல் வேள்வியால் விண்ணவரால்
வேதனத்தால் மேதையால்
கேள்வியால் மாதவத்தால் சாதகத்தால்
கீழ்ச்செய்த ஊழ்விடா
செய்தவனல் உண்டறுத்தே விடவேண்டும். கஅ



திருக்குறள்

1646 நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த
னுண்மை யறிவே மிகும்.
கக 1647 பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

௭௦ 1648 வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

1649 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

---

௭௧

௭௨

# உ. பொருட்பால்

## சுசு. அரசு

### பெரியபுராணம்

1650 மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக்
குங்காலைத் தானதனுக் கிடையூறு தன்னாற்றன்
பரிசனத்தா லூனமிகு பகைத்திறத்தாற் கள்வரா
லுயிர்தம்மா லானபய
மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ. ௬

### கந்தபுராணம்

1651 நஞ்சுறை படைகள் கற்று நவையுறு தொன்ன
லாரை வஞ்சினத் தெறியும் வீரர் வளநக ரதனை மாற்றோ

ரிஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினு மெண்ணரி யன்றி
வெஞ்சினத் தினைமேற் கொண்டு விரைந்தம ரியற்றச் செல்
லார். உ

1652 குலத்தினை வினவி யுள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி யன்னோர்
வலத்தினை வினவி யல்லான் மற்றென்று மனங்கொள்
வாரோ. ௩

1653 ஒற்றரைத் தூண்டி யன்னோ ருறுவலி யுணர்வரேனு
மற்றுமோ ரொற்றி னல்லா லன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறு மனிக மன்றி யொருபுடை துவன்றிச் சூழும்
பெற்றியு முளதோ வென்னு மேவியாரிஇத் தேர்வர்
பின்னும். ச

1654 மூவியன் மரபி னுலு முற்றுரு தொழிந்த காலைக்
கோவியன் மரபுக் கேற்பக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற் *
றேவியல் படைஞ ரோடும்

படையொடு மெதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண்
டணைவ ரன்றே. ௫

1655 நேர்ந்திட வலியி லோரு ஞாட்பிடை நேர்தி
ரென்னுச்
சேர்ந்திடும் போழ்தும்;வேந்தர் செருவினைக்
குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றோ வெல்லினுந் தானை
தூண்டிப்
பேர்ந்திடச் செய்வ ரஃதே பெறலரும் புகழ
தன்றே. ௬

1656 மாற்றலர் சூழ்ச்சிய தெனினு மாறதாய்
வீற்றெரு நிலைமைய தென்னு மேவுமுன்



ஏற்றெதிர் காப்பரே யென்னி னன்னவர்க்
காற்றரு மிடுக்கண்வந் தடைதற் பாலதோ.
௭

1657 நேரலர் தங்களை நேர்ந்து ளாரெனப்
பேரிக லாற்றியே பெரிது மாய்வதும்
பூரியர் கடனலாற் புலமைக் கேற்பதோ
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே.
௮

1658 முற்றுற வருவது முதலு மன்னதாற்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே

தெற்றென வுணர்ந்துபின் பலவுஞ் செய்வரேற்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ.

க 1659 திரைகொள் வேலைபோ னிறைதரு கோட்டகஞ் சிறிதோர்
கரையி லாவழி யுடைந்திடு மன்னது கடுப்பப்
பொருதி றற்படை பலவுள வென்னினும் போற்று
மரச ரில்வழி நின்றிடா தன்னவை யழியும்.

கo 1660 அறிவுடை முதிய ரென்று மாண்டிளை யோர்க ளென்றுஞ்
சிறியவர் பெரிய ரென்றுந் திருத்தகு வளத்த ரென்றும்
வறியவ ரென்றும் வீரர் மதிக்கிலர் யாவ ரேனும்
விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளைப்ப ரன்றே. கக

1661 திகழ்ச்சிகொண் மேவலர் சிறியர் தம்மொடு
நிகழ்ச்சிகொள் போரிடை நேர்வ ரேயெனிற்
புகழ்ச்சிய தில்லையாற் பொருது வெல்லினு
மிகழ்ச்சியின் பாலதா மெவரெ வர்க்குமே. கஉ

1662 முந்துறு மாற்றலர் முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினுந் தமர்கண் மாயினு
மைந்தர்கள் விளியினு மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தீர்வரோ.

கஉ

1663 ஓடினர் தம்மையு முற்றுத் தாண்மலர்
சூடினர் தம்மையுந் தொழுத கையராய்
வாடினர் தம்மையும் வலியி லோரையுஞ்
சாடின ரல்லரோ நவைக்கட் டங்குவார்.

கச

1664 தொக்க போரில் வெருவித் தொலைவோரைத்
தக்கதோர் துணைவர் தந்தையர் தாயர்
மக்கள் பெண்டிரு மறப்பர்க ளென்னின்
மிக்குளா ரிகழ்தல் வேண்டுவ தின்றே.

க௫

1665 யாதொர் துன்னல னெதிர்ந்திடி னின்று
காத லேவலி கடந்திடு சூழ்ச்சி



நீதி யன்றதுவு நேர்ந்தில தென்னிற்
சாத லேதகுதி சாய்ந்திட லன்றே.

க௬

விநாயக புராணம்

1666 உரைசெயு மறத்திறுற்ற லொருகுடை நிழற்ற முந்நீர்த்
தரைமுழு தாளவேண்டிற் றகைபெறு மமைச்சு

நாடு

புரையறு மரணேமிக்க பொருள்படை நட்பெண்
ருறும்

வரைசெயப் படாத யாக்கை யுறுப்பென
மதித்துக் கோடி. கஎ / 1667 வினையினுஞ் சாமை
நிற்றல் வினைருக் களித்தல் செய்யும்

வினையிடை மனமேற் சேறல் விளங்கிய
வறிவு வல்லே

வினையினை முடித்த லாண்மை வெங்கொலை
யாதி நீக்கல்

வினைவளர் மான மற்றும் வேந்தருக் கியல்பு
மைந்தா. கஅ

1668 குடிதளர் வுற்ற காலைக் கொள்பொரு ளாறி
லொன்றும்

விடுவடு செய்து தங்கள் விழுக்குறை
முறைசொல் வார்க்குத்

தடையறக் காட்சி நல்கித் தண்ணிய
வின்சொல் காட்டி

வடுவற விடித்துச் சொல்வார் வன்மொழி
பொறுத்தல்

வேண்டும். கக

1669 செருவினெட் டலரைக் கொன்று
திறைகொண்டு நாடு காத்துப்

பொருளினை யீட்டிக் கள்வர் புல்லலர் சுற்ற
மாதி

பருகுத லிலாமைக் காத்துப் பயிலற மாதி மூன்றின்
மருவுற விடுத்துச் செங்கோல் வளர்ப்பது மாட்சி யாமே. ௨௦

1670 ஐயமே திரிவே யென்னு மவையற வறநா னீதி
வையமால் யானைபாய்மா வன்படைத் தொழினு லாதி
பையவே கற்றுக் கற்ற பண்பின ரோடு நாளு
முய்யவே யளவ ளாவி யுரைத்தவா நிற்றல் வேண்டும். ௨௧

1671 செய்யும் பொழுதே யழிபொருளிற் சிறப்ப தொப்ப திரண்டினிலொன்
றுய்ய வுதவி வழிபயக்கு மொண்மை வினையைத் தேர்ந்துளத்தின்
ஐய மகன்ற வினத்தோடு மாய்ந்து தனித்தும் புரிந்திடுக
வெய்ய வாக்கங் கருதிமுதல் விளிக்கும் வினையைப் புரியற்க.

௨௨ ✓ 1672 வலியே கால மிடமிவற்றுன் மாற்றுன் றனக்கு முனக்குமுள
பலவா நிலையும் வினைதொடங்கும் பண்பு மதற்கா மிடையூறும்
விலகாததனை விலக்குவதும் வெல்லு மாறும் வென்றதனு
லுலவாப் பயனு முதலனைத்து மோர்ந்து

தெளிந்தே வினை

செய்க. உக

1673 பெரிய முயற்சி வினைப்பயனைப் பேணு
வினையே பயன்சிறிதா
மரிய வினையே பின்றுயர மாக்கும்
வினையே புரிந்தாலும்

சச. அரசு 263

பெரிய முயற்சி முதலாகப் பேசும் வினைக்கு மறுதலையா முரிய வினையை விடுத்தாலு முலவாப் பெருமை யொழியுமே.

உச

1674 வலியா ரான காலத்து வழங்க லாதி மூன்றனையு
மெலியாரிடத்துச் செய்திடலு மெலியாரான
காலத்து
வலியா ரிடத்தி னெறுத்தலையும் வகுக்கின்
வேந்தர்க் கவைமைந்தா
நலிவா மதனு லவரவர்பா னடத்து முறைநேர்ந்
தியற்றிடுக.

உரு

1675 நல்ல குடியிற் பிறந்தாறு நவையு மறப்பு
மடிபிழைப்பென்
றல்ல லுறுக்கு மிவை முதலா மனைத்து நீக்கிப்
பழிக்கஞ்சி
யொல்ல லுறுநா ணுடையானே யோர்ந்து
தெளியப் படுமைந்தா

வல்ல கலைதேர்ந் தாசற்றுர் மாட்டும் வெளிறு மருவிடுமே. உசு

1676 பெருமிதம் பெரிய செல்வம் பேரெழில் பெரிய வின்பந்
தருமிகு களிப்பின் மூழ்கித் தங்குறி னேம கண்டா
வருமிகு பொச்சாப் பந்த மறவியா னின்னைக் காத்துப்
பொருமிகு பகையை வெல்லும் பொருளெலா மிழப்ப தாகும்.
உஎ

1677 உற்றிடு மாற்றன் மூன்று முபாயங்க ணான்கு நன்மை
பற்றிய தொழில்க ளைந்தும் பண்புறு குணங்க ளாறு
மற்றைய வனைத்துங் கேடாம் வளர்பிறப் பேழன் காறும்
பற்றிடு நன்மை யின்றும் பாழ்த்தபொச் சாப்புச் சாரின்.
உஅ / 1678 எய்திய குற்றத் தோர்கள் யாவரா யினுங்கண் ணோடா
தைதென நாடி நீதி யறந்தலைப் பிழையாத் தண்டஞ்
செய்தலே செங்கோ லாகுஞ் செய்யகோ லின்றே லென்று
முய்திசெய் மழையான் மக்க ளுறுபய னுற்ற போதும். உகூ

1679
மழைவளஞ் சுரக்கு மாறும் வயனிலம் விளையு மாறும்
விழையறம் வளரு மாறும் வேதநூல் விளங்கு
மாறுந்
தழைபொரு ளீட்டு மாறுஞ் சமரிடை வெல்லு
மாறும்
பிழைதப வாழு மாறும் பிறழ்தராக் கோலி
னுகும். ௯0

1680 கருவிநஞ் சாதி தம்மாற் காமரா ருயிரைக்
கொல்வோர்
வெருவரச் சூறை கொள்வோர் மேவியா
றலைப்போர் கள்வ
ருருவளர் பிறனில் வேட்போ ருவர்முத
லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று பயிர்க்களை களைதல்
போலாம். ௯௧

1681 பரிசனம் பகைவர் கள்வர் படர்தரு முயிர்க
டாமென்
றுரைசெயைந் திடத்தி னு முலகிடை
யிடையூ றெய்தா
வரிசையிற் காத்து நீதி வழுக்கினர் தம்மை
யொத்திக்
கரிசறப் பொருளுங் கோடல் காவலர் தரும
மைந்தா. ௯௨

1682 முறைமைமுட் டாது செய்து முழுநிலங் காப்பி னந்த
விறைவனைச் செங்கோல் காக்கு மெளியசெவ் வியனு மாகான்
குறைவளர் குற்ற மோரான் குணத்தொடு முறைசெய் யானை
நிறைதரு பாவந் தேய்க்கு நெடும்பகை யின்றி மேனும். கூக

1683 அறுதொழி லாளர் நூல்க ளயர்ப்பரான் பயனின் றுகு
முறைபெய லொழியுங் கூழுங் குடிகளு மொருங்கு நீங்கும்
பெறுபய னுட்டிற் குன்றும் பிறங்கொளி நிலைபெ றுது
கறையின்மேற் பொருள்கைக் கொண்டு காவலை விடுப்பின்
மைந்தா. கூஉ

1684 வறுசேர் வினையைப் புரிதரா ருழா
லூறுவந் தடுப்பினுங் கலங்கார்
தேறுகா ரியத்தை முடிப்புழி யன்றிச்
செயன்மொழி யாதியா லிடையே
வேறுபோ மாறு விளக்குறார் துணிந்த
வினைதுளங் காதுவல் விரைவார்

வீறுசே ரிவரை யுருவுகண் டெள்ளா
வேந்தனே வேந்தனு மைந்தா.

கூஉ

## திருக்குற்றுலப் புராணம்

1685 காலைதொறு முறையரொடு நூலாய்ந்து
குடிமுதலாங் காப்புப் போற்றி
மேலைநூற் பாவலர்க்கும் வேதியர்க்கு
மீந்துபல வேள்வி வேட்டுச்
சாலைதனிற் சிவபெருமான் றமர்களொடுந்
தமர்களொடுந் தகவா யுண்டு
மாலைதொறு மொற்ருய்ந்து துயிலிடத்தும்
பார்காப்பார் மனுநூற் செல்வர்.

கூசு

1686 முடிபு னைந்தசீர் மன்னவர் நெறியினுல்
முன்ன வர்தவத் தால்பைந்
தொடிம டந்தையர் கற்பினுல் மதிதொறும்
சொரித ருமும் மாரி

வடிபெ றுந்துளி மாரியாற் பலபயிர்
வளந்த ரும்பயிர் தம்மால்
குடிவ ளந்தரும் குடியினுல் மன்னர்செங்
கோல்மு றைதழைத் தோங்கும்.

கூஎ

திருவாப்பனூர்ப் புராணம்

1687 தூங்காமை யரணுடைமை படையுடைமை
துணிவுடைமை தூய்மை கேண்மை
நீங்காமை யறிவுடைமை நாணுடைமை
பொறைமைபுன்மை நெறிச்செ லாமை,
பூங்காமை யெனக்கொடுக்குங் கொடைமடமை
யிவைதழுவிப் புரவு பூண்டோன்
தீங்காமை வகைப்பயந்தீர்த் தூறகற்றி
யேழ்நிலங்கோல் செலுத்தா நின்றேன்.
கஅ

செவ்வந்திப் புராணம்

1688 கற்பு மங்கையர் நிறையெனும் வரம்பினைக் கடந்தால்
வெற்பு துங்கிட வானகம் புவியின்மேல் விழுந்தா
லற்பு மன்னவன் செய்யகோல் வளைந்திடு மாறு
லுற்ப லஞ்செறி மாலையாய் விலக்குவா ருண்டோ. கக

1689 திண்புகழ் படைப்பதும் பகையைத் தேய்ப்பது
மண்புரந் தளிப்பது மன்னர் பேரணி
வெண்கலை மூசுதல் கவரி வீசுதல்
புண்களும் புடைத்திடும் புனலு மாடுமே.

1690 இன்புடை யறங்க ணல்லோ ரிளையவர் குரவ ராகத்
தன்பெருங் கிளைகள் சுற்ற மந்திரத் தலைவ ராக
மன்பதை கனிகளாகத் தானைகண் மணிவீ ழாக
வன்பெலாம் வடிவ மாக வரசுமேல் வளரு மன்றே. ௪௧

1691 தெருண்ட சிந்தனை மன்னவ னீதிநூ றிசையி
னுருண்ட தேரின னென்னுமு விழிகளுண் டுலகின்
மருண்டு மன்னனும் விழியொளி மறைந்திடின் மற்றை
யிரண்டு கண்ணினும் பயனிலை யாகுமே யென்றான். ௪௨

பிரமோத்தர காண்டம்

1692 வேந்தன் முறைதிறம்பின் வேத விதிதிறம்பு
மேந்திழையார் தங்கற்பு மில்லறமு நில்லாவா
மாந்தர் பசியா லுணங்க மழைவறந்து
பாந்தண் முடிகிடந்த பாரின்விளை வஃகுமால். ௪௩

1693 தீயூட்டித் தாமுண்ணுஞ் செய்தவத்தோ ரானினங்க

ணேயூட்டு காய மிகழ்ந்தியற்று நோன்பினேர்

வேயூட்டு தோளார் விருத்தர்சிறு பாலர்தமைத்
தாயூட்டிப் போற்றுதல்போற் ருர்வேந்தன் காக்குமால். ௬௬



1694 தேவர் நிலைகடவார் மேலோர் திறம்பிழையார்
நாவி னிரண்டுரையார் நன்கல் லவைபுரியார்
காவன் முறைதிறம்பார் காமச்செயல் பெருக்கார்
பூவலயங் காவல் புரியும் புரவலரே. ௬௫

1695 உற்றவு றஞ்சாப் படையு முயர்குடியு
முற்றுல்வாய் பைங்கூழு முன்வருதல் சேமிக்கும்
பெற்றி யமைச்சு முதவும் பெருந்துணையுங்
கொற்ற வரணு முடையானே கோமகனே. ௬௬

1696 ஏடவிழ்பைந் தாரோ யிமையோர் பதம்பெறினு
நாடு நடுங்க நன்கல் லவை புரியார்
வேடர் பரிவேட்டஞ் செய்யார் வினைதருஞ்சூ
தாட நினையார் மட்டுண்ணு ராசரே.
௬௭

1697 குரவர் தமைக்காப்பர் செய்ந்நன்றி கொல்லார்
கரவடரைக் காய்வர்பழி கண்ணோட்டஞ்
செய்யா
ரிரவலருக் கீவ ரெதிர்ந்தோர் முனையின்
விரவு தமதுயிரு மெண்ணார்கள் வேந்தரே.

சஅ

1698 நீதியு மொற்று நிகரிலாக் கண்ணு

நீணிலத் தல்லவை யொழித்தும்

வேதியர் தேவர் மெலிந்துளோர் வறிஞர்

மெலிவறக் குறைத்திறம் விழையு

மோதருங் குடியு முலப்பிலா நிதியு

முயர்ந்திட வனுதினங் காத்துஞ்
சூதினிற் பகைவர் திருவினைக் கவருஞ்
சூழ்ச்சியும் வினையமுஞ் சூழ்ந்தும்.

சகூ

1699 தருமநூ லாய்ந்து மடைந்தவர்ப் புரந்துந்
தடுப்பருங் காலங்க ளுணர்ந்து

மெரிபசும் பூணூர் நடத்தொழில் கண்டும்
யாழினோ ரின்னிசை கேட்டும்

விரியிருண் மாலைப் பொழுதெலா மநங்கன்
விழாவணி நடத்துதல் போலப்
புரிகுழன் மடவார் கலவியிற் றிளைத்தும்
போக்குவர் புரவலர் பொழுதே.

௯௦

பிரபுலிங்க லீலை

1700 உறையில் வாளொடு மாவழங் குறுவனத் தோடி
மறவ னோர்பொரு டருகென விரத்தலை மானு
மிறைவன் வாழ்குடி தன்னிலொன் றெருபொருளிரத்த
லறவ னாகிய நீயிதை யறிந்திலை யந்தோ.

௰௪ சச. அரசு 267

திருமந்திரம்

1701 கல்லா வரசனுங் காலனு நேரொக்குங்
கல்லா வரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா வரச னறமோரான் கொல்லென்பா
னல்லாரைக் கால னணுகிநில் லானே.

௰உ 1702 நாடோறு மன்னவ னாட்டிற் றவநெறி

நாடோறு நாடி யவனெறி நாடானே
ஞடோறு நாடு கேடு முட னண்ணுமா
ஞடோறுஞ் செல்வ நரபதி குன்றுமே.

௫௬

1703 தத்தஞ் சமயத் தகுதி நில் லாதாரை
யத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
யெத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்தல் வேந்தன் கடனே.

௫௭

திருவாய் மொழி

1704 திருவுடை மன்னரைக் காணில்

திருமாலைக் கண்டேனே என்னும்
உருவுடை வண்ணங்கள் காணில்
உலகளந்தான் என்று துள்ளும்
கருவுடைத் தேவில்க ளெல்லாம்

கடல்வண்ணன் கோயிலே யென்னும்
வெருவிலும் வீழ்விலும் ஓவாக்
கண்ணன் கழல்கள் விரும்புமே.

புறநானூறு

1705 கடுஞ்சினத்த கொல்களிறுங்
கதழ்பரிய கலிமாவு

நெடுங்கொடிய நிமிர்தேரு
நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
வறநெறி முதற்றே யரசின் கொற்ற
மதனால், நமரெனக் கோல்கோ டாது
பிறரெனக் குணங்கொல் லாது
ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையுந்
திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்று
முடையை யாகி யில்லோர் கையற
நீ, நீடு வாழிய.

இ.கு:

1706 நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.

இவ

1707 காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடியாத்து நாடு பெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே.

1708 கால்பார் கோத்து ஞாலத் தியக்குங்
காவற் சாகா டுகைப்போன் மாணி
னூறின் றாகி யாறினிது படுமே
யுய்த்த றேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு

மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே.

சீவக சிந்தாமணி

1709 உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமா
லிறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வௌவ வதன்புறங் காக்கலார்.

௬௦ 1710 கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி
யானையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி
னென்றான். ௬௧
1711 நீதி யாலறுத் தந்நிதி யீட்டுத
லாதி யாய வரும்பகை நாட்டுதன்
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்
பேது செய்து பிளந்திடல் பெட்டதே.
௬௨
1712 ஒற்றர் தங்களை யொற்றறி ஞய்தலுங்
கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலுஞ்

சுற்றஞ் சூழ்ந்து பெருக்கலுஞ் சூதரோ
கொற்றங் கொள்குறிக் கொற்றவற் கென்பவே.
௬௩

1713 இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டோ
தடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை
யிடத்திடை யழுங்கச் செற்றுங் கின்னுயிர் செகுத்த தன்றே.

௬௪

1714 வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா
னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்
மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியா
ணுறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன். ௬௫

1715 தருமன் தண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்

திரும கன்றிரு மாநில மன்னனே.

கூகூ

மணிமேகலை

✓1716 கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியுங்

கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரு
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன்

றன்னுயி ரென்னுந் தகுதியின் றாகும்.

கூஎ

சூளாமணி

1717 ஒருமையால் துன்ப மெய்தும் ஒருவனை உம்மை யாலே
திருமையால் முயங்குஞ் செல்வச் செருக்கொடு திசைப்ப நோக்கி
இருமையும் ஒருமை யாலே இயற்றலின் இறைவன் போலப்
பெருமையும் உடைய தெய்வம்

பிறிதினி தில்லை யன்றே. கூஅ

1718
கண்ணெனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
விண்ணினைச் சுழல வோடும் வெய்யவ
னென்னும் பேர
எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணது
வில்லை யாயின் ,
மண்ணினுக்
கிருளை நீக்கும் வகைபிறி தில்லை மன்னோ. கூகூ

1719 வைய மின்புறின் மன்னனின் புறும்

வெய்ய தொன்றுறிற் றானும் வெய்துறும்

செய்ய கோலினைச் செப்ப லாவதன்

றைய தாரினை னருளின் வண்ணமே.

எ0


1720 எரியு மாலையான் குளிரு மீகையான்
பெரியன் பெற்றியாற் சிறிய னண்பினால்
அரியன் வேந்தர்கட் கெளிய னண்டையர்க்

குரிய ஞேங்குதற் கோடை யானையான்.

எக

1721 தன்னை வென்றதண் டார்வய வேந்தனைப்
பின்னை வேறல் பிறர்க்கரி தாதலான்
மன்னி மற்றிவ ஞுண்டிடு வையகம்
பொன்னின் மாரி பொழிந்திடு கின்றதே.
எஉ

1722 மாலமர் நெடுங்கடன் மதலை மாசிலாக்
காலமைந் தொழுகுமேற் கரையுங் காணுமே
நூலவர் நுழைவொடு நுழைந்து செல்லுமேல்
வேலவ ரொழுக்கமும் வேலை காணுமே.
எக

1723
மண்ணிய வளாகங் காக்கு மன்னவர் வணக்க லாகாப்
புண்ணிய நீர ரேனும் புலவராற் புகலப் பட்ட
நுண்ணிய நூலி னன்றி நுழைபொரு ளுணர்த
றேற்று
றெண்ணிய துணிந்து செய்யுஞ் சூழ்ச்சியு
மில்லை யன்றே. எச

1724 மறந்தலை மயக்கி வையத் தொருவரை
யொருவர் வாட்ட
விறந்தலை யுருமை நோக்கி யின்னுயிர் போலக்
காக்கு
மறந்தலை நின்ற வேந்த ரடிநிழ லன்றி
யார்க்குஞ்
சிறந்ததொன் றில்லை கண்டாய் திருமணி

திகழும் பூணுய். எ௫
1725 திறந்தலை மயங்க வெம்பி நெடுங்கடல் சுடுவதாயி
னிறந்தலை பெருகு நீர்வா முயிர்க்கிட ரெல்லை யுண்டோ
மறந்தலை மயங்கு செவ்வேன் மன்னவன் வெய்ய ஞயி
ஞறந்தலை மயங்கி வைய மரும்பட ருழக்கு மன்றே. எ௬
1726 மந்திரக் கிழவர் கண்ணு மக்கடன் ருள்க ளாகச்
சுந்தர வயிரத் திண்டோ டோழராச் செவிகளொற்று
வந்தர வுணர்வு நூலா வரசெனு முருவு கொண்ட
வெந்திர மிதற்கு வாயாத் தூதுவ ரியற்றப் பட்டார். எஎ
1727 பெற்ற தன்முத லாப்பின் பெருததுஞ்
சுற்றி வந்தடை யும்படி சூழ்ந்துசென்
றுற்ற வான்பொருள் காத்துய ரீகையுங்
கற்ற வன்பிறர் காவல ஞகுவான். எஅ
1728 பகைய லாதவ ரைப்பகை யாக்கலு

முகையின் வேய்ந்தமென் மொய்ம்மலர்க் கண்ணியாய்
மிகையின் மற்றவை பின்னை வெதுப்புமே.
எக

## யசோதர காவியம்

1729 மறவியின் மயங்கி வையத் துயிர்களை வருத்தல் செய்யா
தறவியன் மனத்தை யாகி யாருயிர்க் கருள்ப ரப்பிச்
சிறையண பிறபி போக்குந் திருவற மருவிச் சென்று
நிறைபுக ழுலகங் காத்து நீடுவாழ் கென்று நின்றார். அ0

## நாரத சரிதை

1730 வல்லென்ற சொல்லும் புகழ்வாய்மை வழீஇய சொல்லும்
இல்லென்ற சொல்லு மிலனாகவின் யாவர் மாட்டுஞ்
சொல்லுங் குறையின் மையிற் சோரரு மின்மையாலே
கொல்லென்ற சொல்லு முரைகற்றிலன் கொற்ற வேலான். அக

## வீரபாண்டியம்

1781 மண்ணவர் மகிழ்வுற மதியி னுய்ந்துயர்
தண்ணளி தகவுடன் தரும நீதியாய்க்
கண்ணமை யிமையெனக் காக்கும் வேந்தனை
விண்ணவர் மகிழ்ந்துளம் வியந்து
போற்றுவார்.

அஉ

## நளவெண்பா

1782 வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தான்
ஞால முழுது நடுவிழந்தாற்—சீல
மொழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
யழிவரோ செங்கோ லவர்.

அக

1783 மன்னராய் மன்னர் தமையடைந்து
வாழ்வெய்தி
யின்னமுதந் தேக்கி யிருப்பாரேற்—சொன்ன
பெரும்பே டிகளலரேற் பித்தரே யன்றே
வரும்பேடை மானே யவர்.

அச

## இராமாயணம்

1784 யாரொ டும்பகை கொள்ளில னென்றபின்
போரொ டுங்கும் புகழொடுங் காதுதன்
தாரொ டுங்கல்செல் லாதது தந்தபின்
வேரொ டுங்கெடல் வேண்டலுண் டாகுமோ.

அ௫

**1735 கோளு மைம்பொறி யுங்குறை யப்பொரு**

**ளுளுங் கண்டு நடுக்குறு தோன்மையி**



ளுளு மவ்வர சேயர சன்னது
வாளின் மேல்வரு மாதவ மைந்தனே.

அ௬

1736 உமைக்கு நாதற்கு மோங்குபுள் ளூர்திக்கு
மிமைப்பி னுட்டமோ ரெட்டுடை யானுக்குஞ்
சமைத்த தோள்வலி தாங்கின ராயினு
மமைச்சர் சொல்வழி யாற்றுத லாற்றலே.

அ௭ 1737 வைய மன்னுயி ராகவம் மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்
கைய மின்றி யறங்கட வாதருள்
மெய்யி னின்றபின் வேள்வியும் வேண்டுமோ.

அஅ

1738 இனிய சொல்லின னீகைய னெண்ணினன்
விணையன் றூயன் விழுமியன் வென்றிய
னிணைய நீதி நெறிகட வானெனி
லணைய மன்னற் கழிவுமுண் டாங்கொலோ.

அ௯

1739 சீல மல்லன நீக்கிச்செம் பொற்றுலைத்

தால மன்ன தனிநிலை தாங்கிய
ஞால மன்னற்கு நல்லவர் நோக்கிய
கால மல்லது கண்ணுமுண் டாகுமோ.
கூ0

1740 ஓர்வி னல்வினை யூற்றத்தி ருருரை
பேர்வி ரெல்விதி பெற்றுள தென்றரோ
தீர்வி லன்பு செலுத்தலிற் செவ்வியோ
ரார்வ மன்னவற் காயுத மாவதே.
கூக

1741 நன்றியீ தென்று கொண்ட நயத்தினை நயந்து வேறு
வென்றியே யாக மற்றோ தோற்றுயிர் விடுத லாக
வொன்றிலே நிற்றல் போலா முத்தமர்க் குரிய தொல்கிப்
பின்றுமே லவனுக் கன்றோ பழியொடு நரகம் பின்னை.

கூஉ

உத்தரகாண்டம் 1742
தண்டிக்கப் படுவோர் தம்மைத்
தண்டியா தொழித்து விட்டுத்
தண்டிக்கப் படாதோர் தம்மைத்
தண்டிக்குந் தரணி மன்னன்
எண்டிக்கும் பரந்து மூடும்
இரும்பழி யெய்தித் தீயோர்த்

தண்டிக்குந் தரும னாலே
தண்டிக்கப் படும்பி னென்றான்.

௱கக

சச. அரசு

273

வில்லிபாரதம்

1743 தேற லார்தமைத் தேறலுந் தேறினர்த்
தேற லாமையு மென்று
மாற லாருடன் மலைதலு மாறுடன்
மருவி வாழ்தலு முன்னே
யாற லாதன வரசருக் கென்றுகொண்
டரச நீதியிற் சொன்னார்
கூற லாதன சொல்வதென் செல்வதென்
கொடிய வனரு கென்றான்.

கஉ 1744 துன்று பிணியோர் துறந்தோ
ரடங்காதோர்
கன்று சினமனத்தோர் கல்லா தவரிளையோ
ரொன்று முறைமை யுணரா தவர் மகளி
ரென்றுமிவர் மந்தணத்தி னெய்தப் பெறாரே.

கஙு 1745 மறைகெழு நூலுந் தேசு மாசிலாத்
தவமு ஞான
முறைவரு முணர்வு மல்லான் முனிவரர்க் குறுதி யுண்டோ
துறைகெழு கலைகள் வல்லாய் துன்னலர்ச் செருக்கும் போரு
நிறைதரு வலியும் வாழ்வு நிருபர்தம் மியற்கை யன்றோ. கச

1746 மூத்தவ ரிளையோர் வேத முனிவரர் பிணியின் மிக்கோர்
தோத்திர மொழிவோர் மாதர் தூதரென் றிவரைக்
பார்த்திபர் தமக்கு வேறு பாவமற் றிதனி னில்லை

கொல்லிற்

பூத்தெரி தொடையாய் பின்னு நரகினும் புகுவ ரென்றான். கஎ

பாகவதம்

1747 சந்திர னுயிர்க்கெலாம் தாபம் நீக்கலான்
இந்திரன் உலகினி தளிக்க லான்எனச்
சுந்தர வரசனை முனிவர் சொற்கொடு
வந்தியர் முதலினோர் வழுத்தல் மேயினர்.

கஅ 1748 மாற்றலர்க் கணுகுரு மாட்சி யானனல்
கூற்றுவ னறம்பிழைத் தோரைக் கோறலான்
ஏற்றநற் றூதரால் எங்கும் நாடலான்
காற்றினுக் கிறையெனக் கருத லாகுமே.

கக

திரிகடுகம்

1749 கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
யாலம்வீழ் போலு மமைச்சனும்—வேலின்
கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல். ௪00





1750 பத்திமை சான்ற படையும் பலர்தொகினும்
எத்திசையு மஞ்சா எயிலரணும்—வைத்தமைந்த
எண்ணின் உலவா இருநிதியும் இம்மூன்றும்
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு.
௪0௧

## நீதிநெறி விளக்கம்

1751 கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே
யாயினுந்—தண்ணளியான்
மன்பதை யோம்பா தார்க் கென்னும்
வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு.
௪0௨ 1752 குடிகொன் றிறைகொள்ளுங்
கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு
மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே

மாறிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.
கoகூ

1753 இன்று கொளற்பால நாளைக் கொளப்பொரு
னின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவ
னுவன கூறின் னெயிறலைப்பா னுறலைக்கும்
வேடலன் வேந்து மலன்.
கoஅ

1754 ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டுணையாத் தெரிதந்தும்—குற்ற
மறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.
கoகூ

1755 குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயு —மறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ
மிலைமுகப் பைம்பூ ணிறை.
கoசு

1756 ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதெரீஇக் கொள்கை
முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார்
தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.
கoஎ

பெருந்தொகை

1757 நண்ணினர்க்கு நண்ணார்க்கு நாடோறுங் கோடாமைத்
தண்ணியராய் வெய்யவராய்த் தக்காரோ—டெண்ணிக்
கருங்கடல்சூழ் மாநிலத்தைக் காப்பதா மன்றே
இருங்கழற்கால் வேந்தர்க் கியல்பு.

௧0அ



நீதிநூல்

1758 மன்னுயி ரனைத்துந் தன்னுயி ரென்ன
மகிழ்வொடு தாங்கியா ரேனும்
இன்னலுற் றயர்ந்தோ மெனக்கலுழ்ந் திடிற்றன்
னிருவிழி நீரினை யுகுப்பான்
அன்னவெந் துயரை நீக்குமுன் றுஞ்சான்
னயின்றிடான் துயின்றிடான் எவரும்
நன்னக ரெங்கு முளனெனப் பகர
நாடொறு மியங்குவோன் கோனே.

௧0௯

1759 தாயறி யாத சேயிருந் தாலுந்
தானறி யாதவ ரில்லை
ஆயதன் மையினு லறவழி நிற்கு
மறிஞரை யறிந்தவர்க் குரிய

தேயவா திக்கந் தந்துநன் னீதி
செலுத்தியெங் கணுமருந் திறுக்கும்
தீயவ ரிலரென் றிசையுற மடக்குந்
திறலுளோன் பூதல வேந்தே.

௧௬௦
1760 தன்புகழ் கருதி மருவல ரோடுஞ்

சமர்புரிந் துயிர்களை மாய்த்துத்
துன்பமே செய்ய விழைந்திடான் முற்போர்
தொடுத்திடான் தன்னுயி ரனைய
மன்பதைக் கிடுக்கண் யாவரே செயினும்
வாளம ரியற்றிநீக் கிடுவான்

இன்பதுன் பங்கள் தனக்கும் மற்றவர்க்கும்
ஏகமென் றெண்ணுவோன் வேந்தே.

௧௬௧
1761 தானினி தியற்று மனுநெறிப் படிமுன்
தானடந் தறவழி காட்டி
ஞான நற் குணத்தின் மேன்மையா
லெவர்க்கும்
நாயகந் தானெனத் தெரித்துத்
தானமுந் தயையு மெய்ம்மையுந் தவமும்

தற்பரன் வணக்கமும் பொறையும்
மானமு மிகுத்து நரரெலாஞ் செழிக்க
மகிழர சளிப்பவன் மன்னே.

கசஉ
1762 கைப்புரை யேற்றுப் பொய்ப்புக ழேலாக்
காதினன் அருள்பொழி கண்ணன்
தப்புரை வழங்கா நாவினன் புவியோர்
தாசன்ருனெனவுணர் மனத்தன்



செப்பயன் மடவார் காணரு முரத்தன்
திருந்தலர் காணரும் புறத்தன்
எப்பொழு தினுஞ்சென் றியாருங்காண்
முகத்தன்
ஈசனன் புடையவ னிறையே.
கசரு 1763 மன்னவன் வலிசெங் கோலினு லன்றி
வாளினுற் சேனையால் இல்லை
நன்னெறி வழுவா மன்னவன் றனக்கு
நாடெலாம் பேரரண் உலகின்
மன்னுயி ரெல்லா மவன்படை யன்ஞேர்
மனமெலா மவனுறை பீடம்
இன்னதன் மையனு யரசளிப் பவனே
இகல்செயுஞ் செறுநரு முளரோ ?
கசசு திருக்குறள்
1764 படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.
கசஎ

1765 அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

கசுசு
1766 தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

கசுஎ 1767 காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல
னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

கசுஅ 1768 முறைசெய்து காப்பாற்று மன்னவன்
மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

கசுகூ
1769

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

கஉ0

௳

---

சுரு. அமைச்சு.

கந்தபுராணம்

1770 மன்னவர் செவியழன் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சர்க டுணைவர் மேலையோ
ரொன்னலர் விழைந்தவா றுரைக்கின் றார்களே.
க

திருவிளையாடற் புராணம்

1771 மந்திரக் கிழமை பூண்டு மன்னவர் கருமஞ் செய்வ
தந்தணர்க் கறனே யல்ல வமைச்சிய லறத்து நின்றால்
வெந்திற லரசர்க் கேற்ற செய்வதே வேண்டு மென்னத்
தந்திர மனுநூல் வல்லோர் சாற்றுவா ரன்றோ வையா. உ 1772 நல்லாவின் பாலி னறுந்தேன் கலந்தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லா லடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனுய்ந்து கவர வல்லார்.
ங 1773 பழையே மிறையுட் கொளப்பட்டமென் றேமாப் பெய்தா
ருழையேவல் செய்யுஞ் சிறார்போல வொதுங்கி வேந்தன்
விழைவே ததனை விடம்போல வெறுத்து

வெஃகா
ரழல்போ லணுகா ரகலார்நிழ லன்ன நீரார்.
1774 மறுக்குஞ் செயனீத்து நடக்கையின் வையத் தோரை
யொறுக்கும் பொருளும் பணிகேட்கையி ஞென்ன லாரைச்
செறுக்கும் பொருளுங் கவரார்வினை செல்வ மாக்க
ளிறுக்கும் பொருளே யிறைவற்கிவ ரீட்டுஞ் செல்வம்.
1775 மறத்தான வேலான் மனக்கொள்கைதன் னெஞ்சுள் வான
நிறத்தாடி நீழ லெனத் தோற்றி நிறுத்து மற்ற
தறத்தா லெனிலாற் றுவரன்றெனி லாக்க மாவி
யிறத்தான் வரினு மனத்தானு மிழைக்க வொண்ணுர்.

விநாயக புராணம்

1776 நனிபயன் பயப்பச் சிறுமுயற் சியினு
னலத்தகு வினையுமற் றனைய
வினையினைத் தொடங்குங் காலது தனக்கு
வேண்டிய பொருள்களும் படையு

யினிதுறு பொழுது முபாயமுஞ் செயலு
மிடைப்படு மூறுக ணீக்கித்
துணிவுற முடிவு போக்கிடு மாறுஞ்
சூழ்தர வல்லவ னமைச்சன்.

ன

1777 மிகவினை வரினு மசைவுரு வன்கண்
விழுக்குடி காத்தலான் வினைநூல்
வகையுறச் சூழ்ந்து விடுவென விடுத்து
வகுப்பன வகுத்திடல் வேண்டிற்
பகைவர்தந் துணையைப் பிரித்தறம் மிடத்துப்
பயின்றவர் பகைவர்பாற் புகாமற்
றகையுறச் செய்தல் பிரிந்தவர் தம்மைத்
தம்மொடு பொருத்தலு மமைச்சாம்.

அ

1778 அறிவதுஞ் செயலு மொழிவது மரசர்க்
காக்கமே குறித்தன வாகுந்
திறனுநன் றறியா வரசருக் குறுதி
செப்பலுஞ் செய்வன வேறு
முறுமுல கியற்கைக் கொத்திடிற் செயலு
மொருவினைக் கியைந்தபல் செயலு
நிறுவுவ தொன்றால் வாய்ப்பவெஞ் ஞான்று
நிகழ்த்தலு மமைச்சருக் கியல்பாம்.

க

1779 முறையுறச் சூழு மாத்திர மன்றி
முடிக்கமாட் டாதமந் திரியு

மிறைவனுக் ககித மெண்ணுமந் திரியு
மெழுதுசித் திரத்தினு மாகா
வுறுவரிற் பிரிக்கப் பட்டவர் முதலோ
ருளத்தினைப் பிணித்துரு ருளமு
மறுவறப் பிணிக்கு மொழிதிற னறிந்து
வழங்கன்மந் திரிகணற் குணமே.

௨௰ 1780 சுருக்கிமெய் விளக்கி யினிமையும் பயனுந்
தொகுத்தய லார்மொழிக் கிடையாத்
திருக்கிளர் மொழியைச் சோர்வற வவைக்கட்
சொல்லுமா றஞ்சுத லின்றி
யுரைக்கவல் லவரே யமைச்சர்க ளாவ
ருறுமுறை பிறழ்தரப் பலவாய்
விரிக்கவல் லவருங் கற்றது விளங்க
விரிக்கமாட் டாருமெல் லியரே.

௧௬



1781 பொருள்பயந் திடினு மறம்புகழ் பயவாப்
புரைபடு வினையென்றும் புரியார்
மருளின்மற் றெருகாற் புரியினு மிரங்கார்
வையகத் தேனையோர் போல
விருமுது குரவர் கற்புடை மகளி
ரிளமக விவர்பசித் திடினும்
பெருமிதப் படாத வினைசெயா ருலகு

பேணுநர்க் கேமஞ்செ யமைச்சர்.

கஉ

1782 துணிவுறு மளவுஞ் சூழ்ந்துபி னிராது
சூழ்வினை பொருந்தும்வா யெல்லாந்
தணிவற முடித்த லதுதகா தாயிற்
றருபொருள் வினையிடங் காலம்
அணியுறு கருவி யைந்து மாய்ந் திகலை
யடர்த்தலொட் டார்க்கழி வுறுங்காற்
பணிவுசெய் தேனுங் காத்தன்முத் தொழிலும்
பண்புடை யமைச்சர்தந் தொழிலே.

கங

ஞானவாசிட்டம்

1783 தீயவனு மந்திரியா னல்வேந்துந்
தீவேந்தாந் தீமை யில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்து
நல்வேந்தாந் தொடர்ச்சி போல
வாயநெறி மன்னவரா லமைச்சருமப்
படியாகு மாத லாலே
தேயுவிவே கத்தமைச்ச னுண்டாகி
லெப்பயனு நிருபற் குண்டாம்.

கச

சூளாமணி

1784 வீங்குநீ ருலகங் காக்கும் விழுநுக மொருவ
னாலே
ஆங்கலாந் தகைமைத் தன்று தளையவிழ்
தயங்கு தார்ச்சீரீப்

பாங்கலார் பணியச் சூழும் நூல்வலார் பாக
மாகப்
பூங்குலா மலங்கல் மாலைப் புரவலன் பொறுக்கு
மன்றே. ௧௫

1785 அந்தண ரொழுக்கமு மரசர் வாழ்க்கையு
மந்திர மில்லையேன் மலரு மாண்பில
விந்திர னிறைமையு மீரைஞ் ஞூற்றுவர்
தந்திரக் கிழவர்க டாங்கச் செல்லுமே.
௧௬

1786 சுற்றுநின் றெரியுஞ் செம்பொன் மணிமுடி
சுடரச் சூட்டி
வெற்றிவெண் குடையி னீழல் வேந்தன்வீற்
றிருக்கு மேனு



மற்றவன் மனமுங் கண்ணும் வாழ்க்கையும்
வலியுஞ் சால்பு
மற்றமி லரசுங் கோலு மாபவ ரமைச்ச ரன்றே.
௧௭

1787 செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை
தெரிந்து சொன்ன
லறிந்தவை யமர்ந்து செய்யு மமைதியா னரச
னவான்
செறிந்தவர் தெளிந்த நூலார் சிறந்தவை

தெரிந்து கூறி
யறிந்தவை யியற்று கிற்கு மமைதியா ரமைச்ச
ராவார். கஅ 1788 ஆற்றலென் றேதப் பட்ட
வரசர்கட் கவற்றின் மிக்க
வாற்றருன் சூழ்ச்சி யென்ப தாதலா லதனை யாயு
மாற்றலா ரமைச்ச ராக வமைச்சரோ டமர்ந்து
செல்லு
மாற்றலா னரச ஞகி னரியதொன் றில்லை
யன்றே. கக 1789 தண்ணிய தடத்தவே
யெனினுந் தாமரை
விண்ணியல் கதிரினல் விரியும் வேந்தரும்
புண்ணியப் பொதும்பரே புரிந்து வைகினுங்
கண்ணிய புலவரா லலர்தல் காண்டுமே.
உ0 1790 வால்வளை பரவி மேயும் வளர்திரை வளாக
மெல்லாங்
கோல்வளை வுருமற் காக்குங் கொற்றவ னெடிய
னேனு
மேல்விளை பழியும் வெய்ய வினைகளும் விலக்கி
நின்றுர்
நூல்விளை புலவ ரன்றே நுணங்குபோ தணங்கு
தாரீர். உக

இராமாயணம்

1791 நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ ரியல்பி னெண்ணுவ
ரொல்லைவந் துறுவன வுற்ற பெற்றியிற்

ரெல்லை நல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்.

௨௨ 1792 தம்முயிர்க் குறுதி யெண்ணார்
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கு
மெய்யர்
செம்மையிற் றிறம்பல் செல்லாத் தேற்றத்தார்
தெரியுங் கால
மும்மையு முணர வல்லா ரொருமையே மொழியு நீரார்.

௨௩
1793 உற்றது கொண்டு
மேல்வந் துறுபொரு ளுணர்வா ருற்றுல்
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய
நூலும்
கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்.
௨௪

ஏலாதி

1794 குடியோம்பல் வன்கண்மை நூல்வன்மை கூடம்
மடியோம்பு மாற்ற லுடைமை—முடியோம்பு
நாற்றஞ் சுவைவெஃகி நல்லா ரினஞ்சேர்தல்
தேற்றானேற் றேறு மமைச்சு.

௨௫

சஞ. அமைச்சு

## பழமொழி

1795 உலப்பி லுலகத் துறுதியே நோக்கிக்
குலைத்தடக்கி நல்லறங் கொள்ளார்க் குறுத்தல்
மலைத்தழு துண்ணுக் குழவியைத் தாயர்
அலைத்துப்பால் பெய்து விடல்.

உசு

## திரிகடுகம்

1796 ஐயறிவுந் தம்மை யடைய வொழுகுத
லெய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலு
மாறேற்கு முன்னர் நிலையறித லிம்மூன்றும்
வீறுசால் பேரமைச்சர் கோள்.

உஎ

## சிறுபஞ்சமூலம்

1797 தன்னிலையுந் தாழாத் தொழினிலையுந்
துப்பெதிர்ந்தா
ரின்னிலையு மீடி லியனிலையுந்—துன்னி
யளந்தறிந்து செய்வா னரசமைச்சன் யாதும்
பிளந்தெறியும் பேராற்ற லான்.

உஅ

## நீதிநெறி விளக்கம்

1798 செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்து
மம்மாண் பினவே யமைச்சு.

உகூ

1799 கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு.

கூ0 1800 வன்கண் குடிகாத்தல் கற்றறித
லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

கூக

1801 பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

கூஉ 1802 தெரிதலுந் தேர்ந்து செயலு
மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

கூகூ 1803 அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

கூச 1804 பழுதெண்ணு மந்திரியிற்
பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

கூரு

---

## ௬௬. அடைந்தோர்ப் புரத்தல்

கந்தபுராணம்

1805 ஈங்கிதுவு மன்றி யெவரேனுந் தம்மடங்காத்
தீங்கு பெறினுதவி செய்யென் றிரந்திடலும்
ஆங்கொருவன் செய்யா ததுமறுத்துத் தன்னுயிரைத்
தாங்க லுலக நடைதனக்குத் தக்கதுவோ.

* 1806 ஏவ ரெனினு மிடருற் றனராகி
யோவில் குறையொன் றுளரே லதுமுடித்தற்
காவி விடினு மறனே மறுத்துளரேற்
பாவ மலது பழியு மொழியாதே.
உ

தணிகைப் புராணம்

1807 பேதைமைப் பாலி னுதல் பெருங்கிழ மையினு
னுதன் மேதக நட்டோர் மாட்டு விரவிடும் பிழைக
ளெல்லாங் காதுதற் பால வல்ல காதிடிற் கண்ணி னோடி
நோதக வோச்சி மெல்ல நோன்றவே யெறிகு வாரால்.
ந

சேது புராணம்

1808 பனவக் கொலைமுன் பாதகங்கள் பாற்றற் குளது பரிகாரந்
தனைநம் பினரை வதைத்தபவஞ் சாயத் துரக்குந் தவமில்லை
கனக வரையும் பெரிதன்று கருதுங் காலைக் காதலினுன்
மனநண் புடையா ருயிர்கவரும் வஞ்சம் பெரிதா மென்றிடலும்.

௬

1809 ஆர்க்கு மிடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை யுண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் கால மறிமினே. ௬

இராமாயணம்

1810 பாம்பிழைப் பள்ளி வள்ளல் பகைஞரென் றுணரான் பல்லோர்
நோம்பிழை செய்த கொல்லோ குரங்கென விரங்கி நோக்கித்
தாம்பிழை செய்தா ரேனுந் தஞ்சமென் றடைந்தோர் தம்மை
நாம்பிழை செய்ய லாமோ நலியலீர் விடுமி னென்றான். ௮

௬௬. அடைந்தோர்ப் புரத்தல்

283

1811 பேரபி மானங்க ளுற்ற பெற்றியோர்
போரிடைப் புறங்கொடுத் தஞ்சிப் போந்தவர்
நேர்வரு தாயத்து நிரப்பி னோர்பிறர்
சீரியர் கிளைஞரை மடியச் செற்றுளோர். ௭

1812 அடுத்தநாட் டரசியல் புடைய வாணையாற்

படுத்தவர் பட்டவர் பகைஞ ரோடொரு
மடக்கொடி பயந்தவர் மைந்த ராயினு
முடற்கொளத் தகையர்நம் முழைவந்
தொன்றினல். அ

1813 இன்றுவந் தானென் றுண்டோ வெந்தையை
யாரை முன்னங்
கொன்றுவந் தானென் றுண்டோ
வடைக்கலங் கூறுகின்ருன்
றுன்றிவந் தன்பு செய்யுந் துணைவனு மவனே
பின்னைப்
பின்றுமென் ருலு நம்பாற் புகழன்றிப்
பிறிதுண் டாமோ. கூ

1814 பிறந்தநாட் டொடங்கி யாருந் துலைபுக்க
பெரியோன் பெற்றி
மறந்தநா ளுண்டோ வென்னைச் சரணென
வாழ்கின் ருனைத்
துறந்தநாட் கின்று வந்து துன்னினன்
சூழ்ச்சி யாலே
யிறந்தநா ளன்றோ வென்று மிருந்தநா ளாவ
தென்ருன். க0

1815 இடைந்தவர்க் கபயம் யாமென் றிரந்தவர்க்
கெறிநீர் வேலை
கடைந்தவர்க் காகி யால முண்டவற் கண்டி
லீரோ
வுடைந்தவர்க் குதவா னுகி லுள்ளதொன்
றீயா னுகி

னடைந்தவர்க் கருளா ஞகி னறமென்ஞு
மாண்மை
யென்ஞும். கக
1816 நஞ்சினே மிடற்று வைத்த நகைமழு வாள
ஞளுந்
தஞ்சென முன்னந் தானே தாதைபாற்
கொடுத்துச் சாத
லஞ்சினே னபய மென்ற வந்தணற் காகி
யந்நாள்
வெஞ்சினக் கூற்றை வென்ற மேன்மையின்
மேன்மை
யுண்டோ. கஉ

## பெருந்தேவஞர் பாரதம்

1817 ஒன்று நரம்பென்கோ வொன்ருத
வென்பென்கோ
வின்றசை தானென்கோ
யாதென்கோ—மென்ருெடையாள்
பண்ணோட்டு மின்சொற் பணைத்தோளாய்
சேர்ந்தவர்பாற்
கண்ணோட்ட மில்லாத கண்.
கங

நாலடியார்

1818 அடுக்கல் மலைநாட தற்சேர்ந் தவரை
எடுக்கல மென்ஞர் பெரியர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே

## நீதிநெறி விளக்கம்

1819 கலைகளுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விலைவுன்னி வெற்றுடம்பு
தாங்கார்—தளர் நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க டாம்.

௧௭

## நீதிநூல்

1820 பதிமுத லதிகா ரத்தோர் பண்ணவர் உழவர் மேலோர்
மதியுறு பரதர் நூலோர் மருத்துவர் முதலோர் தத்தம்
விதிவழி யொழுகித் தம்மை மேவுறு தாழ்ந்தோர் தம்மை
அதிதயை யொடுநன் கோம்பி யாண்டிடக் கடனு மாதோ.

## சஎ. மன்னரைச் சேர்ந்தொழுகல்

### விநாயக புராணம்

1821 ஆளு மரசன் பாலன்பு மவனுக் காவ தறியறிவு
நாளு மவற்றைக் கலங்காம னன்கு முடிக்கு முளத்துணிவு
மூளும் விணைக்குத் தன்கரத்தின் மொய்த்த பொருளின் விழையாது
கோளு முடையான் புரிவினையிற் குற்ற முருது குணமேயாம்.

1822 குடிப்பிறந் திருநூல் கற்றறிந் தமைச்சர்
குணங்களு முடையனாய்ச் சுற்றங்
கடப்படு மரச னிடத்துறு மன்புங்
கருதுவேற் றரசவாம் பண்பும்
விடப்படா வின்சொல் வன்மையு முருவும்
வெருவுறுத் திண்மையு மருவி
யிடத்தொடு செவ்வி யறிந்துகா லத்துக்
கேற்றவு முரைப்பவன் றூதன்.

உ

1823 உறுபொருள் காமம் விரும்புறுத் தூய்மை

யுயிர்க்கழி வுறினு மஞ்சாமை
மறுபுலத் தமைச்சர் துணைமையாந் தன்மை
வாய்மைசொற் சோர்வுறுத் துணிவு
மறுவற வுடைய னுய்வழி யுரைப்பான்
மத்திமத் தூதனு முடங்கல்
குறுகுபு கொடுப்பான் கடைப்படுந் தூதன்
கூறிய விவரையுந் தழீஇக்கொள்.

க.

1824 இறைசிறப் பாக வணிவன நுகர்வ
வினிதுறு மேன்மையா திகடா
முறலறை போத லுரிமையின் மருவ
லொண்பொருள் வெளவன்மன்
னவன்முன்
பிறர்செவி மொழிதல் பிறரொடு நகைத்தல்
பேணுறுப் பண்புவேந் திளமை

முறைமதித் திகழ்தல் விரும்புறு வினையை
முடித்தலுஞ் சேர்ந்தவர்க் காகா.

1825 குறிப்பொடு கால மறிந்திறை விரும்பக்
கோதறு பயன்மிகப் பயக்கும்
வெறுப்பில வினையை விளம்பிவேண் டாத
வினையினைக் கேட்பினும் விளம்பார்

சிறப்புற வோர்வ தாயினு மறைதான்
செப்பிடிற் கேட்பினல் லாது
மறப்பினுந் தொடரா ரோர்தரா ரணுகார்
மருங்ககல ளார்வினை வலித்தார்.

௬

1826 அகத்திடைக் குறித்த காரிய மதனை
யையுரு தவரவர் விழியான்
முகத்தினு லறிய வல்லவ னாகி
முகம்விழி யிரண்டினு மன்றி
யகத்திடைத் தனக்கு நிகழ்ந்திடுங் குறிப்பா
லவரவ ரகக்குறிப் பறிந்து
மிகத்தெளி பவனைக் கரிமுத லுறுப்புள்
விழைவன கொடுத்துங்கொண் மைந்தா.

௮

1827 தொகைபடு செஞ்சொ லிலக்கணச் சொல்லே
சூழ்ந்திடுங் குறிப்புச்சொன் மூன்றின்
வகையறிந் துயர்ந்தோ ரொத்தவர்
தாழ்ந்தோர்
மருவுமூன் றவையுமா ராய்ந்து
தகையுற வுயர்ந்தோ ரவையின்முந் துரையார்
சமத்தினெவ் வாற்றினுங் கிளப்பார்
நகைபடு தாழ்வி னென்றையு மொழியார்
நவைபடாச் சொற்பொரு ளாய்ந்தோர்.

௯

1828 வல்லவ ரவையுட் கற்றதஞ் சாது
வகுத்துரைத் தவருண் மிக்கான

நல்லவை கேட்பார் கற்றவர் தம்மு
ணன்குற மதித்திடப் படுவார்
சொல்லவை யஞ்சிக் கற்றன செலுத்தாச்
சோர்வினர் கற்றுங்கல் லாத
புல்லிய ரிருந்தும் பொன்றின ரதனுற்
போற்றுக வவையஞ்சா தவரை.

அ

இராமாயணம்

1829 கருத்திலா விறைவன் றீமை கருதினு லதனைக் காத்துத்
திருத்தலா மாகி னன்றே திருத்துக தீரா தாயிற்
பொருத்துறு பொருளுண் டாமோ
பொருதொழிற் குரிய தாகி
யொருத்தரின் முன்னஞ் சாத லுண்டவர்க் குரிய தம்மா. க

வில்லிபாரதம்

1830 புன்னவை யான மாற்றம் புகன்றன ரெனினுங் கேட்டாங்
கின்னவை நன்று நன்றென் றிதம்பட மொழிவ
தல்லான்

சஎ. மன்னரைச் சேர்ந்தொழுகல்

மன்னவை யிருந்து நாளும் வழிபடு மாந்தர் மன்னர்

சொன்னவை மறுத்து மாறு சொல்வரோ சுருதி வல்லாய்.

கo

1831 ஆவது கருதா னாகி லமைச்சர்சொற் கேளா னாகில்
வீவது குறியா னாகில் விளைவது முணரா னாகி
னாவது காவா னாகி லவனுக்கா நடந்து போரிற்
சாவது பழுதென் றன்றோ சகத்துளோர் சாற்று கின்றார். கக

## பெருந்தேவனார் பாரதம்

1832 தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான்
வடுமாற்றம் வாய்சோரா னாகி—விடுமாற்ற
மெஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கா
லஞ்சா தமைவது தூது.

கஉ 1833 படையளவு கூறார் பெரியார்முன் மாற்றார்
படையளவிற் றென்று வியவார்—கொடைவேந்த
னீத்ததுகண் டின்புறு ரேந்திழையார் தோள்சேரார்
பார்த்திபர்தூ தாயடைந்தார் பண்பு.

கங 1834 தானறிந்து கூறுந் தலைமற் றிடையது
கோனறைந்த தீதென்று கூறுமாற்—றனறியா
தோலையே காட்டுங் கடையென் றுருமூன்று
மேலையோர் தூதுரைத்த வாறு.

கச 1835 அன்புடைமை யாய்ந்த வறிவுடைமை யிற்பிறப்பு

நன்குடைமை நல்ல
நயனுடைமை — நன்கமைந்த
சுற்ற முடைமை வடிவுடைமை சொல்வன்மை
கற்றடங்க றூதின் கடன்.
கடு

குசேலோபாக்கியானம்

1836 அல்லது மிகுநட் பேயென் றுற்றநோக் காது செல்வி
லொல்லையி னினக்குண் டாயிற் றுறுமவ மான மெய்யே
நல்லதன் மனையின் வாக்கு நறுநெயுண் டொளிர்வ தேயென்
றெல்லடர் சுடரை முத்த மிடிற்சுடா தமைவ துண்டோ. கசு

பழமொழி

1837 வெஞ்சின மன்னவன் வேண்டா தனசெயினு
நெஞ்சத்துட் கொள்வ சிறிதுஞ் செயல்வேண்டா
வென்செய் தகப்பட்டக் கண்ணு மெழுப்புபவோ
துஞ்சு புலியைத் துயில்.
கஎ

1838 தீயன வல்ல செயினுந் திறல்வேந்தர்

காய்வன செய்தொழுகார் கற்றறிந்தார்—காயும்

288 பன்னூல் பாடற்றிரட்டு

புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கி லதுவே
வலிமுன்னர் வைப்பாரு மில்.
கஅ

## ஆசாரக் கோவை

1839 அறத்தொடு கல்யாண மாள்வினை கூரை
யிறப்பப் பெருகியக் கண்ணுந் திறப்பட்டார்
மன்னரின் மேம்பட்ட செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும்.
கக

1840 வேந்தன் மதித்துணரப் பட்டாரைக் கொண்டேனை
மாந்தரு மாங்கே மதித்துணர்ப—ஆய்ந்த
நலமென் கதுப்பினாய் நாடினெய் பெய்த
கலமேநெய் பெய்து விடும்.
உ0

1841 செருக்கெழு மன்னர்த் திறலுடையார் சேர்ந்தால்
ஒருத்தரை யஞ்சி யுலைதலு முண்டோ
உருத்த சுணங்கி னொளியிழையாய் கூரி
தெருத்து வலியதன் கொம்பு.

௨௧

1842 காவலனை யாக வழிபட்டான் மற்றவன்
ஏவல் வழிசெய் திருந்தார்க் குதவடுத்தல்
ஆவணைய நின்றதன் கன்று முலையிருப்பத்
தாயணல் தான்சுவைத் தற்று.

௨௨

1843 சிறிதாய சூழ்பெற்றுச் செல்வரைச்
சேர்ந்தாற்
பெரிதாய சூழும் பெறுவர்—அரிதாம்
இடத்து ளொருவ னிருப்புழிப் பெற்றாற்
கிடப்புழியும் பெற்று விடும்.

௨௩

சோமேசர் முதுமொழி வெண்பா

1844 மாமனு னென்னு மதத்தா லுனையிகழ்ந்து
தோமுற்றார் தக்கனார் சோமேசா—வாமே
பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

௨௪

## நீதிநெறி விளக்கம்

1845 இகழி னிகழ்ந்தாங் கிறைமக னென்று
புகழினு மொக்கப் புகழ்ப—விகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யு
நீர்வழிப் பட்ட புணை.

௨௫ 1846 கைவரும் வேந்த னமக்கென்று

காதலித்த

செவ்வி தெரியா துரையற்க—வொவ்வொருகா

உ௯. மன்னரைச் சேர்ந்தொழுகல்
289

லெண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னன்.

உசு 1847 பழைமை கடைப்பிடியார் கேண்மையும்
பாரார்
கிழமை பிறிதொன் றுங்
கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க்
கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு.
உ௭ 1848 மன்னர் புறங்கடை காத்து
வறிதேயாம்
எந்நலங் காண்டுமென்
றெள்ளற்க—பன்னெடுநாட்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க்
கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்.
உ அ

1849 மன்னர் விழைப விழையாமை மன்னரான்

மன்னிய வாக்கந் தரும்.

உக

1850 செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு
மவித்தொழுகல்

ஆன்ற பெரியா ரகத்து.

கூ௦ 1851 குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில

வேண்டுப வேட்பச் செயல்.

கூக 1852 இனைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற

வொளியோ டொழுகப் படும்.

கூஉ 1853 கொளப்பட்டே மென்றெண்ணிக்

கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

1854 கூனொடு வெதிரே பங்கு குருடுபே ருமை யானோர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோ டொழியு மம்மா
மானம தழிந்து தொல்லை வலியிழந் துலகில் வைகும்
ஏனையர் வசையின் மாற்ற மெழுமையு மகல்வ துண்டோ. க

1855 இறந்திட வரினு மல்லா லிடுக்கணொன் றுறினுந் தம்பாற்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடு மிரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானுந்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர் பெற்றேன். உ

விநாயக புராணம்

1856 பெருக்கத் துயர்வாம் பணிவொழியல்
பேணுப் பணிவு சுருக்கத்திற்
செருக்க லின்றி யமையாத
சிறப்பிற் றேனு முயர்மான
முருக்கும் வினையைச் செயநினையல்
மொய்ம்பார் மானங் கெடவூழ்வந்
துருக்கு மெனிற்சா மரைமானை
யுன்ன லேம கண்டனே.
க

1857 இழிந்த தொழிலி னுணுவதே யெய்தற் கரிய நாணென்பர்

ஒழிந்த மனவாக் குடலொடுக்க மொளிவா னுதலார் நாணேயாங்

கழிந்து விட நாண் மண்கோடல் கருதார் நலமெல் லாம்வளர்ப்பார்

அழிந்து நாண்மற் றுயிர்வாழா ராவி யழிந்து நாளுள்வார். ௬

இராமாயணம்

1858 உற்றது கொண்டு மேல்வந்
துறுபொரு ளுணருங் கோளார்
மற்றது வினையின் வந்த
தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப்
பெரியவர் அரிய நூலும்
கற்றவர் மான நோக்கிற்
கவரிமா வனைய நீரார்.

இ

௬௮. மானம்

வில்லி பாரதம்

1859 ஊனமே யான வூனிடை யிருக்கு

முயிரினைத் துறந்தமொண் பூணு
மானமே புரப்ப தவனிமே லெவர்க்கும்
வரிசையுந் தோற்றமு மரபும்
ஞானமே யான திருவடி வுடையாய்
ஞாலமுள் ளளவுநிற் றவிஞல்
ஈனமே யுயிருக் கியற்கையா தலிஞு
லென்றனன் வீமனுக் கிளையோன்.

நைடதம்

1860 தளர்வொடு மெலிந்தும் வையம்
தனிக்குடை நிழற்றும் பைம்பொற்
கிளரொளிப் பூணுன் வீமன்
பாவையைக் கேட்டல் செய்யான்
அளியென உயிரை உண்மை
அறத்தினை யறவிட் டாலும்
இளிவென வெண்ணி மானம்
பூண்டவர் இரப்பர் கொல்லோ.

நாலடியார்

1861 யாமாயி னெம்மில்லங் காட்டுதுந் தாமாயிற்
காணவே கற்பழியு மென்பார்போல்—நாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறு மதனுன்

மறந்தீக செல்வர் தொடர்பு.

1862 நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தா ரென்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்லன்
உலையூதுந் தீயேபோ லுள்கனலுங் கொல்லோ
தலையாய சான்றோர் மனம்.

1863 திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்தும்—எரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போற் கனலுமே
மான முடையார் மனம்.

1864 இம்மையு நன்று மியனெறியுங் கைவிடா
தும்மையு நல்ல பயத்தலால்—செம்மையின்
நானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மான முடையார் மதிப்பு.

கக

1865 பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார் சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் சுவைபோல்
அருநவை யாற்றுதல் இன்று.
கஉ

1866 மல்லன்மா ஞாலத்து வாழ்பவ ருள்ளெல்லாம்
செல்வ ரெனினும் கொடாதவர் நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்.
கசு

1867 கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கு—மிடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின்.
கரு

நான்மணிக்கடிகை

1868 பறைபட வாழா வசுணமா வுள்ளங்
குறைபட வாழா ரூரவோர்—நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாந்
தமக்கொவ்வாச்
சொற்பட்டாற் சாவது சால்பு.

கரு

## அறநெறிச் சாரம்

1869 தனக்குத் தகவல்ல செய்தாங்கோ ராற்று
லுணற்கு விரும்புங் குடரை—வனப்பற
வாம்பற்றுள் வாடலே போல வகத்தடக்கித்
தேம்பத்தாங் கொள்வ தறிவு.

கசு

1870 தானத்தின் மிக்க தருமமுந் தக்கார்க்கு
ஞானத்தின் மிக்க வுசாத்துணையு—மானம்
அழியா வொழுக்கத்தின் மிக்கதூஉ மில்லை
பழியாமல் வாழுந் திறம்.

கஎ

## மூதுரை

1871 உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்
றளர்ந்து வளையுமோ தான்.

கஅ

## நல்வழி

1872 பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கா
லிச்சைபல சொல்லி
யிடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானமழியா
துயிர்விடுகை சால வுறும்.

திருக்குறள்

1873 இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

உ0 1874 சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டுபவர்.

உக
1875 ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்
தெட்டான் எனப்படுதல் நன்று

அந்நிலையே
உஉ 1876 மருந்தோமற் றூனோம்பும்
வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து.

உங 1877 மயிர்நீப்பின் வாழாக் கவரிமா
வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

உச 1878 இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு.

உ

# ௬௯. முயற்சி

### கந்தபுராணம்

1879 ஆக்கமிங் கொருவரா லணுக வேண்டுமேல்
ஊக்கமுண் டாவரே லுறுவ ரன்னது
நீக்கமில் கொள்கையி னிற்ப ரேயெனின்
மேக்குறு பெருந்திரு விரைவின் மேவுமால்.

1880 நெடிது பற்பகல் செல்லினு நிரம்புவ தொன்றை
யிடைவி டாமலே முயன்றுபெற் றிடுகின்ற தியற்கை
உடல்வ ருந்தியுந் தங்களான் முடிவுறு தொன்றை முடியு
மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே. ௨

### விநாயக புராணம்

1881 விடாது தனுவிற் செயுமுயற்சி மென்மேற் பொருளை
மிகவளர்க்கும்

கெடாது சுற்ற நட்பினர்தங் கிளையுந் தாங்கும் யாவர்க்குந்

தடாத வுபகா ரமும்புரியுந் தடந்தா மரையா ளையுஞ்சேர்க்கும்

படாத வூழ்வந் திடுகாறும் பயனே விளக்கும் பழியின்றும். ௯

## குசேலோபாக்கியானம்

1882 கலைமுழு தோர்ந்து கரிசெலா மறுத்த
காந் தனே பருமணி யரவத்
தலைகிடந் திமைக்குந் தாத்திரி யதனிற்
சாற்றருந் தக்கநன் முயற்சி
யுலைவறப் புரியா வொருவனுக் கெங்ஙு
னுற்றிடுஞ் செல்வநன் னிலத்தை
நிலைபெற வுழுது வித்திலான் றனக்கு
நீள்பய னுற்றிடுங் கொல்லோ. ௧

1883 மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம்
வாய்க்கவென் றனுதின முயற்சி
தானுஞற் றுவனேற் கடவுளு மதனைத்
தந்தளிக் குவன தா லன்றோ
ஆனபே ரறிஞர் திருவினை முயற்சி
யாக்குமம் முயற்சியி லாமை
யினமா ரின்மை புகுத்திடு மாலென்
றியாருநன் குணர்தர நவில்வார். ௨

1884 செயத்தகு முயற்சி செய்திடிற் செயிர்தீர்
செய்யவள் மணாளனு மிரங்கி
வியத்தகு வேண்டு மியாவையு மளிப்பன்
விளம்புறு முயற்சிசெய் யானேல்
நயத்தகு போக மளித்திடா னென்று
நானிலத் தறிஞர்நன் குரைப்பர்
உயத்தகு நெறிமா லடியுன லென்றே
யோர்ந்தமா தவப்பெருங் கடலே.

க

1885 முன்புநல் வினைசெய் தவர்முயற் றின்றி
முன்னிய வெலாமுண்ப ரென்னில்
இன்பவா லரியே முதலுப கரண
மெலாமினி துடையவ ரேனும்
வன்புறு மடுதன் முயற்சியில் லாமை
வயிற்றெழு பசித்தழ லவிய
நன்பத மாமோ மறைமுழு துணர்ந்த
நற்றவக் குணப்பெருங் குன்றே.

ள

1886 கடவுளீ குவனென் றெண்ணிநித் தியமுங்
கருதுறு முயற்சிசெய் யானேல்

அடலுறு செல்வ மடைகுவ னேகொ
லருங்கலத் திட்டபா லடிசின்
மிடலுடைக் கரத்தா லெடுத்துணு தெங்ஙன்
வீங்கும்வெம் பசிப்பிணி யொழிப்பன்
உடல்பவந் தனக்கோ ராகர மாகு
முடனனி வாட்டுமெய்த் தவத்தோய்.

பழமொழி

1887 இனியாரு மில்லாதா ரெம்மிற் பிறர்யார்
தமியெம்யா மென்றொருவர் தாமடியல் வேண்டா
முனிவில ராகி முயல்க முனியாதார்
முன்னிய தெய்தாத தில்.

நாலடியார்

1888 ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றன்
தாழ்வின்றித் தன்னைச் செயின்.

1889 உறுபுலி யூனிரை யின்றி யொருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னும்—அறிவினற்

காற்றெழி லென்று கருதற்க கையினுன்
மேற்றெழிலு மாங்கே மிகும்.

கக 1890 இசையா தெனினு மியற்றியோ
ராற்றல்

அசையாது நிற்பதா மாண்மை—இசையுங்காற்
கண்ட நிரையலேக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று.

கஉ 1891 நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லால்
பொருளில்லே—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளென்றே தவம்கல்வி ஆள்விணை
என்றிவற்றன் ஆகுங் குலம்.

கந

## ஆசாரக் கோவை

1892 நந்தெறும்பு தூங்கணம் புட்காக்கை
யென்றிவைபோற்
றங்கரும நல்ல கடைப்பிடித்துத்—தங்கருமம்

அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும்.

கச

## நீதி நெறிவிளக்கம்

1893 உலேயா முயற்சி களைகணு வூழின்

வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி

கடு 1894 கால மறிந்தாங் கிடமறிந்து
செய்வினையின்
மூல மறிந்து வினைவறிந்து – மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

கசு
1895 மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார்
கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

கள
பெருந்தொகை
1896 தாளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னு
மென்னும்
யாளியைக் கண்டஞ்சி யானைதன்
கோடிரண்டும்
பீலிபோற் சாய்த்து விடும்பிளிற்றி யாங்கே.

கஅ செய்யுட்கோவை (தி.
ல.) 1897 பெருமை யுடையோர்முன்
பெற்றபே றெல்லாம்

நாடு கொடுபிடியாய் நாடினதே நாடுமுனே
பாடுபட்டார் பீடுபெற்றுர் பார்.
கசு

திருக்குறள்

1898 முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

உ0 1899 மடியுளாண் மாகமுடி யென்ப மடியிலான்
ருளுளா டாமரையி னுள்.

உக 1900 பொறியின்மை யார்க்கும் பழியன்
றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

உஉ 1901
தெய்வத்தா னுகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

உங 1902 ஊழையு முப்பக்கங் காண்ப
ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.
உச

## ௫௦, பொருட் சிறப்பு

### கந்தபுராணம்

1903 பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய
இறந்ததோர் பொருண்மைய திரண்டின் வன்மையும்
அறிந்தவர் தெரிவரே லரிய கல்வியிற்
சிறந்தது திருவெனச் செப்ப லாகுமால்.

க

1904 அளப்பருங் கல்வியு மாக்கம் யாவையுங்
கொளப்படு தன்மையிற் குறைவு றுதவை
வளர்த்தலின் மேதக வனப்புச் செய்தலிற்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே.

உ

1905 நூலுறு கல்வியை நுனித்து நாடியே
வாலறி வெய்திய வரத்தி னோர்களு
மேலுறு திருவொடு மேவு றாரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால்.

௩

1906 அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையு
முளப்படு தன்மையு முயர்ந்த சீர்த்தியுங்
கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால்
வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே.

௪

திருவிளையாடற் புராணம்

1907 நட்பிடை வஞ்சஞ் செய்து நம்பினர்க் கூன்மா ருட்டத்
துட்படக் கவர்ந்து மேற்றோர்க் கிம்மியு முதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ வறத்தா றீட்டு நம்பொருள் படுமோ வென்று. ௫

திருவருணைக் கலம்பகம்

௨

1908 சேனார் திருவுடைச் செல்வரைக் காணிற் சிறப்புச்செய்து
பேணா தவருமுண் டோபுவி மீதிற் பெருத்தெழுந்து
சோணா சலவடி வாய்வெளி யாய்நின்ற சோதிதனைக்
காணாத கண்ணனைச் சொல்வர்செந் தாமரைக் கண்ண
னென்றே. ௬௮

சீவகசிந்தாமணி

௬

1909 வென்றி யாக்கலு மேதக வாக்கலுங்

ஞின்றி ஞர்களைக் குன்றென வாக்கலும்

## ருo. பொருட் சிறப்பு

299

அன்றியுங் கல்வி யோடழ காக்கலும்
பொன்றுஞ் சாகத்தி னுய்பொருள் செய்யுமே.
௯

1910 பொன்னி னுகும் பொருபடை யப்படை
தன்னி னுகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத்துன் னுதன வில்லையே.
௧௦

1911
செய்கபொருள் யாருஞ் செறு வாரைச் செறுகிற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரை யுண்ணும்
ஐயமிலை யின்பமற னோடவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றல்லபிற
பொருளே. ௧௧

வளையாபதி

1912 குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கு
மலந்த கிளைக ளழிபசி நீக்கு
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்

புலம்பில் பொருடரப் புன்கண்மை யுண்டோ.
௧0

## இராமாயணம்

1913

பூரியர் தமைவேந் தாக்கும் புவிபுரப் பிக்குந் துய்க்குஞ்
சீரிய வுண்டி சேர்க்குந் தேவர்தம் முலகம் போக்குங்
காரிய மனைத்துங் கூட்டுங் கருதலர் தம்மை வாட்டுங்
கூரிய திதன்மே லில்லை கொழும்பொனீர் கொண்மினென்ருர்.
௧௧

## மேருமந்தர புராணம்

1914 குலம்பெரிய குணமறிவு வடிவுகுடிப் பிறப்புப்
பொலங்கையுடை யவர்க்கலது புகழ்ச்சியினை யடையா
விலங்குமனை யாளும்பொரு ளில்லவிடத் திகழு
மலங்கல்வரை மார்பபொரு ளாதலினி யழியல்.
௧௨

## நாலடியார்

1915 வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தா தானெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர்.
௧௩

1916 ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகிற்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்.

கச

300 பன்னூல் பாடற்றிரட்டு

1917 அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வங்
கருதுங் கடப்பாட்ட தன்று.

கரு

நான்மணிக்கடிகை

1918 கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மத—மெல்லெ
னருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.

கசு 1919 நல்லார்க்குந் தம்மூரென்
றூரில்லை நன்னெறிச்
செல்வார்க்குந் தம்மூரென் றூரில்லை—யல்லாக்

கடைகட்குந் தம்மூரென் றூரில்லை தங்கைத்
துடையார்க்கு மெவ்வூரு மூர்.

கஎ

பழமொழி

1920 அருமை யுடைய பொருளுடையார் தங்கட்
கரும முடையாரை நாடார் —எருமைமேல்
நாரை துயில்வதியு மூர குளந்தொட்டுத்
தேரை வழிச்சென்ரு ரில்.

கஅ 1921 அருளுடை யாருமற் றல்லா தவரும்
பொருளுடை யாரைப் புகழாதா ரில்லை
பொருபடைக் கண்ணு யதுவாற் றிருவுடையார்
பண்ட மிருவர் கொளல்.

கக

## நீதிநெறி விளக்கம்

1922 இன்சொல்லன் ருழ்நடைய ஞயினுமொன்
றில்லானேல்
வன்சொல்வி னல்லது
வாய்திறவா—வென்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங்
கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

உ0 1923 இவறன்மை கண்டு முடையாரை
யாருங்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தா
முற்பக ஞேலாதார் நோற்ருரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

உக

## நல்வழி

1924 கல்லானே யானுலுங் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ—ரில்லானை

யில்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த
செல்லா தவன்வாயிற் சொல்.

தாய்வேண்டாள்

௰௨

௫௦. பொருட் சிறப்பு

301.

தனிக்கவித்திரட்டு

1925 எல்லாமும் வல்லவை என்ற பொருள்கள்
இரண்டே அவைக ளவைக ளென்னில்
பல்லா யிரமண்ட மெல்லாம் படைத்த
பரம்பொரு ளொன்று பணமொன்றே.

உரு

1926

ஏற்றவறி வொன்றுமின்றி இழிகுலத்தோ ஞனுலும்
தோற்றுபொரு ளுடையானைத் தொழுகுலனுந் தொழுகின்றன்

சாற்றுமிந்தப் பொருள்போலத் தடங்கடல்சூழ் ஞாலமதில்
ஊற்றமிகச் செய்யவல்ல தொன்றுமிலை யென்றுணர்மின். உசு

1927

போய்க்கொடிய கானம் புகுந்தாலு மவ்வனத்தில்
வாய்க்கினிய சோறூட்டும் மாதாவே!

ஓது கலைஞானம் உள்ளவெலாங் கற்று நன்றாச்
சாதிக்க வைக்குந் தகப்பனே!

உரு

1928

தந்தரத்துக் கொவ்வாத தாழ்ந்தகுல மானாலும்
வந்தெடுத்துப் பெண்கொடுக்கும் மாமனே!
வெட்டிவெல்லக் கூடா வினையயரை நாழிகைக்குள்
கட்டிவெல்லக் கச்சைகட்டுங் காவலா.

உசு

1929

அருள்கொண் டியற்றும் அறமும் அறநெறி யாய்ந்தமென்பூச்

சுருள்கொண்ட கோதையர் தோள்புண ரின்பமுஞ் சூழ்சுரும்பும்

மருள்கொண்டு பாடு மதுமலர்ச் சோலை மயிலனையாய்
பொருள்கொண் டொழியமுற் றுதென்று ஞாலம் புகலுமன்றே.

உஎ

1930 பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய
இறந்ததோர் பொருண்மைய திரண்டின் வன்மையும்
அறிந்தவர் தெரிவரே லரிய கல்வியிற்
சிறந்தது திருவெனச் செப்ப லாகுமே. உஅ

திருக்குறள்

1931 பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

௨௧

1932 இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

௩௦

1933 செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

௩௧

1934

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

௩௨

—

## ௫௧. கல்வி

### கந்தபுராணம்

1935 மாற்படு புந்தியின் மறுவில் சேதனம்
பாற்படும் உயிர்க்கெலாம் பவத்தின்
மாண்பயன்
நூற்படு கல்வியின் நுவல்வ ளத்தினின்
மேற்படு கின்றதில் விழுமி தில்லையே.
1936 திருமைகொள் வளநெடு தீதில் கல்வியா
மிருமையி னொன்றினை யெய்தி டாதெனி
னருமைகொ ளவ்வுயி ரதனி னூற்றவும்
பெருமைய துடையது பேயின் றோற்றமே.
௨

### விநாயக புராணம்

1937 உடல்வயத் தாகுஞ் சாதி யுயர்ந்தவர் சாதி
தாழ்ந்தோர்

திடமுற வுயிரி னோடு செல்லுறுங் கல்வி தம்மா
லிடர்தரும் பெருமை யெய்தா ராதலா லகக்கண்
ணாகித்
தொடர்புறுங் கல்வி கல்லாத் தொழிலினை விட
வே வேண்டும்.

க

1938 வறுமையான் மடமை தன்னால் வருந்திநெஞ்
சழியுங் காலை
யுறுதிசெய் துணையாங் கற்ற வுணர்வினை
வளர்க்கு மென்று
மிறுதியில் லாத வின்ப மீட்டுமா தலினாற் கற்று
மறுவறு வொழுக்க முள்ளார் வாய்மொழி
கேட்டல் வேண்டும்.

உ

1939 இழிந்தவ னுயர்ந்த தொன்றை
யியம்பினு முயர்ந்தோன் வாயி
னிழிந்ததொன் றுறினு முள்ள
வியல்பறிந் தோம்பி நீக்கிப்
பொழிந்தெனப் பிறர்தாங் கூறும்
புலப்படாப் பொருளுந் தெள்ளி
வழிந்தெனத் தெளியக் கேட்போர்
மனங்கொளப் புகறல் வேண்டும்.

ங

திருக்குற்றலப் புராணம்

1940 இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும்

வானிரவி யெழுந்தா லன்றிக்
கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரி
தாமுலகிற் கண்போல் யாரும்



## ருக. கல்வி

பெருகியசெல் வமுமறிவும் பெற்ருலும்
நூற்கேள்வி பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவ மிம்மைமறு
மையும்வீடுந் தெரியா வன்றே.

### கூர்மபுராணம்

1941 நூல்பல கற்ரே னேனும் பொருளுனித் தறியா னென்னின்
மாலொடும் வாளா கத்து மாநிறக் காகம் போல்வன்
ஏல்வுறக் கற்ற நூலின் பொருடெரிந் திருநூல் சொன்ன
சீலமே யொழுகு கின்ரேன் சிவனடி நீழல் சேர்வான். எ

1942 பொருவி லாவிதி காச புராணங்கள்
தெருளு மாந்தர் சிறப்புள ராகுவர்
தரும நூலும் புராணத்தின் றன்மையுங்
கருதி யோர்ந்தவ ரேகலை வல்லரே. அ

### உபதேச காண்டம்

1943 கற்றி லாய்கலை கற்றுண ரார்முக
மற்று நோக்கின் மயானத்தை யொக்குமால்

பெற்று ளார்பெறும் பேறுதங் காதலர்
சொற்ற கல்வியிற் றூயரென் றோதலே. க

## திருமந்திரம்

1944 துணையது வாய்வரும் தூயநற் சோதி
துணையது வாய்வரும் தூயநற் செல்வம்
துணையது வாய்வரும் தூயநற் கந்தம்
துணையது வாய்வரும் தூயநற் கல்வியே. ௪௦

1945 கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதியுரை செய்யும்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே.

1946 வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்ற

கக

ரல்லா தவர்க ளறிவுபல வென்பா
ரெல்லா விடத்து முளனெங்க டம்மிறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே.

கஉ

1947 நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்கா
ளெல்லா வுயிர்க்கு மிறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே.

கஅ



1948 நில்லாது சீவ னிலையன் றெனவெண்ணி
வல்லா ரறத்துந் தவத்துளு மாயினர்
கல்லா மனிதர் கயவ ருலகினிற்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே.

கூ

1949 கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராங்
கல்லாத மூடர் கருத்தறி யாரே.

கடு

1950 கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறுர் மூடர்கண்
மற்றும் பலதிசை காணர் மதியிலோர்
கற்றன் பினிற்போர் கணக்கறிந் தார்களே.

கூ

தாயுமானவர் பாடல்

1951 கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக்

கடபடமென் றுருட்டுதற்கோ கல்லா லெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ.
சள

புறநானூறு

1952 உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு

மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு

மூத்தோன் வருக வென்னா தவரு
ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்தா நாற்பா லுள்ளுங்

கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.

கஅ

சீவக சிந்தாமணி

1953 கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின்
கண்ணு மாகும்
மெய்ப்பொருள் விளக்கு நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையுமாகும்
பொய்ப் பொருள் பிறகள் பொன்னும்
புகழுமாந் துணைவி யூக்கு
மீப்பொரு ளெய்தி நின்றீ ரிரங்குவ தென்னை
யென்றான். கக

௫க. கல்வி

வில்லிபாரதம்

1954 குலமிக வுடையர் எழில்மிக வுடையர்
குறைவில்செல் வமுமிக வுடையர்
நலமிக வுடையர் என்னினுங் கல்வி
ஞானமற் பழுமிலா தவரை
வலமிகு திகிரிச் செங்கையாய் முருக்கின்
மணமிலா மலரென மதிப்பேன்
சலமிகு புவியி லென்றனன் வாகைத்
தார்புனை தாரைமா வல்லான்.

✓1955 குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து

நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

உக

✓1956 இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோல்
மம்ம ரறுக்கு மருந்து.

உ௨ ✓1957 களர்நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

உ௩

1958 வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வார்
எச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றில்லை பிற.

உ௪

1959 கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்

ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்

பாலுண் குருகிற் றெரிந்து.

உகு

1960 தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா

னென்றிகழார்—காணாய்

• அவன்றுணையா யாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல். உகூ

1961 அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்—கலகல

ப. பா.—20



கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

உஎ

1962 நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்கு—

ணுண்ணூல்

உணர்வில ராகிய வூதிய மில்லார்ப்
புணர்த நிரயத்து ளொன்று.

உஅ 1963 கல்லாது நீண்ட வொருவ னுலகத்து

நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினு நாயிருந் தற்றே யிராஅ

துரைப்பினு நாய்குரைத் தற்று.
உக

நான்மணிக்கடிகை

1964 திரியழற் காணிற் றொழுப விறகின்
எரியழற் காணி னிகழ்ப—வொருகுடியிற்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமை பாராட்டு முலகு.
க0

1965 கற்பக் கழிமட மஃகு மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவ மாய நெறிபடரு மந்நெறி
யிப்பா லுலகத் திசைநிறீஇ யப்பால்
உயர்ந்த வுலகம் புகும்.
கக

1966 கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம்
பாய்மா வுடையா னுடைக்கிற்குந்—தோமில்
தவக்குட்டந் தன்னுடையா னீந்து மவைக்குட்டங்
கற்றான் கடந்து விடும்.
கஉ

1967 வாலிழையார் முன்னர் வனப்பிலான்

பாடிலன்

சாலு மவைப்படிற் கல்லாதான் பாடிலன்
கற்ரு ஞெருவனும் பாடிலனே கல்லாத
பேதையார் முன்னர்ப் படின்.

௩௩

1968 மனைக்குப்பாழ் வாணுத லின்மைதான் செல்லுந்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை—யிருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை தனக்குப்பாழ்
கற்றறி வில்லா வுடம்பு.

௩௪

1969 மனைக்கு விளக்க மடவாள் மடவாள்
தனக்குத் தகைசால் புதல்வர்—தனக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விதனக்
கோதிற் புகழ்சா லுணர்வு.

௩ ७

## திரிகடுகம்

1970 நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலு
நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ்
சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலு மிம்மூன்றுங்
கற்றறிந்தார் பூண்ட கடன்.
௧௬

## பழமொழி

1971 உணற்கினிய வின்னீர் பிறிதுழியில் லென்னுங்
கிணற்றகத்துத் தேரைபோ
லாகார்—கணக்கினை
முற்றப் பகலு முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று.
௧௭ 1972 ஆற்றவுங் கற்ரு ரறிவுடையா
ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாதலால்
ஆற்றுணா வேண்டுவ தில்.
௧௮

## அறநெறிச்சாரம்

1973 பலகற்றேம் யாமென்று தற்புகழ வேண்டா

அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங்
காக்குஞ்
சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல்.
கக
1974 புண்ணுகப் போழ்ந்து புலால்பழிப்பத்
தாம்வளர்ந்து
வண்ணப்பூண் பெய்வ
செவியல்ல—நுண்ணூல்
அறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞான நீக்கித்
துறவுரை கேட்ப செவி.
௨0 1975 பொருளி லொருவற் கிளமையும்
போற்றும்
அருளி லொருவற் கறனுந்—தெருளான்
திரிந்தாழ்ந்த நெஞ்சினுன் கல்வியிம் மூன்றும்
பரிந்தாலுஞ் செய்யா பயன்.
௨௧
1976 கற்றதுவுங் கற்றெருபா னிற்பக் கடைப்பிடியு
மற்றெருபால் போக
மறித்திட்டுத்—தெற்றென
நெஞ்சத்துட் டீமை யெழுதருமே லின்னுதே
கஞ்சத்துட் கற்பட்டாற் போன்று.
௨௨
சிறுபஞ்சமூலம்

1977 மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின்
வனப்புஞ்—செயிர்தீர்ந்த



பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

ஏலாதி

1978 இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பும்
நடைவனப்பு நாணின் வனப்பும்—புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு.

சோமேசர் முதுமொழி வெண்பா

1979 மெய்த்ததிரு வள்ளுவனார் வென்றுயர்ந்தார்
கல்விநலந்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார்
சோமேசா—உய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார்
கீழ்ப்பிறந்துங்

கற்ரு ரனைத்திலர் பாடு.

சஇ

நீதிநெறி விளக்கம்

1980 அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு
நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி
னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

சஃ 1981 தொடங்குங்காற் றுன்பமா யின்பம்
பயக்கு
மடங்கொன் றறிவகற்றும் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

சஎ 1982 கல்வியே கற்புடைப் பெண்டிரப்
பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே
யீர்ங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை
மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

சஅ

1983

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்துஞ்

சொல்வன்மை யின்றெனி னென்னுமஃ துண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து.

1984

சக

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்

வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

நூo

1985

நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி—கடும்பகல்

ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

௯௧

1986 வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட்
டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

௯௨

1987 கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லான்
மற்றோ ரணிகலம் வேண்டாவா—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

௯௩

1988 முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்.

௯௪ 1989 தம்மின் மெலியாரை நோக்கித்
தமதுடைமை

அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினுங்
கற்ருரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லா
மெற்றே யிவர்க்குநா மென்று.

௯௨

1990 கற்பன வூழற்ருர் கல்விக் கழகத்தாங்

கொற்கயின் ற்ாத்தைவா
யங்காத்தன்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

௯௩

நீதிசாரம்

1991 கண்ணிரண்டே யாவர்க்குங் கற்ருேர்க்கு
மூன்றுவிழி
எண்ணுவிழி யேழாகு மீவோர்க்கு—நண்ணும்
அநந்தந் தவத்தால் அருள்ஞானம்
பெற்ருேர்க்கு
அநந்தம் விழியென் றறி.

௯௪

1992 தேசிக மெவ்வ ணங்கள் சிறந்தநற் கலன்கள்
மிக்க
காசினி யிரதஞ் சொன்னங் கரிபரி படைத்தோ
ரேனும்
தேசமாம் வித்தை யற்ருல் நிறைந்திடு முருக்கம்
பூப்போல்
வாசனை யிலாம னின்று வயங்கிடு

வாரா மன்றே. ௯௪

நன்னெறி

1993 உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங்
கதிரொளிதான்
விண்ணளவா யிற்றே விளம்பு.

௯௧



1994 கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர் தா மென்று மதியாரே—வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா
புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்.

௬0

1995 பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத்தா
மற்றெவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண்.

௬௧

1996 பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே—நன்னுதால்

காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றுன்.

சு உ

## மூதுரை

1997 கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கு
மவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.

சு ௩

1998 மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—
மன்னனுக்குத்
தன்றேய மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு.

சு ௪

## நீதிவெண்பா

1999 ஆனை மருப்பு மருங்கவரி மான்மயிருங்
கான வரியுகிருங் கற்றோரு—மானே
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொருதே சத்தே
சிறந்தவிடத் தன்றோ சிறப்பு.

சு ௫

2000 வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
யாக்கைநயத் தாலறிய
லாகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே
கோலத் தறிவருமோ கூறு.

அ அ

விவேக சிந்தாமணி

2001 வெள்ளத்தால் அழியாது வெந்தழலால்
வேகாது வேந்த ராலும்
கொள்ளத்தான் இயலாது கொடுத்தாலும்
நிறைவொழியக் குறைப டாது

ருக. கல்வி 311

கள்ளத்தார் எவரா லுங் களவாட
முடியாது கல்வி யென்னும்
உள்ளத்தே பொருளிருக்க உலகெங்கும்
பொருள்தேடி உழல்வ தென்னே.

அள

கயிலாசநாதர் சதகம்

2002 கடலுலகி லுற்றபொரு ளுக்குளே நன்மைதரு
கல்விநிலை பெற்ற பொருளாம்
கனலினல் உருகாது புனலினற் கரையாது
கள்ளரால் திருடொ ணுது
திடமான ராசாதி ராசரா லும்மதைத்
தீண்டிச் சிதைக்கொ ணுது
செயன்மிக்க மாதராற் சேதமா காதொருவர்
செலவிடிற் குறைவு ருதாம்
அடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை
அளவிடவு முடியா துகாண்
அப்பொருளி னிற்பெரு திப்புவி யிலலைகின்ற

அற்பருறு பயனென் கொலோ
கடகய முரித்துடலி னிற்றரித் திடுதேவ
கற்பக விராச மேவும்
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே
கயிலையங் கிரிவா சனே.

சு அ

## பெருந்தொகை

2003 எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பா
ஞகு—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதனூற்
பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

சு கூ

## பர்த்துருகரி

2004 மைந்தருக்கு வித்தைபொருள் எழில்கீர்த்தி
சுகபோகம் மற்றும் நல்கும்
தந்தைதாய் குருதெய்வம் தாஞகும்
பரதேசந் தனக்கு நட்பாம்
எந்தரா சரும்மதிக்கச் செயுமதற்குச்
சமானமொன்று மில்லை மேலாம்
அந்தவித்தை கல்லாதான் அறிவிலா
மிருகசெந்து வாகுந் தானே.

## கோடீச்சுரக்கோவை

2005 செல்வி வளர்திருக் கோடீச்சு ரேசர் செழுங்கிரிமேல்
சொல்விற லுற்ற அறமுதல் நான்குந் தொகவியற்றும்
பல்வித மான புகழ்நல்கும் வேந்தர் பரவச்செய்யும்
கல்வி யழகே யழகா மெவருக்குங் காரிகையே.

எக

## தனிப்பாசுரத் தொகை

2006 கல்வியே மக்கடங் கண்ணே புலவர்தஞ்
செல்வியே மனத்தின் செவ்விய வுணவே
நின்னொடு பயிறல் மன்னிய மாந்தர்
தமக்கும் பிறர்க்குந் தனிப்பே ரின்பம்
கரும்பயி றற்குக் கைக்கூலி போலத்
தரும்பொரு ளேயுயர் தகைமுத்தி வித்தே
பரந்த பாரினும் விரிந்த வானினும்
பாவலர் நூலினும் பரிவுடன் மேவி
ஆவலின் விளையாட் டயர்தரு மங்காய்
கருத்தினிற் களிப்பை உரைப்பை யாற்றுரை

கதுமென நின்னைக் கைப்பிடித் தோர்தமக்
கெதுவுநன் றுடே எதுவுநல் லூரே
ஆகவு மென்கொ லநேகர்
ஊக மின்றிநா ளுலப்பிவிட் டனரே.

எஉ தரும தீபிகை

2007 காட்சி புரிந்தருளும் காமர் விழிபோல
மாட்சி புரிந்து மனுக்குலத்தை—ஆட்சியால்
பல்வழியும் ஊக்கிப் பயன்காட்டி நிற்றலால்
கல்வியுஞ் செல்வமுங் கண்.

எ௩

இலக்கணக் கொத்து

2008 சிலநாட் பழகின் சிலவும் பலியா
பலநாட் பழகின் பலிக்கு மென்க
விரைவாற் பார்க்கின் தெரியா தொன்றும்
விரையா தேற்கின் கருதாது என்க
வருவதிற் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததிற் சிந்தையைச் சிந்தா திறக்குக
நூலினை மீளவும் நோக்க வேண்டா
சூத்திரம் பலகால் பார்க்கவே துணிக
மாரிபோற் கொடுப்பினும் மந்தனை விட்டுக்
கூரிய னுடனே கொடுத்தும் பழகுக



வேறொரு கருமத் தினைமனத் தெண்ணின்

ஆரிய ஞயினும் அப்பொழு தொழிக
சொற்பயில் விப்பவன் எப்படிச் சொற்றனன்
அப்படி யொழுகி அரும்பொருள் பெறுக.

எ௫

## திருக்குறள்

2009 கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.

எ௬

2010 கண்ணுடைய ரென்பவர் கற்ருேர்
முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

எ௬

2011 உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்ருர்
கடையரே கல்லா தவர்.

எஎ

2012 தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

எஅ

2013 யாதானு நாடாமா லூராமா லென்ஞெருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

எ௯

2014 ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

௮௦
2015 தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

௮௧
2016 கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

௮௨
2017 அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

2018

௮௩

கல்லா தான் சொற்கா முறுதன் முலையிரண்டும்
இல்லா தாள் பெண்காமுற் றற்று.

2019 கல்லாதா ரெட்பங் கழியநன் றுயினுங்
௮௪ கொள்ளா ரறிவுடை யார்.

அ௫

2020 கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

அ௬
2021 நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று. அஎ
2022 நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. அஅ



2023 விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.
அ௯ 2024 செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ
மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.
௯0 2025 கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.
௯௧ 2026 பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா
ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.
௯௨ 2027 நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

# ருஉ. பெரியாரைத் துணைக்கோடல்

## விநாயக புராணம்

2028 விழுப்பொரு ளுன்கையும் விளங்கத்
தெள்ளுபு
முழுப்பவைம் பொறியையு முனிந்து நீத்தவர்
வழுப்படா மறையவர் மற்றைக் கல்வியோர்
குழுப்புறத் தாதரங் கூர்தல் வேண்டுமால்.
ச

2029 நுண்மை
வண்மை

யறனு மிகத்தெளிந்து நூலி னியல்பு முலகியல்பும்
யுறத்தேற் றிடுமாற்றல் வல்ல ராகி வளர்சீலந்
திண்மை யறிவா யுளின்முதிர்ந்தோர் சேர
நன்கு மதித்திடுக
வெண்மை புரியா துயர்ந்திடுக வியம்பும்
வழியே நின்றிடுக. உ

காஞ்சிப் புராணம்

2030 சிறிய ராயினுர் சார்பினை விழையன்மின்
றிறல்கெழு பெரியோராம்
அறிஞ ராயினுர் சார்பினை விழைமினோ
அலரிதழ் விரிகொன்றை
வெறிந றுந்தொடை யெம்பிரான் சார்பினை
விழைதலா லுரகங்கண்
மறுவி லாற்றல்சால் கலுழனை விஞயின
வாழ்ந்தனை யோவென்ன.
ந-

ஞானவாசிட்டம்

2031 அறக்குறைவை நிறைவாக்குஞ் சம்பத்தாக்கு
மாபத்தைச் சுபமாக்கு மசுபந் தன்னைச்
சிறக்குமுயர்ந் தவர்கூட்ட மென்னுங் கங்கைச்
சீதநீ ராடினர்க்குச் செந்தீ வேள்வி
இறக்கரிய தவந்தானந் தீர்த்தம் வேண்டா
விடர்பந்த மறுத்தெவர்க்கு மினியோ
ராகிப்

பிறப்பெனும்வே லைப்புணையா முணர்வு
சான்ற
பெரியோரை யெவ்வகையும் பேணல்
வேண்டும். ௬

2032 தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் களினுற் போகாப்
பவங்களை யுயர்ந்தோர் பாதம் பணிந்துபற் றறுக்க வேண்டும்
அவங்களாங் காரங் கோப மறவுந் தேய்ந் தியற்கை யூன
சுவங்களி னடந்து நன் னூற்று றைநின்றே ருயர்ந்த
மேலோர். ௭



## சிவ—தோன்றி

2033 அஞ்சையு மறுத்த மேலோ ரடிதொழு தெழுவா
ராகில் வஞ்சமா மனத்த ரேனு மதித்துற
வணங்கல் வேண்டுஞ்
செஞ்சடை யொருவன் கண்டஞ் சேர்தரப்
படிதலாலே
நஞ்சமு முலகுக் கெல்லாந் தொழப்படு நலத்த
தன்றே. ௧

2034 அழுக்குடைச் சாதி யோரு மடைந்துமெய்ஞ்
ஞானி தன்னை
விழுப்புடைத் தலைவ ராவர் வேதகக் குளிகை
சேர்ந்த
இழுக்குடை யிரும்புஞ் செம்பு மிலங்குசெம்
பொன்னு மாங்கே

ஒழுக்கமோ டவன்ருள் சேர்மி ஞேங்குவீ
டெய்த லுற்ருர்.

எ

பட்டினத்தடிகள் பாடல்

2035 நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞா னமுமே
யல்லாது வேறு நிலையுள தோவக
மும்பொருளும்
இல்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வு
மெழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி
யேகம்பனே. அ

சிதம்பர மும்மணிக்கோவை

2036 புல்லறி வகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம ஞேரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே.
கூ

இராமாயணம்

2037 கரிய மாலினுங் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினு மெய்யினும்
பெரிய ரந்தணர் பேணுதி யுள்ளத்தால்.

கo 2038 அந்த ணாளர் முனியவு மாங்கவர்
சிந்தை யாலருள் செய்யவுந் தேவரி
னெந்து ளாரையு நொய்துயர்ந் தாரையு

மைந்த வெண்ணில் வரம்புமுண் டாங்கொலோ.
கக

குசேலோபாக்கியானம்

2039 ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந்
தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்த்து
மவர்நட்பை
வீயினுந்தான் மறப்பர்களோ மேதையோர்
மறப்பரேல்
நாயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிந்
நானிலத்தே. கஉ

ருஉ. பெரியாரைத் துணைக்கோடல்
317

2040 நல்லார்சொல் விரும்புவது நல்லாரைக்
காண்பதுவு
நல்லார்க்கொன் றுதவுவது நல்லாரைப்
புகழ்வதுவு
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியவிவ்
வெலாமடங்க
நல்லார்நட் பென்றுமுற னன்றன்றே நான்
மறையோய். கங

2041 பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா
னுயிடினும்
என்னுள்ளா னுவனவ னிருந்தவர்த

நட்பிலனேற்

பொன்னில்லான் பூமியில்லான்
புந்தியில்லா ஞயிடினும்

என்னில்லா ஞவனவ னிருந்தவர்
நட்புளனேல். கசு

2042 பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று
தூயோர்கள் மொழிவராற் றூயோரும் புகழ்தூயோர்
ஆயோர்கள் பெருநட்பை யருந்தவத்தாற் பெறலன்றி
ஏயோவெண் மையிற்கிடைப்பி னிகழ்வரோ விகழ்வில்லார்.
கரு

2043 சமயம்வரி னிடித்துரைப்பார் தக்கவழிச்
செலச்செய்வார்

இமையவர்த முலகுறவு மிருளுலகம்
பகையுமாய்

அமையவறி வுறுத்துவா ரந்தோ நூல்
கற்றுணர்ந்த

கமையுடையார் நட்பெவர்க்குக்

காண்கிடைக்கு மரிதரிது. கசு

2044 கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் படுநட்பு
வீடுதற்குத் தக்கதாய் நாடோறு மெலிந்தொழியும்
நீடுதற்குத் தக்கநன் னெறிநின்ரோர் நட்பொன்றே
தேடுதற்குக் கிடையாத திரவியமு மஃதாமால்.

கஎ

2045 முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கு நாடோறுந் தேவர்பெறற் கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதா லதுநிற்க

எத்திக்கும் புகழுநினக் கியன்மனநன் காயிற்றே. கஅ

பாகவதம்

2046

விடமும்வந் தீசன் கோல மிடற்றினி னீல வண்ண
வடிவுபெற் றணிய தாகி வயங்கிற்றுப் பெரிதுமென்றல்

கொடியரும் பெருமை யோரைக் கூடின்வெங் கோது நீங்கி
யொடிவறு நலம்பெற் றுய்தலுரைப்பதென் னுலகி னம்மா. கக

2047 அளிசெயு மனத்த ராகி யைம்புல னடக்கி யென்றும்
ஒளிகொடு புனித மேன்மை யுவப்பருஞ் சமனுற் றுள்ளஞ்
தெளிவுறு பெரியோர் தம்மைச் சேரினல் லன்பு கூருங்
களிதரு மன்பு கூரிற் கலக்குநல் லறிவு தானே. உ०



பழமொழி

2048 செயல்வேண்டா நல்லவை செய்விக்குந் தீய
செயல்வேண்டி நிற்பின்
விலக்கும்—இகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்னின்ற மூத்தார்வாய்ச் சொல்.
உக 2049 கற்றார் பலரைத்தங் கண்ணாக

வில்லாதார்

உற்றிடர்ப் பட்ட பொழுதின்கண் தேற்றம்
மரையா துணைபயிரு மாமலை நாட
சுரையாழ் நரம்பறுத் தற்று.

உஉ 2050 பொலந்தா ரிராமன் துணையாகப் போந்த
இலங்கைக் கிழவற் கிளையான்—இலங்கைக்கே
பேர்ந்திறை யாயதூஉம் பெற்றான் பெரியாரைச்
சார்ந்து கெழீஇயிலா ரில்.

உக

நாலடியார்

2051 கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகு முழவ ருழுபடைக்கு
மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார்மேற்
செல்லாவாஞ் செற்றார் சினம்.

உச

2052 அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வு—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு.
உ௫

2053 இறப்ப நினையுங்கா லின்னா தெனினும்
பிறப்பினை யாரு முனியார்—பிறப்பினும்
பண்பாற்று நெஞ்சத் தவர்களோ

டெஞ்ஞான்று
நண்பாற்றி நட்கப் பெறின்.
உக

2054 ஊரங் கணநீ ருரவுநீர் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமா—மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.
உ௭

2055 ஒண்கதிர் வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய
அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉங்
குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின்.
உ௮

2056 பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாந்—தேரிற்

## ருஉ. பெரியாரைத் துணைக்கோடல்
319

சிறியார் சிறுமையுந் தோன்றா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து.
உ௯

## நான்மணிக்கடிகை

2057 இரும்பி னிரும்பிடை போழ்ப பெருஞ்சிறப்பி
னீருண்டார் நீரால்வாய் பூசுப—தேரி
னரிய வரியவற்றுற் கொள்ப பெரிய
பெரியாரா னெய்தப் படும்.
க௦

2058 கந்திற் பிணிப்பர் களிற்றைக் கதந்தவிர
மந்திரத்தி ஞற்பிணிப்பர் மாநாகங்—கொந்தி
இரும்பிற் பிணிப்பர் கயத்தைச்சான் றேரை
நயத்திற் பிணித்து விடல்.
கக

## அறநெறிச்சாரம்

2059 நட்டாரை வேண்டி னறுமென் கதுப்பிறுய்
விட்டாரை யல்லாற்
கொளல்வேண்டா—விட்டார்
பொறிசுணங்கு மென்முலைப் பொன்னனு
யுய்ப்பர்
மறிதர வில்லாக் கதி.
கஉ 2060 காலொடு கையமுக்கிப் பிள்ளையை
வாய்நெறித்துப்
பாலொடு நெய்பெய்யுந் தாயனையர்—சால
வடக்கத்தை வேண்டி யறன்வலிது நாளுங்
கொடுத்துமேற் கொண்டொழுகு வார்.

## குமரேச வெண்பா

2061 ஏடெழுதிப் படியாமல் ஏற்றமுறும்
இனநலத்தால் ஞான மெல்லாம்
சூடகம்போல் சூழ்ந்துவரச் சுரேசனரே
முதலானோர் துதித்து நிற்கத்
தோடகரும் பாடகராய்த் தோலாத
மொழிப்புலமை தோய்ந்து நின்றார்
தேடரிய மேலோரைச் சேர்ந்தாரைச்
சேராத செல்வ முண்டோ.

நன்னெறி

2062 மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்—பலியேல்

கடவுள் அவிர்சடைமேல் கட்செவியஞ் சாதே
படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து.

கடு

கக
௨
கச

மூதுரை

2063 நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று.

௧-௬

திருக்குறள்

2064 அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

௧௭ 2065 அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

௧௮

2066 தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

௧௯

2067 பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

௨0

# ௫௩. பெரியாரைப் பிழையாமை

### விநாயக புராணம்

2068 நீத்தவ ராகியோர் நெருப்பு யிர்த்திடிற்
காத்திடுங் கடவுளுங் கலங்கு மாதலா
லேத்துவ தேகட னென்று மைந்தனே
யாத்தர்கள் பொறுப்பரென் றவம தித்திடேல்.

க

2069 குரவரைப் பெரியரைக் கூறுமாகம
விரவுறு மறைகளை மேத கும்படி
பரவுத லலதவர் பாங்கர் நிந்தனை
கரவுற வுளத்தினுங் கருதொ ணாதகே.

உ

2070 ஆற்றன் மிகுந்த வேந்தரையு மரிய தவத்து முனிவரையும்
போற்றி யொழுகி னெனப்பொருளும் போற்ற லாகு மவமதிப்பிற்
றேற்ற மிகுஞ்சார் பினரேனுஞ் சிதைவர் திகழ்முப் புரர்சூரன்
சாற்றிந் திரன்மா லாதியருந் தளர்ந்தா ரெனிற்சாற்
றுவதென்னே. ௩

### கூர்மபுராணம்

2071 கடவுளர் தம்மை வேத முனிவரைக் கடவுட்

கற்பின்
மடநலார் தம்மைக் கூர்வேன் மன்னரை
முனிந்து சீறிச்
சுடுசொலா லிகழ்வோர் பாவந் தொலைந்திட
வேண்டி னுவைக்
கடியவெங் கொள்ளி தன்னுற் கருக்கிட
வேண்டு மன்றே. ௬

திருவிளையாடற் புராணம்

2072 பையரா வணிந்த வேணிப் பகவனே யனைய
தங்கள்
ஐயனும் வியாழப் புத்தேள் ஆயிடை
அடைந்தா னுகச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோன்
இருந்தா னந்தோ
தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு
மதியுண் டாமோ? ௫
2073 ஒல்லெனக் குரவ னேக உம்பர்கோன் திருவி
னுக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தரன் அறிந்திக்
கேடு
நல்லதொல் குரவர்ப் பேணு நவையினுல்
விளைந்த தென்னு
அல்லலுற் றறிவன் றன்னைத் தேடுவான் ஆயி
னுனே. ௬

சிவ-ஞானசாரம்

2074 பெரியமா முனிவன் றன்னைப் பேதைமை
யதனின் மிக்குத்
தெரிவிலா தொருவன் சொல்லுந் தீமொழி
ப. பா.—21
யதனி னாலே



யரியதீ நரகந்தன்னி லழுந்துமோர் கற்ப
மென்று
புரிவிலா மறைக ளெல்லாம் புகன்றிடும் போத
மிக்கோய். எ
2075 தேவர்க்குந் தேவ னாகித் திகழ்தரு ஞானி
தன்னைப்
பாவத்தி னொருவன் மிக்குப் பண்ணிய நிந்தை
சொல்லிற்
றுவற்ற வயன்மா லீசன் றன்முதற் சகத்தி
யார்க்கு
மோவற்ற கொடிய நிந்தை யெனமறை யுரை
க்கு மன்றே. அ
2076 தன்னுணர் பரம யோகி தனக்கிழுக் கதனைச்
சொல்லன்
மன்னுறு மறையோர் தம்மை வதைத்தபா
வத்திற் கோடி.
சொன்னது கேட்ட லொக்கத் துணிதல்கோ
வதையிற் கோடி.

யென்னவே மறைக ளெல்லா மெடுத்துரை
செய்த தன்றே. கூ 2077 தத்துவ வித்தா மேலோன்
றனக்கொரு தீமை தன்னைப்
புத்தியா னினையி னுந்தான் பொருட்கள
வதனிற் கோடி.
மத்தமா மவரிற் கூடன் மத்யபா னத்திற் கோடி
யொத்தபா தகங்க ளென்றே யுரைத்தன மறை
களன்றே. ௧௦ 2078 கொடுகிய மொழிகொடு கோதின்
ஞானியை
வடுவது பேசிடு மறுவில் பாதக
னிடைவிட லறவெரி நரகில் வீழ்ந்தழிந்
துடுமதி யளவுமங் குழைத்து மாயுமே.
௧௧ 2079 அறிவினி லநிர்தனு மரிய யோகியை
மறுவது பேசிடு மதியில் பாதக
னுறுபுழு நரகில்வீழ்ந் தூழி யூழியங்
கிறுதுயர் படுவதை யியம்ப லாகுமோ.
௧௨ 2080 உன்னரு மறிவின்மிக் குணரு
ஞானியை
யின்னல்செய் பாதக னெழுகு லத்துள
துன்னரும் பிதிரர்க ளொடுஞ்சு ழன்றுதாம்
வெந்நர கில்விழ வேத மோதுமே.
௧௩ 2081 தோமறு ஞானியைத் துகளு
ரைத்தவ
ரேமுறக் கேட்டவ ரிசைந்தி ருந்தவ
ராமென மதித்தவ ரவரிற் கூடியோர்
தாமிவர் பஞ்சபா தகரிற் றண்ணியோர்.

கஉ 2082 உள்ளத்தே யுணர்வு நட்ட யோகியை
நிந்தை கேட்கிற்
றெள்ளித் தன் செவிபு தைத்துத் தூரத்தாம்
போவ தேயாங்
கள்ளத்தார் தம்மைக் காணல் கருதுதன்
மொழிதல் வேண்டா
வள்ளற்பா தகரைக் கோற லறத்தையு மவித்த
சிவ-தத்துவப்பிரகாசம்
தன்றே.• கஙு

2083

ஒழுக்கமே புரிந்தோ ஞத லதனைவிட் டொழிந்தோ ஞது
விழுக்கஞ்செய் மூர்க்க ஞதல் பண்டித ஞத லெண்ணில்

ருங. பெரியாரைப் பிழையாமை
323

பழிப்பரு ஞானந் தன்னின் முயல்பவன் பணியத்
தக்கோன்
றெழத்தகு ஞானி யென்றே சொல்லவேண் டுவது

முண்டோ.



இராமாயணம்

2084 தகையுறு தம்முனைத் தாயைத் தந்தையை
மிகையுறு குரவரை யுலகின் வேந்தனைப்
பகையுற வருதலுந் துறந்த பண்பிது
நகையுற லன்றியு நயக்கற் பாலதோ.

கஎ

நாலடியார்

2085 பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார்
மாட்டும்
வெறுப்பன செய்யாமை
ஞர்க்கு மருவி யணிமலை
வேண்டும்—வெறுத்தபி
நன்ஞட
போக்குதல் யார்க்கு மரிது.

கஅ

ஆசாரக்கோவை

2086 நின்றக்கா னிற்க வடக்கத்தா லென்று
மிருந்தக்கா லேவாமை
யேகார்—பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
வினவற்க சொல்லொழிந்தக் கால்.

கக

2087 ஆற்றப் பெரியார் பகைவேண்டிக்
கொள்ளற்க
போற்ருது கொண்டரக்கன்
போரின்—அகப்பட்டான்
நோற்ற பெருமை யுடையாருங் கூற்றின்
புறங்கொம்மை கொட்டினு ரில்.

உ0

2088 நெறியா லுணராது நீர்மையு மின்றிச்

சிறியா ரளியார்க ளென்று—பெரியாரைத்
தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத் தற்று.

உக

நீதிநெறி விளக்கம்

2089 பணியப் படுவார் புறங்கடைய ராகத்

தணிவில் களிப்பினுற் ருழ்வார்க்—கணிய
திளையாள் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே
மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல்.

உஉ

2090 காற்றின் எதிரே நின்றொருவன்
காறி யுமிழு முச்சிட்டம்
மாற்றி யவன்மேல் வந்துவிழும்
வாய்மை போலித் தாரணியில்
தோற்றி யழியும் வாழ்வதனைத்
துறந்த மேலோர் மீதொருவன்
தூற்றிக் கூறும் வசைச்சொற்கள்
சொன்னோன் மீதே தோயுமால்.

௨௫

2091 அரிய குணஞ்சேர் பெரியர்தமக்
கமையக் கடல்சூழ் புவனமெங்கும்
விரியும் இசைமா சுறவவர்மேல்
விளம்பும் பொய்ச்சொல் அண்டமிசைத்
திரியும் பானுக் கிரணமதைத்
திரட்டிப் பற்றி யதன்மீது
கரியைப் பூச வேண்டுமெனக்
கருதுந் தன்மை பொருவுமால்.

௨௪

2092 வாய்கைக்கு நோயினர்க்கே மாமதுவுங் கைப்பாகும்
காய்வெயிலு மஞ்சணிறங் காமாலைக் கண்ணருக்கே
சாய்நிழலுஞ் சுடுவெயிலாந் தாபச் சுரத்தினர்க்கே

தீயவர்க்குத் தூயவருந் தீயவர்போற்
றேன்றுவரே. உஇ

திருக்குறள்

2093 பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

உ௬

2094 எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

உஎ 2095 இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

உஅ

---

## ௫௪. குடிமை

### விநாயக புராணம்

2096 உன்னன் மொழிதல் செயன் மூன்றெுத் தொழுக்கம் வாய்மை நாணீழுக் கார் மன்னு மனையிற் பிறந்தார்கண் மலர்த
லீகை யிகழாமை நன்னர் மொழியு மவர்க்கேயா நன்மை
பயவா வினைவறுமை யின்ன லிடத்தும் புரியார்க
ளேமகண்டா வினியறிமோ.

2097 நிலத்தியல் பற்றே கொண்மூ நீரியல் பதனுற்
றங்கள்

குலத்தியல் பெவர்க்கு மன்னு வாழினுங்
கெடினுங் குன்ரு

தலத்தா சகன்று நீங்கித் தவத்தஞ னுலுந்
தொல்லை

நலத்தது போமோ வென்று நரபதிக் கினிது
ரைத்தான். ௳

## இராமாயணம்

2098 பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும்
புகழே

னிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்

திறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ்
செயிர்தீர்

மறந்தி றம்பினும் வரன்முறை திறம்புதல்
வழக்கோ. ௯

## நாலடியார்

2099 சான்ருண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்

வான்ருேய் குடிப்பிறந்தார்க்
கல்லது—வான்ருேயு

மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வ

மெய்தியக் கண்ணும் பிறர்க்கு.

2100 உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணுங்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் டலைவந்தக் கண்ணு மரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

2101. இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்று வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்று வுணரற்பாற் றன்று.



2102 இனநன்மை யின்சொல்லொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள.

௭

2103 ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

௮
2104 கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி

இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூருர்தம் வாயிற் சிதைந்து.

கூ

2105 கள்ளார்கள் ளுண்ணுர் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூருர் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர்.

கO

## திரிகடுகம்

2106 கயவரைக் கையிகந்து வாழ்த னயவரை
நள்ளிருளுங் கைவிடா நட்டொழுக றெள்ளி
வடுவான வாராமற் காத்தலிம் மூன்றுங்
குடிமா சிலார்க்கே யுள.

கக

## ஏலாதி

2107 சென்ற புகழ்செல்வ மீக்கூற்றஞ் செவ்வனே
நின்ற நெறிகல்வி வள்ளன்மை—ஒன்றும்
அளிவந்தார் பூங்கோதா யாறு மறையின்
வழிவந்தார் கண்ணே வனப்பு.

கஉ

## நீதிநெறிவிளக்கம்

2108 தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே

ஒத்த கடப்பாட்டிற் றூளன்றி—யெய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும்
வெஃகார் புறங்கடைய தாகும் பொருள்.
கக



திருக்குறள்

2109 இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

கசு 2110 அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

கரு 2111 சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

கசு 2112 நலத்தின்க ணாரின்மை தோன்றி
னவனைக்

குலத்தின்க ணையப் படும்.

# ருரு. நட்பு

## விநாயக புராணம்

2113 அழிதரு நெறியிற் செலவினை விலக்கி
யாம்வழிச் செலுத்தியூழ் வினையா
லழியவுந் தடுப்பி னதற்குட னல்லாந்
தாக்கைவே றன்றியா ருயிர்கள்
ஒழிவகை யின்றி யுணர்ச்சியொத் தருநூ
லுணர்தொறு முறுநயம் போலக்
கழிமகிழ் நாளும் பயிறொறும் வளரக்
கலப்பதே நட்பெனப் படுமால்.

க 2114 நன்மதி யுடைமை குடிகுணங் குற்ற
நல்லினத் தானுமெத் திறத்தும்
பன்முறை யாய்ந்து நட்பினைக் கொள்க
பாம்பொடு பழகினும் பிரித
லின்மையா மதனா லாய்ந்தலா லொருவ
ரிடத்துநட் புறேலுறி னவர்செய்
புன்மையும் பழியும் புணர்ந்திரு பயனும்
போக்குவ துண்மைபுத் திரனே.

2115 கெடுதியி லுதவ வல்லவர் நட்பாற்
கிளந்திடா தொன்றனைச் செயினுங்
கெடும்வகை செய்தல் வேண்டின தாமே
கெழுவுதல் பணிவச்ச மின்மை
படுதரு மூழிற் புரியினு மவற்றைப்
பழைமையென் றறிந்துள முவப்பி
னெடுநில முழுதுங் கேண்மையா மைந்தா
நேரலார் தாமுங்கே ளாவார்.
க.

2116 காதல ரேனும் விடுவிலை மாதர்
கள்வரிற் றமக்குறல் குறிப்போர்
பேதையர் கெடுதி யுற்றுழி யுதவார்
பெரும்பொரு ணகுவித்துப் பிரிப்பார்
ஆதரு கருமந் தம்மினு காத
தாகவே நடிப்பவ ருளமும்
ஓதலுமொவ்வார் மனைக்கெழீஇ மன்றி
னுறப்பழிப் பாரிவர் தமையே.
உ

## ௫௫. நட்பு

2117 நலமிக வுயர்ந்தோர் தம்மை
நண்புறத் தழுவிக் கொள்க

நிலவிய கயத்துப் பூவை
நிகர்தரா துயர்ந்த கோட்டின்
அலரென வவர்பால் நிற்க
ஆக்கமிக் கடுத்த காலை
மலர்வதும் வறங்கூர் காலைக்
கூம்பலு மொழிக மைந்தா.

பிரபுலிங்க லீலை

2118 காணுத லொழிக நல்லார்க்
காணினங் கவர்பால் நட்புப்
பேணுத லொழிக பேணிற்
பிரிவுற லொழிக வுற்ருன்
மாணுயி ருடம்பில் வாழும்
வாழ்க்கையே யொழிக வென்ற
ஊணிடு மொருதாய் நீத்த
பார்ப்பென வுளங்கு லைந்தார்.

புறநானூறு

✓ 2119 பலர்க்கு நிழலாகி யுலகமீக் கூறத்
தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுக லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற வுடம்பொ

டின்னுயிர் வீழுங் கிழமைத்
தொன்னட் புடையோர் தம்முழைச் செலினே.

ஏ 2120 விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுடையதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ
டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்
திருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்
துரனுடை யாளர் கேண்மையோ
டியைந்த வைக லுளவா கியரோ.

அ

2121 பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே.

சீர

நாலடியார்

2122 காதலார் சொல்லுங் கடுஞ்சொல்லுவந்துரைக்கும்
ஏதிலா ரின்சொலிற் றீதாமோ—போதெலா
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
ஆவ தறிவார்ப் பெறின்.

௧௦ 2123 வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா வொழுக்க மொருவன்க—ணுண்டாயி
னாற்றுந் துணையும் பொறுக்க பொறுனாயில்
தூற்றாதே தூர விடல்.

௧௧

2124 இன்னா செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானேவி னல்லது—துன்னிக்

கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது.

கஉ

✓ 2125 பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

கங

2126 கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார்

கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீரமி லாளர் தொடர்பு.

கச

✓ 2127

கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பின்

ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

கரு

2128 நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை—விளிவின்றி

அல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.

௩௬

## ௩௯. நட்பு



2129 நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன்
றுண்டோ—இறுமளவும்
இன்புறுவ வின்புற் றெழீஇ யவரோடு
துன்புறுவ துன்புறுக் கால்.
௩௭ 2130 யானை யனையவர் நண்பொரீஇ
நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லு
மெறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கு நாய்.
௩௮

2131 பலநாளும் பக்கத்தா ராயினு நெஞ்சிற்
சிலநாளு மொட்டாரோ டொட்டார்—பலநாளும்
நீத்தா ரெனக்கை விடலுண்டோ
தந்நெஞ்சத்(து)
யாத்தாரோ டியாத்த தொடர்பு.

கக 2132 கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற்
கூம்பாது
வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரு நட்பாரு மில்.

உ0 2133 கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
யிடையாயார் தெங்கி னனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான்
றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு.

உக
2134 செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டூடார்
மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்நசை வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு.

உஉ 2135
நல்லா ரெனத்தா னனிவிரும்பிக் கொண்டாரை
யல்லா ரெனினு மடக்கிக் கொளல்வேண்டு
நெல்லுக் குமியுண்டு நீர்க்குநுரை யுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு.

உ. 2136 இன்று செயினும் விடுதற் கரியாரைத்
துன்னூர் துறத்த றகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை.

உச

2137 இலங்குநீர்த் தண்சேர்ப்ப வின்று செயினுங்

கலந்து பழிகாணூர் சான்றேர்—கலந்தபின்

தீமை யெடுத்துரைக்குந் திண்ணறி வில்லாதார்
தாமு மவரிற் கடை.

உ



2138 தங்கண் மரபில்லார் பின்சென்று தாமவரை
யெங்கண்
வணங்குது மென்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப் புன்னை மலருங் கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக் கையிழந் தற்று.

உக

2139 பெருகுவது போலத் தோன்றிவைத் தீப்போ
லொருபொழுதுஞ் செல்லாதே
நந்து—மருகெல்லாஞ்
சந்தன நீள்சோலைச் சாரன் மலைநாட
பந்தமி லாளர் தொடர்பு.

உள

## நான்மணிக்கடிகை

2140 பறைநன்று பண்ணமையா யாழி னிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரிற்—பண்ணழிந்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரிற்
றீர்தலிற் றீப்புகுத னன்று.

உஅ

## பழமொழி

2141 நண்பொன்றித் தம்மாலே நட்கப்பட்
டார்களைக் கண்கண்ட குற்ற முளவெனினுங்
காய்ந்தீயார் பண்கொண்ட தீஞ்சொற் பணைத்தோளா
யாருளரே தன்கன்று சாக்கறப் பார்.

உக

2142 விலங்கேயுந் தம்மோ டுடனுறைதன் மேவுங்
கலந்தாரைக் கைவிடுத லொவ்வா—விலங்கருவி
தாஅ யிழியு மலைநாட வின்னாதே
பேஎயொ டானும் பிரிவு.

௰

2143 கொழித்துக் கொளப்பட்ட நண்பி னவரைப்
பழித்துப் பலர்நடுவட் சொல்லாடா
ரென்கொல்
விழித்தலரு நெய்தற் றுறைவ வுரையா
ரிழித்தக்க காணிற் கன.

௰க

2144 தாம்நட் டொழுகற்குத் தக்கா ரெனவேண்டா
யார்நட்ப தாயினு நட்புக் கொளல்வேண்டும்
கானட்டு நாறுங் கதுப்பினுய் தீற்ருதோ
நாய்நட்டால் நல்ல முயல்.
கஉ

2145 தன்னை மதித்துத் தமரென்று கொண்டக்கால்
என்ன படினு மவர்செய்ப செய்வதே
இன்னொலி வெற்ப விடரென்னை துன்னூசி
போம்வழிப் போகு மிழை.

கக ருரு. நட்பு 333

அறநெறிச்சாரம்

2146 இம்மை யடக்கத்தைச் செய்து புகழாக்கி
யும்மை யுயர்கதிக் குய்த்தலான்
—மெய்ம்மையே
பட்டாங் கறமுரைக்கும் பண்புடை யாளரே
நட்டா ரெனப்படு வார்.
கஅ

2147 நட்டா ரெனப்படுவார் நாடுங்கால் வையத்துப்
பட்டாம் பலபிறப்புத் துன்பமென்—றெட்டி
யறநெறி கைவிடா தாசாரங் காட்டிப்
பிறநெறி பேர்க்கிற் பவர்.
கக

2148 காய வுரைத்துக் கருமஞ் சிதையாதார்
தாயரோ டொவ்வாரோ
தக்கார்க்கு—வாய்பணிந்
துள்ள முருக வுரைத்துப் பொருள்கொள்வார்
கள்ளரோ டொவ்வாரோ தாம்.

கூசு

நன்னெறி

2149 நல்லார் செயுங்கேண்மை நாடோறு
நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை
யாகாதே—நல்லாய்கேள்
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென் றாகிப் போம்.

கூள

2150 கற்றறியார் செய்யுங் கடிநட்புந் தாங்கூடி
யுற்றுழியுந் தீமைநிகழ்
வுள்ளதே—பொற்றொடீஇ
சென்று படர்ந்த செழுங்கொடிமென்
பூமலர்ந்த
வன்றே மணமுடைய தாம்.

கூஅ

மூதுரை

2151 அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோ
லுற்றுழித் தீர்வா ருறவல்ல—ரக்குளத்திற்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
யொட்டி யுறுவா ருறவு.

௯௧

திருக்குறள்

2152 முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.
௯௦

2153 உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.
௯௧

2154 இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.
௪௨



2155 ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.
௯௩

2156 குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்று
வினனு மறிந்தியாக்க நட்பு.
௯௪

2157 குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.
௯௫

2158 அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

௬௬

2159 ஊதிய மென்ப தொருவர்க்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

௬௭

2160 மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

௬௮

2161 பேதைமை யொன்றோ பெருங்கிழமை
யென்றுணர்க

நோதக்க நட்டார் செயின்.

௬௯ 2162 பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

௭௦

2163 உறினட் டறிஞருஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

௭௧ 2164 கனவினு மின்னாது மன்னோ
வினைவேறு

சொல்வேறு பட்டார் தொடர்பு.

2165 முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

ரு௨
இக

## ருசா. பகை

### கந்தபுராணம்

2166 ஏற்றெழு வன்னிமே லினிது துஞ்சலாந்
தோற்றிய வெவ்விட மெனினுந் துய்க்கலா
மாற்றல ரலைத்திட வந்த வெந்துய
ராற்றி தாற்றி தலயிப் புன்மையே.
க

### விநாயக புராணம்

2167 இகலை மதித்தின் ஞைமபிழை யியற்றி ஞர்க்கும் புரியாயேற்
பகையு முறவாம் பெருஞ் செல்வம் பலிக்குங்

கெடாத புகழுண்டா
மிகலின் மிகுந்தின் ஞங்கியற்றி னினிய தமரு
மேதிலராய்ப்
பகைமை வளரும் வலிதொலையும் பாழ்க்கும்
பாழா வாழ்க்கை
யுமே. ௳

2168 மெலிய தெனவெள் ளியபகையே மிகுந்து
கெடுக்கு மிகுந்திடுமு
னலிக விணைதாழ் வுறிற்றெளிந்த நல்லா
ரெனவுந் தெளியாத
மலின ரெனவு நொதுமலரே மருவ லொழிதல்
புரியற்க
வலிசெய் படையா திகள்பெருக்க வகையாய்ந்
திருக்க

2169 வலியார் பகைகொள் ளேல்சுற்றம்
வலிகள் பொருணட் பேபடையின்
மெலியா ரச்ச மறியாமை
மேவாத் தன்மை கொடையின்மை
நலியா வெகுளி மறையின்மை
நனியாங் காமங் கல்லாமை
ஒலியார் பழிநோக் காமைமறு
வுடையா ரிவைமேற் பகையுறுக.

2170 பாரம் பரிக்க வேண்டினுறு

பகைநட் பாகக் கொண்டொழுகல்
வீரந் தணியா ரொடுபொரினும்
விதிநூ லினரோ டிகலாமை
சாருந் துணைநிற் பினும்பலரைப்
பகையாக் காமைத் தனிமையுறின்
நேருந் துணையா லிருவகையுள்
நீக்கி யொன்றை யுறவாக்கல்.

## பகைமையற. [illegible]

2171 தமரா யிருந்து புறப்பகைமைச்
சார்வாய்க் காலம் வருமளவும்
அமரா நிற்கும் உட்பகையை
அஞ்சிக் காக்க வுறிற்கடிக
நமரா மெனவே கண்ணோடி
நல்ல வமைச்சா தியைத்தேய்க்கும்
நுமரா மினத்தைத் தணிப்பிக்கும்
நுன்னைக் குடியோ டெளிதழிக்கும்.
௬

சீவகசிந்தாமணி

2172 அஞ்சனக் கோலி னாற்று நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி யெயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா
வஞ்சித்தற் காக்க வேண்டு மரும்பொரு ளாக வென்றான். ௭
2173 தொழுததங் கையி னுள்ளுந் துறுமுடி யகத்துஞ் சோர
வழுதகண் ணீரி னுள்ளு மணிகலத் தகத்து மாய்ந்து
பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுடை னெடுங்கும் பற்று

தொழிகயார் கண்ணுந் தேற்றந் தெளிகுற்றார்
விளிகுற் றாரே.

சூளாமணி

2174 எரியுந் தீத்திர ளெட்டுணைத் தாயினுங்
கரியச் சுட்டிடுங் காந்திக் கனலுமேற்
றெரியிற் றெல்பகை தான்சிறி தாயினும்
விரியப் பெற்றபின் வென்றிடு கிற்பமே.

2175 முட்கொ ணச்சு மரமுளை யாகவே
யுட்கி நீக்கி னுகிரினுங் கொல்லலாம்
வட்கி நீண்டதற் பின்மழு வுந்தறு
கட்கு டாரமுந் தாங்களை கிற்பவோ.

பழமொழி

அ

சு.

கo

2176 எதிர்த்த பகையை யிளைதாய போழ்தே
கதித்துக் களைக முதிரா—தெதிர்த்து
நனிநிற்பச் செய்தவர் நண்பெலாந் தீர்க்கத்
தனிமரங் காடாவ தில்.

கசு 2177
உற்றதற் கெல்லாம் உரஞ்செய்ய வேண்டுமோ

கற்றறிந்தார் தம்மை வெகுளாமற் காப்பதே
நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை
தற்செய்யத் தானே கெடும்.

கஎ

2178 மிக்குடைய ராகி மிகமதிக்கப் பட்டாரை
ஒற்கப் படமுயற லென்ற விழுக்காகும்
நற்கெளி தாகி விடினும் நளிவரைமேற்
கற்கிள்ளிக் கையுய்ந்தா ரில்.

கச

## நீதிநெறி விளக்கம்

2179 சிறிய பகையெனினு மோம்புத றேற்ருர்
பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

கரு 2180 புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேருதல் வேண்டுங்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யார் கருவியிட்
டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

கசு 2181 நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா
வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்ருர்க்குத் திட்பமா
நாளுலந்த தன்றே நடுவ னடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

கஎ

## விவேகசிந்தாமணி

2182 நிலைதளர்ந் திட்ட போது நீணிலத் துறவு மில்லை
சலமிருந் தகன்ற போது தாமரைக் கருக்கன்
கூற்றம்

பலவன மெரியும் போது பற்றுதீக் குதவுங்
காற்று
மெலிவது விளக்கே யாகில் மீண்டுமக்காற்றே
கூற்றும். கஅ

திருக்குறள்

2183 இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.
கசு
2184 இகலானு மின்னாத வெல்லா நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு.
உ௦ 2185 பகையென்னும் பண்பி லதனை யொருவன்

நகையேயும் வேண்டற்பாற் றன்று.
உக 2186 வாள்போல் பகைவரை யஞ்சற்க
வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.
உஉ
2187, உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.
உக

ப. பா.—22

ருஎ. சிற்றினஞ் சேராமை

2188
நல்லவினைக்கு நற்பயனுந் தீய வினைக்குத் தீப்பயனு
மில்லை யெனும்வல் லிழுதையரு மெள்ளும் விடரும் தூர்த்தர்களும்
சொல்லு நடரு முதலாகத் தொக்க குழுவைச் சேர்ந்தொழுகின்
புல்லு மறிவைத் திரித்திருமைப் பொருளுங் கெடுக்கும் புகழோடே.

2189 பழிமுத ஞுணர் செய்வன தவிர்வ
பார்த்திடார் குடிப்பிறப் பொழுக்கம்
எழில்வளர் கல்வி யாதிகள் பேணு
ரெவரையு முறிக்குஞ்சொற் செயலார்
கழிமகிழ் வுடையார் கெடுதிகொண் டாக்கங்
கைவிடு வார்செல்வ முறினுங்
கொழிபய னெய்தார் பிறர்க்கலாற் றமர்க்குக்
கொடாரிவர் பேதைய ரொழிக.

உ

2190 தன்னையெப் பொருளு மறிந்தவ ஞகத்
தான்மிக மதிக்கும்புல் லறிவின்
வன்மையை யுடையா ஞறுதிச்சொற் கேளான்
வல்லதல் லாதுங்கொண் டுரைத்துப்
புன்மையைத் தெரிப்பா னவைபுரிந் துலகோர்

போனடிப் பான்றனை யுணர்த்து
நன்மதி யினரை யறிவில ராக
நாட்டுவ னிவனையு நண்ணேல்.

சீகாளத்திப் புராணம்

2191 உணுஞ்சுவை யமுதையு முயர்வொ ழித்திடும்
பிணம்படு முடம்பினைப் பேணித் தீத்தொழி
லிணங்குபு திரிதரு மிழுதை மாந்தரைப்
பணிந்திடின் மக்களிற் பதடி யென்பரால்.

மெய்ஞ்ஞான விளக்கம்

2192 தொன்னூட் டவம் முயன்றோர்களும்
தொழில்வெய்யவர் உறையும்
அன்னூட்டிடை புக்கார்குணம்
அம்மூர்க்கரொ டொப்பார்

ருள. சிற்றினஞ் சேராமை

முன்னூட்டிய மதுரக்கனி
முதிருப்பளம் உற்றால்
பின்னூட்டன துருவத்தொடு
பேரும்பிறி தாமால்.

௬

## தாயுமானவர் பாடல்

2193 ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே.

௬௪

## இராமாயணம்

2194

உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்ததனுதிர முற்றிச்
சுடருறச் சுட்டு வேறோர் மருந்தினாற் றுயரந் தீர்வர்
கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கரும மன்றான்
மடலுடை யலங்கன் மார்ப மதியுடை யவர்க்கு
மன்னோ. ௭

## பாகவதம்

2195 சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறு
மாலையுற் றறிவிலார் மருங்க டைந்திடின்
வேலையுற் றலைதுரும் பென்ன வெம்பவக்
கோலமுற் றிறந்திறந் துழலல் கூடுமால்.
அ

## அறநெறிச்சாரம்

2196

குற்றத்தை நன்றென்று கொண்டு குணமின்றிச்
செற்ற முதலா வுடையாரைத்—தெற்ற
வறிந்தாரென் றேத்து மவர்களைக் கண்டால்
துறந்தெழுவர் தூய்க்காட்சி யார்.
க

## சிறுபஞ்சமூலம்

2197 தக்கார் வழிகெடா தாகும் தகாதவர்
உக்க வழியராய் ஒல்குவர்—தக்க
இனத்தினன் ஆகும் பழியும் புகழும்
மனத்தினன் ஆகும் மதி.
௯0

## நாலடியார்

2198 நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல்

வதூஉம்

எரிப்பச்சுட் டெவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவினையர் ஆகுவர் கோடாரும் கோடிக்

கடுவினையர் ஆகியார்ச் சார்ந்து.
௧௧

2199 நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்
குலநலத்தால் ஆகுவர்
சான்றோர்—கலநலத்தைத்



தீவளி சென்று சிதைத்தாங்குச்
சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும்.
௧௨

2200 உள்ளத்தா னள்ளா துறுதித்
தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார்
கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற
நாட
மனத்துக்கண் மாசாய் விடும்.
௧௩

2201 இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட்
பசைந்த துணையும் பரிவா—மசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி
ளுர்கட்
பகையேயும் பாடு பெறும்.
கசு

2202 ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய்
தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார்
நண்பொரீஇப்
புல்லறிவி ளுரொடு நட்பு.
கஇ

2203 உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரிற் புணருமா மின்பம்—புணரில்
தெரியத் தெரியுந் தெளிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய்.
கசு

2204 மனத்தான் மறுவில ரேனுந்தாஞ்
சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும்
வேமே
எறிபுனந் தீப்பட்டக் கால்.
கஎ

நான்மணிக்கடிகை

2205 மொய்சிதைக்கு மொற்றுமை யின்மை யொருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலு மேனியைப்—பெய்த
கலன்சிதைக்கும் பாலின் சுவையைக் குலஞ்சிதைக்குங்
கூடார்கட் கூடி விடின்.

கஅ

மூதுரை

2206

நற்று மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம்.

கக

2207 தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பது வுந்தீதே—தீயார்

குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.

௨0

## ௫௭. சிற்றினஞ் சேராமை

341

### நீதிவெண்பா

2208 நிந்தையிலாத் தூயவரு நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் றன்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார். ௨௧

2209

நல்லொழுக்க மில்லா ரிடஞ்சேர்ந்த நல்லோர்க்கு
நல்லொழுக்க மில்லாச்சொ னண்ணுமே—கொல்லும்விடப்
பாம்பெனவுன் னுரோ பழுதையே யானாலுந்
தூம்பமரும் புற்றடுத்தாற் சொல்.
௨௨

### இன்னிசை

2210 சிப்பி முளரிசுரம் ஆறு திரைவீழ்நீர்
ஒட்பத் தரளமஃ தொப்பழிவுண் ணீருவராம்
அப்படியே மாந்தர் அறிவும் இனத்தியல்பால்
பற்பல மாறு படும்.
உ௬

## இந்தியத்தாய் நிலை

2211 பன்றியொடு கூடினுல் பசுங்கன்றும்
ஈனமலம் படிந்து தின்னும்
என்றெழுந்த பழமொழிதான் இழிதொடர்பின்
விளைவுகளை யெளிது காண
ஒன்றிவந்தோர் போதனையாய் ஓங்கியுள
துண்மைதனை யுணர்ந்து நாடி
நன்றுயர்ந்த வழிகளிலே என்றுமே
பழகிநீ நலமாய் வாழ்க.
உ௭

## நீதிநூல்

2212 மணமனை சேர்மண மாலை மாண்புறும்
பிணவனத் தாரிழி வெய்தும் பெற்றியார்
கணமதிற்
குணமிலா

சேர்ந்தவர் கணங்கொண் டோங்குவர்
ரினமுறல் குறையுண் டாக்குமே. உ௮

2213 மண்ணியல் பாற்குண மாறுந் தண்புனல்
கண்ணிய பொருள்மணங் கலந்து வீசுங்கால்

புண்ணிய ராதலும் புல்ல ராதலும்
நண்ணினத் தியல்பென நவில லுண்மையே.

உக 2214 பாரினிற் பிறந்தபோ தெவரும் பண்பினுர்
பூரிய ரெனப்பெயர் பூண்ட தில்லையால்
சீரிய ரென்னலுந் தீய ரென்னலுஞ்
சேரினத் தியல்பினுற் சேர்ந்த நாமமே.

உ௭



2215 கயவரைச் சேர்ந்தவன் கலந்த போதவர்
செயலினை யெள்ளுவன் தினஞ்செ லச்செல
மயல்மிகுந் தவர்செயல் மகிழ்ந்த னுட்டிப்பன்
இயவரைச் சேர்தல்போ லில்லை தீமையே.

உஅ

## திருக்குறள்

2216 சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

உகூ

2217 நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

௩0

2218 மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானும்
இன்னு னெனப்படுஞ் சொல்.

௩க

2219 நல்லினத்தி னூங்குந் துணையில்லை

தீயினத்தின்

அல்லற் படுப்பதூஉ மில்.

௩௨

---

## ௫அ. கயமை

### கந்தபுராணம்

2220

பொருளல தொன்றினைப் பொருளெ னக்கொடு
வெருவுதல் செய்வதும் வினைய மோர்கிலா
தொருசெயல் விரைந்துசெய் துயங்கி வாழ்தலும்
பெரியவர் கடமையோ பேதைத் தன்மையே.

௯ 2221 உறுதியை யுரைத்தன னுணர்வி லாதவன்
வறிதென விகழ்ந்தனன் வருவ தோர்கிலன்
இறுவகை நாடினன் யாதோர் புந்தியை
யறிவிலர்க் குரைப்பவ ரவரிற் பேதையார்.

௨ 2222 உய்த்தனர் தேன்மழை யுதவிப்
போற்றினுங்
கைத்திட றவிருமோ காஞ்சி ரங்கனி
யத்தக வல்லவோ வறிவி லாதவன்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே.

௩

விநாயக புராணம்

2223 அழுக்கற் றெவர்க்கும் வடுக்கண்பார்
அச்ச மாசை யாலன்றி
ஒழுக்கம் புரியார் மறைபிறர்பால்
உய்த்து மொழிவார் தம்போல
இழுக்குக் கேதுங் கவலார்முன்
ஏற்ற மாகிச் செம்மாப்பார்
மழுக்கு வார்க்கே பயன்படுவார்
வறிதும் வறியார்க் கிடார்கயவர்.

திருக்குற்றலப் புராணம்

2224 கிளர்பொருள் கல்வி செல்வங் கிளைகளும் படைத்துநீங்கா
இளமையும் பெற்றுன் வாழ்வோர்க் கிவைகளி லொன்றே போதும்
விளைபொரு ளைந்துங் காம விடரிடை வீழ்ப்ப தானுன்
வளர்குடிப் பிறந்தா ரேனும் வாழ்வுண்டோ மதியற் றுர்க்கே.

மாயூரப் புராணம்

2225 பயன்படு கல்வி யில்லான் பிணிதவிர் சரீரம் பற்றுன்
நயந்தரு குணச்சாதுக்க ணட்புறுன் சொற்ற வார்த்தை



வியந்துகொண் மனை வி மைந்தர் மேவுறு னிவன்மண் மேலால்

இயங்குபு திரிவா னேனும் பிரேதமென் றிசைக்க லாமால். ௬

## பட்டினத்தடிகள் பாடல்

2226 வாதுக்குச் சண்டைக்குப் போவார் வருவர் வழக்குரைப்பார்
தீதுக் குதவியுஞ் செய்திடு வார்தினந் தேடியொன்று
மாதுக் களித்து மயங்கிடு வார்விதி மாளுமட்டும்
ஏதுக் கிவர்பிறந் தாரிறை வாகச்சி யேகம்பனே. ௭

2227 கடுஞ்சொல்லின் வம்பரை யீனரைக் குண்டரைக் காமுகரைக்
கொடும்பவ மேசெயு நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்துநல் லோர்த நெறியறியா
இடும்பரை யேன்வகுத் தாயிறை வாகச்சி யேகம்பனே. ௮

2228 ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை நிந்திப்ப ருற்றுப்பெற்ற
தாயாரை வைவர் சதியா யிரஞ்செய்வர் சாத்திரங்கள்
ஆயார் பிறர்க்குப காரஞ்செய் யார்தமை யண்டினர்க்கொன்
றீயா ரிருந்தென்ன போயென்ன காண்கச்சி யேகம்பனே. ௯

## ஞானவாசிட்டம்

2229 அவிவேகிக் குப்பாரஞ் சாத்திரமெய் யறிவிலோர்க்
கங்கம் பாரம்
நவில்சாந்தி யில்லாதோர்க் குளம்பார மவாவினர்க்கு
ஞான பாரஞ்
செவிதான வுருவாழ்நாண் மனம்புந்தி யகங்காரஞ்
செயல்க ளெல்லாங்
குவிபார மாஞ்சுமடர் சுமைபோலப் புந்திநலங்
கூடா தார்க்கே.

கo

வில்லிபாரதம்

2230 ஒன்றுதவி செய்யினுமவ் வுதவிமற வாமற்
பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்
நன்றிபல வாகவொரு நவைபுரிவ ரேனுங்
கன்றிடுவ தன்றிமுது கயவர்நினை யாரே.

க௧

அறநெறிச்சாரம்

2231 பாம்புண்ட நீரெல்லாம் நஞ்சாம் பசுவுண்ட
தேம்படு தெண்ணீ ரமிழ்தமாம்—ஓம்பும்
ஒளியா முயர்ந்தார்கண் ஞான மதுவே
களியாங் கடையாயார் மாட்டு.

கஉ ருஅ. கயமை

2232 கல்லா வொருவனைக் காரணங் காட்டினும்
இல்லைமற் றென்று மறமுணர்தல்—நல்லாய்
நறுநெய் நிறைய முகப்பினு மூழை
பெறுமோ சுவையுணரு மாறு.
கங 2233 வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால வரிதாகு—மஃதேபோல் வைகலு
நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னு நெஞ்சு.
கச

நாலடியார்

2234 இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று
மடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறு பேய்ச்சுரையின் காய்.
கரு

2235 பொன்னே கொடுத்தும் புணர்தற்
கரியாரைக்
கொன்னே தலைக்கூடப்
பெற்றிருந்து—மன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமி லறிவி னவர்.
கசு

2236 பன்றிக்கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்றால்

நன்றறியா மாந்தர்க் கறத்தா
றுரைக்குங்காற்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோற்
றலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு.
கஎ

2237 அருளி னறமுரைக்கு மன்புடையார்
வாய்ச்சொற்
பொருளாகக் கொள்வர்
புலவர்—பொருளல்லா
வேழை யதனை யிகழ்ந்துரைக்கும்
பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு.
கஅ

2238 அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்காற்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங்
கேட்கலார்
கவ்வித்தோ றின்னுங் குணுங்கர் நாய்
பாற்சோற்றின்
செவ்வி கொளறேற்று தாங்கு.
கக

2239 தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றார்
ஏமஞ்சார் நன்னெறியுஞ்
சேர்கலார்—தாமயங்கி
ஆக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்

போக்குவார் புல்லறிவி ஞர்.
௨௦

2240 கப்பி கடவதாக் காலத்தன்
வாய்ப்பெயினுங்
குப்பை கிளேப்போவாக்
கோழிபோன்—மிக்க



கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங்
கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்.
௨௧ 2241 பொற்கலத் தூட்டிப் புறந்தரினு
நாய்பிறர்
எச்சிற் கிமையாது பார்த்திருக்கும்—அச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினுங்கீழ் செய்யுங்
கருமங்கள் வேறு படும்.
௨௨

2242 சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்—
எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனு வெண்ணி விடும்.
௨௩

2243 அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினுங்

கள்ளிமேற் கைநீட்டார் சூடும்பூ வன்மையாற்
செல்வம் பெரிதுடைய ராயினுங் கீழ்களை
நள்ளா ரறிவுடை யார்.
உச

2244 மைதீர் பசும்பொன்மேன் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினுஞ் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்.
உரு

2245 கடுக்கெனச் சொல்வற்றுங் கண்ணோட்ட மின்றும்
இடுக்கண் பிறர்மாட் டுவக்கு—மடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்னுட
ஏகுமா மெள்ளுமாங் கீழ்.
உசு

2246 ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின்
எழுநூறுந் தீதாய் விடும்.

உஎ

நான்மணிக்கடிகை

2247 மாசு படினு மணிதன்சீர் குன்றுதாம்
பூசிக் கொளினு மிரும்பின்கண்—மாசொட்டும்

பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்.

உஅ

பழமொழி

2248 மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா
வொலிகடல்போன்—மிக்க

௫அ. கயமை

347

இனநல நன்குடைய வாயினு மென்று
மனநல வாகாவாங் கீழ்.

உகூ 2249 தேர்ந்துகண் ணோடாது தீவினையு
மஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாஞ் சிறிதுரைத்துத்—தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பன செய்யும்
நரகர்கட் கில்லையோ நஞ்சு.

௩0 2250 தொன்மையின் மாண்ட தொழிலொன்று
மில்லாதார்
நன்மையின் மாண்ட
பொருள்பெறுதல்—இன்னொலிநீர்
கன்மே லிலங்கு மலைநாட மாக்காய்த்துத்
தன்மேற் குணில்கொள்ளு மாறு.

௫௧ 2251 நிரந்து வழிவந்த நீசரு ளெல்லாம்
பரந்தொருவர் நாடுங்காற் பண்புடையார் தோன்றார்
மரம்பயில் சோலை மலைநாட வென்றுங்
குரங்கினுள் நன்முகத்த தில்.

௫௨

2252 பெருமலை நாட பிறரறிய லாகா
அருமறையை யான்றோரே காப்பர்—அருமறையை
நெஞ்சிற் சிறியார்க் குரைத்தல் பனையின்மேற்
பஞ்சிவைத் தெஃகிவிட் டற்று.

௫௩

2253 அல்லவை செய்குப வல்லாப்பி னல்லாக்கால்
செய்வ தறிகில ராகிச் சிதைத்தெழுவர்
கல்லாக் கயவ ரியற்கை நரியிற்கூண்
நல்யாண்டுந் தீயாண்டு மில்.

௫௪

2254 கருந்தொழில ராய கடையாயார் தம்மேற்
பெரும்பழி யேறுவ பேணார்—இரும்புன்னை
புன்புலால் தீர்க்குந் துறைவமற் றஞ்சாதே
தின்ப தழுவதன் கண்.

௫௫

2255 உரிஞ்சி நடப்பாரை யுள்ளடி நோவ

நெருஞ்சியுஞ் செய்வதொன் றில்லை—செருந்தி
இருங்கழித் தாழு மெறிகடற் றண்சேர்ப்ப
பெரும்பழியும் பேணுதார்க் கில்.
௩௮—

நன்னெறி

2256 அறிவுடையா ரன்றி யதுபெறுர் தம்பாற்

செறிபழியை யஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி
மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு.
௩௭—

348

பன்னூல் பாடற்றிரட்டு

நீதிநெறி விளக்கம்

2257 கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்துந்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்.

௩அ 2258 முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொள்ளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

௩௯ 2259 கண் கூடாப் பட்டது கேடெனினுங்

கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகு—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

சO

மூதுரை

2260 வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
யாங்கதனுக் காகார
மானாற்போற்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரங்
கல்லின்மே லிட்ட கலம்.

சக

நல்வழி

2261 பூவாதே காய்க்கு மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலு நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு.

சஉ

நீதிவெண்பா

2262 ஈக்கு விடந்தலைமே லெய்துமிருந் தேளுக்கு
வாய்க்கும் விடங்கொடுக்கில்
வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்
சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்.

2263 துர்ச்சனரும் பாம்புந் துலையொக் கினும்பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ
தோகையீர்—துர்ச்சனர்
எந்தவிதத் தாலு மிணங்காரே பாம்புமணி
மந்திரத்தா லாமே வசம்.

2264 கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான்
வேண்டுமே—வம்புசெறி



தீங்கினர்தங் கண்ணிற் றெரியாது தூரத்து
நீங்குவதே நல்ல நெறி.

2265 அவ்விய நெஞ்சத் தறிவிலாத்
துர்ச்சனரைச்
செவ்விய ராக்குஞ் செயலுண்டோ—திவ்வியநற்
கந்தம் பலவுங் கலந்தாலு முள்ளியது
கந்தங் கெடுமோ கரை.

2266 குணநன் குணராக் கொடியோ ரிடத்துக்
குணநன் குடையார் குறுகார்—குணமுடைமை
நண்ணுச் சமண நகரத்திற் றூசொலிக்கும்
வண்ணனுக் குண்டோ வழக்கு.

௬௭ 2267 கற்பூரம் போலுங் கடலுப் பிருந்தாலுங்
கற்பூர மாமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல விருந்தாலும்
புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல்.
௬௮ 2268 தூய வறிவினர்முன் சூழ்துன்ப மில்லையாங்
காயும் விடங்கருடற் கில்லையாம்—ஆயுங்கால்
பன்முகஞ்சேர் தீமுன் பயில்சீத மில்லையாந்
துன்முகருக் குண்டோ சுகம்.
௬௯ 2269 தீயவர்பாற் கல்வி சிறந்தாலு
மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே
துன்னற்க—சேயிழாய்
தண்ணொளியா மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலு
நண்ணுவரோ மற்றதனை நாடி.
௭௦ 2270 கன்மமே பூரித்த காயத்தோர் தஞ்செவியில்
தன்மநூல் புக்காலுந் தக்காதே—சன்மமெலும்
புண்டு சமிக்குநா யுண்ணுவி னெய்யதனை
உண்டு சமிக்குமோ வோது.
௭௧ 2271 வெய்யோன் கிரண மிகச்சுடுமே
வெய்யவனிற்
செய்யோன் கிரணமிகத் தீதாமே—வெய்யகதிர்
எல்லோன் கிரணத் தெரியினிலு
மெண்ணமில்லார்
சொல்லே மிகவுஞ் சுடும்.

௯௨

திருக்குறள்

2272 ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

௯௩ 2273 காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

௯௪



2274 உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

௯௫

2275 மக்களே போல்வர் கயவ ரவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்.

௯௬ 2276 அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

௯௭ 2277 அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

௯௮ 2278 அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

௯௯ 2279 ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு .

௱

# ருகூ. காமக்கேடு

## கந்தபுராணம்

✓2 28 0

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத்

தொலைக்கும்

ஏம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்.

க

2281 மண் ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பவத்தைப்
பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனு

லண்ண லஃதுணர்தி யன்னவரைச் சிந்தைதனி
லெண்ணவரும் பாவ மெழுமையினு நீங்குவதோ.

2282 பன்னூலும் பாரிற் பருவரலின் மூழ்குவிக்கும்
பின்னா ணிரயப் பெரும்பிலத்தி னூடுய்க்கு
மென்னாளி லாண்டகையோர்க் கின்பம் பயந்திடுமோ
மின்னார்க டம்மை விழைவுற்ற வேட்கையதே. க

2283 துன்ப நுகரும் வினையின் றொடர்ச்சியினோ
ரின்ப நுகர்வார்போ லேந்திழையார் கட்பட்டார்
தன்பன் மிகநடுங்க ஞாளி தசையில்லா
வென்பு கறித்திட்டா லிருஞ்சுவையும் பெற்றிடுமோ. உ

2284 அஞ்சனவை வேற்க ணரிவையர்தம் பேராசை
நெஞ்சு புகினொருவர் நீங்கு நிலைமைத்தோ
எஞ்சல்புரி யாதுயிரை யெந்நாளு மீர்ந்திடுமால்
நஞ்சமினி தம்மவோ நாளு நலியாதோ. ஙு

2285 ஓதலு மொன்று வுளமொன்றுச் செய்கையொன்றுப்
பேதை நிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்று ரல்லரோ
சாதல் பிறப்பிற் றடுமாறு கின்றாரே. சு

2286 உற்ற வுலவையிடை யோர்புலிங்க மூட்டியக்காற்
கற்றை விடுசுடர்மீக் கான்று கனன்மிக்குப்
பற்றுதல்செல் லாத பலவினும்போய்ப் பற்றிடுமால்
அற்றெனலா மீங்கோ ரரிவைமுயங் காதரமே. ரு

2287 சந்திரற்கு நேருவமை சாலுந் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்

குந்தமொத்த நாட்டத்துக் கோதமனுர் பன்னியினு
லிந்திரற்கு நீங்கா விடர்ப்பழியொன் றெய்தியதே.

அ
2288

கூன்முகத் திங்க ணெற்றிக் கோதையர் குழுவுக் கெல்லாந்
தான்முத லிறைவி யாகத் தன்மையாற் சமைக்கப் பட்ட
மான்முக நோக்கி முன்னோர் மலரயன் மைய லெய்தி
நான்முக னுனென்ப நாமுண ராத தன்றே.

கூ
2289 கண்டதோர் நறவமே காம மேயென
வெண்டரு தீப்பொரு ளிருமைத் தென்பரால்
உண்டுழி யழிக்குமொன் றுணர்வை யுள்ளமேற்
கொண்டுழி யுயிரையுங் கொல்லு மொன்றரோ.

க0
2290 உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினுற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே.

கக
2291 ஈட்டுறு பிறவியும் வினைகள் யாவையுங்
காட்டிய தினையதோர் காம மாதலின்

வாட்டமில் புந்தியான் மற்றந் நோயினை
வீட்டினா ரல்லரோ வீடு சேர்ந்துளார்.

கஉ

2292 நெஞ்சினு நினைப்பரோ நினைந்து ளார்தமை
எஞ்சிய துயரிடை யீண்டை யுய்த்துமேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்து மாதலால்
நஞ்சினுந் தீயது நலமில் காமமே.

கங

2293 எண்ணு வவுணர் தொகையல்லதை யெந்தை மாயம்
உண்ணூடு வானோர் களும்பெண்மய லுற்று நின்றார்
மண்ணாசை தன்னிற் பொருளாசையின் மாய வாழ்க்கைப்
பெண்ணாசை நீங்க லெளிதோபெரி யோர்த மக்கும்.

கச

திருவிளையாடற் புராணம்

2294 அணங்குநோ யெவர்க்குஞ் செய்யு மனங்கனு லலைப்புண் டாவி
உணங்கின ருள்ளஞ் செல்லு மிடனறிந் தோடிச் செல்லா
குணங்குல னொழுக்கங் குன்றல் கொலைபழி பாவம் பாரா
இணங்குமின் னுயிர்க்கு மாங்கே யிறுதிவந்

துறுவ தெஞ்ஞெ.

கரு 2295 கள்ளுண்டல் காம மென்ப
கருத்தறை போக்குஞ் செய்வ
தெள்ளுண்ட காமம் போல
வெண்ணினிற் காணிற் கேட்கில்

ருசு. காமக்கேடு

353

தள்ளுண்ட விடத்தி னஞ்சந் தலைக்கொண்டா லென்ன வாங்கே உள்ளுண்ட வுணர்வு போக்கா துண்டபோ தழிக்குங்

கள்ளுண். கசு

2296 காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங் காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான். கஎ

தணிகைப் புராணம்

2297 வழும்புதடி குடரென்பு வார்நரம்பு மேதைநெய்த்தோர் தழும்புக்கண் மூளைமயிர் சருமமா திகள் குழுமுங் கொழும்பொதியைப் பகுத்திடுங்காற்

கோற்ெறுடியா ளெவள்காட்டாய் விழும்பிணைத்ெதெவ்
வுறுப்பில்லை விழையாமை விடல் கிளவாய்.

க அ

திருக்குற்றுலப் புராணம்

2298 விண்கு லாவுயர் விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாங்
கண்க ளானது காமத்தி ஞலன்றே.

க கூ

திருக்கூவப் புராணம்

2299 கொடுங்கனன் மதுவிடங் குறுகி னுண்டிடிற்
சுடுங்கருத் தழித்திடுந் தொலைவு செய்யுமால்
கடுந்துயர்க் காமமோ கருதி னன்னசெய்
திடும்பினுந் தொடர்ந்துவெந் நிரயத்
திட்டிடும்.

உ0

திருக்கழுக்குன்றப் புராணம்

2300 உண்மயக் கனைவர்க்கு மும்மை யுண்டதிற்
றிண்மயக் கொன்றுண்டு தெரியக் கேட்டிரான்
மண்மயக் கிரணிய மயக்கு நீங்கினும்
பெண்மயக் கிதகிற் பிழைத்து நீங்கலே.

உக

உறையூர்ப் புராணம்

2301 இருவகை யியக்க நீக்குங் காலையெவ்
வளவைத் தின்ப

மருவுமவ் வளவைத் தேயா மாதரைப் புணரு
மின்பம்
அருவருப் புறுமி தற்கே யாயுள்கா றும்பவ்
வீவீழ்ந்
தொருவரும் * வன்றி யேபோ லுழலுவ
ருணர்வி லாதார். உஉ

* வன்றி - பன்றி.





2302 குடம்புரை கொங்கை யென்றுங் கோல்புரை
நயன மென்றும்
படம்புரை யல்கு லென்றும் பால்புரை யின்சொ
லென்றும்
வடம்புரை யுதர மென்று மலர்புரை செவ்வா
யென்றுந்
திடம்புரை படுமி ஞர்பான் மயங்குவர் தெளிவி
லாரே. உக

2303 குடருநெய்த் தோரு மென்புங் கொழுவுமீ
ருளும்வ ழும்புந்
தொடரும்வன் னரம்பும் போர்த்த
தோலும்வெஞ் சுவேத நீரும்
படருங்கோ ழையுநு ரைத்துப் பாயுமூத் திரமும்
பவ்வீ

யடருந்தீ யழுக்கு மல்லா லரிவைய ரிடத்தென்
னுண்டே. உச

### காசி ரகசியம்

2304 காமமே பிறவிவித் தாகுங் கண்ணிலாக்
காமமே சிவனடிக் கலப்பு நீக்கிடுங்
காமமே யவத்தையிற் கலக்கச் செய்திடுங்
காமமே நரகெலாங் காணி யாக்குமே.
உ௫

### பிரபுலிங்க லீலை

2305 பாவமும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றங்கள்
யாவையு மழிக்கு மெய்து மின்பமு மதனு
லெய்து
நோவுநன் மரபுஞ் செய்யு நோன்புநல்
லொழுக்க மேன்மை
சாவுமெண் ணுரும னிற்குந் தயங்குபுன் காம
மென்பார். உசு

### தேவாரம்

2306 காமத்துள் அழுந்தி நின்று கண்டரால்
ஒறுப்புண் ணுதே
சாமத்து வேத மாகி நின்றதோர் சயம்பு
தன்னை
ஏமத்து மிடையி ராவும் ஏகாந்தம் இயம்பு
வார்க்கு
ஓமத்துள் ஒளிய தாகும் ஒற்றியூர் உடைய
கோவே. உஎ

திருமந்திரம்

2307 இலைநல வாயினு மெட்டி பழுத்தாற்
*குலைநல வாங்கனி கொண்டுண லாகா
வினையாண் முலைநலங்கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே. உஅ

2308 மனைபுகு வார்கண் மனைவியை நாடிற்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழு மன்பை
நனவது போலவு நாடவொண் ணாதே. உகூ

* யாப்பருங்கல விருத்திகாரர், ஆரிடத்திற் சீர்மிக்கு வருதற்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டினர். "முறுவலிக்கின்ற, வினையுடை நெஞ்சினை" என்பது அவ்விருத்தியிற் கண்ட பாடவேறுபாடு.

## ருகூ. காமக்கேடு 355

### பட்டினத்தடிகள் பாடல்

2309 திருமால் பயந்த திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானிடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா தவமே
மாதரை மகிழ்ந்து காதல்கொண் டாடு
மானிடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மாக்க டெளிவுறக் கேண்மின்
முள்ளுங் கல்லு முயன்று நடக்கும்

உள்ளங் காலைப் பஞ்செனவுரைத்தும்
வெள்ளெலும் பாலே மேவிய கணைக்கால்
துள்ளும் வராலெனச் சொல்லித் துதித்துந்
தசையு மெலும்புந் தக்கபுன் குறங்கை
இசையுங் கதலித் தண்டென வியம்பியும்
நெடுமுடை ருங்கி நின்றிடு மிடையைத்
துடிபிடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலை யென்றுஞ்
சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து
திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி
உகிராற் கீற வுலர்ந்துள் ளுருகி
நகுவார்க் கிடமாய் நான்று வற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட் டென்றுங்
குலையுங் காமக் குருடர்க் குரைப்பேன்
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியிங் கியற்றும்
அங்கையைப் பார்த்துக் காந்தளென்
றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவிய கழுத்தைப்
பாரினி லினிய கமுகெனப் பகர்ந்தும்
வெப்பு மூத்தையும் மேவிய வாயைத்
துப்பு முருக்கின் றூய்மல ரென்றும்

அன்னமுங் கறியு மசைவிட் டிறக்கும்
முன்னிய பல்லை முத்தென மொழிந்தும்

நீருஞ் சளியு நின்றுநின் றெழுகுங்
கூரிய மூக்கைக் குமிழெனக் கூறியுந்

தண்ணீர் பீளை தவிரா தொழுகுங்
கண்ணைப் பார்த்துக் கழுநீ ரென்றும்

உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை
வள்ளைத் தண்டின் வளமென வாழ்த்தியுங்



கையு மெண்ணெயுங் கலவா தொழியில்
வெய்ய வதரும் பேனும் விளையத்
தக்க தலையோட் டின்முளைத் தெழுந்த
சிக்கின் மயிரைத் திரண்முகி லென்றுஞ்
சொற்பல பேசித் துதித்து நீங்கள்
நச்சிச் செல்லு நரக வாயில்
தோலு மிறைச்சியுந் துதைந்துசீப் பாயுங்
காமப் பாழி கருவிளை கழனி
தூமைக் கடவழி தொலைபெறு வாயில்
எண்சா ணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிக் காமுக நாய்நா னென்றும்
இச்சித் திருக்கு மிடைகழி வாயில்

திங்கட் சடையோன் திருவரு ளில்லார்
தங்கித் திரியுஞ் சவலைப் பெருவழி
புண்ணிது வென்று புடைவையை மூடி
யுண்ணீர் பாயு மோசைச் செழும்புண்
மால்கொண் டறியா மாந்தர் புகும்வழி
நோய்கொண் டொழியா நுண்ணியர் போம்வழி தருக்கிய
காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேருஞ் சிறுகுழி
பெண்ணு மாணும் பிறக்கும் பெருவழி
மலஞ்சொரிந் திழியும் வாயிற் கருகே
சலஞ்சொரிந் திழியுந் தண்ணீர் வாயில்
இத்தை நீங்க ளினிதென வேண்டா
பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமுங்
கண்ட வண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே.

கூ0 2310 காதென்று மூக்கென்று கண்ணென்று
காட்டியென் கண்ணெதிரே மாதென்று சொல்லி வருமாயை
தன்னை மறலிவிட்ட தூதென்றெண் ணமற் சுகமென்று
நாடுமித் துற்புத்தியை ஏதென் றெடுத்துரைப்
பேனிறை வாகச்சி யேகம்பனே:* கூக 2311 சீறும்

வினையது பெண்ணுரு வாகித் திரண்டுருண்டு கூறு
முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினுற்

—

## ௩௬. காமக்கேடு

357

பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண் டிலேனிறை வாகச்சி யேகம்பனே.
௬௨

2312 பெண்ணுகி வந்தொரு மாயப் பிசாசம்
பிடித்திட்டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையான் மயக்கிக்
கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப்
பொருள்பறிக்க
எண்ணு துனமறந் தேனிறை வாகச்சி
யேகம்பனே. ௬௩
2313
முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை யோலை
விளக்கியிட்டுப்
பட்டப் பகலில் வெளிமயக் கேசெயும்
பாவையர்மேல்
இட்டத்தை நீதவிர்ப் பாயிறை வாகச்சி

யேகம்பனே. ௬௪

2314 பிறந்துமண் மீதிற் பிணியே குடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற் றின்பத்தின் மேன்மய லாகிப்புன் மாதருக்குட்
பறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திட வோபணித் தாயிறை வாகச்சி யேகம்பனே. ௬௫

2315 நாறுங் குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுஞ்சீ
ஊறு மலக்குழி காமத்து வார மொழித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்
டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீச்சுரனே. ௬௬

2316 சீயுங் குருதிச் செழுநீர் வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும் புடைவையொன் றில்லாத போது பகலிரவாய்
ஈயு மெறும்பும் புகுகின்ற யோனிக் கிரவுபகல்
மாயு மனிதரை மாயாமல் வைக்க மருந்தில்லையே. ௬௭

2317 வாய்நாறு மூழன் மயிர்ச்சிக்கு நாறிடு

மையிடுங்கண்

பீநாறு மங்கம் பிணவெடி நாறும்

பெருத்தகொங்கை

சீநாறும் யோனி யழுஞறு மிந்தியச்

சேறுசிந்திப்

பாய்நாறு மங்கையர்க் கோவிங்ங னேமனம்

பற்றியதே. கஅ

தாயுமானவர் பாடல்

2318 மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச

ளான்மறைத்துப்

பொய்வீசும் வாயார் புலையொழிவ

தெந்நாளோ. கக

2319 திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக்

குழற்காட்டிற்

கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா

ளெந்நாளோ. உ0

2320 கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு

கைவிலையாக்

கொண்டுவிடு மாஞர்பொய்க் கூத்தொழிவ

தெந்நாளோ. உக

2321 ஞமனைவா வென்றிருண்ட கண்வலையை

வீசுமின்ஞர்

நாம மறந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

உஉ

2322 வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல்வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநா
ளெந்நாளோ. ௪௩ 2323 கண்களில்வெண் பூளை
கரப்பக் கருமையிட்ட
பெண்கண்மய றப்பிப் பிழைக்குநா
ளெந்நாளோ. ௪௪

2324

கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ.

௪௫

2325 பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

௪௬ 2326 உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ.
௪௭ 2327 ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ.
௪௮
2328 தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ.
௪௯

## பிரபோத சந்திரோதயம்

**2329** இருந்தரா தரப்பரப்பி லிடுக்கண்மே
விடுக்கணெய்தி

யிமைப்பில் வீழ்ந்து
வருந்துமா னுடப்பிறப்பின் மங்கைநல்லா
ரொடுமயங்கி

மகிழ்ந்து கோடல்
பருந்தின்வாய்ப் படுமரவம் பிடித்தமண்டு
கங்கொள்சிறு

பறவை செந்தேன்
அருந்துமா றெப்பதனு லாங்கது
லாயிற் றன்றே.
சிற்றின்பமெனை

இo

## குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி

**2330** வேலிற் றிகழ்ந்து கயலிற் பிறழ்ந்து விடமொப்ப
வெப்ப மருவிப் – பாலிற் றெளிந்து பிணையைத்
துரத்தி யரிசூழ் பரந்து படைவேள்
கோலிற் பயின்று குமிழின் மறிந்து குழையூடு
செல்லும் விழியார்
மாலிற் படாது னடியே வழுத்த வருளாய்
குளந்தை யரனே.

2331

பைந்தொடியா ராசைநோய் கெம்பீர மனிதரையும்
பதுமந் தன்னை
முந்திரவிக் கதிர்போலு மிளிர்விக்குங்
முனைகூர் வாளும்

கனவிடியின் .

## காமக்கேடு

359

வெந்தவிருப் புப்பொறியு மெனக்கொடிய
மனவேட்கை
மேரு வொத்தோர்
சுந்தரஞா னியர்தீரர் சூரரையெல் லாமிமைப்பிற்
றுரும்பு செய்யும்.

2332

முதுதுயர்ப் பூட்டாற் பூட்டி முடிவில்கா மாதி யென்னும்
பசுமணி வைத்த செப்பாம் பூவைய ரின்பம் வேண்டேன்

இதுதசை யிதுநெய்த் தோரென் பிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர் வேட்கை விரோதமாஞ் சிறிது நாளில். ௩௩

## வைராக்கிய சதகம்

2333 என்னை கண்டுநீ மாதரார் வடிவமீ திச்சை
வைத்துழல் கின்றாய்
பொன்னை யுந்துகி லையும்பிரித் திடில்வெறும்
புழுமலக்கூ டல்லால்
பின்னை யுண்டுகொல் கண்டுநீ மயங்குதல்
பிராந்திசங்கரன் பாதந்
தன்னை நாடுதி நெஞ்சமே பரசுகோ
ததியுறப்பெற லாமே.
௩௪

## சிவ-குறுந்திரட்டு

2334 கூடிற் கைப்பொருள் யாவையுங் கொள்ளுவர்
வீடி லாருயிர் தன்னையும் வீட்டுவார்
ஆட வர்க்கிவ் வரிவைய ரொப்பதோர்
கேடு முண்டோ முழுதுங் கெடுக்கவே.
௩௫

## சீவகசிந்தாமணி

2335 காமமே கன்றி நின்ற கழுதைகண் டருளி ஞலே

வாமனுர் சென்று கூடி வருந்தினீ ரென்று வையத்
தீமஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே
நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியி னென்ருன். இசு 2336 எரிதலைக் கொண்ட காமத் தின்பநீர்ப் புள்ளி யற்ருற்
பிரிவின்கட் பிறந்த துன்பம் பெருங்கட லனைய தொன்ருல்
உருகிநைந் துடம்பு நீங்கி னிம்மையோ டும்மை யின்றி
இருதலைப் பயனு மெய்தா ரென்றியாங் கேட்டு மன்றே. இஎ 2337 பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை வுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் ருற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே. இஅ



## மணிமேகலை

2338 முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்

கடியப் பட்டன வைந்துள வவற்றிற்
கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்
தள்ளா தாகுங் காமந் தம்பால்
ஆங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோரென
நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள்
நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்.

௫௯ 2339 சிறையு முண்டோ செழும்புனன் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்கொளின்.
௬0

## வளையாபதி

2340 எண்ணின்றி யேது ணியுமெவ்வழி யானு மோடு
முண்ணின் றுருக்கு முரவோருரை கோட லின்றும்
நண்ணின்றி யேயு நயவாரை நயந்து நிற்கும்
கண்ணின்று காம நனிகாமுறு வாரை வீழ்க்கும். ௬௧

2341 சான்றோ ருவப்பத் தனிநின்று பழிப்ப காணார்
ஆன்றுங் கமைந்த குரவர்மொழி கோட லீயார்
வான்றுங்கி நின்ற புகழ்மாசு படுப்பர் காமன்

தான்ருங்கி விட்ட கணெமெய்ப்படு மாயி
னக்கால். கூஉ

2342 மாவென் றுரைத்து மடலேறுப மன்று
தோறும்
பூவென் றெருக்கி னிணர்சூடுப புன்மை
கொண்டே
பேயென் றெழுந்து பிறரார்ப்பவு நிற்பர் காம
நோய்நன் கெழுந்து நனிகாழ்க்கொள்வ
தாயி னக்கால். கூக

சூளாமணி

2343 தேமிடை நாவல் வேலிச் செழுமணற்
குவாலுங் குன்றும்
பூமிடை தடமுங் காவும் புக்கவர்க்
கரண மாகா
தாமுடை மனமுங் கண்ணு நிறைவுந்தம்
பால வாகா
காமுடை மனத்தி னர்கட் கியாருளர் களைக
ணுவார். கூச

யசோதர காவியம்

2344 எண்ணம தலாமை பண்ணு மிறப்பிறப்
பிடிய நூறு
மண்ணிய புகழை மாய்க்கும் வரும்பழி
வளர்க்கு மானத்
திண்மையை யுடைக்கு மாண்மை திருவொடு
சிதைக்குஞ் சிந்தை
கண்ணொடு கலக்கு மற்றிக் கடைப்படு காம

மென்றுன். ௬௫

## ௯௬. காமக்கேடு

361

### குண்டலகேசி

2345

வகையெழிற் றோள்க ளென்று மணிநிறக் குஞ்சி யென்றும்
புகழெழ விகற்பிக் கின்ற பொருளில்கா மத்தை மற்றோர்
தொகையெழுங் காத றன்னுற் றுய்த்தியாந் துடைத்து மென்பார்
அகையழ லழுவந் தன்னை நெய்யினு லவிக்க லாமோ. ௬௬ 2346 அனலென நினைப்பிற் பொத்தி யகந்தலைக் கொண்ட காமக்
கனலினை யுவப்பு நீராற் கடையற வவித்து மென்னுர்
நினைவிலாப் புணர்ச்சி தன்னு னீக்குது மென்று நிற்பார்
புனலினைப் புனலி னுலே யாவர்போ காமை வைப்பார். ௬௭

### இராமாயணம்

2347 அந்தர முற்று னகலிகை பொற்பா லழிவுற்றான்
இந்திர னொப்பா ரெத்தனை யோர்தா மிழிபுற்றார்
செந்திரு வொப்பா ரெத்தனை யோர்நின்
றிருவுண்டார்
மந்திர மற்று ருற்ற துரைத்தாய் மதியற்றாய்.
சுஅ

2348 தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்

காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே.
சுகூ

2349 திறந்தி றம்பிய காமச் செருக்கினான்
மறந்து தத்த மதியின் மயங்கினார்
இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்
அறந்தி றம்பின ராருள ராயினார்.
எo

2350 நாமத் தாழ்கடன் ஞாலத் தவிந்தவர்
ஈமத் தான்மறைந் தாரிள மாதர்பாற்
காமத் தாலிறந் தார்களி வண்டுறை
தாமத் தாரின ரெண்ணினுஞ் சால்வரோ.
எக

2351 பொருளுங் காமமு மென்றிவை போக்கிவே
றிருளுண் டாமென வெண்ணல ரீதலும்
அருளுங் காதலிற் றீர்தலு மல்லதோர்

தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர்.

எஉ 2352 மாசி லாத குடிப்பிறப்பு மானங் கீர்த்தி யிவைமாய
ஆசை நோயா னதுபெருக வனங்க சரத்தா லேவுண்டு
கூச லின்றிக் குலத்தவரைக் குலையச் செய்தார் குலத்தோடு
நாச மெய்திப் பழியோடு நரக முறுவ ரெனவுரைத்தான். எங.



## குசேலோபாக்கியானம்

2353 குடருமெய்த் தோரு மென்புங் கொழுவும்வார் வழும்புந் தோலுந்
தொடருநா டிகளும் வைத்துச் சுமத்திய தடியுங் கொண்டு
படர்தரச் செய்த பவ்வீப் பாண்டமா மடந்தை நல்லார்
இடனுடை வடிவ மந்தோ விதற்குமுண் மயங்கா நிற்பர். எச 2354 கோதுற வமைத்த பவ்வீக் குழம்புபஃ றுவாரந் தோறு
மோதுற வழியுங் கும்ப மூத்திர பாத்தி ரங்கை
யாதுபல் கிருமிக் குப்பை யயர்ந்ததீ நாற்றக் கூடிம்
மாதர்மெய் வடிவங் கண்டு மாழ்குவார் மாழ்கி

பாகவதம்

2355 அம்பொற் ருதுகோ தஞ்சிறை வண்டிமிர்
வம்பு லாங்குழன் மாத ரெனப்படும்
பைம்புன் மூசிய பாழ்ம்பெருங் கூவலின்
நம்பி வீழு மவனி நகைப்பவே.
எகூ

நாலடியார்

2356 பல்லா ரறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிபுக்க—மெல்லியற்
காதன் மனையாளு மில்லாளா
வென்றொருவன்
ஏதின் மனையாளை நோக்கு.
எஎ

2357 அம்ப லயலெடுப்ப வஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமையி னெஞ்சத்தான் துப்புரவு பாம்பின்
தலைநக்கி யன்ன துடைத்து.
எஅ

2358 குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு
தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள்
எத்திறத்தா ளீர்ங்கோதை யாள்.

எகூ ✓2359 அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்

வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காமம்
அவற்றினு மஞ்சப் படும்.

2360 ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்

அ0·

குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும்.

அக·

ருசு. காமக்கேடு

363

## அறநெறிச்சாரம்

2361 பழியொடு பாவத்தைப் பாராய்நீ கன்றிக்
கழிபெருங் காமநோய் வாங்கி—வழிபடா
வோடுமன னேவிடுத் தென்னை விரைந்துநீ
நாடிக்கொண் மற்றோ ரிடம்.

அ௨

## நல்வழி

2362 அம்மி துணையாக வாறிழிந்த வாறொக்குங்
கொம்மை முலைபகர்வார்க்

கொண்டாட்டம்—இம்மை

மறுமைக்கு நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கு வித்தாய் விடும்.

அக

2863 நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற்
கொண்ட கருவழிக்குங்
கொள்கைபோ—லொண்டொடீஇ

போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயன்
மாதர்மேல் வைப்பார் மனம்.

அ௬

## நீதிவெண்பா

2864 ஊரு ரெனும்வனத்தே யொள்வாட்கண்
கூரர் விடமுட் குழாமுண்டே —சீரூர்

மாதரெனுங்

விரத்திவயி ராக்கியவி வேகத் தொடுதோ
லுரத்தணியத் தையாவென் றோது.

அ௭

## நீதிநெறி விளக்கம்

2865 கொலையஞ்சார் பொய்நாணர் மானமு

மோம்பார்

களவொன்றே வேனையவுஞ்

செய்வார்—பழியொடு

பாவமிஃ தென்னர் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்.
அ௯-

தனிப்பாசுரத்தொகை

2366 காமமே சுடுதீக் காமமே கரந்துநின்
றுளத்தைச் சுற்றி யுழலுறும் புகையே
பற்றென் கணிகையர்ப் பெற்றதாய்க் கிழவி

மெய்ம்மை யொளியினை மிகவு மறைக்கும்
மாசறு திரையே மனத்தைத் தளையிடுங்
கொடுங்கோல் வலனே நடுங்குதுயர்ப்

பேயே!

வழிமறித் தடிக்கு மிழிதொழி லாளர்போல்
விழிமருட் டிக்கொடு விழனெறிச் செலுத்திநல்
உள்ளத் துறுபொருள் பொள்ளெனக் கவர்வோய்!
நின்கையிற் பட்டு நிருபரெத் துணையரோ

நன்கறந் துறந்தனர் நங்கைய ரெனையரோ
ஈன மெய்தினர் ஞான முனிவரர்
மேனிலை குன்றினர் வேறென
நினைத்தீக் குணனே நினைத்தலுந் தீதே.

அஎ

திருக்குறள்

2367 பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

அஅ

2368

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

அகூ

2369

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

கூ0

2370 எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். ௧௧

---

# ௯௦. வரைவின் மகளிர்

## திருவிளையாடற் புராணம்

2371 இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா
நோயாற் கழிபவர் யாவ ரேனுங் கண்வலைப் பட்டு
நெஞ்சம் அழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ
லளந்து காட்டிப் பழிபடு போகம் விற்பா ராவணப் பண்பு
சொல்வாம். ௧

## காஞ்சிப் புராணம்

2372 அலகினல் லறஞ்சூழ் காஞ்சி யமர்பெருஞ் செல்வ
ராயுங்
குலமுறைச்
சிலகொடுப்

சார்பால் வெந்நோய் கோட்பட்டா ரிழிஞ ரேனுஞ்
பனவுங் கொண்டு சேர்ந்துபொய் வஞ்ச மெல்லாம்
நிலைபெற வடைத்து வைத்த நெஞ்சின ராகி
வாழ்வார். ௨

## விநாயக புராணம்

2373 உறுப்பினுற் பெருவ னப்பா லொள்ளணியா விளமையினுன்
மறுப்படாக் குலமகளிர் வழியொழுகித் தருஞ்சுகமும்
வெறுப்பவே காளையர்க்கு மிகுபோகம் விளைக்கின்ற
சிறப்பினுற் பொருண்முழுதுந் திறைகொள்வர் விலைமாதர். ௩. 2374 எழிலாற் பாடலாடலினு லிச்சை பெருக்கி யுளமொவ்வா
மொழியிற் செயலால் வயமாக்கி முற்றும் பொருளைப் பறித்துவிடும்
பழிநா ணுத பரத்தையரைப் பற்ரு ராய்ந்த பண்புடையார்
ஒழியா ரவரைப் பேதைமையி லொழியா ரேம கண்டனே. ௪

## பேரூர்ப் புராணம்

2375 இளமையே கவினே கீர்த்தி யெறுழ்கலை யிங்கி தத்தின்
வளமையே யன்பே நல்ல வருணமே யேக போகம்
விளைவுசெய் திறனே மற்று மிக்குள ரேனும் பொன்னிற்
றளர்வின ராயி னஞ்சே யிருமனத் தையலார்க்கு. ௫

## திருக்குற்ருலப் புராணம்

2376 கைப்பொருளெ லாங்கொடுத்துக் கல்விகேள் விகண்முதலா
மெய்ப்பொருளைக் கைவிடுத்து வேசைமுலைப் போகமெனும்
பொய்ப்பொருளே கைக்கொண்டான் பொதுமாதர் மயல்பூண்டான்
எப்பொருளுந் தெளிந்தாருந் தெளிவாரோ விருநிலத்தில். ௬



சீகாளத்திப் புராணம்

2377 கரிய நீலவொண் கட்பொது மாதரைக் கண்ணுற்
றரிய மாதவ வேடம்விட் டணைந்தவ ரனேகர்
உரிய மாநிதி யனைத்துமீந் திரப்பதற் குன்னிப்
பரியு மாதவ வேடமுற் றகன்றவர் பலரே. ௭

2378 தெளித்த வொண்கலைப் பொருளினைத் தெளிதரச் சிந்தை
களித்து வந்தவர் மதியள வறைந்துமேற் காட்டா
தொளித்தி டுங்குரு பரனென விளங்குமொள் ளிழையார்
அளித்தி டும்பொரு ளளவறிந் தன்புசெய் குவரால். ௮

2379 குனித்த விற்றிற லரசிளங் குமரராங் குடத்தை
அனிச்ச மெல்லடிக் குவியிள முலையவ ளழகாந்
தனிக்க யிற்றினிற் பூட்டிவிட் டனுதினந்
தாழ்ந்த
மனைக்கி ணற்றினிற் பொருட்சலம் வறந்திட
முகப்பாள். கூ

2380 இல்லைபிழை யாயினு மியைத்தொர்
பிழைதன்னைச்
சொல்லியணை யாதெதிர் துனித்தழுது தைத்து
மெல்லுண வொழிந்துசிலர் வேண்டுற விருந்து
நல்லிளைஞர் கொள்ளமய னங்கையர் களிப்பார்
கO

2381 ஆடவர்மு ஞடையை யவிழ்த்தன ருடுத்துங்
கூடுமுலை தூசொடு குலுங்குற நடந்து
நாடக நடித்துமிசை நல்லன பயின்றும்
வீடலரி தாயமயல் வேலையு ளமிழ்ப்பார்.
கக

2382 உள்ளுற விலாவெளி யுறவு செய்துதான்
தெள்ளுறு மிளைஞர்தந் திருவெ லாங்கவர்ந்
தெள்ளுறு நரகினு மிடுத லால்வெறுங்
கள்ளரிற் கொடியவர் கணிகை மாதரே.
கஉ

சாந்தி புராணம்

2383 அன்புநா லாக வின்சொ லலர்தொடுத்
தமைத்த காதல்
இன்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந்

தியற்றி மாலை

நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினு நங்கை மார்க்குப்

பின்செலும் பிறர்க ணுள்ளம் பிணையனுர்க் கடிய தொன்றே.

கக

2384 ஆசை யல்குற் பெரியாரை யருளு மிடையுஞ் சிறியாரைக்

கூசு மொழியும் புருவமுங் குடில மாகி யிருப்பாரை

வாசக் குழலு மலர்க்கண்ணு மனமுங் கரிய மடவாரைப்

பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல் வாழி மடநெஞ்சே.

கஉ

## ௬௦. வரைவின் மகளிர் 367

### பட்டினத்தடிகள் பாடல்

2385 நாவார வேண்டும் விதஞ்சொல்லு வாருன்னை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வறண்டாற்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோவிறை வாகச்சி யேகம்பனே. க

2386

எத்தனைபேர் நட்டகுழி யெத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய்.

வளையாபதி

2387 வாரி பெருகப் பெருகிய காதலை
வாரி சுருங்கச் சுருங்கி விடுதலின்
மாரி பெருகப் பெருகி யறவறும்
வார்புன லாற்றின் வகையும் புரைப.

2388 விபொரு ளானை யகன்று பின்னுமோர்
மாபொரு ளான்பக்க மாண நயத்தலின்
மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகு
மாவும் புரைப மலரன வுண்கணார்.

கசு

கஎ
கஅ

2389 நாயும் போல்வர்பல் லெச்சிலு நச்சலால்
தீயும் போல்வர்செய்ந் நன்றி சிதைத்தலால்
நோயும் போல்வர் நுகர்தற் கருமையால்
வேயும் போல்வரிவ் வேனெடுங் கண்ணினார்.
௧௯

2390 நுண்பொரு ளானை நுகர்ந்திட்டு வான்பொருள்
நன்குடை யானை நயந்தனர் கோடவின்
வம்பிழி மென்முலை வாணெடுங் கண்ணவர்
கொம்பிடை வாழுங் குரங்கும் புரைய!
௨0

## நாலடியார்

2391 புதுப்புனலும் பூங்குழலார் நட்பு மிரண்டும்
விதுப்பற நாடின்வே றல்ல—புதுப்புனலும்
மாரி யறவே யறுமே யவரன்பும்
வாரி யறவே யறும்.
௨௧

2392 விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டும்
துளக்கற நாடின்வே றல்ல—விளக்கொளியு
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்பும்

• கையற்ற கண்ணே யறும்.
உஉ



2393 அங்கண் விசும்பி னமரர் தொழப்படுஞ்
செங்கண்மா லாயினு மாகமற்—றங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது.

உங 2394 ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக்
காணமில் லாதார் கடுவனையர்—காணவே
செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த
பொருளுடையா
ரக்கார மன்ன ரவர்க்கு.

உச

2395 பாம்பிற் கொருதலை காட்டி யொருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டு—மாங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறிவி னார்.

உரு

2396 ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉஞ் சில்லைக்க ணன்பினை
யேமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை.

உகூ 2397 உள்ள மொருவ னுழையதா
வொண்ணுதலார்

கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்—தெள்ளி
அறிந்த விடத்தும் அறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர்.

விவேக சிந்தாமணி

2398 அறங்கெடும் நிதியுங் குன்றும்
ஆவியு மழியுங் காயம்
நிறங்கெடு நிதியும் போகும்
நீண்டதோர் நரகிற் சேர்க்கும்
மறங்கெடு மறையோர் மன்னர்
வணிகர்நல் லுழவோ ரென்று
குறங்கெடும் வேசை மாதர்
குணங்களை விரும்பி னோர்க்கே.

தனிப்பாசுரத் தொகை

2399 ஆடலு மழகும் பாடலுஞ் சான்றீர்
இன்னிசைக் குயில்காள்! பன்னருங் கலைவலீர்
நும்வலைப் பட்டோர் நுமைத்தெய்வ மென்பர்
நுந்தமக் கோர்சொல் சிந்தை செய்ம்மினோ
வாய்ப்பரு நலனெலாம் வாய்க்கப் பெற்றீர்
ஊன்கொ லவற்றைப் புல்லிடை யுகுக்கின்றீர்

## கூ௦. வரைவின் மகளிர்

369

தூய வில்லறக் கோயி லில்லைகொல்
இன்னற மணியெனு மியற்கை நலத்தீர்
அதனொளி மழுங்கி யழித லெவனோ
வீழ்ந்த மகளிர்காள் விரைவினி லெழுமின்
ஆழ்ந்திடா தின்னே யறிவுகைப் பற்றுமின்
இழிந்தார் புகழுரை யேற்றுக் கொள்ளலிர்
இன்புடன் மேவி யில்லறத்
தினிது வாழிய எங்கை மீரே.

உக

### நீதிநூல்

2400 ஆவியனை யாளையோர் பொழுதுபிரிந்
தவளில்ல மணுகுங் காலை
மேவுபாங் கியைக்கண்டாண் துணையின்றி
வருந்தினளோ மின்னா ளென்றேன்
நாவிதனுக் குண்டோகாண் மயிர்ப்பஞ்சம்
மலப்பஞ்சம் நாய்க்கு முண்டோ
தேவிதனக் குண்டோவாண் பஞ்சமென்றாள்
அதன்பொருளைத் தெரிகி லேனே.

கூ௦

2401 தெரிவையின் நட் பறிவான் மாண்
டெனக்கிடந்தேம்
மாமிவந்து சிலரை நோக்கி
உரியபா டையிலிவனை யெடுமென்ருள்
வீண்செலவேன் உலைந்தோன் காலில்
புரிவீக்கி யிழுமென்றன் னம்பணித்தாள்
அதுசெய்யப் புகுந்தோர் தம்மைத்

தெரியாம லுயிர்தப்பி யோடிவந்தோ
மங்குறிலெஞ் சீவன் போமே.

நடி

2402 சாமியுனைப் பிரியேனென் றுரைத்துப்பின்
னகன்றமின்னுள் தன்னை நோக்கித்

தோமிலா நின்மாற்றந் திறம்பியதே
னென்றேனீ தொகுப்பாத் தந்த

சாமியைநீங் கேனென்றே னுனைச்சொன்ன
தன்றுநீ சாமி யானுல்
பூமியிலுன் மாற்றென்ன எடையென்ன
விலையென்ன புகல்வா யென்ருள்.

நஉ

2403 தையலில்லம் புகும்போதென் சுதன்குரலைக்
கேட்டொதுங்கித் தாழ்வா ரத்தில்

பையவொன்றிச் செவிகொடுத்தேன் பாலனைப்பார்த்
தக்கோதை பணமீ யென்ருள்





ஐயனிறந் திடிலெல்லா முனதென்ருன்
அவன்தூங்கும் அமயம் பார்த்தோர்
சையமெடுத் தவன்தலைமேற் போடுவாய்
போடுமுன்னுன் தழுவே னென்ருள்.

௩௫

2404 வண்ணமல ரமளியின்மே லிருக்கையிலோர்
பரபுருடன் வரவு நோக்கிப்
பண்ணமரு மொழிமின்னுள் விளையாடல்
போற்றன்கைப் பதுமத் தாலென்
கண்ணதனை மூடிவிட்டே னெனநகைத்தாள்
வேற்ருளார் கள்ளீ யென்றேன்
கண்ணடிபோற் றிகழுமென்றன் கபோலத்தில்
உன்னுருவைக் கண்டா யென்ருள்.

கூச

2405 ஆவலா லவகாலத் தவளில்நான்
புகச்சிலபேர் அங்கி ருந்து
மேவியோ டினர்சினமுற் றிவராரென்
றேன்மாமி விரைவாய் வந்து
பூவையிவள் நின்பிரிவாற் றுதழப்பாங்
கியர்க்குணைப்போல் புருட வேடம்
தாவறவே தரித்தவட்குக் காட்டினன்வே
றன்றென்று சாதித் தாளே.

கூ௫

2406 நேரிழைநம் முடனிறப்ப னெனமுன்னம்
உரைசெய்தாள் நிருப னம்மை
ஈரவெனக் கொலைக்களத்திற் கிழுக்கவடி
பற்றிப்பின் னிரங்கி வந்த
காரிகையை நோக்கிஞே மிஞ்சியவோர்
கோவணத்தைக் கருதி வந்தேன்
ஓருயிர்நம் மிருவருக்கும் நீர்வீயின்
நானிறந்த தொக்கு மென்றுள்.

கூ௬

2407 செவ்வையுறு பொருள்கவர்ந்த பின்னரெனைக்
கைவிட்ட தேனை நோக்கிக்
கொவ்வைவாய் மயிலேயிச் சினமேதென்
றேன்வனசக் கோயில் மேவும்

அவ்வையைமுன் சேர்ந்தபிழை பொறுத்தவளை
யென்னகத்துக் கழைத்தே னன்னுள்
தவ்வையையு மருவினீ ரினிப்பொறேன்
என்றூடிச் சலங்கொண் டாளே.

கஎ

சுo. வரைவின் மகளிர் 37

1

உ408 உண்ணும விரவலர்க்கு யீயாமல்
பூமிதனில் ஒளித்த பொன்னைக்
கண்ணுள் தனக்கீய வேண்டியதைத்
தோண்டுகின்ற காலந் தன்னில்
மண்ணுளனை நோக்கி யெனக்கீந்த
பொருளையினி வாங்கா நின்ற
பெண்ணுளனை யுன்வாய்க் கொட்டுவளென்
றேநகைத்துப் பேசி னுளே.

கஅ

உ409 பொருளொன்று நாந்தந்த திவட்கதற்கில்
லாமையிணி பொய்பு ரட்டு
மருளொன்று கட்காமங் கொலைகளவு
சூதுவசை மரணத் தோடும்
இருளொன்று நரகமின்னு மிவள்பால்நாம்

கொண்டதற்கோ ரிலக்க முண்டோ ?
தெருளொன்றும் பாரினம்போல்
சமர்த்தாக்கொண்
டெவர்வணிகஞ் செய்ய வல்லார்.

கஉ
2410 பசையறவெம் மாவியன்னுள் கைப்பொருளெ
லாம்பறிக்கப் பசியால் நான்கு
திசைமுகமு நோக்கலால் திசைமுகனு
னேம்வாயில் தீயா ளிட்ட
வசையான மண்ணுண்டு மாயனு
னேங்கையில் வாங்கு மோட்டால்
இசைமேவு மீசனு னேம்புவியி
னமையொப்பா ரெவர்தா மம்மா.

சo
திருக்குறள்
2411

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

சக
2412

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

சஉ

2413 ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

சந

2414 வரைவிலா மாணிழையார் மென்றோள்
புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

சச

## சுக. கள்ளுண்ணாமை

### கந்த புராணம்

2415 விள்ளுறு நாணினர் விரகத் தீயின
ருள்ளுறு முயிர்ப்பின ருலையு நெஞ்சினர்
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே.

அ

2416 பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செருவினுந் தவறிற் றேகுவார்

தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ.
உ.

விநாயக புராணம்

2417 அறிவை
யழிக்குஞ் செயலழிக்கு மழியா மானந் தனையழிக்குஞ்
செறியு மறிஞர் மதியாத செருக்கை விளக்கு
மீன்ருளு
முறியும் வெறுப்பு மிகவிளக்கு முனிவு
விளக்கும் பகையுஞ்சாக்
குறிகள் விளக்கு நகைவிளக்குங் கொள்ளேல்
கள்ளுண்
டலைமைந்தா. க

திருக்குற்ருலப் புராணம்

2418 வீருய பவக்கடலில் வீழ்ந்தவரைத் தவவரம்பி
லேரும லழுத்துசுழி யறிவுவெளிக் கிருட்படலந்
தூருய கொடுநரகி னழுத்திவிடுந் தோட்டிகதி
பேருன வழியடைக்குங் கதவமே

பெறுநறவுண். ௬ 2419 எவ்வமுற
நுகர்ந்தாரை யியம்புவதென் னுங்கவரைக்
கவ்வையுறப் புகன்ருலுங் கண்டாலும்
பெரும்பாவ
மெய்வளரு நெறியோர்கள் விலக்குவது
விலக்காத

பொய்வழியை விரும்பினரும் விரும்பாத

புலமதுவே. ௮

2420 பின்னவருண் டாலவரே பெரும்புலையர்
வணிகரொடு.

மன்னவரு முண்டாரேன் மற்றையவ
ரினுங்கடைய

ரன்னவர்க்கே யவையாகி லம்புவிக்குக்
கடவுளரா

முன்னவர்க்கு மதுவருந்தன்

முறைமையோ மடமைபோய். ௯

## ௯௧. கள்ளுண்ணமை

373

### கூர்ம புராணம்

2421 கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர்
கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் தினரை மகிழுநர் நரகிற்
கற்பகா லங்கிடந் தழுந்தி
யெள்ளுறுந் தீய மலப்புழு வாகி
மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரவுரவ நரகின்
மீட்டுமீட் டுழன்றுநாள் கழிப்பார்.

திருப்பூவணப் புராணம்

2422 வள்ளத் தேயுற வாக்கு மதுநுகர்ந்
துள்ளத் தேயுணர் வோடிட வோடிவீழ்ந்
தள்ளற் பள்ளத் தழுந்தினர் மள்ளர்தாங்
கள்ளுண் பார்க்குக் கதியுமுண் டாங்கொலோ.
அ

சூதசங்கிதை

2423 தீமை பயக்குஞ் சுரபானஞ் செய்த பாவி மலம்புசித்துத்
தூய்மை யடையா வுடல்வீக்கித் துக்கத் துழலு முயிர்களா
நாம தடையும் பறவைகளா நலமில் கிருமி கீடமாத்
தோம துறுபல் பவமெடுத்துச் சுழன்று திரிவான் பற்பலநாள்.

கூ திருமந்திரம்

2424 மயங்குந் தியங்குங்கள் வாய்மை யழிக்கு
மியங்கு மடவார்தம் மின்பமே யெய்தி
முயங்கு நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கு மிடையறு வானந்த மெய்துமே.

கo 2425 உள்ளுண்மை யோரா ருணரார்

பசுபாசம்

வள்ளன்மை நாத னருளினின் வாழ்வுறூஉர்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறூஉர்
கள்ளுண்ணு மாந்தர் கருத்தறி யாரே.

கக

2426 மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்

மயக்குறு மாயையின் மாமாயை வீடு
மயக்கிற் றெளியின் மயக்குறு மன்றே.

கஉ 374 பன்னூல்

பாடற்றிரட்டு

சீவக சிந்தாமணி

2427 மாலைப் பதும மாலையு மேந்தி மறிவார்பூஞ்
சோலையு மஞ்ஞைச் சூழ்வளை யார்தோள் விளையாடி
ஞாலங் காக்கும் மன்னர்க ளாவார் நறவுண்ணுச் சீலங்
காக்குஞ் சிற்றுப கார முடையாரே. கஙு

2428 உள்ளமொழி செய்கைகளி னொன்றியுல கேத்துந்
தள்ளரிய தன்மைவழி நிற்றலுறு நல்லீர்
எள்ளுநர்கள் தன்மையிது நிற்கவிடர் செய்யுங்
கள்ளுமுணல் குற்றங் கடைப்பிடிமி னென்றான்.

கச

## இராமாயணம்

2429 அளித்தவ ரஞ்ச நெஞ்சி னடைந்தவ ரறிவின்
மூழ்கிக்
குளித்தவ ரின்ப துன்பங் குடைந்தவர்
குடைந்த வேரி
ஒளித்தவ ருண்டு மீண்டிவ் வுலகெலா முணர
வோடிக்
களித்தவ ரெய்தி நின்ற கதியொன்று கண்ட
துண்டோ. கரு

2430 வஞ்சமுங் களவும் பொய்யு மயக்கமு மரபில் கொட்புந்
தஞ்சமென் றாரை நீக்குந் தன்மையுங் களிப்புந் தாக்குங்
கஞ்சமெல் லணங்குந் தீருங் கள்ளினு லருந்தி னாரை
நஞ்சமுங் கொல்வ தல்லா னரகினை நல்கா
தன்றே. கசு

## பழமொழி

2431 மாணுப் பகைவரை மாறெறுக் கல்லாதார்
பேணு துரைக்கு முரைகேட் டுவந்ததுபோல்
ஊணுர்ந் துதவுவதொன் றில்லெனினும்

கள்ளினைக்

காணுக் களிக்குங் களி.

கஎ

திரிகடுகம்

2432 கிளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்ரு னுழவும்—இளையனுய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையு மிம்மூன்றும்
உள்ளனபோன் றில்லாப் பொருள். கஅ

அறநெறிச் சாரம்

2433 ஒளியு மொளிசான்ற செய்கையுஞ் சான்ரேர்

தெளிவுடைய ரென்றுரைக்குந் தேசுங்—களியென்னுங்
கட்டுரையார்க் கோதப் படுமே லிவையெல்லாம்
விட்டொழியும் வேருய் விரைந்து.

கக

௧௧. கள்ளுண்ணமை

375

நீதி நூல்

2434 மருந்தநேர் மதுவுண்போர் மாண்ட
பான்மையால்
அருந்தவப் பாலருக் கப்ப னில்லையால்
பொருந்திய மனையவள் பூண்ட நாண்களத்

திருந்ததே யென்னினு மிழந்த தொக்குமே.
உ0

2435 சித்தமு மவசமாஞ் செயல்வி கற்பமாம்
நித்தமு மரணமா நெடிய துன்பமாம்
அத்தமு நாசமா மவிழ்த மின்மையால்
பித்தினும் நஞ்சினும் பெரிது கள்ளரோ.
உக

2436 பாலினைத் தேனையின் பாகை நீத்துவெண்
மாலியை மாந்துவோர் மலர்க்க ணீத்துமெய்த்
தோலிர ணந்தனைச் சூத கந்தனைக்
கோலியுண் டுவக்குமீக் கூட்ட மொப்பரே.
உஉ

2437 சீயென விகழ்தரு தேனுண் போர்களை
நாயெனக் கோகென ஆக்கும் நாடொறும்
ஆயினை மகளையில் லாக்குந் தான்கொண்ட
சேயிழை யையும்விலை செய்யச் செய்யுமால்.
உங

2438 மலந்தனை யமுதென மாந்தச் செய்திடும்
மலர்ந்தபூ வெனவன லள்ளச் செய்யும்வெஞ்
சலந்தரும் பகைவர்கை தனக்கு ளாக்குநன்
னலந்தனை யழித்திடு நறவு நெஞ்சமே.
உச

2439 அலருற ஈயெறும் பரவு தேனொடும்
பலவிலங் கணுகுறப் படுத்த பாயலின்
மலசல வாந்தியு மயக்குங் கோடலால்

நிலமது நரகமா நிதங்கள் ளுண்பர்க்கே.
உ௫

2440 வறுமையாற் களவு செய்வர் மையலாற் காமத் தாழ்வர்
குறுமைசேர் பகையி னல்வெங் கொலைசெய்வர் வசையி னேடும்
சிறுமைதந் துயிரி ருந்தும் செத்தவ ராக்கி யிம்மை
மறுமையை அழிக்குங் கள்ளை மாந்தலெப் பயன்கொண்
டம்மா. உ௬

2441 நரிநாய் பறவை சூழவழி
நடுவிற் கிடந்த சவமதனை
உரியார் இலரென் றிடுகாட்டுக்
குடன்கொண் டேகிக் கட்டையில்வைத்



தெரியா நின்றேன் பிணம்விழித்திஃ
தின்தேன் மயக்கென் றியம்பிமெய்கொள்
அரியை யவிக்கு முன்னமெழுந்
தயற்கட் கடையிற் புகுந்ததுவே.
உ௭

2442 அரக்கு மரக்கு மதுகஞ்ச
மாதி யாக வறியாமை
சுரக்குஞ் சரக்கைச் செய்தல்விற்
துணிந்து கொள்ளல் நுகர்தலெலாம்
பரக்கும் பழியைப் பாவத்தைப்
பயக்கு மத்தித் தொழிற்கிசைவோர்க்
கிரக்குந் தொழிலு மாயுள்குறைந்
திறக்குந் தொழிலு மெய்துமால்.

உஅ

திருக்குறள்

2443 உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

உகூ
2444

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.

௩0
2445 கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

௩௧

2446 துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

---

## சாஉ. சூது

### விநாயக புராணம்

2447 வென்றி வரினு மதனுன்முன் மேவு மொன்றற் காயிரம்பின்
மன்ற விழக்கு மதுவன்றி வைத்த பொருளும் வருவாயு
மன்றி யனைத்தும் பகைகொள்ளு மமைச்ச ராதி யுறுப்பொழியு
மொன்று மொளிகல் விக்கண் மறுமை யுறுதி யிலையாஞ்
சூதாடேல். க

### சீவகசிந்தாமணி

2448 பொய்யொடு மிடைந்தபொரு ளாசையுரு ளாய
மைபடும் வினைத்துகள் வழங்குநெறி மாயஞ்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவ ருடலொழி கென்ருன்.
உ

### பெருந்தேவனுர் பாரதம்

2449 முன்னர் விளையாடி முட்டுவார் முட்டினால்
தன்மை திரிந்து சலந்தோன்றும்—பின்னர்
மிகாதோ வெகுளி வெகுண்டாலச் சூது
தகாதோ தகுவதோ தான்.

கூ

2450 பிறன்றாரம் வேட்டல் பிழைப்பிலார்ச் சீறல்
அறன்கேட ஞயமே சூழ்தல்—மறந்தேயுந்
தீநிலத்தார் சொற்கேட்டல் தீச்சூ
திவைகண்டாய்
மேனிலத்தார் கேட்டுக்கு வித்து.

ச

## வில்லிபாரதம்

2451 தீதினால் வரித்து நெஞ்சந் தீயவ ராடு மாயச்
சூதினால் வென்று கொள்கை தோற்றமும் புகழு
மன்று
போதினன் முகனு மாலும் புரிசடை யவனுங்
கேள்வி
ஆதிநான் மறையு முள்ள வளவுமிவ் வசைய றுதே.

இ

2452 அடியு மாண்மையும் வலிமையுஞ் சேனையு
மழகும் வென்றியுந் தத்தங்
குடியு மானமுஞ் செல்வமும் பெருமையுங்
குலமு மின்பமுந் தேசும்

படியு நான்மறை யொழுக்கமும் புகழுமுன்
பயின்ற கல்வியுஞ் சேர
மடியு மான்மதி யுணர்ந்தவர் சூதின்மேல்
வைப்ப ரோமனம் வையார்.

2453 குழக ராயிள மடந்தையர்க் குருகுவோர்
குறிப்பி லாமையி னுளும்
பழகு வார்மிகச் சிந்தைநோய் தாங்களே
படுக்கு மாறுண ராமல்
அழகு பேரறி வாகவே கொண்டவ
ரறத்தொ ழில்புரி யாமற்
கழக மாடவும் பெறுவரோ விதனினுங்
கள்ளு ணவினி தன்றே.

2454 மேத கத்தெரி ஞானநூற் புலவரும்
வேத்து நூலறிந் தோரும்
பாத கத்திலொன் றென்னவே முன்னமே
பலப டப்பழித் திட்டார்
தீத கப்படு புன்றொழி லினோரிற்
சிந்த னைசிறி தின்றித்
தோத கத்துட னென்னையோ சகுனிதன்
சூதி னுக்கெதி ரென்றான்.

அ

நளவெண்பா

2455 அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு
—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை
மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

கூ

2456 உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

கO

நைடதம்

2457 சீலநற் றருமமெய் சிதைக்குந் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடுங்கவ றுடன் மன்னகேள்
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே.

கச

2458 ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்

பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்.

கஉ

2459 எள்ளுக சூதினை யிகலி வென்றதூஉங்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே.

கங

## திரிகடுகம்

2460 புலைமயக்கம் வேண்டிற் பொருட்பெண்டிர்த்
தோய்தல் கலைமயக்கங் கள்ளுண்டு
வாழ்தல்—கொலைமுனிந்து பொய்ம்மயக்கஞ் சூதின்கட்
டங்க லிவைமூன்று நன்மையி லாளர் தொழில்.

கச

## அறநெறிச்சாரம்

2461 ஓதலு மோதி யுணர்தலுஞ் சான்றோரான்
மேதை யெனப்படு மேன்மையுஞ்—சூது
பொருமென்னுஞ் சொல்லினுற் புல்லப் படுமேல் இருளா
மொருங்கே யிவை. கரு

## பழமொழி

2462 பாரதத் துள்ளும் பணையந் தாயமா
ஈரைம் பதின்மரும் போரெதிர்ந் தைவரொ
டேதில ராகி யிடைவிண்டா ராதலாற்
காதலரொ டாடார் கவறு.

கக—

நீதிநூல்

2463 வையமேன் மானிடர் வாழு நாட்சில
ஐயமில் கேள்விதான் அளவி லாருயிர்
உய்யநல் வினைகளை யுஞற்றி டாதுநாள்
பொய்யமர் சூதினிற் போக்கல் புன்மையே.

கஎ 2464 வளமலி நிடதநா டளிக்கு மாண்புசேர்
நளனையு மலைவுசெய் நாசச் சூதுதான்
களவுபொய் சினம்பகை காம மியாவையும்
அளவறப் பயிற்றிடும் ஐயன் போலுமே.

கஅ 2465 கவறினை யாடுவோன் காந்தை வீயினும்
சவமதிவ் வழிசெலு மென்று தானெழான்
அவள்புனை தாலிபந் தயத்துக் காமென
உவகைபூத் தாடுவா னுயர்வு ருனரோ.

கக—

380 பன்னூல் பாடற்றிரட்டு

2466 இவற லேதந் திழிவையுந் தந்துபின்
தவறு யாவையுந் தந்துநெஞ் சந்தனைக்
கவறென் னேவிக் கலக்கங் கொடுத்தலாற்
கவறெ னும்பெயர் காரண நாமமே.

உ0

திருக்குறள்

2467 வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை

வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.
உக 2468 ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு
முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.
உஉ 2469 சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.
உங 2470 அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.
உச 2471 உடைசெல்வ மூணொளி
கல்வியென் றைந்தும்
அடையாவா மாயங் கொளின்.
உ௫

---

## சுரு. செல்வச் செருக்கு

### கந்த புராணம்

2472 அண்ணலந் திருவிடை யழுந்தி யாரையும்
எண்ணலன் செந்நெறி யியற்ற வோர்கலன்
கண்ணிலன் மதியிலன் களிப்பி னேர்மகன்
மண்ணிடை விரைவொடு வழிக்கொண் டாலென.
க

### செவ்வந்திப் புராணம்

2473 வாலிபம் பெருநிலக் கிழமை மாண்பொருள்
மேலறி விலாமையி லொன்று மேவினுஞ்
சீலமுங் குடிமையுஞ் சிதையு மாலிவை
நாலுமுள் ளவர்செய னவில வேண்டுமோ.

உ 2474 விழிதெரிந் திருக்கவுங் குருடு மேவுவர்
மொழிதெரிந் திருக்கவு மூட ராகுவர்
பொழிமது வன்றியு மயக்கம் பூணுவர்
அழிதரு காலமா மரசர் வண்ணமே.

ங

காசி கண்டம்

2475 தனித்தனி முச்சுட ரியற்றித் தங்கிய
அனைத்துல கிருளையு மகற்று நான்முகன்
நினைப்பருஞ் செல்வம்வந் தெய்தி னீடிய
மனச்செருக் கெனுமிரு ளகற்ற வல்லதோ.

ச

2476 ஏர்பெறு மிருநிதிச் செருக்கை யெய்திடில்
தேர்செவி யுடையருஞ் செவிட ராகுவர்
ஓர்தரு முரைவலோ ரூம ராகுவர்
கூர்விழி யுடையருங் குருட ராவரே.

ரு

இராமாயணம்

2477 அறநி றம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்
அறநி னைந்துமை வலிகில ராயினு மனத்தால்
இறலு றும்படி யியற்றுவ ரிடையரு வின்னல்.

2478 மன்னவர் வலிதின் வெளவா வளமனைக் கள்ளர் கொள்ளா
விண்ணுயிர்க் கிறுதிசெய்யா விழந்தபி னிரங்கல் வேண்டா



துன்னிய துயிலை யொட்டா தோகையர் காதல் கூட்டா
உன்னிய பொருள தீட்டா முடைமையி னின்மை
நன்றால். எ

வில்லிபாரதம்

2479 செல்வம்வந் துற்றகாலைத் தெய்வமுஞ் சிறிது
பேணார் சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு
நோக்கார்
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்
வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர். அ

குசேலோபாக்கியானம்

2480 சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற
ஞான்றே வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர் குறிபெறு
கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே. கூ

பழமொழி

2481 அறியாமை யோடிளமை கூடுவதா மாங்கே
செறியப் படுவதாஞ் செல்வஞ்—சிறிய

பிறைபெற்ற வாணுதலாய் தானேயா டும்பேய்
பறைபெற்று லாடாதோ பாய்ந்து.

௧௦

## நன்னெறி

2482 தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ
தலையா யவர்செருக்குச் சார்தல்—இலையால்

மென்று

இரைக்கும்வண் டுதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்குவந் தன்று வளைவு.

௧௧

## நீதிநூல்

2483 மணிகள்பல வகைக்கல்லாம் பொன்முதலு
லோகமின்னு மண்ணுங் கட்டி
துணிபட்டா டைகள்பருத்தி நூல்பூச்சிக்
குடர்நாயின் தோலு ரோமம்
அணிபுழுகு கத்தூரி முதலியபூ
னையின்மலம்பா லாவி ரத்தந்
தணிவில்தேன் வண்டெச்சில் இவைசெல்வ
மெனச்செருக்கல் தகுமோ நெஞ்சே.

௧௨

2484 செங்கல் வெண்கல் கருங்கல்லை நவமணிக

ளனச் செல்வர் சேர்ப்பார் யாமும்
செங்கல் வெண் கல் கருங்கல்லைச்
சேர்த்திட்டோ
மிருவர்கல்லுஞ் சீர் தூக் குங்கால்

சுரு. செல்வச் செருக்கு
383

நங்கல்லே யிடையதிக மெங்கணுமுண்
டெதிர்ப்போரை நாசஞ் செய்யும்
பங்கமுறச் செல்வர் நம்மின் மிக்கோரென்
றகங்கரிக்கும் பான்மை யென்னே.
கரு 2485 இடையிற்கோ வணமு மின்றி
யிங்குதித் தோமவ் வாறே கடையினில்வெறுங்
கையோடுங் கழிகுவ நடுவிற் சேரும் உடைமையாற்
பெருமை யென்ஞே ஊர்க்கெலாம் பொதிசு மக்கும்
விடைதருக் குற்ற தென்ன வீண்செருக்
குற்ருய்நெஞ்சே. கசு 2486 நாசமாங் காலுமே
நண்ணு முன்னிறகு
ஈசலுக் கெய்தலும் இரியு முன்னமே
தேசது மிகுத்தொளிர் தீபம் போலவும்
நீசர் தஞ் செருக்கிஞ னிதியி ழப்பரே.
கடு

2487 செழித்திடு நாளினிற் செருக்குற்றுய்
கழித்துணை மாநிதி கைநீங்கிற்
பழித்திடு முலகின்முன் பரிவின்றி
விழித்திட லெப்படி வினைநெஞ்சே.
கஅ

---

## கூச. வறுமை

கந்தபுராணம்

2488 சொற்றரு கலையெலாந் தொடர்ந்து பற்பகல்
கற்றவ ராயினுங் கழிநி ரப்பினால்
அற்றவ ராவரே லாக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால்.
க

காஞ்சிப் புராணம்

2489 நிரப்பெ னும்பெரும் பகைவந்து நிலவலின் யாதும்
இரப்பி லார்களு மிரப்பது துணிந்தன ரம்மா
கரப்பி லார்களுங் காப்பது துணிந்தனர் கருத்தின்
விருப்பி லார்களு மிழிந்தவும் விரும்புமா துணிந்தார். உ

## விநாயக புராணம்

2490 வறுமை போல வின்னாது வறுமை யன்றி வேறில்லை
மறுவின் மொழிகள் சோர்வுபடும் வாய்த்த குடிநற் செயன் மொழிகள்
இறுதி படுமற் றிரப்பாதி யெல்லாத் துயரு முடனுகும்
பிறனி னேக்கு மீன்ருளும் பிள்ளா யதுவந் திடினி றத்தல். ௬

## பட்டினத்தடிகள் பாடல்

2491 தாயும்
சேயும்

பகைகொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னுடைய
பகையுற வோரும் பகையிச் செகமும்பகை
யாயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கிலிங் காதலினுல்
தோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே.

## புறநானூறு

2492 ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்பசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண

என்னிலை யறிந்தனை யாயின் இந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்



மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.

## மணிமேகலை

2493 குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்பிணை விடூஉ
நாணணி களையு மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி......

2494 வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன்
துய்ப்போர் தம்மனைத் துணிச்சித ருடுத்து
வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி
வெயிலென முனியாது புயலென மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்துமுன்
அறங்கடை நில்லா தயர்வோர் பலரால்.

## வளையாபதி

2495 பெண்டிர் மதியார் பெருங்கிளை தானது
கொண்டவீ ருகாஃகுறிப்பி னஃகுப

வெண்டரை நின்று வெறுக்கை யிலராயின்
மண்டினர் போல்வர்தம் மக்களு மொட்டார்.

௭

2496 தொழுமக னயினுந் துற்றுடை யானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமிய ரேனும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப.

௮

2497 பொருளில் குலனும் பொறைமையி லோன்பும்
அருளி லறனு மமைச்சி லரசும்
இருளினு ளிட்ட விருண்மயி ரென்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

௯

2498 சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரு நனிமதிப் பாரல்லர்
கல்வியுங் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலெ மெய்யென்று கொண்ணீ.

௧௦

குசேலோ பாக்கியானம்

2499 வருவாய்மிக் குடையரா யளவிறந்த
செல்வத்தின் வளமுள் ளார்க்கும்

ப. பா.— 25

ஒருவாவன் பொருமதலே யெண்ணியவா
றளித்தோம்ப லொல்லா தாகும்
பொருவாவெங் கடுங்கூற்ருய்க் கொடுவிடமாய்
வடவையாய்ப் புகுந்து வாட்டித்

திருவா நின் றிடுமிடியிற் பன்மகவுள்

ளாள்செய்கை யெந்றே யெற்றே.

கக

2500 தரித்திர மிக்க வனப்பிணை யொடுக்கிச்

சரீரத்தை யுலர்தர வாட்டுந்
தரித்திர மளவாச் சோம்பலை யெழுப்புஞ்

சாற்றரு முலோபத்தை மிகுக்குந்

தரித்திரந் தலைவன் றலைவியர்க் கிடையே
தடுப்பருங் கலாம்பல விளைக்குந்
தரித்திர மவமா னம்பொய்பே ராசை

தருமிதிற் கொடியதொன் றிலையே.

கஉ

2501 தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை
சாற்றுமெண் ணங்கள்வா ழிடமாந்
தரித்திரம் பற்பஃ றுக்கமுந் தோன்றத்

தக்கபே ராகர மென்ப

தரித்திர நன்மை சாலொழுங் கென்னுந்
தழைவனந் தனக்கழ றழலாந்

தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிதத்

தகையதை யொழித்தனன் றுமே.

கஉ

2502 இருங்க டற்புவி யிடத்தினில் லாரையெல்

லாரு மெள்ளுவ ரென்னு

ஒருங்கு ணர்ந்தமுன் னேருரைத் திட்டவஃ
துண்மை யென்றுளங் கொண்ணீ

நெருங்கு பற்றுறு தாய்தந்தை யருநிரப்

புறுநரை வெறுப் பாரேற்
சுருங்கு மன்பின்மற்
றெவர்வெறுத் திடாதவர்
தூந கைம்மலர்க் கொம்பே.

கச

2503 கோதறு கல்வி சாலூர்க் குடியிருந் தறியா

னேனும்
மோதருஞ் செல்வ மிக்கோ ஞெருவனே
சிறந்தோ னுவன்
காதலின் வேத முன்னுங் கலைகள்கற்
றுணர்ந்தோ னேனுந்
தீதமை யிடிய னுயிற் சிறந்திடான் வேத்த
வைக்கே. கஉ

நாலடியார்

2504 காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவ—ரேலா



இடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடையே மென்பார் சிலர்.
கக

2505 நல்லாவின் கன்ருயி னுகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச்
சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல்.

கன

2506 அத்திட்ட கூறை யரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணுமொன்
றில்லாதார்
செத்த பிணத்திற் கடை.

கஅ

2507 நீரினு நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்

யாரு மறிவர் புகைநுட்பந்—தேரி
நிரப்பிடும்பை யாளன் புகுமே புகையும்

புகற்கரிய பூழை நுழைந்து.

கக

2508 பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ்
சிறந்ததங் கல்வியு மாயுங்—கறங்கருவி

கன்மேற் கழூஉங் கணமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு.

உ0

2509 கல்லோங் குயர்வரைமேற் காந்தள்
மலரார்க்காற்
செல்லாவாஞ் செம்பொறி
வண்டினங்—கொல்லைக்

கலாஅற் கிளிகடியுங் கானக நாட
இலாஅஅற் கில்லைத் தமர்.

உக

## திரிகடுகம்

2510 பேஎய்ப் பிறப்பிற் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெரூஉம்—புலந்தெரியா
மக்கட் பிறப்பி னிரப்பிடும்பை யிம்மூன்றுந்
துக்கப் பிறப்பாய் விடும்.

உஉ

## குமரேச சதகம்

2511 வறுமைதான் வந்திடில் தாய்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையில் தைரிய மில்லை

செய்யசபை தன்னிலே சென்றுவர
வெட்கமாம்
செல்வரைக் காண நாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரில்
உயிருடன் செத்த பிணமாம்
உலகம் பழித்திடும் பெருமையோர்
முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்ருல்
மறுவசன முஞ்சொலார் துன்பினில் துன்பமிது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரே சனே.

உ௬

நீதிநெறி விளக்கம்

2512

எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவா—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்.

உ௭

திருக்குறள்

2513 இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்

இன்மையே யின்னா தது.

உ௪
2514 இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்.

உ௬
2515 நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

உ எ
2516

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

உ அ
2517 அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

உ கூ
2518 நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன் றுங் கண்பா டரிது.

௯ ௦

## சுரு. இரவாமை

விநாயக புராணம்

2519 கண்ணிற் சிறந்தார் தம்மிடத்துங்
காழ்த்த மானங் கெடநாவாற்
பண்ணற் குரிய வறங்குறித்தும்
படர்ந்தொன் றிரவார் பெருமையினல்
எண்ணிற் சிறந்தார் முயற்சியினு
லேலா வுப்பில் வரும்புற்கை
உண்ணற் கமைந்த தமைத்ததென
வுவப்பா ரேம கண்டனே.

க

குசேலோபாக்கியானம்

2520 பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரன் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லிக் காட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலா மிரத்த லந்தோ விழிவிழி வெந்த ஞான்றும். உ

2521 தெறுநி ரப்புளோர் வாழ்ந்திடு செல்வர்பாற்
செல்வ ரேன்மதி யார்கள்
மறுவு றுத்தவ மானமு மியற்றுவர்
மான முள்ளவ ராயிற்
குறுகு மவ்வவ மானத்தா லுயிர்விடு
கொள்கை யிற்றலை நிற்பார்

நறும லர்க்குழா லாதலா லவரிடை
நண்ண னன்றென வெண்ணல்.

ஙூ

நளவெண்பா

2522 சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற்
சென்றீ எனக்கென்று மிம்மாற்றங்
கண்டாய்—தனக்குரிய ஞானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள்.

நாலடியார்

2523 மான வருங்கல நீக்கி யிரவென்னும்
ஈன விழிவினால் வாழ்வேன்மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்.



2524 மறுமையு மிம்மையு நோக்கி யொருவற்
குறுமா றியைவ கொடுத்தல்—வறுமையால்
ஈத லிசையா தெனினு மிரவாமை
ஈத லிரட்டி யுறும்.

ச

2525 திருத்தன்னை நீப்பினுந் தெய்வஞ் செறினும்
உருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லால்
அருத்தஞ் செறிக்கு மறிவிலார் பின்சென்

றெருத்திறைஞ்சி நில்லாதா மேல்.

௭

2526 மல்லல்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்
செல்வ ரெனினுங்

கொடாஅதவர் நல்கூர்ந்தார்

நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்.

௮

2527 கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார்

கண்ணு

மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை—யிரவினை
உள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வர் குறிப்பு.

௯

2528 புறத்துத்தன் னின்மை நலிய வகத்துத்தன்
நன்ஞான நீக்கி நிறீஇ யொருவனை
ஈயா யெனக்கென் றிரப்பானே லந்நிலையே
மாயானோ மாற்றி விடின்.

௧0

திருக்குறள்

2529 இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

௧௧

2530 இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

கஉ

2531 இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே
யிடமில்லாக் • காலு மிரவொல்லாச் சால்பு.

கங

2532 ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

கசு

## கூகூ. அருமை

### தணிகைப் புராணம்

2533 அரிதாம் பிறப்பு ளுயர்மா னிடத்தி னடைவுற்று வைக லிதனின் அரிதாகு நல்ல குலனிற் பிறந்த லறிவாள ராத லதனின்
அரிதாகும் வேத முதலாய்ந்து முக்க ணமலற் கலத்த லதனின் அரிதா முயர்ந்த குலனுற்றும் வீணி லழிவா ரிதன்கொ லறிவே.

க

### பிரபுலிங்க லீலை

2534 புன்மர நெளிபுழுப் புள்வி லங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே
வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல்
நன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே.

உ 2535 நரர்வடி வாயினு நன்மை யாற்றுரு
மரபினி லுலகினில் வருத றப்புத
லரிதுநல் லறம்புரி வழிய டுப்பினு
மருவுத லரிதறம் வளர்க்கு மங்கமே.

௯ 2536 அறத்துறப் பெய்தினு மன்பி ஞலறஞ்
சிறப்புறச் செய்தலிங் கரிது செய்யினும்
புறச்சம யங்களைப் போக்கி யாகம
நெறிச்சம யங்களை யரிது நேர்தலே.
௭

சீவக சிந்தாமணி

2537 பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுள்
திரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி
சிவணி
அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதாற்

பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம்
பெறலே. ௫

2538 விண்டு வேய்நர லூன்விளை கானவ ரிடனுங்
கொண்டு கூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக்
குறும்பும்
உண்டு நீரென வுரையினு மரியன வொருவி
மண்டு தீம்புனல் வளங்கெழு நாடெய்த லரிதே.

௬ 2539. வில்லின் மாக்கொன்று வெண்ணிணத்
தடிவிளிம் படுத்த
பல்வி ஞர்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லை நீங்கிய விழிதொழி விழிகுல மொருவி

நல்ல தொல்குலம் பெறுதலு நரபதி யரிதே.

பாடற்றிரட்டு

2540 கருவி மாமழை கணைபெயல் பொழிந்தென வழிநா
ளருவி போற்றொடர்ந் தருதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையா
துருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே.

அ

வளையாபதி

2541 வினைபல வலியி னாலே வேறுவே றியாக்கை யாகி
நனிபல பிறவி தம்முட் டுன்புறூஉம் பல்லு யிர்க்கு
மனிதரி னரிய தாகுந் தோன்றுத றோன்றி னாலும்
இனியவை நுகர வெய்துஞ் செல்வமு மன்ன தேயாம். க

2542 உயர்குடி நனியுட் டோன்ற லூனமில் யாக்கை யாதன்
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் வறிவே யாதல் பேரறங் கோட லென்றாங்
கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்க

ளென்பார். ௬0

வில்லிபாரதம்

2543

உற்ற யோனிக டம்மி லுற்பவி யாமன் மானுட வுற்பவம்
பெற்று வாழுத லரிது மற்றது பெறினு மாயைசெய் பெருமயக்
கற்ற ஞானிக ளாய்வி ளங்குத லரிது வீடுறு மறிவுபின்
பற்று மாறரி திங்கு னக்கிவை பண்பி னேடுப

லித்தவே. ௬௧

அறநெறிச்சாரம்

2544 மக்க ளுடம்பு பெறற்கரிது பெற்றபின்
மக்க ளறியு மறிவரிது—மக்கள்
அறிவறிந்தா ரென்பா ரறத்தின் வழுவார்
நெறிதலை நின்றொழுகு வார்.
௬௨

ஔவையார்

2545 அரியது கேட்கின் வரிவடி வேலோய்
மக்கள் யாக்கையிற் பிறத்தலு மரிதே
மக்கள் யாக்கையிற் பிறந்த காலையும்
மூங்கையுஞ் செவிடுங் கூனுங் குருடும்

பேடு நீக்கிப் பிறத்தலு மரிதே
பேடு நீக்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்த லரிதே
ஞானமுங் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தரித்தலு மரிதே
தானமுந் தவமுந் தரித்தார்க் கல்லது
வானவர் நாடு வழிதிற வாதே.

௬௬. அருமை

393

2546 நிழலருமை வெய்யிலிலே நின்றறிமி னீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டில் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்.
௧௪

தனிப்பாடல்

2547 எழுதரிது முன்ன மெழுதிய பின்னர்ப்
பழுதறவா சிப்பரிது பண்பா—முழுதுமதைக்
கற்பரிது நற்பயனைக் காண்பரிது கண்டக்கால் நிற்பரிது
தான நிலை. ௧௫

---

௬௭. ஒழிபு

கந்தபுராணம்

2548 உற்றுழி யுதவி செய்வோ ருலப்பிலா தெவையு
மீவோர்

அற்றமில் தவத்தா றுற்றோ ரமர்புரி வீர ராவோர்
மற்றொரு பொருளும் வெஃகார் வருத்தமு மோரா
ராவி
இற்றிட வரினு மெண்ணு ரினிதென மகிழ்வ
ரன்றே. க

2549 ஆயவமு தத்தினொடு நஞ்சளவி யுண்குநரை
யவ்விடமலால்
தூயவமு தோவுயிர் தொலைக்குமது போலுனது
தொல்லருளினுல்
ஏயதிரு வெய்திட விருந்தனமுன் னேடமரி
யற்றியதனுல்
நீயெமை முடித்தியலை யன்னதவ றெம்முயிரை
நீக்கியதரோ. உ

2550 ஆதலி னெமக்கடிகள் செய்தவரு ளுக்குநிக
ராற்று வதுதான்
ஏதுளது மற்றெமையு னக்கடிய ராகவிவ ணீது
மெனினும்
ஆதிபர மாகியவு னக்கடியம் யாம்புதி தளிப்ப
தெவனோ
தாதையர்பெ றச்சிறுவர் தங்களைய வர்க்கருள்கை
தக்கபரிசோ ங

2551 பாங்காய் நின்ற தானையு மூரும் பகடுந்தான்
ஏங்கா நின்றே பார்மிசை வீழா வுறவுற்ற
தீங்காய் நின்ற செய்வினை யாளர் சிதைவாகிப்
போங்கா லத்திற் சேர்ந்தவர் தாமும்

போகாரோ.

2552 தீங்கி யாவர்க்குஞ் செய்தி டாதவர்
தாங்க டுன்புருர் தமக்கு வேண்டினோர்
ஆங்கெ வர்க்குமுன் னல்லல் செய்வரால்
ஈங்கு நீயிவை யெண்ண லாய்கொலோ.

இ

2553 கள்ளுற்ற கூந்தற் கனங்குழைநல் லார்கருத்திற்
கொள்ளப் படுமெண் குணிக்குந்
தகைமையதோ
தள்ளற் கரிதாகித் தம்மொடுபன் ஞட்பழகி
உள்ளுற்ற தேவு முணர்தற் கரிதன்ருே.

திருவிளையாடற் புராணம்

2554 மருட்சிசெய் காம நோயான் மதிகெடு மாறு
போல
அருட்சிவ ஞான நோக்கால் வலிகெடு மவிச்சை
போலத்
தடுக்குறு முவணஞ் சீறத் தழலரா விளியு
மாபோற்
செருக்குற வழியுங் கற்ற கல்விபோற் சிதையு
மன்றே.

கூஎ. ஒழிபு 395

2555 கோதறு கற்பினுய் கொழுநன் கைத்தலங்
காதலன் கைத்தல மன்றிக் கன்றின்வால்
ஆதலிம் மூன்றிலொன் றங்கை பற்றியே

ஓதநீ ராடுதன் மரபென் றேதினர்.

அ 2556 வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாக்குஞ்

செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்

பயிறரு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்

எயிறது காட்ட லின்ன வுடற்றொழிற் குற்ற மென்ப. கூ

2557 வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுர லுசி யின்ன எள்ளிய வெழாலின் குற்றந் தெரிந்துநின் றிரட்ட லெல்லை தள்ளிய கழிபோக் கோசை யிளைத்தநெட் டுயிர்ப்புத் தள்ளித் துள்ளலென் றின்ன பாடற் றொழிற்குற்றம் பிறவுந் தீர்ந்தே. கo

காஞ்சிப் புராணம்

2558 அல்லலே பெண்ணெனப் பிறத்த லாங்கதின்
அல்லலே யிளமையிற் சிறத்த லாங்கதின்
அல்லலே கட்டழ குடைமை யாங்கதின்
அல்லலே யிரவலர் சார்பி லுகுதல்.

கக 2559 இல்லைவை திகநெறி யில்லை நல்லறம்

இல்லைநால் வருணமாச் சிரம மில்லையாம்
இல்லைமா லுக்கர்க ளில்லை யாரியர்
இல்லைநல் லொழுக்கமுங் கலியி னென்பவே.

கஉ

தணிகைப் புராணம்

2560 தேவ ராயின ரின்பமே நரகினிற் றிளைக்கும்
பாவ ராயினர் துன்பமே படரிரு பயனும்
பூவ ராயின ரேனுகர் வாரெனப் புகல்வார்
காவ ஞன்முக னிடும்பைநோய் கண்டிலர்

போலும். கக

2561 ஒருவன்பால் வெற்றி கொண்டோ
னொருவன்பாற் றோல்வி கொள்ளும்
ஒருவன்பாற் சீர்த்தி கொண்டோ
னொருவன்பா லிளிவந் துட்கும்
ஒருவன்பா னட்புக் கொண்டோ
னொருவன்பாற் பகைமை கொள்ளும்
ஒருவன்பா னட்பா வுள்ளோன்
பகையுமா யுடற்று மன்றே.
கச



விநாயக புராணம்

2562 தகைமை யுடைய வறிவினர்கள்
சால வெறுப்புச் செயுமன்றி
நகையும் விளைக்கும் வெளிற்றறிவை
நவிற்று நன்கு மதிப்பொழிக்கு
மிகைசெய் விழுப்பந் தருமதனல்
விழையு மறமா திகள் பயவா
வகையி னுரைக்கும் பயனில்சொன்

மைந்தா வுரைய லுரையேலே.

கசு

2563 மனமெய் மொழிகள் வருந்தாமன்
வகுத்துத் தொழிலை மாறுபடா
இனிய வுணவை மிகப்பசித்த
விடத்தி னுடற்குப் பொருந்தவுணின்
முனிசெய் பிணிகட் கிடனின்று
முறைகள் பிறழ்ந்து வந்துவிடிற்
புனித முடைய வைத்தியரால்
வழிநின் றவற்றைப் போக்குகவே.

கஅ 2564 தன்னு லாளப் படுமனைவி தன்னு லாளப் படுவானேல்
அன்னுற் கறனும் பொருளுமுள வாகா தொல்லைப் பொருளானு
மன்னு பயன்கள் வினைமுடியா மறுமை யணுகா தெப்பிழையு
முன்னும் பின்னும் பெருநாணு மூவாப் பழியு மறிமைந்தா. கஎ

திருவானைக்காப் புராணம்

2565 பொருள்விழைந் தணங்கைக் கொடுத்தவன் றனக்கும்
புகன்றமுற் குற்றமே யடுக்கும்
பொருள்விழைந் தளித்த பூவையுந் தூய்மை
புணர்கிலள் புழுக்கையே யொப்பாள்
தருமுறை யின்றி வலியினுற் கவர்ந்த
தையலுங் கருநிலை யாதி

கருமமில் லவளும் விதியுளி வதுவை
௬ காணினு மத்தகை மையரே.

2566 பிரமமே பிரசா பத்தியந் தெய்வம்
பேணுமா ரிடம்வள ரசுரம்
பரவுகாந் தருவ மிராக்கதம் பசாச
மெனப்பகர் மன்றலோ ரெட்டாங்
கரிவுதீர் பிரம சரியநோற் றவர்க்குக்
காமரு செல்வமிக் குடைய
வரவமே கலையை யங்கிமுன் றுன
௨ மாகநன் றளிப்பது பிரமம்.

2567 அரிவையைக் கோடற் குரியவன் கொடுத்த
வாடகத் திரட்டியம் மகளைப்
பரிவொடு சார்த்திக் கொடுப்பது பிரசா
பத்தியம் வேள்விசெய் தவர்க்காங்
குரிமையின் மகளைத் தக்கணை யாக
வுதவுதல் தெய்வமீ ராவைப்
புரியிழை யணிந்து நிறீஇயிடை மகளைப்
புரையிலார்க் களிப்பதா ரிடமே.

உ0 2568 மகட்பயந் தவனை யிரந்திரந் தீந்து
வாங்கலு மொக்கலார்க் கிரும்பொன்
மிகக்கொடுத் தவராற் பயந்தவ னளிப்ப
மேவலும் பிறவுமா மசுரந்

தகப்பெருங் காத லாலெதிர் நோக்கித்
தங்களுட் கூடல்காந் தருவம்
பகப்பயந் தவனை யலைத்தணங் கலறப்
பாழியிற் கொளலிராக் கதமே.

உசு 2569 களித்தவர் துயின்றோர் மூத்தவ ரவரைக்
கரவினுற் கவர்வது பசாசந்
தெளித்தன மன்ற லெட்டுமந் தணர்க்கே
சிறந்தன முந்திய நான்கு
மளித்தணங் கேற்கு மசுரநால் வருக்கு
மாகுஞ்சூத் திரர்முத லோர்க்கு
வளைத்தகந் தருவ மிராக்கத முரிய
மருவுரு தொருவர்க்கும் பசாசம்.

உஎ

திருக்குற்றாலப் புராணம்

2570 பூவையர் செய்யும் பாவம் புருடர்மேற் புருடர்
பாவங்
கோவின்மேற் சுமையா மந்தக் கொற்றவன்
புரியும் பாவ
மேவுமே புரோகி தன்பால் வீண்புரோ கிதத்தா
லின்னோர்
மூவர்பா தகமுந் தாங்கு முழுச்சுமை தாங்கி
போன்றான். உஅ

2571 இருவரு மிணங்கு களவுகந் தருவ
மனந்தரி லிணங்கல்பை சாசம்
பெருவலி யதனுன் மருவுத லரக்கம்

பேரிலக் கெய்தலே யசுரம்
பொருளுகந் தளித்த லாரிடம் பிரசா
பத்தியம் பொருள்கொடா தளித்தல்

அருமகந் தனைவேட் பித்தலே தெய்வ
மழைத் தெதிர் கொடுத்தலே பிரமம்.

உ௯ 398 பன்னூல்
பாடற்றிரட்டு

2572 இருக்கினெடு தயித்திரியஞ் சாமமதர் வணமென்னும்
பெருக்கமறை நான்கோதி மந்திரஞ்சந் தோபிசித
நிருத்தஞ்சோ திடநிகண்டு வியாகரண மெனநிகழ்த்தும்
அருத்தியா றங்கமுணர்ந் தாகமத்தின் வகைதெரிந்து. உ௯

சீகாளத்திப் புராணம்

2573 ஓவா வறுமை யுழந்தாலு மற்றொருவர்
ஏவா துயிர்வாழ்ந் திருத்தலே நன்றுகுந்
தாவாத செல்வந் தருமேனுங் குற்றேவல்
ஆவா கொடிதுகொடி தென்பாரு மாயினர். உ௯

2574 சீரிளைஞர் மார்புபொரு செய்கையறி யாநும்

பாரமுலை யீகையிலி பானிலைய பொன்னும்

பேரவையை யஞ்சுமொரு பேதைபெறு நாலும்

வீரமறு பேடிகையில் வேலுநிக ராமால்.

உஎ

கூர்ம புராணம்

2575 அறம்புரிந் தன்றி யோங்குந் துறக்கத்தி னடைத லாகா

சிறந்தநற் பொருள்செய் தல்லாற் றிகழ்தரு மின்பஞ் சேரா

உறைந்தகா ரணத்தி னன்றிக் காரிய மாகா வோடு

கறங்குபோற் பிறவி ஞானத் தல்லது கடக்க லாகா. உஅ

2576 தாயைப் பயந்தாள் தாய்க்கிளையாள்
தாயின் மூத்தாள் தவ்வைதனக்
கேய தந்தை தனையீன்றாள்
வளர்த்தா ளத்தை குருபன்னி
காயும் வடிவேன் மன்னவர்தங்
கடிமா மனைவாழ் மடந்தையர்கள்
நேயத் தோடு தனையீன்ற

வன்னை யனைய ரெனநினைக.

2577 அருமா மறைக ளோதுவித்தோர்
தந்தை தமைய னடல்வேந்தன்
உரிய வம்மான் மாதுலன்ரு
ஹுய்யப் பரித்தோன் தாய்தந்தை
மருவுந் தந்தை தனையீன்ருேன்
வருண சேட்டன் தந்தைக்குப்
பொருவின் முன்ஞேன் பின்ஞேன்மற்
றின்ஞேர் குரவ ரெனப்புகல்வார்.

கா எ. ஒழிபு

இலிங்க புராணம்

2578 கடையுகத்திற் றருமநிலை வேர்சாயப்
பொய்மைகொடுங் களவு வஞ்சம்
அடுகொலைமற் றிவைமுதல பாவங்கள்
தழைத்திடலா லளிகள் பாட
மடலவிழுங் கமலத்தார் மறையவர்வார்
கழல்வேந்தர் வணிகர் தொல்லை
ஒடிவின்மறை நவில்கலா ரொழுகாத
நெறியதனி லொழுகு வாரே.

2579 பின்னவரா டகப்பசும்பொன் மடங்கலா
சனத்திருப்பப் பிறங்கு மொள்வாள்
மன்னவர்வே தியரவர்தம் வனைகழற்கால்
வணங்கிமுறை யேவல் பூண்பார்
அன்னவர்வே தியரொழுகு நெறியதனி
லொழுகுவா ரழிவி லாத
மன்னுமறை யவர் நான்காம் வருணத்தார்
நெறியதனின் மன்னி வாழ்வார்.

கூஉ

2580 உறைந்திடு மில்ல மெழுக்கெறிந் திட்டாற்
றூய்மையா முரைசெய்மட் கலங்கள்
அறைந்திடு கனலி னிடையினி லிட்டுக்
காய்த்திடிற் றுலங்கிடு மாக்கள்
சிறந்திட மிதித்த நிலமெலாந் தூய்மை
சேருமென் னிலக்குழி யதனில்

நிறைந்தநீர் பசுவொன் றருந்திமிஞ் சிடுமேற்
றூய்மையா மெனநிகழ்த் துவரால்.

கூகூ

2581 கன்றினை யருத்தி யாவினன் மடியிற்
கறந்தபா றூய்மையாம் பறவை
தின்றெழிந் திட்ட பழமுநன் குறுமாற்
செறிந்துவார் தெள்ளறல் புரையுந்

துன்றுபூங் குழலார் பூப்புறுந் தோறுந்
தூய்மையா குவர்கள்கா ழியர்தா
மன்றவீந் திட்ட வாடைநீர் தெளிப்பிற்
றூய்மையா மெனவழங் குவரால்.

கூ-ச

2582 மயிர்வினை செய்வோர் கரங்கடுய் மையவாங்

கூலத்திற் கொணர்ந்துவந் தவைகள்
செயிரில வாகும் வேட்டையி னுய்வாய்ப்
பட்டசெந் தடிகணன் குறுமால்



துயரில்வே தியர்க டுலங்குமெய்ந் நிழலும்
வேதஞ்சொல் போதில்வாய் நின்று
மயலுறத் தெறித்த திவலையுந் தேனுந்
தூய்மையா மெனவறை குவரால்.

2583 அறைதரு புனலிற் படிந்திடு நான்கா
நாளிலா ருயநா ளதனின்

முறையினி லெட்டா நாளினிற் பத்தா
நாளினின் மொழியுமீ ராறு
நிறைதரு நாளி லோர்பதி னைங்கா
நாளினி னிகழ்த்துமீ ரெட்டுச்
செறிதரு நாளிற் கருவுறிற் புதல்வர்ப்
பெறுகுவர் சேயிழை மடவார்.

பாகவதம்

2584 துகளிற் சேர்ந்த நரகொடு துன்னலர்
பகழிக் கும்பய மில்லை பழித்திடும்
புகழிற் கும்மறை யோர்கள் புகன்றிடும்
வெகுளிக் கும்வெருண் டோடுமென்
னுள்ளமே. கூஎ

2585 கடக்கரு வலிமை சான்ற கலியெனுங் காலத்
தாசை
அடக்கரி தாகி யுண்மை யருள்பொறை புனித
மாயுள்
உடற்குறு திண்மை புந்தி யுற்றிடு நினைவு
பார்மேல்
நடக்குறு தரும மெல்லா நாட்குநாட் குறையு
மம்மா. கூஅ

அரிச்சந்திர புராணம்

2586 கொஞ்சிப் பேசுங் குழவிசொற் குற்றத்தால்
வஞ்சித் தன்னை வனமுலைப் பாலினில்

நஞ்சிட் டாலதை நாடி விலக்குநல்
நெஞ்சத் தாருள ரோவிந் நிலத்திலே.

கூ௯

## உபதேச காண்டம்

2587 உலகி றப்பதி லொருதனி நாடிறந் தொழிதல்
உலவு நாடிறந் தொழிவதற் கொருநக
ரிறத்தல்
அலகின் மாநக ரிறப்பதி லொருகுடி யழிதல்
இலகு மோர்குடி யிறப்பதி லொருவனீ
றினிதே.

௬௦

## காசி கண்டம்

2588 திருந்தலர் புகழொடுஞ் செல்வந் துய்த்திட

வருந்தியுங் கருணையோ டடிசில் வாய்மடுத்
தருந்தியுந் துயின்றுநல் லின்ப மாந்தியு
மிருந்துயிர் சுமப்பதி னிறத்த னன்றரோ.

௬௧

க௫

கஅ

2589 புந்தியைக் கொடியவெம் பசியைப் பொறியினை
அந்தமின் முயற்சியைத் துயிலை யாற்றலை
நந்தலி லுயிரினை நன்னர் நெஞ்சினைச்
சிந்தையொன் றெய்திடிற் சிதைக்கு மென்பவே.

சுஉ

2590 உருத்தெழு வெப்புநோய் பழகி னுய்யுமா
றருத்திய மருந்தினி லமையுஞ் சிந்தைவெப்
பெரித்துநாள் பற்பல கழியி னீண்டுமான்
மருத்துவ ரோவிது மாற்ற வல்லரே.

சுந.

2591 அறத்திறந் திறம்பிறே ரருளி லாதவர்
துறக்கமொன் றில்லெனச் சொல்லும்
புன்மையோர்
சிறப்புடைப் பயனுருத் தர்க்கஞ் செய்குநர்
பெறற்கருந் தீர்த்தநற் பயன்பெ றுர்களே.

சுசு

2592 பொய்யுரை புகலிற் றீமையா மென்னப்
புகன்றனர் புலமைநன் குணர்ந்தோ
ரையநுண் மருங்குற் செய்யவாய் மகளிர்
புலவியி லந்தண ராவி
யுய்யுமென் புழியி லாவினை யளிக்கு

மிடத்தினி லோடரி நெடுங்கட்
டையலார் மணத்திற் பொய்ம்மையு மெய்ம்மை
தன்னினும் விழுமிதா மன்றே.

சஇ

பிரபுலிங்க லீலை

2593 பொறைக்க யிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற்க யிற்றின் விருந்தைக் குரவர்சொல்
மறைக்க யிற்றின் மனத்தைத் திருவைநல்
அறக்க யிற்றி னசைப்பவ ரெங்குமே.

சசு

மேருமந்தர புராணம்

2594 உற்றவ ரேயுறு பகைஞ ராகுவர்
செற்றவ ரேசிறந் தாரு மாகுவர்
மற்றவ ரேமறித் திரண்டு மாகுவர்
அற்றவ ரொருவரிங் காரு மில்லையே.

சஎ

பட்டினத்தடிகள் பாடல்

2595 ஓடாமற் பாழுக் குழையாம லோர
முரைப்பவர்பாற்
கூடாம னல்லவர் கூட்டம் விடாமல்வெங்
கோபநெஞ்சில்
நாடாம னன்மை வழுவாம லின்றைக்கு
நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய் சிதம்பர

தேசிகனே. ௪அ

ப. பா—26



2596 கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள்களவு

கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும் பொய்

சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றேகையர் மாயையிலே

செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே. ௪௯

2597 பொய்யை யொழியாய் புலாலைவிடாய் காளத்தி
ஐயரை யெண்ணா யறஞ்செய்யாய்—வெய்ய
சினமே யொழியாய் திருவெழுத்தைந் தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு.
௫௦

தாயுமானவர் பாடல்

2598 கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள் கற்றுமறி வில்லாதவென்

கன்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன்

கைவல்ய ஞான நீதி

நல்லோ ருரைக்கிலோ கன்மமுக் கியமென்று
நாட்டுவேன் கன்மமொருவன்
நாட்டிறு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்திரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்
வெல்லாம லெவரையும் வெருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.
௬௧

2599

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல
மாலாகி நிற்கவறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை

மெணமெணன் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே
சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்
சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு முளறவறிவார்



ஆறுசம யங்கடொறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு
நிறைவாகி
யானந்த மானபரமே.
இஉ
2600 எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமெ
னிதயமு மொடுங்கவில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை

யாதினும் மபிமானமென்

சித்தமிசை குடிகொண்ட தீகையொ
டிரக்கமென்
சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
தெரிசனஞ் செய்துமறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
புகன்றிடேன் பிறர்கேட்கவே

போதிப்ப தல்லாது சும்மா விருந்தருள்

பொருந்திடாப் பேதைநானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
வவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு
நிறைவாகி
யானந்த மானபரமே.

இக

பிரபோதசந்திரோதயம்

2601 சொற்றருமஞ் சிதைக்கு மன்னர் சொன்னபடி
சொன்னவரே தொலையாச் செல்வம்
பெற்றவர்க ளவைதிருத்திப் பேசினர்க்கு
முற்கேடு பிறக்கும் பித்தர்க்

குற்றகுண நூலினுஞ்செவ் வொழுங்கன்றே

ஹூன்புசிக்கு முழுவை முன்போய்க்
கற்றறிநல் லறமோதிற் கடுங்கொலைமா
பாவமெனுங் கருத்து ருதே.

இ - 2602 குருவரச னன்னைபிதாத்

தம்முனெனத்
தொழத்தகுமைங் குரவ ரேனும்
பெருமிதங்கொண் டடுமடா திதுவென்ப

துணராமற் பிழைசெய் வாரேல்
திருமநெறி யுணர்ந்தமிக்கோ ரவரவர்க்குத்

தக்கதக்க தண்டஞ் செய்தல்

மருவுதிரைக் கடலுடுத்த மாநிலத்திற்

பண்டைமநு வசன மன்ரே.

இ



2603 கற்றறிவு குலமேன்மை கருணைபெரும்
புகழ்செல்வங் கைம்மா றெண்ணா
துற்றதுவுங் கொடைசீர்மை யொழுக்கமருந்
தவநியம முறவின் கேண்மை

மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகுந்
தூய்மைகுணம் வனப்பி யாவும்
பெற்றிடினு மடக்கமிலாப் பெருமிதத்தா
லத்தனைக்கும் பிழையுண் டாமால்.

இக

2604 பொல்லா தவர்நன் மைபொருந் துவதூஉம்
நல்லார் மிகவன் றுயர்நண் ணுவதூஉம்
தொல்லார் வினையால் வரினுந் தொடர்பாய்
நில்லா தெனும்வாய் மொழிநிச் சயமே.

இஎ

2605 அறிவு கற்ற கல்வி வாய்மை யன்பு முன்ப டுத்தநல்
உறவு நட்பொ ழுக்க மேன்மை யொருவர் செய்த வுதவிசீர்
பிறவு மின்ன செய்கை மற்ற தெவையு நெஞ்சு பேர்வென
மறதி யுற்ற போதி யாவர் மனிதர் தேவர் மதியுளார்.

ஞானவாசிட்டம்

2606 கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
எள்ளற் பாலது வுலகமே தியாமெவ னென்றே
தெள்ளற் பாலது குரவரா லறிவினுற் றீர.

இக

2607 சத்திமா முனிவன் றன்பாற் பராசரன் பராச
ரற்கு
மற்சிய கந்தை யென்பாள் வயிற்றினி லவத
ரித்து
விச்சையின் மிகுதி யாலே வியாசமா முனியு
மானுன்
கொச்சைநீ சாதி பேத மென்கொடு கூற
லுற்ருய். ௬௦

2608 சாதியொன் றுயர்ந்தது தாழ்ந்த
தொன்றெனப்
பேதமே வல்லராய்ப் பிதற்று வார்சிலர்
சோதியே யநாதியாய்த் துன்னி நின்றமை
போதியா மையில்வரும் புன்மை யாகுமே.
௬௧

புறநானூறு

2609 கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனு ளுற்ற செருவிற் கிவள்தன்னை

யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே

இன்றும்;
செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

சுஉ 2610 நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன ளாயி னுண்டவென்
முலையறுத் திடுவன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

சுக
2611 உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின் உலகுடன்

பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.
கூஅ

2612 நாடா கொன்றோ காடா கொன்றோ

அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்

அவ்வழி நல்லை வாழிய நிலனே.
கூ

சீவக சிந்தாமணி

2613 அற்றவர் வருத்தம் நீக்கி யாருயிர் கொண்டு நிற்குந்
துற்றவி ழீதல் செய்யிற் றுறக்கத்திற் கேணி யாகும்
உற்றுயி ரோம்பித் தீந்தே னூனொடு துறக்கு மாயின்
மூற்றுரை யில்லை விண்ணு மண்ணுறும் மடிய வன்றே. கூகூ



2614 வாரம் பட்டுழித் தீயவு நல்லவாந்

தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்
ஓரும் வையத் தியற்கையன் ஹேவென
வீர வேனெடுங் கண்ணி விளம்பினள்.
சுஅ

2615 பகைவ ருள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைசெய் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிகைசென் மேகத்து மின்னுஞ்செந் நில்லலா
புகைசெய் வேலினீர் போற்றுபு சென்மினே.
சுஅ 2616 திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகும் நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகும் ஒண்பொரு ளாவ தையா உடன்பிறப் பாக்க லாகா எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரியதென்றான். சுக

மணிமேகலை

2617 உற்றதை யுணரு முடலுயிர் வாழ்வுழி
மற்றைய வுடம்பே மன்னுயிர் நீங்கிடின்
தடிந்தெரி யூட்டினுந் தானுண ராதெனின்
உடம்பிடைப் போனதொன் றுண்டென வுணர்நீ
போனார் தமக்கோர் புக்கிலுண் டென்ப
தியானோ வல்லேன் யாவரு முணர்குவர்
உடம்பீண் டொழிய வுயிர்பல காவதங்
கடந்துசேட் சேறல் கனவினுங் காண்குவை
யாங்கனம் போகி யவ்வுயிர் செய்வினை
பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ.
எ0

2618 உண்டியுட் காப்புண் டுறுபொருள் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலமென்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே.
எக

2619 பனிமதி பொழிகதிர் பருகு மாம்பல்போன்
முனிமதி முகத்தியர் முறுவ னம்பினூர்
துனிவளர் கதிகளுட் டோன்றி நாடகங்
கனியநின் றுடுவர் கடையில் காலமே.
எஉ

2620 பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறாஉங்



கள்ளவிழ் கோதையர் காமனெ டாயினும்
உள்ளம் பிறிதா யுருகலுங் கொண்ணீ.
எங 2621 தளிப்பெயற் றண்டுளி தாமரை யின்மேல்
வளிப்பெறு மாத்திரை நின்றற் றொருவன்

அளிப்பவற் காணுஞ் சிறுவரை யல்லால்
துளக்கிலர் நில்லார் துணைவளைக் கையார்.
எசு 2622 அந்தக னந்தகற் காறுசொல்லல் யாதொக்கு
முந்துசெய் குற்றங் கெடுப்பான் முழுவதும்
நன்கறி வில்லா னதுவறி யாதவர்க்
கின்புறு வீட்டி னெறிசொல்லு மாறே.

எஇ

சூளாமணி

2623 பூவிரி யுருவக் கண்ணிப் பொலங்குழை யிலங்கு
சோதித் தேவரே யெனினுந் தோன்றச் சில்பகல்
செல்ப வாயில் ஏவரே போல நோக்கி யிகழ்ந்துரைத்
தெழுவ தன்றே மாவிரி தானை மன்னு மனிதர தியற்கை
யென்றான். எசு 2624 ஒருவன திரண்டி யாக்கை
யூன்பயி னரம்பின் யாத்த உருவமும் புகழு மென்றுங்
கவற்றினூழ் காத்து வந்து மருவிய வுருவ மிங்கே
மறைந்துபோ மற்றை யாக்கை திருவமர்ந் துலக
மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே. எஎ

இராமாயணம்

2625 விண்டுழி யொருநிலை நிற்பர் மெய்ம்முகங்
கண்டுழி யொருநிலை நிற்பர் கைப்பொருள்
கொண்டுழி யொருநிலை நிற்பர் கூழுடன்
உண்டுழி யொருநிலை நிற்ப ருற்றவர்.
எஅ

2626 கற்ற வர்க்கு நலனிறைந்த கன்னி யர்க்கும்
வண்மைகை
உற்ற வர்க்கும் வீரரென் றுயர்ந்த வர்க்கும்
வாழ்வுடைக்
கொற்ற வர்க்கு முண்மையான கோதின் ஞான
சரிதராம்
நற்ற வர்க்கு மொன்றுசாதி நன்மை தீமை
யில்லையால். எக. 2627 அரிபி றந்த தன்றுதூணி
லரனும் வேயி லாயினுன்
பரவை யுண்ட முனியுமிப் பரத்து வாசன்
மைந்தனும்
ஒருவ யின்கண் முன்பிறந்த தொண்ச ரத்தி
னல்லவோ
அரிய வென்றி முருகவேளு மடிக ளும்பி
றந்ததே. அ௦



2628 வெல்லுக வறமு மெய்ம்மையும் பொறையு
மேகமே னியனும் வெல்லாமற்
செல்லுக பாவம் பொய்ம்மொழி கோபந்
தயித்தியர் குலமெனத் தெளிவுற்
றல்லும்வெம் பகலு மென்மன நிகழு
மலகையா மன்னையை முன்னங்
கொல்லுதல் புரிந்தோ யென்றனன் முரசங்

கோட்டிய கொற்றவெங் கொடியோன்.

அக

2629 பிறர்மனை வியரைப் பெற்றதா யெனவும்
பிறர்பொரு ளெட்டியே யெனவும்
பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும்
பிறர்துய ரென்றுய ரெனவும்
இறுதியே வரினு மென்மனக் கிடக்கை
யெம்பிரா னிவையென வுரைத்தான்
மறலியு மடியு மாறுமல் லியற்கை
வலிமைகூர் வாயுவின் மைந்தன்.

அஉ

2630 ஒருமொழி யன்னை வரம்பிலா ஞான
முற்பவ காரண னென்றுந்
தருமமே துணைவன் கருணையே தோழன்
சாந்தமே நலனுறு தாரம்
அரியதிண் பொறையே மைந்தன்மற் றிந்த
வறுவரு மல்லதா ருறவென்
றிருவரி லிளையோன் மொழிந்தனன் றன்பே
ரிதயமா மலர்க்கிடை யெடுத்தே.

அங

2631 பொறையெனப் படுவ தாடவர் தமக்குப்
பூணெனப் புகலினும் பொருந்தார்
முறையறப் புரிந்தா லக்கணத் தவர்தம்
முடித்தலை துணிப்பதே முழுப்பூண்
நறைமலர்க் குழலார் தமக்குமெய் யகலா

நாணமே நலஞ்செய்பூ ணெனினும்
நிறையுடைப் பெரும்பூ ணமளிவாய் நாணம்
நிகழ்வுரு நிகழ்ச்சியே யன்றே.
அ௪

2632 ஷிரைந்து பாய்பரி மன்னவ ரிதம்பட மெலிவுற்

றிரந்து வேண்டினுங் கிளைஞருக் கொருபொருளீயார்
பரந்த போரினி லெதிர்த்தவர் படப்படப் பகழி
துரந்த போதவர்க் குதவுவர் சொன்னவை யெல்லாம். அ௫

## ௬௭. ஒழிபு 409

### குசேலோபாக்கியானம்

2633 மதலையைப் பெறுநாட் டுன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பங்
கதமுறு காலர் வந்து கைப்பற்றிற் கணக்கி றுன்பம்
இதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மாமால். அ௬ 2634 இளமையி லியற்றுந் தண்ட மேற்றுமெவ் வெறுப்புய்த் தாலும்
உளநடு நடுங்கிப் பின்னி யுற்றுறப் பற்றி நிற்பார்

தளர்வறு பருவஞ் சார்ந்தாற்
றந்தைதாய் நடுங்கச் சீறி
அளமரு தம்ம னஞ்செ லவ்வாறே யொழுகி
நிற்பார். அஎ :2635 செறிதருதன் மனப்படியே
செய்தலொரு வற்கினிதாம்
அறிவுறுக்குங் குருமொழிகேட் டாக்கலஃ
தினுஞ்சிறப்பாம்
முறிதருமே திலர்சொற்கேட் டுஞற்றன்முனி
துயர்மனையாள்
வறியவுரை கேட்டுஞற்றன் மண்ணிறனேர்
கெடுதியுறும். அஅ :2636 ஆத லாலிம் மனைவாழ்க்கை
யகத்தே யிருந்து முத்திதனைப்
போத வடையத் துணிவதுதான்
புணையா மஞ்சு துயில்பொருப்பைக்
காதன் மிகுதி யாற்பெயர்த்துக்
கத்துந் தரங்கக் கடலிடையிட்
டேத மகல வதுபற்றி
யொருவன் கரையே றுதல்போலும்.
அகூ
:2637 மனையிற் பெருஞ்செல் வத்துறைவோன்
மருவு தியான முறச்சிறிது
நினையிற் காண வருவாரை
நேர்சென் றழைத்துத் தழுவிடவும்
வினையத் தினும்வி ஞேதத்தும்

விரும்பிப் பேசி டவுமவர்கள்
நினையப் பட்ட தளித்திடவும்
பொழுது கழியு நினைப்பழியும்.

2638 ஒன்றும் பெறுத லிலரெனினு
முற்ற பெருஞ்செல் வத்தினர்பாற்
சென்று கொளுநட் புடையரெனத்
தேயஞ் சொலற்கே சிலர்சூழ்வர்
மன்ற வென்ரு யினுமொர்பயன்
வழங்க லாகு மெனமூடல்
துன்று நறுநெய்க் குடத்தெறும்பு
சூழ்தல் போலுஞ் சிலர்சூழ்வர்.

2689 உரைத்தகன்
வரைத்தவவ்
முதலி டப்பல் லுயிர்க்கெலா முணவே யின்று
வுயிரவ் வாறு வழங்குத லியல்பே யென்னில்
தரைத்தலை வந்த ஞான்றே சலமலம் விடுத்த
லுண்டே
விரைத்தபூங்

குழலாய் துய்க்கு முணவின்றி மேவுமேகொல். கஉ

நாரத சரிதை

2640 வெவ்விட மமுதென விளங்கு கண்ணினர்க்
கெவ்விட முடம்பினி விழிக்கத் தக்கன
அவ்விட மாடவர்க் கமிர்த மாதலால்
உய்விடம் யாதினி யுரைக்கற் பாலையே.

கங

நாலடியார்

2641 நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென்
றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார் -
தொலைவில்லாச்
சத்தமுஞ் சோதிடமு மென்ருங் கிவைபிதற்றும்
பித்தரின் பேதையா ரில்.
கச

2642 அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு
மிகைமக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.
கரு

2643 கல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
சொல்லாது வைகிய வைகலும்—ஒல்வ

கொடாஅ தொழிந்த பகலு முரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண்.
௬௬

2644 நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற்
பொருளில்லைத்—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றா னாகுங் குலம்.
௬௭

2645 தெளிவிலார் நட்பின் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்றால்—அளிய
இகழ்தலின் கோற லினிதேமற் றில்ல
புகழ்தலின் வைதலே நன்று.
௬௮

2646 இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னாகப் போற்றிக்
கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லிற் சிதைத்ததீ நாடொறும் நாடித்தம்
இல்லத்தி லாக்குத லால்.
௬௯

௬௭. ஒழிபு 411

2647 தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்

தமரன்மை தாமறிந்தா ராயின்—அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
தம்மு ளடக்கிக் கொளல்.

௪00 2648 வேம்பி னிலையுட் கனியினும் வாழைதன்
தீஞ்சுவை யாதுந் திரியாதாம்—ஆங்கே
இனந்தீ தெனினு மியல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்க மரிது.

௪0௧ 2649 கற்றறிந்த நாவினர் சொல்லார்தஞ் சோர்வஞ்சி
மற்றைய ராவர் பகர்வர் பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி.

௪0௨ 2650 நல்லார் நயவ ரிருப்ப நயமிலாக்
கல்லார்க்கொன் றாகிய காரணந்—தொல்லை
வினைப்பய னல்லது வேனெடுங் கண்ணாய்
நினைப்ப வருவதொன் றில்.

௪0௩ 2651 ஓதியு மோதா ருணர்விலா ரோதாதும்
ஓதி யனையா ருணர்வுடையார்—தூய்தாக
நல்கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார் செல்வரும்
நல்கூர்ந்தா ரீயா ரெனின்.

௪0௪ 2652 உள்கூர் பசியா லுழைநசைஇச்

சென்றூர்கட்
குள்ளு ரிருந்துமொன் றூற்றுதான்—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தின ஞதலே நன்று.
௧௦௫ 2653 இழித்தக்க செய்தொருவ ஞர
வுணவிற்
பழித்தக்க செய்யான் பசித்த றவரூ
விழித்திமைக்கு மாத்திரை யன்ரூ வொருவன்

அழித்துப் பிறக்கும் பிறப்பு.
௧௦௬
2654 தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
என்னை யவரோடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கு முறும்.
௧௦௭ 2655
என்பா யுகினு மியல்பிலார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார்—தம்பா
டுரையாமை முன்னுணரு மொண்மை
யுடையார்க்
• குரையாரோ தாமுற்ற நோய்.
௧௦௮

2656 புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியார்
உய்த்தக மெல்லா
நிறைப்பினு—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

கOகூ

:2657 நல்லவை நாடோறு மெய்தா ரறஞ்செய்யார்
இல்லாதார்க் கியாதொன்று மீகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரா ரிசைபட வாழார்
முனியார்கொ ரும்வாழு நாள்.

கக0

:2658 கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப்
பாடெய்துந்—தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்.

ககக

2659 தலையே தவமுயன்று வாழ்த லொருவர்க்
கிடையே யினியார்கட் டங்கல்—கடையே
புணராதென் றெண்ணிப் பொருணசையாற்
றம்மை
உணரார்பின் சென்று நிலை.

ககஉ

:2660 செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலால்—அந்நெல்

வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு.

கககூ

2661 யாஅ ரொருவ ரொருவர்தம் முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு.

ககச

நான்மணிக்கடிகை

2662 நலனு மிளமையும் நல்குரவின் கீழ்ச்சாம்
குலனுங் குடிமையுங் கல்லாமைக் கீழ்ச்சாம்
வளமில் குளத்தின்கீழ் நெற்சாம் பரமல்லாப்
பண்டத்தின் கீழ்ச்சாம் பகடு.

ககஇ 2663 இன்றைமை வேண்டி னிரவெழுக
விந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்வது

வேண்டின் வெகுளி விடல்.

கககூ

2664 பெருக்குக நட்டாரை நன்றின்பா லுய்த்துத்
தருக்குக மாற்றாரைக் கால மறிந்தே

யருக்குக யார்மாட்டு முண்டி சுருக்குக
செல்லா விடத்துச் சினம்.

கசஎ

2665 இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றங்
கிளைஞரில் போழ்திற் சினங்குற்றங் குற்றந்
தமரல்லார் கையத் தூண்.

கசஅ

2666 எள்ளற்க வென்று மெளியரென் றென்பெறினுங்
கொள்ளற்க கொள்ளார்கை.
மேற்பட—உள்சுடினுஞ்
சீறற்க சிற்றிற் பிறந்தாரைக் கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

கசகூ

2667 கள்ளி வயிற்றி னகில் பிறக்கு மான்வயிற்றி
னொள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுட்
பல்விலைய முத்தம் பிறக்கு மறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி.

கஉ0

2668 நாற்ற முரைக்கு மலருண்மை கூறிய
மாற்ற முரைக்கும் வினைநலந் தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கு முன்ன
முகம்போல முன்னுரைப்ப தில்.

கஉக

## இன்னா நாற்பது

2669 பகல்போலு நெஞ்சத்தார் பண்பின்மை யின்னா

நகையாய நண்பினார் நாரின்மை யின்னா
இகலி யெழுந்தவ ரொட்டின்னா வின்னா
நயமின் மனத்தவர் நட்பு.

கஉஉ

## ஆசாரக் கோவை

2670 ஈன்றாண் மகடன் னுடன்பிறந்தா ளாயினுஞ்
சான்றோர் தமித்தா வுறையற்க வைம்புலனுந்

தாங்கற் கரிதாக லான்.

கஉக

2671 விரைந்துரையார் மேன்மே லுரையார்பொய்
யாய

பரந்துரையார் பாரித்
துரையார் — ஒருங்கெனைத்துஞ்

சில்லெழுத்தி னாலே பொருளடங்கக்
காலத்தாற்

சொல்லுக செவ்வி யறிந்து.

கஉ௩

2672 அளையுறை பாம்பு மரசு நெருப்பும்
முழையுறை சீயமு மென்றிவை நான்கும்

இளைய வெளிய பயின்றனவென் றெண்ணி
இகழி னிழுக்கந் தரும்.

கஉஇ

அறநெறிச்சாரம்

2673 தன்சொல்லே மேற்படுப்பான் றண்டி
தடிபிணக்கன்
புன்சொல்லே போதரவு
பார்த்திருப்பான்—இன்சொல்லை
ஏன்றிருந்துங் கேளாத வேழை யெனவிவர்கட்
கான்றவர்கள் கூரு ரறம்.

கஉச

2674 பிறர்க்கின்ன செய்தலிற் பேதைமை யில்லை
பிறர்க்கின்ன தென்றுபே
ரிட்டுத்—தனக்கின்ன
வித்தி விளைத்து வினைவிளைப்பக் காண்டலிற்

பித்து முளவோ பிற.

கஉள

2675 பெண்விழைவார்க் கில்லை பெருந்தூய்மை
பேணுதூன்
உண்விழைவார்க் கில்லை
யுயிரோம்பல்--எப்பொழுதும்
மண்விழைவார்க் கில்லை மறமின்மை மாணுது
தன்விழைவார்க் கில்லை தவம்.

கஉஅ

:2676 தூயவாய்ச் சொல்லாடல் வண்மையுந்
துன்பங்கள்
ஆய பொழுதாற்று மாற்றலுங்—காய்விடத்து
வேற்றுமை கொண்டாடா மெய்ம்மையு
மிம்மூன்றுஞ்
சாற்றுங்காற் சாலத் தலை.

கஉகூ
:2677 தானே தனக்குப் பகைவனு நட்டானுந்
தானே தனக்கு மறுமையு மிம்மையுந்
தானேதான் செய்த வினைப்பயன் றுய்த்தலால்
தானே தனக்குக் கரி.

கஙo :2678 செய்வினை யல்லாற் சிறந்தார்
பிறரில்லை
பொய்வினை மற்றைப்
பொருளெல்லா—மெய்வினவில்
தாயார் மனைவியார் தந்தையார் மக்களார்
நீயார் நினைவாழி நெஞ்சு.

கஙக
:2679 தாய்தந்தை மக்க ளுடன்பிறந்தார் சுற்றத்தா
ராய்வந்து தோன்றி
யருவினையால்—மாய்வதன்கண்
மேலைப் பிறப்பு மிதுவானுன் மற்றென்னை
கூவிக் கழுத குறை.

கஙஉ :2680 உப்புக் குவட்டின் மிசையிருந்

துண்ணினும்

இட்டுணக் காலத்துக் கூராதாந் தொக்க
உடம்பும் பொருளு முடையானோர் நன்மை

தொடங்காக்கா லென்ன பயன்.

கங்க

## சூஎ. ஒழிபு

415

2681 கெடுக்கப் படுவது தீக்கரும நாளுங்
கொடுக்கப் படுவ தருளே—அடுத்தடுத்
துண்ணப் படுவது நன்ஞான மெப்பொழுதும்

எண்ணப் படுவது வீடு.

கஙச

2682 உணர்ச்சியச் சாக வுசாவண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும்
பூட்டி—உணர்ந்ததனை

ஊர்கின்ற பாக னுணர்வுடைய னாகுமேற்

பேர்கின்ற தாகும் பிறப்பு.

கஙரு

2683 அருளா லறம்வளரு மாள்வினையா னாக்கம்
பொருளாற் பொருள்வளரு நாளுந்—தெருளா

விழைவின்பத் தால்வளருங் காமமக் காமம்
விழைவின்மை யால்வளரும் வீடு.

கசுசு

## நன்னெறி

2684 ஆக்கு மறிவா னலது பிறப்பினன்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க — நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

கசுஎ

## நீதிநெறி விளக்கம்

2685 அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லு— நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

கசுஅ

2686 நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

கசுக

2687 வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறு—ஆங்கதுகொண்

டுரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளேயோ டயின்று.

கசO

2688 மனத்த கறுப்பெனி னல்ல செயினும்

அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனை
த்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்.

கசக



2689 குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவுந்—தவம்விற்றுங்
கூனேம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉந்
தானேம்பிக் காத்த றலை.

கசஉ

2690 பொதுமகளே போல்வ தலையாயார் செல்வங்
குலமகளே யேனையோர் செல்வங்—கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற்
கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்.

கசந

2691 ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்

காந்தையர் கண்கவர்
நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு
மாதர்க்
கயலார்மே லாகு மனம்.
க௪௫

மூதுரை

2692 நீரளவே யாகுமா நீராம்ப ருங்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வங்
குலத்தளவே யாகுங் குணம்.
க௪௬

2693 மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க
வேண்டா—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.
க௪௮

2694 நஞ்சுடைமை தானறிந்து நாகங்
கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கு நீர்ப்பாம்பு—நெஞ்சிற்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.
க௯௭

நல்வழி

2695 தண்ணீர் நிலநலத்தாற் றக்கோர்

குணங்கொடையாற்

கண்ணீர்மை மாருக்

கருணையாற்—பெண்ணீர்மை

கற்பழியா வாற்ருற் கடல்சூழ்ந்த வையகத்துள்

அற்புதமா மென்றே யறி.

கசஅ

2296 நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்

ஆறில்லா வூருக் கழகுபாழ்—மாறில்

உடற்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே

மடக்கொடி யில்லா மனை.

கஅகூ

417

## கூள. ஒழிபு

2697 உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான். கஙஂ

2698 இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சாலும்
ஒழுக்க முயர்குலத்தி னன்று—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி. கஙச

2699 வெட்டனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். கநஉ

2700

அரிமந் திரம்புகுந்தா லானைமருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலா—நரிநுழையின்

வாலுஞ் சிறிய மயிரெலும்புங் கத்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.

க௦ட 2701 பகைசேரு மெண்ணுன்கு பற்கொண்டே
நன்கு

வகைசேர் சுவையருந்து
மாபோற்—றெகைசேர்

பகைவரிட மெய்யன்பு பாவித் தவராற்
சுகமுறுத னல்லோர் தொழில்.

க௦௪

2702 காந்தனில் லாத கனங்குழலாள் பொற்பவமாஞ்
சாந்தகுண மில்லார் தவமவமாம்—ஏந்திழையே
அன்னையில்லாப் பிள்ளை யிருப்ப தவமவமே
துன்னெயிறில் லாருண் சுவை.

க௦௦'

2703 பெற்றமையு மென்னுப் பெரியோரும்
பெற்றபொருள்

மற்றமையு மென்றே மகிழ்வேந்து -
முற்றியநன்
மானமில்லா வில்லாளு மானமுறு வேசியரும்

ஈன முறுவா ரிவர்.

க௬௬

2704 கற்ரேர் கனமறிவர் கற்ருரே கற்றறியா
மற்ருே ரறியார் வருத்தமுறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நொந்தறிகு வாளோ நுவல்.

க௬எ





2705 அன்னை நடையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்—வன்ன முலே
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்.

க௬அ

2706 தன்னை யளித்தா டமையன் மனேகுருவின்
பன்னி யரசன் பயிறேவி—தன் மனேயைப்
பெற்ருளிவரைவர் பேசி லெவருக்கு
நற்ருய ரென்றே நவில்.

க௬க

2707 வாவியுறை நீரும் வடநிழலும் பாவகமும்

ஏவனைய கண்ணு ரிளமுலையும்—ஓவியமே
மென்சீத காலத்து வெம்மைதரும்
வெம்மைதனில்
இன்பாருஞ் சீதளமா மே.

கசுO
2708 அத்தி மலரு மருங்காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
காணுர் தெரியற் கடவுளருங் காண்பரோ
மாணுர் விழியார் மனம்.

கசுக 2709 ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது
போவிரப்போர்
ஈயுமவர் வருந்தா தேற்றலறந்— தூயவிளம்
பச்சிலையைக் கீடமறப் பற்றி யரிப்பதுபோல்

அச்சமுற வாங்க லகம்.

கசுஉ
2710 வல்லவர்பாற் கல்வி மதமா ணவம்போக்கும்

அல்லவர்பாற்
கல்வி யவையாக்கு—நல்லிடத்தில்
யோகம் பயில்வா ருயர்ந்தோ ரிழிந்தோர்கள்

போகம் பயில்வார் புரிந்து.

கசுக
2711 போற்று குருகிளைஞர் பொன்னுசை
யோர்க்கில்லை
தோற்றுபசிக் கில்லை சுவைபாகந்—தேற்றுகல்வி

நேசர்க் கிலைசுகமு நித்திரையுங் காமுகர்தம்

ஆசைக் கிலைபயமா னம்.

ககூச 2712 பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும்
வித்தையே
எண்ணி றனம்விரும்பு
மீன்றதாய்—நண்ணிடையிற்
கூரியநற் சுற்றங் குலம்விரும்புங் காந்தனது
ஞேரழகு தான்விரும்பும் பெண்.

௲சுஇ 2713 கற்றைக் குழலார் கவினெல்லா
மோர்மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே—கற்றருளை

வேட்ட பெரியோர் பெருமையெல்லாம் வேறென்றைக்
கேட்ட பொழுதே கெடும்.
கஅஅ

2714 உற்ற மறையகத்தி னுய்க்குமவ னுத்தமனே
மற்றும் மறைபகர்வோன்
மத்திமனே—முற்றிழையே அத்த முறலாற் புகல்வா
னதமனென
வித்தகநூ லோதும் விரித்து.
கஅ

தனிப்பாடல்

2715 புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம்
இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர்—நிகழ்கலைகள்
எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ
நல்லா யவைக்கு நலம்.
கககஅ

2716 நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை ஞானங்
குலனென் றிவையுடையோர் கோதில்—புலனில்லோர்
சென்று மொழிந்தனவுங் கேட்போர்
செறிந்தவிடம் அன்றோ நிறைந்த வவை.

ககக 2717 ஒன்றுகக் காண்பதே
காட்சி புலனைந்தும்
வென்றன்றன் வீரமே வீரமாம்—ஒன்றனுஞ்
சாகாமற் கற்பதே கல்வி தனைப்பிறர்

ஏவாம லுண்பதே யூண்.

கஎ0

2718 வெள்ளிலேவே லற்பநிழன் மெத்தவே முட்டைக்குந்
துள்ளுநரு வாழைபலாச் சோலேக்குண்—மெள்ள
அடுக்கவொட்டா வாறுபோ லற்பர்சிலர் கூடிக்
கொடுக்கவொட்டார் தாமுங் கொடார்.

கஎக

2719 புறந்தந் திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்
சிறந்த வொளிவளர்க்குந்
தேரோன்—மறைந்தான்
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்ருர் யார்.

கஎஉ

2720 எண்ணும் பயன்ருக்கா தியார்க்கும் வரையாது
மண்ணுலகில் வாம
னருள்வாக்கு—தண்ணறுந்தேன்
பூத்தளிக்குந் தாரோய் புகழாளர்க் கெவ்வுயிருங்
காத்தளிக்கை யன்ரே கடன்.

கஎங

2721 வெய்ய குரற்ருேன்றி வெஞ்சினவே றுட்கொளினும்
பெய்யு மழைமுகிலேப் பேணுவரால்—வையத்

திருள்பொழியுங் குற்றம் பலவெனினும் யார்க்கும்
பொருள்பொழிவார் மேற்றே புகழ்.

கஎஉ

2722 எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கு—முற்று
முடியாப் பரவை முழங்குலகத் தென்றுங்
கொடியார்க்கு முண்டோ குணம்.

கஎ௩

2723 ஆர வடமு மதிசீத சந்தனமும்
ஈர நிலவு மெரிவிரவும்—பாரில்
துதிவகையான் மேம்பட்ட துப்புரவுந் தத்தம்
விதிவகையால் வேறு படும்.

கஎச

2724 கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக்

குறைகடலுங்
கூவித் தமியோரைக் கொல்லுமாற்—பாவாய்
பெரியோரும் பேணாது செய்வரே போலுஞ்

சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு.

கஎஎ

2725 தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக்
கொலைபுரிந்தான் குற்றங் கடிந்தா—னுலகில்
தனிமுதன்மை பூண்டுயர்ந்தோர்
வேண்டுவரேற் றப்பாம்
வினையும் விபரீத மாம்.

கஎஅ

புறப்பொருள் வெண்பாமாலை

2726 உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து—முழுதுணர
ஓதி யழல்வழிப்பட் டோம்பாத வீகையான்
ஆதி வணிகர்க் கரசு.

கஎகூ

2727 மூவரு நெஞ்சமர முற்றி யவரவர்
ஏவ லெதிர்கொண்டு மீண்டுரையான்—ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவா னுலகுக் குயிர்.

கஅ0

பெருந்தொகை

2728

பிறப்பித்தோன் வித்தைதனைப் பேணிக் கொடுத்தோன்
சிறப்பி னுபதேசஞ் செய்தோன்—அறப்பெரிய
பஞ்சத்தி லன்னம் பகிர்ந்தோன்
பயந்தீர்த்தோன்
எஞ்சாப் பிதாக்களென வெண்.

கஅக



2729 ஏசி யிடலி னிடாமையே நன்றெதிரிற்
பேசு மனையாளிற் பேய்நன்று—நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை வாழ்விலாச்
சங்கடத்திற் சாதலே நன்று.

கஅக

2730 கல்லாதார் நல்லவையுட் கல்லேபோற்
சென்றிருந்தாற் கருமம் யாதாம்
இல்லாதார் செல்வரைக்கண் டிரங்கியே
யேமுற்று லியைவ தென்னும்
பொல்லாதார் நன்கல மெய்புதைப்பப்
பூண்டாலும் பொலிவ தென்னும்
புல்லாதார் பொய்க்கேண்மை
புனைந்துரைத்தா லாவதென்னே
அல்லாதார் பொய்யாவ
தறிபவே லமையாதோ.

கஅக 2731 தன்று லாளப் படுமனே வி தன்று லாளப் படுவானேல்

அன்றற் கறனும் பொருளுமுள வாகா தொல்லைப் பொருளானும்

மன்று

பயன்கள் வினைமுடியா மறுமை யணுகா தெப்பிழையும்

முன்னும் பின்னும் பெருநாணும் மூவாப் பழியும் அறிமைந்தா.

2732 தன்னுரைகொ ளாதமனை வாழ்க்கையது தன்னின்

வெந்நிரையம் வீழும்வகை யேவிழுமி தம்மா

அன்னரொடு மேவியமர் ஆடவர்த மக்குப்

பின்னுமொரு கூற்றுமுள தோபிணியும் உண்டோ. கஅஇ

நீதிநூல்

2733 வலியினு லிலஞ்சங்கொள் மாந்தர் பாற்சென்று

மெலியவர் வழக்கினை விளம்பல் வாடிய

எலிகள்மார்ச் சாலத்தி னிடத்தும் மாக்கள்வெம்

புலியிடத் தினுஞ்சரண் புகுத லொக்குமே.

கஅ௬

2734 கொலைஞருஞ் சோரரும் கொடிய வஞ்சரும்

நிலைபெற வவர்கையி னிதியைக் கொண்டுதண்

அலைகட லுலகியல் அழிக்குந் தீயர்பால்

மலையெனப் பாவமும் பழியும் மண்டுமே.

கஅஎ

2735 பயிரினை வேலிதான் மேய்ந்த பான்மைபோல்
செயிருற நீதியைச் சிதைத்தோர் தீயன்சாண்



வயிறினை வளர்த்திட வாங்கு மாநிதி

வெயிலுறு வெண்ணெய்போல் விளியு
முண்மையே. கஅஅ

2736 ஆசையால் வாங்கிடும் அவனை யீந்தவர்
கேசமா மதிப்பரக் கீழ்நன் சென்னிதம்
ஆசன மாக்குவ ரடிமை நானெனச்
சாசன மவர்க்கவன் தந்த தென்னவே.

2737 இருவ ரிடத்தும் விவாதநிதிக்
கிரட்டி கொள்வர் தகாதென்னின்
அருமை சயமென் பார்தோல்வி
அடைந்தோன் தந்த நிதிகேட்பின்
வெருவ அவன்மேற் பொய்வழக்கை
மெய்போற் கற்பித் திடரிழைத்துச்
சருவ கொள்ளை யடிப்பர்பரி

2738 அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு.

ககக

2739 இன்னா தினனில்லூர் வாழ்த லதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு.

ககஉ

2740 துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

ககங

2741 வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

ககச

2742 நாங்காதல் கொண்டார் நமக்கெவன்
செய்பவோ தாங்காதல் கொள்ளாக் கடை.

ககரு

2743 நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

ககசா

# ௯௮. இன்பச் சிறப்பு

## கந்தபுராணம்

2744 அரிசன மேனி நல்லா ளணிதுகி லசைவின் சீராற் கரிசன மன்ன கொங்கை
காண்டலுந் தளர்ந்தோர் காளை தெரிசனந் தன்னி லீதென் சிந்தையைப் பிணித்த தென்றாற் பரிசனந்
தனிலென் னுமோ வென்றுயிர் பதைத்து
நின்றான். ௧

2745 கற்பக வல்லி யன்னா ளொருத்திதன் காதன் மூழ்கி
யற்பக லேவல் செய்வா னங்கவள் செல்லும் போதிற்
பொற்புறு படாத்தி னீங்கிப் பூண்முலை சிறிது தோன்றப்
பற்பக னேற்று வேண்டும் பரிசில்பெற்
றுரை யொத்தான். ௨

2746 ஓவ ருந்தவ மியற்றிய முனிவரி லுலகத்
தேவர் தங்களிற் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்க டம்மில்
ஏவர் மங்கையர் முலைத்தலைப் போகம்விட்

டிருந்தோர். க 2747 ஆக நோவுற வருந்தியே
யைம்புல னவித்து
மோக மாதிய மூவிரு குற்றமு முருக்கி
யோகு செய்திடு மேலையோர் பெறும்பய
னுரைக்கிற்
போக மன்றியொன் றில்லைகா ணெல்லை தீர்

புகழோய். ச 2748 காண்ட லும்புல
ஞெடுங்குமாங் கரணமு மிலையா
மாண்ட செய்கையு மொழியுமா மியாக்கையும்
போமாம்
ஆண்டொர் பேரின்ப முண்டென்ப ரதனையா
ரறிந்தார்
ஈண்டு கண்டதே மெய்யென்ப ருலகுளோர்
யாரும். இ

2749 பொய்ம்மை யுற்றிடு கானலைப் புனலென
விரும்பிக்
கைம்மிசைக் கொண்ட வமிழ்தினைக் கமருகுத்
தாங்கு
மெய்ம்மை யிற்சில ருண்டெனும் வீடுபே றுன்னி
யிம்மை யிற்பய னிழக்குதி நன்றுநின்

னெண்ணம். ௬ 2750 மங்கை மாரிடத்
தின்பமே யின்பமற் றவரோ
டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே யியல்புறும்
வாழ்க்கை

அங்க வர்ப்பெறு செல்வமே செல்வமற் றவர்கள்
கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர்
வறுமை. எ



2751 மறுவி லாதவாண் மதிமுக மடந்தையர்
புணர்ப்பைச்
சிறிய வின்பமென் றுரைசெய்வ ரன்னதன்
சிறப்பை
அறிவ ரேயெனி னுங்கதே பேரின்ப மாகும்
இறைவ நீயது கேட்டியேன் மொழிகுவ
லென்றான். அ

2752 மின்னார் தமக்கோ ரரசே வெறிவேங்கை வீயும்
புன்னாக வீயுங் கொணர்ந்தேன் புனைகிற்றி
யென்ன
மன்னு வுனக்குப் பலருண்டுகொன்
மாதரென்னத்
தன்னாவி யன்னான் றனைச்சீறியோர் தையல்
போனாள். கூ

திருத்தணிகைப் புராணம்

2753 ஆயுந் தொறுந்தொறு மின்பந் தருங்கல்வி
யாங்கறிவு

மாயுந் தொறுந்தொறு மின்பந் தரும்வள்ளல்
வார்கழல்கள்
தேயுந் தொறுந்தொறு மின்பந் தருஞ்சந்து
தேங்குழனிற்
றேயுந் தொறுந்தொறு நேராத வின்பஞ்
சுரந்திடுமே. ०

2754 சடம்படு மாவியு மாவியு மாயிற்சந் திக்கவிடை
யுடம்படு மெய்யொன் றுறவேண் டுவதுட
லோடுயிர்வந்
திடம்படு மாயி னிடையொன்று வேண்டுவ
தெற்றுக்கண்ணுல்
மடம்படு கண்ணிக்கு நீயே
மொழிய வலித்தியின்றே. கக

2755 வறங்கூர்ந்த வன்கைத் தலத்திமை யார்கை
வழுக்கிவந்து
நிறங்கூ ரமிழ்தம் படிற்பின்பு மாந்த
நினைவதுண்டோ
அறங்கூர் தணிகை வரைக்குவ டேய்க்கு
மலர்முலையைத்
திறங்கூர் கிளையிற் பிரித்தது நாமுன்பு
செய்தவமே. கஉ

## திருக்குற்ருலப் புராணம்

2756 மணிநகை யாரே தெய்வம் வாக்குப தேசங்
கொங்கைத்
துணைகுரு பீடம் பாதத் துணைவரு டுவதே

பூசை

அணைவது முத்தி யாசா னின்னமு மறியாய்

போலும்

கணிகையர் முகத்திற் கூறுங் காமனு கமங்க

ளென்றான். கக.

2757 எண்ணுவது மதனகலை யெழுதுவது

முலைத்தொய்யில்

உண்ணுவது வாயமுத முறங்குவது தனதடமேற்
பண்ணுசெப மந்திரமும் பாவைசெவி மந்திரமே
தண்ணளியான் குளிக்குநீர் சந்தமுலைப் பனிநீரே. கஉ

கூஅ. இன்பச் சிறப்பு

425

## உறையூர்ப் புராணம்

2758 ஆடமைத் தோளி னல்லா ரல்குலந் தடத்துண் மூழ்கிப் பாடமை கொங்கை பற்றிப் பவளவா யூறன் மாந்தி நீடமை யின்ப மெய்தார் நிறைபெருந் தவமி லாதார் காடமை வாழ்க்கை பூண்டு கழிப்பர்வாழ் நாளை வீணில். க

2759 ஊடுமா மடவார் செம்பஞ் சூட்டுதாட் சுவடு மேனி கூடுமா றேற்ற பின்னர்க் குவிமுலை குழையப் புல்லிப் பாடுசா லல்குன் மூழ்கு மதுவொன் றே யின்பம் பாரில் நீடுயி ரெவைக்கும் போதித் திடுதியிவ் வண்ண

நீயும். கக

காசி கண்டம்

2760 பானிலாக் கடவுளுங் குருவின் பன்னியை
மானமற் றின்புற மணந்த தன்மையாற்
கூன்முது கிளம்பிறை முடித்தகோ னன்றி
வேனில்வேள் பகழியார் விலக்க வல்லரே.
கஎ

2761 வெய்யகூற் றுருத்தெறி வேல்வி லக்கினும்
எய்துமூழ் வினைத்தொட ரெண்ணின் மாற்றினுந்
தையலார் முழுமதி முகத்திற் றங்கிய
மையகட் காலவேன் மாற்ற லாகுமோ.
கஅ

பிரமோத்தர காண்டம்

2762 கயங்கெழு நறுமலர் கயங்கு ருவகைப்
பயங்கெழு தேனுகர் சுரும்பின் பான்மைபோல்
வயங்கிழை மகளிரை மனந்தி ருத்தியே
முயங்கினர்க் கன்றிமற் றின்ப முற்றுமோ.
கசு 2763 பெண்ண லத்தினைப் பெருதவர் மகவினைப் பெருதார்
பெண்ண லத்தினைப் பெற்றவ ரேமகப் பெற்ருர்
பெண்ண லத்தினுன் மகவுபெற் றிருமையும் பெறுவார்
பெண்ண லத்திரு லன்றியோர் பெறும்பொரு ளுண்டோ. உo

2764 ஒத்தேறு முருவமில்லாப் பிரமமொன்று
மேயொழிய வுருவ முள்ளார்
எத்தேவ ராயினுமோர் பூங்கணையாற்
றம்போத மெல்லா நீங்கி



மத்தேறி யுடைதயிர்போன் மனஞ்சுழன்று
செயன்மறந்து மடவா ராசைப்
பித்தேறி யிதமுரைத்தப் பேதையர்க்கும்
பேதையராய்ப் பின்செல் வாரால்.

2765 வேதாவு முகம்வெளுத்து விண்டுவுமார்
பகஞ்சிவந்து விடைவல் லோனும்
பாதாதி கேசாந்தம் பாதியுடல்
கறுத்துவச்ர பாணி வேந்தும்
போதாமன் முகத்திருகண் புறத்துமோ
ராயிரங்கண் புகுதப் பெற்ற
தேதாலென் கணைதுரக்கி வீடுபடா
ரெவரெவரே யிலக்கா காரே.

2766 வேதமுத லாகியவெண் ணெண் கலையும்
வெண்கலைமான் வியந்து கேட்க
ஓதியுணர்ந் தும்பிறருக் குரைத்துமுயர்

பெரியோர்க்கு முளவி வேகங்
காதளவு மடர்ந்துகுழை கடந்துகுமிழ்
மறிந்துபொருங் கயலைச் சீறும்
பேதையர்கட் கணைபாயு மவ்வளவே
யல்லாது பின்னு முண்டோ.

உக.

திருக்கோவையார்

2767 திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண்
டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே. உச

2768 அணியு மமிழ்துமென் னாவியு மாயவன் றில்லைச்சிந்தா
மணியும்ப ராரறி யாமறை யோனடி வாழ்த்தலரிற்
பிணியு மதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே. உக

2769 வளைபயில் கீழ்கட லின்றிட மேல்கடல்
வானுகத்தின் துளைவழி நேர்கழி

கோத்தெனத் தில்லைத்தொல் லோன்
கயிலைக்

உக

உஉ

௬அ. இன்பச் சிறப்பு

427

கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக்
கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேனய வேன்றெய்வ
மிக்கனவே. உக

2770 சிந்தா மணிதெண் கடலமிர் தந்தில்லை
யானருளால் வந்தா விகழப் படுமே மடமான்
விழிமயிலே
அந்தா மரையன்ன மேனின்னை யான்பிரிந் தாற்றுவனே

சிந்தா குலமுற்றென் றேவென்னை வாட்டந்
திருத்துவதே.உஎ

2771 சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்
பலத்துமென்|சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலி னுய்ந்தவொண்
டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச்
சூழல்புக்கோ
இறைவா தடவரைத்

தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே.உஅ 2772

கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞை குஞ்சரங்
கோளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கப்
பணைமுலைக்கே
தேம்பற் றுடியிடை மான்மட நோக்கிதில்
லைச்சிவன்றாள்
ஆம்பொற் றடமலர் சூடுமென் னுற்ற

லகற்றியதே. உகூ
2773 தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம்
பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவ
னெத்துணையுங்
கலைச்சிறு திங்கண் மிலைத்தசிற் றம்பல
வன்கயிலை

மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று
மயங்கினனே. கூ0

2774 விழியாற் பிணையாம் விளங்கிய லான்மயி
லாமிழற்று
மொழியாற் கிளியா முதுவா னவர்த
முடித்தொகைகள்
கழியாக் கழற்றில்லைக் கூத்தன் கயிலைமுத்
தம்மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழி லாமெங்
குலதெய்வமே. கூக 2775 குவளைக் களத்தம் பலவன்
குரைகழல் போற்கமலத்
தவளைப் பயங்கர மாகநின் றுண்ட
வவயவத்தின்
இவளைக்கண் டிங்குநின் றங்குவந் தத்துணை
யும்பகர்ந்த
கவளக் களிற்றண்ண லேதிண்ணி யானிக்
கடலிடத்தே. கூஉ

2776 குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை
யேத்தலர்
போல்
வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றென்
கண்மணிபோன்
றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த

அருநா ணளிய வழல்சேர் மெழுகொத்
தழிகின்றதே. கூரு 2777 நீங்கரும் பொற்கழற்
சிற்றம் பலவர் நெடுவிசும்பும் வாங்கிருந்
தெண்கடல் வையமு மெய்தினும் யான்மறவேன் ,,



தீங்கரும் பும்மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்துசெப்புங்
கோங்கரும் புந்தொலைத் தென்னையு மாட்கொண்ட
கொங்கைகளே. கூச

2778 உள்ளப் படுவன வுள்ளி யுரைத்தக் கவர்க்குரைத்து
மெள்ளப் படிறு துணிதுணி யேயுலிது வேண்டுவல்யான்
கள்ளப் படிறர்க் கருளா வரன்றில்லை காணலர் போற்
கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே. கூ௫

2779 ஓங்கு மொருவிட முண்டம் பலத்தும்ப ருய்யவன்று
தாங்கு மொருவன் றடவரை வாய்த்தழங் கும்மருவி
வீங்குஞ் சுனைப்புனல் வீழ்ந்தன் றழுங்கப் பிடித்தெடுத்து

வாங்கு மவர்க்கறி யேன்சிறி யேன்சொல்லும்
வாசகமே. கக

2780 சிலைமலி வாணுத லெங்கைய தாக
மெனச்செழும்பூண்
மலைமலி மார்பி லுதைப்பத்தந் தான்றலை
மன்னர்தில்லை
உலைமலி வேற்படை யூரனிற் கள்வரி
லென்னவுள்ளிக்
கலைமலி காரிகை கண்முத்த மாலை
கலுழ்ந்தனவே. கஎ

2781 ஆறூர் சடைமுடி யம்பலத் தண்டரண்
டம்பெறினு
மாறூர் மழவிடை யாய்கண் டிலம்வண்
கதிர்வெதுப்பு
நீறூர் கொடுநெறி சென்றிச் செறிமென்
முலைநெருங்கச்
சீறூர் மரையத ளிற்றங்கு கங்குற் சிறுதுயிலே.
கஅ

2782 ஐயுற வாய்நம் மகன்கடைக் கண்டுவண்
டேருருட்டு
மையுறு வாட்கண் மழவைத் தழுவமற்
றுன்மகனே
மெய்யுற வாமிதுன் னில்லே வருகென
வெள்கிச்சென்றாள்
கையுறு மான்மறி யோன்புலி யூரன்ன
காரிகையே. கக

சீகாழிக் கோவை

2783 சமையம் விசேட நிருவாண மென்னநஞ் சண்பைப்பிரான்
அமைய வுரைத்த தறிந்தன நீதனி யாகுவதே
சமையநின் னங்கை தொடலே விசேடந் தரித்தகலெ
அமயை நெகிழ்ப்ப ததுவேநிர் வாணம தாகுமென்றே. ௬௦

அசதிக் கோவை

2784 நாப்பா வலர்புக ழைவே லசதி நறுங்கிரியிற்
கோப்பா மிடைச்சியர் கொங்கைக்குத் தோற்றிபக்
கோடிரண்டும்

௯அ. இன்பச் சிறப்பு

429

சீப்பாய்ப் பரணிய தாய்ச்சிமி ழாய்ச்சின்ன மோதிரமாய்க்
காப்பாய்க் கரவளை யாய்ப்பல்லக் காகிக் கடைபட்டதே. ௬௧

குலோத்துங்கன் கோவை

2785 மட்டார் குழலி கலவியி னீத்தபொன் வார்திரும்பக்

கட்டா தொருகணந் தாழ்த்தன ளேற்கவி வாணர்செம்பொற்

கொட்டார மன்ன குமார குலோத்துங்கன் கோழிவெற்பில்

எட்டா னையுநிலை கெட்டோடு முதண்ட மென்படுமே. சஉ

2786 எத்தா மரையும்பைந் தேனுக்குத் தேனல்கு மேனுமெதிர்

மொய்த்தா யிரக்கதிர் தந்திட வேண்டு முதுபுலவர்

புத்தா ரமுதங் குலோத்துங்க சோழன் பொருப்பனையாள்

ஒத்தாலு நீயன்றி யுண்டோ புணர்ப்பவ

ரொண்ணுதலே. சங

தஞ்சைவாணன் கோவை

2787 புனங்காவ லன்றிவள் பூண்டது மாண்டகை போந்ததுமான்

இனங்காவ லின்கலை யெய்யவன் ருவிக லாழிவிந்தை

தனங்காவ லன்றஞ்சை வாணன்ற ஞட்டிவர் தங்களிற்ரும்

மனங்காவல் கொண்டதெல் லாங்கண்க ளேசொல்லும்

வாய்திறந்தே. சச

## மறைசையந்தாதி

2788 சொன்னச் சிலம்பு குழைத்தவில் லான்சுரு திப்பதியான்
வன்னச் சிலம்பிக் கரசளித் தான்வெற்பின் மாணிழைகண்
மின்னச் சிலம்பு கலைநனை யாமன்மெய் வேர்வரும்பச்
சின்னச் சிலம்படி யாய்குடைந் தாயொரு தேன்சுனையே. சுஅ

## பாகவதம்

2789 வேதன் பெற்றதன் பெண்ணை விரும்பியப்
பேதை மானுருக் கொண்டு பெயர்வுழிக்
காதல் கூர்கலை யாய்த்தொடர்ந் தானெனின்
மாதர் வேட்கை மறுப்பவர் யாவரே.
சுசு

## தனிப்பாடல்

2790 மாலோதி நித்தந் தமியேன் வருந்தி வருடப்பெற்ற
காலோ நடந்தன கண்ணே திரும்பின கற்றவர்க்குப்
பூலோக முந்தரு மாவலி வாணன் பொருப்பிடத்தே

மேலோ ரிரங்குவர் கீழோரெந் நாளும்
விரோதிப்பரே. ௨எ



2791

இருகாலு மில்லை வலவனுக் கோவிங் கெழின்மணித்தேர்க்
கொருகா லொழியமற் றேர்காலு மில்லை யுயர்தரங்கக்

குருகாரும் வாரிதி யேழுடன் குன்றுக ளெட்டுஞ்சுற்றி
வருகால மென்றுகொ லன்றுகொ னீயும் வருவதுவே.

௨அ

2792

தண்டுஞ் சிவிகையுஞ் சிங்கா தனமுந் தமிழ்க்களித்த
கண்டன் புகார்வஞ்சிக் காரிகை யேகமு நீரதனில்

உண்டுண் டெனக்குறி காட்டியை வேந்தர்க் குயிரளித்த
வண்டுண் டுமிழ்ந்ததன் ரேமட வீரிந்த வையகமே.

௬௧

2793

வாகாருங் குல்லை மழவரங் கேசன் வரையிடத்தே
தோகாயுன் மேல்வைத்த மோக விகாரச் சுரந்தனக்கே
ஆகாது பச்சை யிளநீரென் றெண்ணி யகத்தடக்கித்
தாகாதிக் கத்திற்கு வெந்நீ ரளித்த
தகைமைநன்றே. ௰

2794 மேதிக் குலந்தரு பால்கயன் மாந்தும்
விரைப்பழன
மாதைக் கடவுள் சடாடவி யோமணி
வாளரவோ
ஆதித் தனிவிழி யோசெங்கை யோசெங்கை
யம்பினம்போ
போதுற்ற சேவடி யோவைய நீதந்த

பூந்தழையே. ௩க

திருக்குறள்

2795 உண்டார்க ணல்ல தடுநருக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

௩உ

2796 கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

௩௩

2797 யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்.

௩ச

2798 கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

௩௫

2799 கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

௩௬

2800 பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

௩௭

2801 தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்

தாமரைக் கண்ணா னுலகு.
௫௪

2802 அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.
௫௧

## ௩௬. கற்பனை

### கந்தபுராணம்

2803 மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந்து விஞ்சி
ஏறிய நார மீட்டு மிருங்கட லுேக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறியுய்த் தாலும்
தேறிய வுணர்வி லாதோர் செல்வழிச் செல்வ ரன்றே.
௪

2804 ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துளோ ருலகம்
எள்ளு நல்குர வெய்தலா லிழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாறொரு பயன்குறித் தேகல்போற் கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள்.
௨

2805 முன்பு திண்டிறல் வாகுவின் வாகுவின் முழக்கத்தை
அன்பி ரூடிய வமரர்க ளளவைதீர் மகிழ்வெய்திப்
பின்பு சூர்மகன் சிலையொலி கேட்டலும் பேதுற்றே
இன்ப துன்பங்க ளொருவழிக் கண்டன மிவணென்றார். க

2806 ஆன பான்மைசேர் பகழியின் படலிகை யவுணன்
சோனை வாளியாற் றுணித்திடை வீட்டியே சுரர்தஞ்
சேனை காவலற் கண்டனன் வினைத்தளை சிந்தி
ஞான நாயகத் தாளுவைக் காணுநற் றவர்போல். உ

2807 படியி லாதமர் பண்ணவன் றேர்மிசைக்
கொடிய தாய்நின்று குக்குடங் கூயது
கடிய தானவர் கங்குல் புலர்ந்திடும்
விடியல் வைகறை வேலையைக் காட்டல்போல்
. ங

2808 மாட்சியி னுலவு சேனை வடிவெலாம் விடுத்துத் தொல்லை
மாட்சியி னுயிரே தாங்கி மலைதுமென் றுன்னிப் பின்னுஞ்

சூட்சியின் வளைந்த வாபோற் சோதிவேற் குமரன் றன்பாற்
சூட்சியின் மேவிற் றம்மா தூயநுண் டுகளி னீட்டம். ௬

2809 பங்கயம் வதன மென்பார் பாசியைக் கூந்த லென்பார் – செங்கிடை யதர மென்பார்
புள்ளொலி செப்ப லென்பார் சங்கினைக் களமே யென்பார் தடாகமு மொருத்தி யல்ல மங்கையர் பலரே யென்பார் திரைகளை மணித்தூ சென்பார்



2810 தூயதன் ருகிய புனலெலா நல்கியே சூழ்ந்த தெங்கின் காயின்வந் திடுபயன் கொள்ளுவார் போற்சில காளைமார்கள் ஆயதண் டேறலை யரிவைமார் நுகருவா னருளி யன்ஞூர் வாயின்வந் தூறுமெல் லமிர்தினைக் கொள்வதற்
குள்ளம் வைத்தார். ௪

2811 மாநில மெலாந்தனை வழுத்தவரு மன்னற் கூனமுறு காலைதனி லொண்குருதி வாரி

வானமுகில் கான்றனைய மாண்டதொன் மரத்தின் மேனிதரு செய்யபல வீழின்விரி மாலை.
௬

2812 பொய்கொலை யாற்றிய பூரிய ருக்கார்

செய்குவர் நன்றி செறிந்துள ரேனுங்
கைகெழு ஞாளிக ளேகறித் துண்ட
மைகெழு தானவர் மாண்டிடும் யாக்கை.
௧௦

2813 எருத்தமே லிடிக்கும் பாக ரிசைக்குறி கொள்ளா தாகி
மருத்தினும் விசைமேற் கொண்டு வன்கரித் தண்ட நோக்கி
உருத்திடு கொடுஞ்சொற் றுய ரொறுக்கவு மொருவன் மாட்டே
கருத்துறு கணிகை நெஞ்சிற் போவதோர் கடுங்கண் வேழம்.

2814 பொற்பகல் சிகரியுட் பொருந்தி வாழ்பவர்
அற்பக னுகருமீ னவரை நுங்குமான்
முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது
பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே.
௧௨

2815 மெய்ந்நெறி யுணர்கிலார் வெறுக்கை பெற்றது
துன்னிய கிளைக்கொரு துன்ப மாதல்போல்
ஒன்னலன் விடுங்கணை யுலப்பின் றேடலால்
தன்னுறு படைகளைத் தானுங் கொன்றவே.
௧௩

திருவிளையாடற் புராணம்

2816 இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்புடிற் றாயவாய்க் களங்கம்

ஒழிந்த வாறுபோ லுவரியுண் டுவர்கெடுத் தெழிலி
பொழிந்த நீரமு தாயின புவிக்கும்வா னவர்க்கும். கசு

2817 அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்
கின்புரு வான வீச னின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி. கஎ

சுசு. கற்பனை

433
2818 ஆறு சூழ்கழிப் புலால்பொரு தசைந்துகூன் கைதை
சோறு கால்வன வரம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வாரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வாரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

2819
நட்டவர்க் கிடுக்க ணெய்த நன்றிகொன் றவர்போற் கையில்

வட்டவாய்த் தொடியுஞ் சங்கு மருங்குசூழ் கலையு நீங்க

இட்டபொற் சிலம்பிட் டாங்கே நன்றியி னிகவார் போற்கால்
ஒட்டியே கிடப்ப நின்று ருகுத்தபூங் கொம்பரன்னூர். கஎ

2820 கல்லார் கவிபோற் கலங்கிக் கலைமாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான் றுறைதோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்
தெல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள விறுத்த தன்றே. கஅ

2821

ஆயிடை யலகைத் தேரு மடைந்தவர் வெயர்வு மன்றித்
தூயநீர் வறந்த வந்தச் சுடுபுலந் தோய்ந்த காலும்

மீயுயர் மதிநி லாவும் வெய்யவாய்ச் சுடுநல் லோருந்
தீயவர் தம்மைச் சேர்ந்தாற் றீயவ ராவ ரன்றே.

2822

கக

இரக்கமில் கொடிய செல்வர் மருங்குபோ யிரப்பார் போல
உருப்பமொண் டிறைக்குங் கள்ளி நீழல்புக் கொதுங்கு வாருந்
தருக்கற நிரப்பா லெய்த்தோர் தம்மினும்
வறியர் பாற்சென்
றிரப்பர்போ லிலைதீந் துக்க மரநிழ லெய்து
வாரும். உ0

## காஞ்சிப் புராணம்

2823 ஒருவ ருக்கொரு செல்லலுற் றுலஃ
தருகு ளார்க்கு மடுப்பது திண்ணமே
கருவி மள்ளர் கதிர்க்குலை தன்னொடும்

பருமென் பூக்களும் பற்றி யரிகுவார்.
உக

2824 உடலி னுவி பிரிந்தென வூழ்வினைத்

தொடர்பு நீங்குவ தொப்பத் தொகுத்தநெற்
படலை வையினி னீங்கப் பகட்டினம்
அடைய வுந்தொடர் நீங்கி யகலுமால்.
உஉ 2825. அம்மருத வைப்பினை யடுத்தகழி
நெய்தல்
மம்மர்விட மாலமர னுக்குதவு மாற்றல்

நம்பின மெனப்பொய்மொழி நாடியுரை கைதை

சும்மைய வளக்கரொடு சூழ்ந்துறவு கொள்ளும்.

உகூ

பி. பா—28



2826 தாமுமொரு பயப்படார் பயப்படுவார்
தம்மையுந்தம் போற்செய் வார்போற்
காமரளி நுகராமற் கழிப்பூமே
லடுக்கலுறுங் கணிதே னூற்றும்
ஆமிதனை யறிந்துவெகுண் டெழுந்தென்ன
வணிவேங்கைக் குடுமி தன்னை
நாமநீள் கடல்பவளக் கரநீட்டிப்
பற்றியிடு நலமு மோர்பால்.

உச

2827 நறுமலர்ப் பங்கயங் களையு நாரியர்
கறுவொடு முள்ளரைக் காம்பு பற்றலுந்
தெறுகரங் கிழியப்புண் செய்யு மேதமக்
கிறுதிசெய் வார்க்கெவ ரிடரி ழைத்திடார்.

உரு

2828 பறிதரக் களைந்தெறி பாவை மாரையம்
மறிபுனற் குவளைகால் வளைத்துப் பாம்பெனப்

பொறிவெரு வுறச்செயும் புடைப்பின் மொய்ம்பிலாச்
சிறியருந் தம்மினுந் தீங்கி ழைப்பரே.
உ௬

2829 கொள்ளைபோய் நனிவறங் கூர்ந்த காலையும்
வள்ளியோர் விருந்தினர் வாடக் காண்பரோ
கள்ளரு மலர்வள மிழந்துங் கார்வயல்
வெள்ளன மகிழமீன் விருந்து நல்குமால்.
உஎ

2830 ஈன்றெடுத்தோர் குணமகவுக் கியையுமுறைப் படிவித்தில்
தோன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினால்
ஆன்றசெழுங் கதிர்களுமுன் றூவெள்ளை யாயெழுந்து
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால். உஅ

2831 பேதைமையி லாடவர்முன் வளைவின்றிப் பெதும்பைமையின்
மேதகச்சற் றெனவணங்கி மங்கைமையின் மிகநாணும்
மாதரைப்போற் பைங்கூழின் மன்னனெதிர் கதித்தெழுந்த
ஏதமிலாக் கதிர்முதிர்ந்து வரவரக்கீ ழிறைஞ்சுமால். உ௯

2832 உருத்திட்ப முருக்காலைத் தலைநிறீஇ யுற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
பெருக்கத்து வேண்டுமாற் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின் சுவைதேற்றும்.()

2833 கைப்படை யிழந்தவ ரெதிர்ந்தவர் கடாவு
மெய்ப்படு பெரும்படை பறித்தெதிர் விடுப்பார்

## சூசு. கற்பனை

எப்பொருளு மற்றுழியு மேதிலர்க ண
அப்பொருள்கொ ளேங்களெனு மான

2834 செந்நெறி நோக்கி யமைந்தாங் கொ
தன்னை வியந்தான் விரைந்து கெடு
மன்னிய மேரு வரையோ டிகலி வள
முன்னுள தோற்றமும் வீறு முழுது ம

நிலைப்பான மதிலிலங்கை மீசைத்தாவு
அனுமனைப்போ லின்வான் மந்த
மலைப்பானின் றலைத்தோளரி பாய்ந்த...
மீண்டெய்தும் வாழ்வு மங்கண்.

௧௧

2836 கொடும்பரவர் கழியுழக்கக் குதித்தெழு...
ளுய்ச்சியர்பாற் குடத்துள் வீழ்ந்...
கடும்பயத்தோ டலமருமற் றவர்கடை...
தயிரோதைக் கலமந் தோடி
ஒடுங்குமுயல் கைதையினு ளடங்கியா...
கடலொலிகேட் டுள்ள மாழ்குங்
கடுங்கருமத் தொடரந்தோ யாங்குறிஉ
விடாதென்னக் காட்டு மோர்பா...

2837 குடமுலைக் கெதிரென் றேதுங்
குரும்பையை வெகுண்டு மின்னா
பொடியிடி யுலக்கை மீப்போய்ப்
புடைத்தன மீளா முன்ன
முடிமிசை யுதிரத் தாக்கிச்
சிந்துமுப் புடைக்காய்த் தெங்கீ...
கிடரிடர்க் கெதிர்செய் வோரின்

வியத்தக வெங்கு மோங்கும்.

2838 வரியளி முரலா வாடா மாலைய விலைய
தரைமிசைத் தோயாத் தாள சித்திர
வரைவிலா மகளி ரின்றோர் மாணல
ஈரர்களு மெய்திச் செவ்வி பார்த்துமை

சி

ரிற்

நதும். ()

2839 விற்றிடு மல்கு றன்னை மீளவுந் தமதே
மற்றைய நாளும் விற்கும் வரைவிலார்



கற்றிலா வணிக மாக்க ளாவணக் கவினை
நோக்கிப்
பற்றுவெண் டரளக் கோவைப் பத்தியாற்
சிரிக்கு மன்னோ ()

2840 இருமைவா ணிபத்திற் கூர்த்த மதியரு மிறும்பூ
தெய்த
அருவமா மின்பந் தன்னை யிம்மியி னளவு
மேரு
துருவமாம் பொருளுக் கேற்ப நிறுத்துவிற்
றெழுக வல்ல

இருமனப் பெண்டிர் தம்முட் டருக்கிவா
ழிருக்கை யீதால். க அ

2841 செய்வினை யனைத்துந் தன்பாற் சேர்த்துவைத்
துயிர்க்குப் பின்னர்
அவ்விறை யாணை யாற்று லளித்திடு மாயை
யேபோற்
கொய்வளம் வருவ முற்றுங் கொண்டுபி
ணுய்கர் மாறப்
பௌவநீ ருலகுக்கெல்லா முதவுவ
பைம்பொன் மாடம். கக

2842
செய்ய திண்புயத் தெழிலினைக் கவர்ந்தமை தெரிந்து
வெய்ய மாந்தர்கள் வெதும்புறப் பன்முறை
தாக்க
வைய வோவென வலறுவ போலணி முழவ
மைய வேலையுஞ் சமழ்ப்புற வயின்றொறுங்
கறங்கும். உ0

2843 தேங்கு மூடலின் மாதரார் பறித்தெறி
செங்கேழ்
ஓங்கு பன்மணி யவரடி வருந்திறைந் துளைய
ஆங்கு நாடொறும் பேதுறுத் தவிர்வன
கொடித்தாத்
தாங்கள் செய்வினை தங்களுக் கேபகை
யாமே. உக

2844 காமனை முனிந்து நெடுஞ்சடை முடித்துக்
கவின்றகல் லாடை மேற்புனைந்து

யாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்தும்
ஒருத்தித னிளமுலைச் சுவடு
தோமுறக் கொண்டா ரெனச்சிறை
யிடல்போற்
சுடர்மனக் குகையுளே கம்பத்
தோமொழிப் பொருளை யடக்கியா னந்த
முறுநர்வா ழிடம்பல வுளவால்.

சஉ

•2845 மாயை காரிய வுருக்களு மெம்பிரான் வடிவம்
ஆய வேலவை யருண்மய மாகுமற் றதுபோற்
பேய னேன்பிதற் றுரையுமே கம்பர்தம்
பெருமைத்
தூய காதையுள் ளுறுதலாற் றுகளறத்
தோன்றும். சங

2846 விலகிவீ ழருவித் தாரை வேறுவே றுகவோடிக்
குலநதிப் பாவி வைப்பி னேகமாய்க்
கூடுந்தோற்றம்
அலகில்பல் வழியு மூதா ரணிமையி னொன்று
மாறும்
பலபல மதமு மீற்றி னொருவழிப் படலும்
போலும். சச

2847

முருக வேட்கிடு தூமமோம் புறமுளி யகில்சந்
துருவ வாரழற் பெய்துபுன் பயிர்விளைத் துவப்பார்

பெருவ ளந்துறந் தூர்தொறு மிடுபலி பேணும்
பொருவில் வாழ்கையார் தஞ்செயல் போன்மெனப் பொருப்பர்.

2848

ஏறு தன்னுடல் வருத்திய பகைமையெண் ணூது
தூறு பன்மணி மரமுதற் பொறையெலாந் தொலைத்த
வேறு நன்றியே கடைப்பிடித் திதைவியன் பொருப்பர்க்
கூறு நல்வளம் விளைத்திடு முயர்ந்தவர் செயல்போல். சுசு

2849 இருசு டர்ப்பெருஞ் சிலைகளி னியன்றமா ளிகைகள்
உருகு வெங்கதிர் தடவரச் சுடுகன லுமிழும்
அருகு தண்கதிர் தடவரக் குளிர்புன லளிக்கும்
மருவி னோர்குணம் பிடிபடல் வையகத் தியல்பே. சுஎ

2850 வலியன வெவற்றி னுள்ளும் வலியரென் பதற்குச் சான்று வில்கொளி மேரு வாங்கிக் குழைத்தமை விளக்க மற்றை
மெலியன வெற்றி னுள்ளு மெலியரென் பதற்குச்

சான்று

குலவுமென் முலைக்குச் சாலக் குழைந்தமை
விளக்கிற் றம்மா.

2851 பழியி னீங்கிநன் கீட்டிய பசும்பொருள் சிறிதுங்
கழிப டாதுநல் வழிப்பயன் படுவது கடுப்பக்
கொழிதி ரைச்சுவைப் பாலியின் குளிர்புனன்
முழுதும்
வழுவு றுதுகால் வழிச்சென்று வளவய
னிறைக்கும். சுக

2852 அணிமல ரழகே நோக்கி யகழியு ளிழிகின்
றோருந்
திணியுமுட் கொடுமை நோக்கிச் சேயிடை
விலகுவோருங்
கணிகையர் கோல நோக்கிக் காதலித்
தகப்பட் டோரும்
பிணியுமுட் கருத்து நோக்கி வெரீஇப்பெயர்ந்
தகல்கின் றோரும்.

தணிகைப் புராணம்

2853 குறைத்தபூங் கதிர்ச்சாலி கொடுபோந்து
களனெங்குஞ்
செறித்திதனைப் பலவாற்றாற் செலுத்தறத்தி
னுயிர்துறக்கம்
இறுப்பதுவேண் டாவிதனு னெய்துவா
மெனவுளத்தின்
அறுத்தவர்போ லுழவரெலா மைதுநெடும்

போரிடுவார். இக

2854 விண்ணறுத்து மேக்கிவர்ந்தார்
வியன்றுறக்கத் தவர்மகளிர்
அண்ணன்முலை முயக்கன்றி யறியாமை
யெதிர்நோக்கிப்
பண்ணரிய தவந்தானம் பயப்பாட்டி
ஞெடும்விளங்கும்
மண்ணகலா ரறிஞரென
வல்லியவ னுருதிழிவார். இஉ



2855 குரும்பை மென்முலை தோன்றுமுன் பாளையங்
குரூஉ கின் மிசைபோர்த்திட்
டரும்பி முன்வரு காலது நீவுவ
தழலெ னப்புறவத்து
விருப்பு முல்லை சிரிப்பநீர்ப் பழனத்து
விறந்து நெட்டிலைத் தெங்கு
பெரும்பழ மூங்கவாற் றளவினைச் சிதைத்திடும்
பிணைக்குள தொருபாங்கர். இஉ

2856 நன்பொருளி னுக்கியைய நன்றுவிளை யாடி
இன்புறவும் வேசைய ரிறைஞ்சுமடி யாருக்
கன்பினை வைக்கியைய வாரருள் சுரக்கும்
மின்புரை நதிச்சடில வித்தக னிகர்த்தார்.
இஅ

2857 வாய்வ தாகிய பொருளினை வல்விரைந்
தன்றே
வாய்வ தாகில ராக்குவான் புகுந்தழிப்
பார்போற்
காய்வ தாகிய திறத்தினாற் கதழ்ந்துதா
யிடத்து
வீவ தாக்கியுண் ணுதுபோ துவவிள
வேங்கை. ௯௭

2858 குருவி டோப்புதங் கவண்கலாற் குலைந்திரு
லினத்தோ
டுருவ வாசினி யுக்கன வசும்பின நிலத்து
மரும லர்ப்பதம் வழுக்கிவீழ்ந் தினைவர்மா
னனையார்
ஒருபொ ருட்கிடர் செயினவை மறுகணத்
துருகொல். ௯௮

2859 ஆழ்ந்த நீரல காதிக ளளித்திடப் படுவ
வாய்ந்த மாமணி யாதிய வயின்றெறு மிறைவ
தாழ்ந்த வாயினு மரியவே லுயர்ந்தவாய்த்
தகையும்
வீழ்ந்த வாயினு மெளியவேற் ருழ்ந்தவாய்
விடுமே. ௯௯

2860 தூதுணம் பறவைக டுதுண் டோவறக்
காதலந் துணையொடு கழுமிப் புல்லுவ
வேதுண வுண்ணினு மெவர்க்கும் வேள்கணை
தீர்திற மரிதெனத் தெளிப்ப போன்றன.
௱

2861 அளமரு பிறப்புக வமலர்க் குய்த்திடும்
வளமலர் கலையென வழங்கப் பட்டன
விளறருந் தகையரு மிடைந்தொ ருத்தர்பால்
தளர்வுசெய் வாரெனிற் ருழ்க்கற் பாலரே.
இக

விநாயக புராணம்

2862 மாயை காரியப் பொருள்களை யடியர்பால் வழங்கித்
தூய வான்பொரு ளெளிதுறுஞ் சுகுணரே போலத்
தீய தாம்புனற் செழுமுகிற் களித்திருங் கடலும்
பாய தீம்புன னதிகளாற் பருகின மாதோ.
சு௦

## சுசு. கற்பனை



2863 மெல்லெனத் தவழுந் தெண்ணீர் வீங்கிவா ரருவி பாய்ந்து
கல்லையுங் குழிப்பக் கல்லுட் கதுவிய தேரை பாங்கர்
ஒல்லைபாய்ந் துழலா நிற்கு முற்றகே வலத்தி னீங்கி
வல்லவ னருளா லாவி சகலத்தின் வழங்கு மாபோல். சுக

2864 எல்லார்க்கும் பயன்படுவா ரென்செயினும் பொறுப்பரெனும்
நல்லார்க ளுரைப்பொருளை நாட்டியது கதிர்ச்செந்நெல்
ஒல்லாரின் வளர்த்தவரே யொறுத்துவரிந் தெடுத்தேகி
வெல்லாத களத்திட்டு மிதித்திரும்போர் செயப்பட்டே. சுஉ

திருவானைக்காப்புராணம்

2865 கருமமே விரும்பி நாளுங் கவர்தரு முயிர்கள் பின்னர்க்
கருமநே ராகி ஞானங் கலந்தின்பம் விளைத லோடுங்
கருமமே தானும் வேண்டாக் காட்சியிற் கமழ்நீர் வேண்டாக்
கருமநேர் நோக்கி மள்ளர் கவிழ்த்தனர் மடைகற் சீத்து. சுங

2866 வல்லிதன் பாகனுர் வகுத்த வூழினை
அல்லதென் றகற்றுவா ரகிலத் தில்லென
நல்லவர் தெளிதர நண்ப கற்கணுங்
கல்லிரை தேருவ கபோத கங்களே.

சுச

2867 அருவி பற்பல திசைதொறும் விழநிமி ரடுக்கல்
பொருநர் வன்கையிற் றிருக்கிய போகுயர் கழைச்சீர்
தருவ வன்னவற் றுச்சியிற் கூத்தியர் தகைய
மருவு மஞ்ஞைக ளாலுவ மழைவர வெதிர்ந்து. சுடு

பேரூர்ப்புராணம்

2868 வரையிழி யருவி யென்ன மணிகொழி கலுழி யென்ன
விரைதரு நதிக ளென்ன வியத்தகு நீத்த மொன்றே
பரைதனக் குரிய கேள்வன் படைத்தளித் தழிப்போர் பானின்
றுரைதரு மூவ ரென்னப் படுவதொத் துரைவே றெய்தும். சுசு

2869 மனைவியை வெறுத்து மைந்தர் வளநில மனைத்து நல்கி
நினைவொடு வாக்குக் காய நித்தலுந் தம்பா லாக்கத்
தனைநிக ரெல்லா வின்பந் தருதலாற் கணிகை மாதர்
வினைநிகர் புதல்வர்த் தாழ்த்தி வீடருள் குரவர் போன்றார். சுஎ

2870 முன்னுற நடந்து முந்துந் தொழிலினை முடித்த பூணி
பின்னுற நடந்து பிந்துந் தொழிலையா முடித்தா மென்று

முன்னுறத் தோற்றஞ் சான்ற முதலினைப் பூணிக் காக்கிப்
பின்னுறத் தோற்று நெல்லைத் தமக்கெனப் பிரித்தார் மள்ளர்.



## திருக்குற்றலப் புராணம்

2871 கூறுகள் பகுத்துச் சாலி கொய்யுநாட் செய்யிற் சேல்கள்
ஊறுநீர்க் கேணி தாவு முடனறிந் துணங்குக் காவி
வேறுகண் டுவப்பர் வாழ்வு பிரியுநாட் பிரிவர் கீழோர்
வீறுநாட் கூடி வாழ்ந்து மெலியுநாண் மெலிவர் மேலோர். சுகூ

2872 வாள்வகுத்த படையிரும்பு வேர்சாயக்
கிளைத்துழுது வளர்க்குஞ் சாலி
ஆள்வகுத்த கூனிரும்பு தாள்பணிதல்
போலடியூ டரிந்த வாற்றுற்
கேள்படைத்த மனத்தூயோர் பகைமைபா
ராட்டுகினுங் கேண்மை நீங்கார்
தாள்பிடித்து முடிவணங்கித் தனதுபா
ராட்டுகினுந் தடிவார் தெவ்வர்.
எ0

## திருப்பெருந்துறைப் புராணம்

2873 புனைம ணித்தொகை வரன்றின போரிடைப்
போகட்

டினைவி லாத்தினை வளநனி போற்றுவ ரெயினர்
நினைத ருந்தரந் தெரிதரார் பாற்படி னிகரில்
அனைய தாமுயர் பிழிபிழி புயர்பென லாமால்.

எக

2874 பேருற வுற்ற போதுஞ் சிறுபகை யேனும் பேணர்
சீருற வுயர்ந்தோ ரல்லார் செத்தவ ரென்றன் மெய்யே
ஒருமா லுந்தி யாயு முழத்திய ருறுப்பு நள்ளாச் சாருமோர்
பகையான் மாண்டு சாய்ந்தவம் புயங்க ளெல்லாம்.

சேது புராணம்

2875 கொய்யலர் குளிர்சுனை குளித்து நாடொறுஞ்
செய்யவெங் கதிரெனத் திரிவன் சூரியன்
துய்யநீ ரவருடன் றொடர்புண் டாயினும்
வெய்யவர் விடுவரோ மிக்க தன்மையே.

எகூ

2876 வந்துதோய் முகிறழீஇ மரீஇய தீஞ்சுவை

உந்திநீர் கடல்புகுந் துவர்ப டைத்தன
முந்திமே லவர்தொடர் முருக்கி மீளவுந்
தந்தொட ருறுநரத் தவறிற் றீர்வரோ.

எஅ

சா சு. கற்பனை

அரிச்சந்திர சரிதை

2877 சுரப்புறு சிறைப்புன லெனக்கருதி
வற்றிய துவட்சி யதனால்
நிரப்புறு தவிப்பினை யொழித்திட
மனத்தினி‍னினைத்து மையெலாம்
இரப்பவரை நித்தலு நடத்தியுமொ
ரற்பமு மிரக்க மிலர்பால்
பரப்பவரை யொத்தன கரப்பவரை
யொத்தன பசாச ரதமே.

2878 துஞ்ச வந்தநாட் டேர்ழரை விட்டய றுறக்கும்
வஞ்ச நெஞ்சர்போ லலாதுவண் டணிகுழன் மாதே
அஞ்ச லாதுநின் றவருட னிறந்தநல் லவர்போற்
கஞ்ச நெல்லுட னறுப்புண்டு கிடப்பன காணாய். எக

## பிரபுலிங்கலீலை

2879 நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்பு முறையிற் றிரும்புமான்
மகிழ்ந்தி டங்கதிர் வீரஃமழுவலந்
தகுந்த குந்தகு மென்று தயங்குற.
எஎ

2880 தாழ்ந்தோ ருயர்வ ரென்றுமிக
வுயர்ந்தோர் தாழ்வ ரென்றுமறஞ்
சூழ்ந்தோ ருரைக்கு முரைகண்டா
மதில்சூழ்கிடந்த தொல்லகழி
தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமே
னின்றன் றுயர்ந்து தடவரையைச்
சூழ்ந்தோர் வரையி னுதிப்பவன்றுட்
கீழ்நின்றது போய்ச் சூழெயிலே.
எஅ

2881 ஈச னளித்த வொருகோட்டி யானைக் கியாங்க ளிணையாயின்

வாச வனைத்தாங் கீரிருகோட் டியானை யெம்மை மானுமெனும்

பாச வுரற்கால் யானையொடு பாண்டி லிழுக்கும் பகடுயரில்

தேசி னிரதப் பரிசிறந்த வென்னும் பரிக டெருவகலா. எக

2882 விலைவ ரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு

கலைய ணிந்தொரு தலைமுலை மேலலங் கரித்தாள்

முலையொ டுந்துகில் கண்டநாண் முதற்றொடர்ந் தன்றோ

இலக றுங்கலை வல்லவர் க்டபடா மென்றல். அ



2883 தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார

மன்னி யங்கது நிகரற வாழ்மனை வாய்தல்

முன்னி றந்திடு வேனென ஞான்றுகொண்
முறைமை
என்ன வெண்மணி மூக்கணி யொருத்திநின்
றிட்டாள். அக

2884 தாய்வா யடைந்து மிகுந்தலையை மோதி
மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தா ளிருந்து
வாழுங்
கடிமனையை
நீவா னெழுத்து வந்தழிப்பா யென்று லந்தோ
நிலையின்றித்
தேய்வாய் நின்னே டியைபில்லா வென்னை
யென்ன
செய்யாயே. அஉ

2885 தக்கன் மகத்தி லொருஞான்று தாளிற் படுநீ
தலையேறி
மிக்க முனிவர் மந்திரநீ ரிறைப்ப வின்னு
மீண்டிலாய்
நக்கன் பவள வாய்ப்பட்டுக் களத்தே
யிறங்குநஞ்சு நினை
ஒக்கு மென்ப தறியாமை யன்றே
வொளிர்வெண் மதியமே.

2886 உயிர்த்த பொழுதே நின்குரல்கே
ளாமுன் னேடிற் றீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட்

டலுமே நடுங்கத் துறந்ததால்
பயத்த மலர்ப்பூங் காவகத்தி
விருந்து பல்காற் கூவினுற்
செயிர்த்து நின்னைக் குயிலே நான்
வெறுத்தல் செப்ப வேண்டுமோ.
அச

2887 மால ருந்திய போதுதன் வயிற்றிடை யிராதிப்
பாலை யன்றுட னுமிழ்ந்தில னுகின்மெய்
பதைத்து
வேலை யின்றலை வீழ்ந்தத னுலுமுண்
வெண்ணெ
யாலும் வெந்தழ றணிந்துயி ருய்குவ னலனே.

அகு

சீவக சிந்தாமணி

2888 சொல்லருஞ் சூற்பசும் பாம்பின்
றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.
அசு

இராமாயணம்
2889 தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு

மவர் தம்

மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே

## சுசு. கற்பனை

443

உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி இருண்ட கல்லையுந் தன்னிற மாக்கிய விரதம். அஎ

2890 புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற் ருகி

அவியகத் துறைக டாங்கி யைந்திணை நெறிய ளாவிச்

சவியுறத் தெளிந்து தண்ணென் ெறாழுக்கமுந் தழுவிச் சான்ருேர்

கவியெனத் தெளிந்த கோதா வரியினை வீரர் கண்டார். அஅ

நளவெண்பா

2891 கற்பின் மகளிர்பா னின்றுந் தமைக்கவட்டின்

விற்கு மகளிர்பான் மீண்டார்போல் - நிற்கும்

நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தா டிரு.

அசு

2892 போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த வடுபாலின்—தோயல்
கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

கூ0

2893 போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுக்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று.

கூக

அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்

2894 சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச்

சிறைசெய்த வாறறிந்தாற்
செயிர்த்துநந் திருமனைவி மகன்மருகி தமையெலாஞ்
சிறைசெய்யு மென்றறிந்தும்
ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையா லர்ச்சுனற்

கிறுதிநாள் பயவாமையே,
எண்ணிமுன் பரிதியைப் பரிதியாற்
றடைசெய்த வேந்தற்பி ரான்புக்க



பேர்கொண்ட மேனிலச் சோபன மிசையேறு
பேதைமார் முகநோக்கிநம்
பேரரசு கொள்ளவரு மதிபோலு மிதுவெனுப்
பெரிதுமேக் குற்றவர்கடங்
கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளங்
கவலாது களிகூர்ந்துதண்
கலைமதியம் வைகுபொழில் சூழ்குளத் தூர்வருங்
கடவுட் பிராட்டிதனையே.

கஉ

திருத்தொண்டர் புராணம்

2895 மாவின்உந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினுல் பல்லுயிர் தருதன் மாண்பினுல்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையால்
போலும்நான் முகனையும் பொன்னி மாநதி.

கக

2896 பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர் தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். கூ௲

திருவாரூர்த் தியாகராச லீலை

2897 தங்கு பாநிலங் குழைதர விடையருத் தாரை
யெங்கு மாகவுட் குழையுமெய் யடியவர்க் கென்றுந்
தெங்கு மாவளை செழுங்கம லைப்பதித் தியாகர்
பொங்கு மாரருள் பொழிதல்போற் பெருமழை பொழிந்த. கூ௲

2898 மற்படு வாரி சூழ்ந்த மண்ணகத் தான்ற வானம்
பற்பல விழுது விட்டாற் போலவும் பளிக்குக் கோல்கள்
பொற்புற நிரைத்து விட்டாற் போலவும் இடைய றாது
சொற்படு தாரை தூங்கச் சொரிந்தன மழைமஞ் செல்லாம்.

2899 நாரரு ளடக்கஞ் சீலம் ஞானமுற் றவர்க ளம்மான்
பேருரருள் வெள்ள மூழ்கிப் பிறவிவெப்

பொழிந்தல் போல
வீரருள் வீரர் தொட்ட விரிகட லுடுத்த
திண்பார்
காரருள் வெள்ள மூழ்கிக் கழித்தது வேனில்
வெப்பம். கஎ

2900 இழிதக விறைச்சி யெச்சில் எம்பிரா னுண்ண
நல்கி
அழிவில்பே ரின்பந் துய்த்த அன்பர்கண்
ணப்ப ரேபோல்
இழிதக வுவர்நீ ரெச்சில் எழிலிக ளுண்ண
நல்கி
அழிவிலின் சுவைய நன்னீர் அருந்திய தாழி
மாதோ, கஅ

சுகூ. கற்பனை

445

2901 மின்னிய பொருள்க ளெல்லாம் வேண்டுநர்
கொள்ள வீசி
மன்னிய சீர்த்திப் போர்வை வள்ளல்போர்த்
தென்ன நாளும்
பின்னிய திரையிற் கொண்ட பெருகுமின்
சுவைநீர் முற்றும்
பன்னிய புவிக்கு வீசிப் பயோதரம் விளர்த்த
மாதோ. கக

2902 நிலவு சேவொன்று பூத்தகொன் றையினடி நிற்பக்
குலவு காசையொன் றதற்கெதிர் வளைந்துறல் குறிப்பின்
உலவு பெற்றமேற் சிவபிரான் காட்சிதந் துதவக்
கலவு மாயவ னுங்கெதிர் வணங்குதல் கடுக்கும்.
௯00

2903 சுரும்புசெறி கோகனக மலர்நடுவண்
அறனின்றுந் துள்ளி வீழ்ந்த
பருங்கயல்பைந் தருக்கிளையிற் குருகெடுத்துத்
தாதகலப் படர்நீர் தோய்த்தல்
இருந்தைசெறி யழனடுவ ணியைத்தவிர

சதக்கட்டி யிணைப்பொற் கொல்லன்
திருந்தியகைக் குறடெடுத்து வெப்பமற
நீர்தோய்க்குந் திறகே மானும்.
௯0௧

2904 ஒருமனை யுதித்த மாதர் உற்றபன் மனைக டோறும்
மருவினர் வாழ்தல் போல வயலொன்றி னுதித்த பைங்கூழ்
பொருவில்பைங் கழனி தோறும் போய்ப்பதிந் தினிது வாழப்
பருவலி மள்ளர் நாறு பறித்தனர் நடுதல் செய்வார். ௯0௨

2905 விஞ்சு மாமலை மீது விழுங்கிருள்
மஞ்சு கான்றிடு மாலி மறித் தெழல்
எஞ்ச லின்றியவ் வெற்பி னிளங்கிளி
அஞ்சொ லார்கழங் காடுவ போன்றவே.

௧0௫

2906 துன்று மைப்புயல் சோலையி னம்மலை
முன்றின் முற்றவு நீர்கொடு மூடலால்
மன்றில் நித்தம் நடம்புரி வானவன்
குன்ற மொத்தது செம்பொற் குவடரோ.

௧0௬

2907 தேக்ககில் ஆர நாகஞ் சிந்துரந் திலகந் தீப
மாக்கத மதமா மற்றும் வாரிநேர் வருத லாலே
மேக்குற நிமிரக் குன்றம் வேலைவாய் மைந்தற் காண்பான்
ஆக்கமீக் கொள்ளச் சேறல் அன்னவவ் வருவி மன்னோ.

2908 பற்பல பொருளை யெங்கும் பறித்துடன் பறித்த வெல்லாம்
அற்பக லாது சிந்தித் தவர்தமக் களித்த லாலே
பொற்பில கொடியோர் தம்மிற் போந்தது போந்த தேனுங்
கற்பக வனமு மாகி நடந்தது கன்னி யாறே. ௧0௬

## பாகவதம்

2909 குளிர்கொளுங் கொண்டல் முழவினும் இசையெழக் குமுறும்
கிளிகள் பண்பல மிழற்றிடக் கின்னர ரெனவும்
களிகள் பாடனன் மயூரங்க ளாடுவ கண்டே
ஒளிகொள் நித்திலம் உதவின வலம்புரி யுமிழ்ந்தே. ௧0௭

2910 சொன்ன நாள்தனில் மகிழ்நன்வந் திலனெனச் சோர்ந்தே
என்ன காரண மெனப்பரு வரலுட னெழுந் தாண்
டுன்னு தோறுங்கோ விணையினீ ருகுத்தமா தொத்த
கன்னல் கண்டொறு முத்தினை யுதிர்த்தெழுங் காட்சி. ௧0௮

# ௭௦. மெய்யுணர்தல்

## தேவாரம்

2911 எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை
சிறுவிரகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டங் கொண்டடியேன்
என்செய் கேனே. ௯0௯

## திருமந்திரம்

2912 திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே.
௯௧0

2913 எண்ணு யிரத்தாண்டு யோக மிருக்கினும்
கண்ணு ரமுதனைக் கண்டறி வாரில்லை
உண்ணுடி யுள்ளே யொளிபெற நோக்கில்
கண்ணாடி போலே கலந்திருந் தானே.
௯௧௧

## ஆனந்தத் திரட்டு

2914 கருவிடை அழுந்தும் துன்பமும் நிலத்தின்
கண்ணுறின் கொடியவெந் நோயால்

மருவுவெந் துயரும் நரைதிரை யெய்தி
வருந்திடுந் துன்பமுங் கூற்ருல்
உருவினை ஒருவும் துன்பமும் மீட்டும்
கருக்குழி ஒன்றுறு துயரும்
வெருவர எண்ணி இன்பவீ டதனை
மேவநன் குணர்தலே வேண்டும்.
ககஉ

சூளாமணி

2915. மணிமலர்ந் துமிழ்ஒளி வனப்பும் சந்தனத்
துணிமலர்ந் துமிழ்தரும் தண்மைத்
தோற்றமும்
நணிமலர் நாற்றமும் என்ன அன்னதால்
அணிவரு சிவகதி யாவ தின்பமே.
ககந



சீவக சிந்தாமணி

2916

உள்பொரு ளிதுவென வுணர்தல் ஞானமாம்
தெள்ளிதில் அப்பொருள் தெளிதல் காட்சியாம்
விள்வற இருமையும் விளங்கத் தன்னுளே
ஒள்ளிதின் தரித்தலே ஒழுக்கம் என்பவே. கக௬

## கூர்ம புராணம்

2917 காழ்த்தஜம் புலனுஞ் செற்றுக் கரணங்கள் அடக்கி நாளும்
ஊழ்த்தமென் சருகு மாந்தி யோகினில் உறங்கு கின்றார்
சூழ்த்துநான் முகனும் விண்ணோர் தொகுதியுஞ் சுருதி நான்கும்
வாழ்த்துதற் கரிய முத்தி வீட்டின்பம் மருவி
வாழ்வார். கக௫

## சிதம்பரச் செய்யுட்கோவை

2918 நெஞ்சகங் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரணம் அஞ்சலித் திறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற்
பொருட்டே. கக௬

## திருக்குறள்

2919 பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு.

கக௭

2920 ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

கக௮

2921 எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.
கககூ.

2922 கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.
கஉ0.

2923 ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டாப் பிறப்பு.
கஉக.

2924 பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு.
கஉஉ

பன்னூல் பாடற்றிரட்டு
முற்றும்.
உ
திருச்சிற்றம்பலம்

# பன்னூல்
# பாடற்றிரட்டு

(1) பரிதியானை - கதிரவனை. பிரிதியானை - பிரியமுடையனை. பிரீதி என்ற வடமொழி குறுகி பிரிதி என நின்று ஆன் விகுதி பெற்று ஐ உருபேற்று நின்றதெனக் கொள்க. சுருதியானை - மறைமுடிவி லுள்ளவனை. கண்டீர் - அசை. தொழற்பாலது வணங்கும் பான்மை யுடையது. இவ்வுடம்பு என்றுவது இம்மக்கட் பிறப்பு என்றுவது எழுவாய் வருவித்துப் பொருத்துக. பல்வேறு சமயங்கள் கருதியானை - பலவேறு சமயங்களாலும் பலவகைக் கடவுளர்களாக எண்ணப் பெறுபவனை.

(2) நியம நெறிகளை ஓதியானை - மக்கட்குரிய நல்லொழுக்க வழிகளை எடுத்துரைத்தவனை. சோதியானை - ஒளிவடிவமானவனை.

(3) வளியாகி - காற்றாகி. யான் எனது என்றவரவரைக் கூத்து ஆட்டுவான் ஆகி - நான் என்றும் எனது என்றும் நினைக்கின்ற அவர்களைக் கூத்தாடுமாறு செய்பவனாகி. (நான் என்பது அகங்காரம், எனது என்பது மமகாரம்) உலகவாழ்க்கையில் மயங்கியாடியலைந்து திரிவதற்கு அகங்கார மமகாரங்களே காரணமென்பது கருத்து.

(4) உயர்வு அற - உயர்வு நீங்க. உயர்நலம் - உயர்ந்து நிற்கும் நிலைமை. இதற்குமேல் உயர்ந்தநிலை யொன்றும் இன்று என்று தோன்றும்படி இறைவன் நிற்கின்றான் என்பது கருத்து. மயர்வு. மயக்கம். மதி நலம் - நல்லறிவு. என்மனனே அடிதொழுது எழு என்று கொண்டு கூட்டுக.

(5) திருவந்த - செல்வம் பொருந்திய. புவனம் - பூமி. பெற்றி - தன்மை; இயல்பு. அருவம் தனையும் - அருவத்தையும். தன் - சாரியை.

(6) பூ மலர் - அழகியபூ; பூத்த மலர். புனிதன் - தூயவன் (நான்முகன்). காமரு - அழகிய. பூங்கழல்கள் - பூப்போன்ற திருவடிகள்.

(7) ஒருப்படும் - ஒன்றாகிய. அறத்தினாலே பொருள்: பொருளினாலே இன்பம். இம்மூன்றும் வந்து பயன்தரும். அதனைக் கேண்மோ - அதற்குரிய செயலைக்கேட்பாய். வணங்கல் வேண்டும் அதுதான் எனக்கூட்டுக.

(8) நோக்கு - கண். "கண்ணின்றிக் காண்பதும், கையின்றிக் கொடுப்பதும் நாவின்றிச் சுவையறிவதும், காலின்றி நடப்பதும், மூக்கின்றி மணங்கவர்வதும் செவியின்றிக் கேட்பதும் செய்ய வியலாததுபோல வாக்கு மனத்திற்கும் எட்டாத பொருளாகிய நினது தாள்" என விளக்கம் கொள்க.

(9) நீக்கல் - அழித்தல். அலகு இலா விளையாட்டு - கணக்கற்ற திருவிளையாடல்கள். சரண் - சரணம்; அடைக்கலம். நாங்கள் அன்னவர்க்கே சரண் என்று கூட்டுக.

(10) சிற்குணத்தர் - ஞானமாகிய குணத்தையுடையவர். எற்கு- எனக்கு. உணர்த்தரிது - அறிவிக்க முடியாது. மூன்று: சாத்துவிகம் இராசதம் தாமதம். இவற்றில் முற்குணத்தவர் என்க. சாத்துவிகமே முதன்மையுடையது ஆதலின் அக்குணத்தவர் இறைவர் என்க.

(11) வென்றான் சென்றான் நின்றான் ஆகிய அவனடிக்கீழ்ப் பணிந்தவரே வினைநீங்கி நின்றவராவர் என்க. வினையின் தொகையாகியவற்றை வென்றான் எனவும் உணர்வு - அறிவு, அறிவினீங்காது முற்றும் சென்றான் எனவும் ஒளிமூர்த்தி - ஒளிவடிவமானவன்.

(12) மூவா உலகம் முதலா உலகம் எனக் கூட்டுக. மூவா - கெடாத. முதல் ஆ - முதன்மையாகிய. தாவாத - கெடாத. ஓவாது - நீங்காமல். என்ப - என்பார் (அறிஞர்). சேர்தும் - (நாம்) சேர்வோம்.

(13) தாகபோகம் - தாகம் போன்ற போகம்; தாகமாகிய போகம் தாகம் - நீர்வேட்கை; வேட்கை. போகம் - காமவின்பம். சோகவாரி - துன்பக்கடல். போக - நீங்கும் பொருட்டு.

(15) மூவிலை நெடுவேல் - சூலம். மூன்றுபிளவாய் இலைவடிவமான நெடிய வேல் அது. வானவன் - தேவன். இது முன்னின்ற அடைமொழியாற் சிவனைக் குறித்தது. இமயக்கிழவி - இமயமலைக்குரியவள். எனவே அம்மலையிற் பிறந்த உமையை யுணர்த்தியது. கதுப்பு - கூந்தல். பிறை கதுப்பிற்சூடி என்றது திருவும் பிறையும் என்ற தலையணியை யணிந்து எனப் பொருள்பட்டது. ஆளி - சிங்கம். தானவன் - தாருகன் அல்லது மகிடாசுரன் என்க. உலகு மெல்லடித் திருநிழல் காக்க - இவ்வுலகினை குமரியின் மெல்லடியின் திருநிழல் காக்க. வாழி - அசை.

(16) கொடியார் - அசுரர்; வித்யுந் மாலி முதலிய மூவர். கொடி ஆர் மதில் மூன்று - கொடிகள் கட்டப்பட்ட மூன்று கோட்டை; வெள்ளி, இரும்பு பொன்னுற் செய்யப்பட்டவை. படியார் - தன்மையுடையார். நால்வாய் யானை - நான்ற (தொங்கிய) வாயையுடையது. கடி ஆர் உரியார் - புதுமை பொருந்திய தோலுடையுடுத்தவர். ஏமையாளவுரியார் எனவும், ஓதற்கு அரியார் எனவும் மாறிக் கூட்டுக. களம் கரியார் - கண்டம் கருமைநிறமானவர்; நீலகண்டர் என்க.

(17) இஞ்சி - கோட்டை; மதில். மூன்று - வெள்ளி இரும்பு பொன்னுற் கட்டப்பட்டவை. கூற்றுவனை உலகின்புற காற்றொழிலால் உதைத்து எனவும், வில் மதனை உருவமாள நயனத்தால் எரித்து எனவும் இம்முறையே அடுத்து நின்ற அரக்கர்கோ. கூன்நிலவு, குஞ்சம், இஞ்சி மூன்று. இவற்றையும் பொருத்திப் பொருள் கொள்க. எம்மையுடைய கோ அவன் என்க. எம்மையுடைமையாகக் கொண்டதலைவன் அவன் என்பது பொருள்.



(18) பணிமின்கள் - வணங்குங்கள். கள்; விகுதிமேல் விகுதியாக நின்றது. பாதம், நாமங்கள் சிற்றம் பொய்ம்மை இவற்றை முன் வைத்து பாதம் பணிமின்கள் என்பதுபோலக் கூட்டுக. பாரகத்தீர் - பூமியில் வாழும் மக்களே! இது விளி. நீவிர் என வருவித்துப் பொருத்துக. கணிமின் - கணிப்பீர்; தவம்புகுநாள் இன்னது எனக் கணக்கிட்டு வாழுங்கள் என்பது. மணி - மாணிக்கம். மின்கள்போல் ஒளிர் - மின்னலைப்போல ஒளிவீசுகின்ற (சிராப்பள்ளிமலை) வள்ளல் - சிவபெருமான். ஏனல் - தினை. மாதர் - குறத்தியர். கைவிசைத்த மணி - கையினால் கவணில் வைத்தெறியப்பட்ட மாணிக்கக் கல்.

(19) மாத்திரை - அளவு. காத்திரவாதனை - உடலின் துன்பம். இன்பம் துன்பங்கள் ஆகிய மாற்றம் வாதனையெனப்படும்.

(20) பஞ்சபூதம் : நிலம், நீர், தீ, வளி, வான் இவை. புலன் - அறிவு. இது கருவியைக் குறித்தது. மெய், வாய், கண், மூக்கு, செவி இவை. அறியுங்கருவி என்க. பயன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். பயன்நுகரும் ஞாதம். பயனைத் துய்க்கும் அறிவுடையதும் (உயிர்.) ஞாதம் - அறியப்பட்டது.

(21) அகரவுயிர் எவ்வாறு தனியே ஓர் எழுத்தாக முதலில் நின்று மற்றை எழுத்துக்களில் ஒலியாகி மறைந்து நிற்பதுபோல் இறைவன் எல்லாப்பொருள்களிலும் மறைந்து நிற்கின்றான். தனியாகவும் நிற்கின்றான் என்ற கருத்தை விளக்கும் இப்பாடல். பசுபதியான பொருள். பசு - உயிர். பதி - இறைவன். இவ்விரண்டும் ஒன்றாய் நின்ற பொருள் என்று கொள்க.

(34) எண்குணம் - எட்டுக் குணம்; அவை தன்வயம், தூய வுடம்பு, இயற்கையறிவு, முற்றறிவு, பாசங்களை நீங்கல், பேரருள், வரம்பி லாற்றல், வரம்பில் இன்பம். என்னணம் - எவ்வாறு, எவ்விதம். அண்முகோ - அணுகுவேனோ. உன்னும் ஆறு-நினைக்கும் வழி. பன்னும் ஆறு - துதிக்கும் விதம். நின்னருள் பூத்துக் காத்தல் வேண்டும் எனக் கூட்டுக. அருள் பூத்து - (என்மேல்) அருளுடையவனாகி.

(35) அண்டக்குழு-விண்ணிலுள்ள உருண்டைகளின் கூட்டங்கள். குழுவும் வெளியும், உயிர்களும் பண்டமும் சூழும் மகிமை எனப் பொருத்துக. கரி - சான்று எதற்கோ - எதற்காக - வேண்டுவதின்று. அவ்வுண்மையை எடுத்தெடுத்துச் சொல்லும் எனக் கூட்டுக.

(36) திண்பு ஆர்க்கும் ஈசன்-வலிமை நிறைந்த கடவுளின். திறம்-திறமை: வலிமை. இவற்றையெல்லாம் செய்தது எக்கை யெனவே கருதிப் பார்க்க. அவ்வாறு பார்க்கின் இறைவன் கையெனவே தோன்றும் என்பது கருத்து.

(37) தண் அளிசாகரன் - குளிர்ந்த அருட்கடலானவன். தந்தையனே - பெற்ற தந்தைதான் அவன்; மண் அளித்தான் மரம் அளித்தான் ஆதலின் என்று பொருத்துக.

(38) செவ்வே-செம்மையாக; ஒழுங்காக.
சித்து - ஞானம், அறிவு.
கவ்வைக்கடல் - துன்பமாகிய கடல். அகிலம் -

உலகம் ; இஃது உலகத்துள்ள பல பொருள்களையும் உணர்த்தியது.



(39) மெய் நவில் பொழுது - உண்மையை யாய்ந்து சொல்லும் போது. தெய்வம் குடிகொண்டது கோவிலில் மட்டுமா? கொடி செடி பூவிலும் குடிகொண்டதுண்டே என்று பின்னுங் உண்டு + ஏ: ஏகாரம் அசையாய் நின்றது. அகப்பூ

கூட்டிக் கொள்க
- மனமாகிய மலர்.
பொருப்பு - மலை, கா - சோலை.

(40) சீர்த்த - புகழ் பெற்ற, சிறந்த. நேயம் - அன்பு. குறியாது- நினையாமல், உலகில் உள்ள எவர்க்கும் வேண்டிய பொருளை அளிக் கின்றான் இறைவன் என்பது கருத்து.

(42) வெல்லரிய - வெல்ல முடியாத ; முடியாத. செல்லரிய - போக முடியாத.

கடக்க முடியாது ; நீக்க
தொல்லரிய-பழைமையான.
சொல்லரிய - சொல்ல முடியாத. சுயஞ்சோதி - தானே தோன்றும் ஒளி : இது கடவுளை யுணர்த்தியது.
துணையானால் வென்றிடலாம் எனக் கூட்டுக

(43) வழுத்தும் - துதிக்கின்ற. கற்றால் எழுத்தளவும் அறியார் - படித்தால் படித்த எழுத்துக்களை யன்றி மற்றொன்றையும் அறியாதவர்; இவர் மூடர் என்பது குறிப்பு.

## உ. வான் சிறப்பு

(49) நாமம் நீர் வேலி உலகு சுற்றிய உலகம். அளி - அருள்.
- அச்சந்தரும் கடல் நீராகிய வேலி
சுரத்தலான் - பெருக்கிக் கொடுப்பதால்.

(50) வானம் - மழை. பரவுதூஉம் - வணங்குவோம்; வாழ்த்துவோம். ஞாலக்கு - பூமிக்கு; உலகத்திற்கு. பானம் - குடிப்பதற்குரிய நீர்.

(51) மாதிரம் - திசைகள். பயன் எதிர்பு நந்த - காய்கனி முதலிய பயனை நோக்கிப் பெருக. நோக்கு - அழகு.

(52) வானம் - முகில். வசிவு - மழை. ஆறுது - குறையாமல். பெட்டாங்கு - விரும்பியபடி. வியன்கண் - அகன்ற இடமுள்ள பூமி.

(53) விண்டு - மலை, வானம். சேர்பு - சேர்ந்து.

(54) தெய்வ வாரி - தெய்வத் தன்மையுடைய முகில். திருமான் - திருமகள்; திருவாகிய மான் போன்றவள். மால் - திருமால். உரம் - மார்பு. உருமானும் - உருவத்தை யொக்கும். தெய்வவாதி திருமானின் உருமானும் எனக் கூட்டுக. பிறந்து, மேலாகி, தோன்றி, வாழ்வருளி ஆக்கம் மது ஆம் இயற்கை யாலே மானும் என்க. இது செம் மொழிச் சிலேடை. பூமேல் ஆகி என்பதைத் திருமகளுக்குச் "செந்தாமரைப் பூவின் மேலமர்ந்து" எனவும் மேகத்திற்குப் பூமியின்மேல் மழையாக விழுந்து எனவும் பொருள் கொள்க. சங்கமாகிதி......தோன்றி என்பது மேகத்திற்குப் பொருந்தும்போது இவைகள் தங்கும் விண்ணில் மேகந் தோன்றுவதைக் கூறுக.

(55) அமலன் - மல மற்றவன் (இறைவன்) (உலகில்) அருமுதம் பொருள் சிறவுதற்கு எனக் கூட்டுக உஞற்றல் - செய்தல்.

(56) கூற்று உலகின் விளிநோக்கி இன்புறூஉம் எனக் கூட்டுக. கூற்று - இயமன். உலகின் விளி - உலகத்தார் இறப்பது. இன்புறூஉம் - இன்பமடைவான்.

## ௩. நீத்தார் பெருமை

(63) மாதவன் - திருமால். அயன் - நான்முகன். அலரி - கதிரவன். சசி - திங்கள். குரு - வியாழன். அமரர்கோ ஆம் அவன் - இந்திரன். தேவர்கட்கு அரசனாகிய அவன் என்பது சொற்பொருள். குகன் - முருகன். அரவு - ஆதிசேடன். சுரர் - தேவர். ஐம்புலன்கள் வென்ற - ஐந்து புலன்களையும் அடக்கிய. அடியார் என்று கூட்டுக.

(64) சத கோடி - நூறு கோடி. உள்ளத்துறவு - மனத்திற் பற்றற்றிருக்கும் நிலை. மறம் - பாவம். இரு வாதனை - இன்பத்தில் மகிழ்வதும் துன்பத்தில் வருந்துவதும் ஆகிய நிலைமை.

(65) ஆத்தன் - கடவுள். காட்டிவிடலான்; நீத்தார்கள் மக்களுக்கு இவ்வாறு காட்டி விடுதலால் அந் நீத்தாரைப் போற்றுவோம் நாம் என்பது கருத்து.

(66) கன்றுதல் - சினத்தல் ; கழிந்த காமத்தன்-காமவின்பத்தைக் கழித்தவன். ஒன்ற - காலில் ஒட்டிய தூசி. பொருந்துமாறு. சென்னி - தலை. கால் தூளி-

(67) ஒழுக்கமுள்ளோன், ஒழுக்க மில்லாதவன், மூர்க்கன், பண்டிதன் இவர்கள் யாவராயினும், ஞானத்தில் முயன்றால் அவன் எவராலும் பணியத்தக்கவன் என்பது கருத்து.

(68) அரிமான் - சிங்கம். ஆதனம் - அணை, இருக்கை: சிங்க வடிவிற் செய்த அணை. பன்னரும் - சொல்வதற்கு அருமையான. இருடிகள் - முனிவர்.

(69) அத்துவிதம் - இரண்டற்ற நிலைமை. அவிகற்பம் - வேறுபாடில்லாமை. அத்துவித மாகும் அவிகற்ப மெனக் கூட்டுக. எத்திகழ்வு - எவ்விளக்கம். பேதம் - வேறுபாடு. தத்துவவித்து - தத்துவங்கள் தோன்றுவதற்கு விதை போன்ற ஞானி. என்னும் - என்று யாவரும் கருதத்தகுந்த.

(70) எல்லாமும் சிவரூபம் ஆகித் தோன்றும் யாவனுக்குத் தன்னுடைத்தாய் அவனே - உலகிலுள்ள எல்லாப் பொருளும் எவனுக்குத் தன்னுடைய பொருளாகவும் சிவவடிவமாகவும் தோன்றுமோ அவனே (அந்த ஞானியே) அளப்பு அரியான் - அளக்க முடியாதவன்
சரிதை - செய்தி. அவிச்சை - அஞ்ஞானம்.
நிர்க்குணன்-குணமொன்று மில்லாதவன் (இறைவன்).

(71) இந்தியங்கள் - ஐம்பொறிகள். பராக்குற - புறம்பாக. ஞான
நாட்டம் - அறிவாகிய கண். அவிநாசியாம் பரவொளி - மூச்சடங்கிய
முதன்மையான ஒளி.

(72) சிற் சொரூபம் - ஞானவடிவம். குற்சிதம்
தானம் - அருவருப்
பான இடம். தபோவனம் - தவம்புரிவதற் கேற்ற காடு. புக்க இடம் என்பது அகரங்குறைந்து புக்கிடம்
என்பது பொருள்.
என நின்றது. புகுந்த இடம்

(73) மருள் திகழ் - மயக்கம் விளங்குகின்ற.
கருணை விளங்குகின்ற.

அருள் திகழ் -

[அறத்துப்

(74) கோதிலா - குற்றமில்லாத. குரைகழல் - ஒலிக்கும் வீர கண்டையைக் கொண்டது (பாதம்). தலைவராவர் அதற்குவமை அடியிற்காட்டப்பட்டது. அகழ் இடை - தோண்டப்படுங் குழிகளில்.

(75) அண்டநாடரும்
நாயகன் - பொன்னுலகத்

அனந்தகோடிகளும் ஆரமுதாய் உண்ட
தேவர்களையும் அளவற்ற கோடிஉயிர்ப்

பொருள் உயிரில்லாப் பொருள்களாகிய எல்லாவற்றையும்
யான அமுதம்போலக் கருதி உண்ட முதல்வன் (திருமால்)

அருமை

(76) சிதாஅர் - மரவுரி. சிதாஅரை யுடுத்தும்
இரந்துண்டும் திரிந்தாலும் நீத்தார் தாமரைப்
பூப்போன்ற சிறப்புடையவர் என்பது கருத்து.

## ௩. பெரியோரியல்பு

(85) ஐது - அழகுடையது; ஆகிய குடி என்க. பிறந்து, ஆய்ந்து, உயர்ந்ததனுற் பெருமை யெய்தலரிது எனவும், கொடை...செய்து, செயிர் கூருமல் தருக்காமல் பிறழாமல் ஒழுகுவார்க்கு அஃது எய்தும் எனவும் கூட்டுக. ஒப்புரவு - உலக நடையறிந்து செய்யும் உதவி. ஆதி - செய்தற்கு அரிய. முதலாகிய மக்களாற் செய்தற்கு அருமையான செயல்கள். செயிர் - குற்றம். தருக்காமல் - செருக்கடையாமல். உய்தி நெறியிற் பிறழாமல் - பிழைக்கும் வழியினின்று மாறுபடாமல். அஃது - அப்பெருமை.

(86) இனியனவே - நன்மையையே. சூழ்வர் - ஆய்ந்து செய்வர். துணையின் - துணைவரைப்போல. தோற்றல் நாணுர் - தோல்வியுற்ருலும் அதற்கு நாணுர். இஃது பெரியாரியல்பு என்க.

(87) ஆன்றகுடி-அமைந்த நற்குடிப்பிறப்பு. அன்பு + எண்பதம் = அன்பும் எளிதாக எவரும் காணுவதற்கேற்ற இருக்கையில் இருப்பதும். மான்றும் - மயங்கியும். நகையானும் இகழார்; என்றது, மகிழ்ச்சியின் மயங்கி மறவார்

பகையிடத்தும் மதியார்
வெறுப்பினும் மதித்து

நினையார். நகையினும் பகையினும் ஒரு தன்மையாகவே நன்மை செய்திருப்பர். மக்கட் பண்பானவற்றைச் செய்தேயிருப்பர் என்பதைக் குறிக்கும். ஏன்றவுலகம் - பொருந்திய வுலகம்.

(88) தரியலார் - பகைவர். தமர் - நண்பர்; சுற்றத்தார். பொருள் உண்மையுணர்ந்துளோர் என்றது பெரியோரைக் குறித்தது, உண்மைப் பொருளையுணர்ந்தவர் என்ற குறிப்பால். உரியரோ என்றது உரியரல்லர் என எதிர்மறைப்பொருளை யுணர்த்தியது. பகைவர்க்குத் தீமையும் நண்பர்க்கு நன்மையும் செய்யார் என்பது.

(89) மருவின் - பொருந்தினுல். உடற்கு அமைந்த வளம்என - உடம்புக்கு அமைந்த செல்வம் என்று. விருப்பும் வெறுப்புங் கொள்ளார் என்க. பருவரும் - துன்புறுத்தும். பவஞ்சத்தே - பிரபஞ்சமாகிய உலகமாயையில். ஒருவரும் - நீக்க முடியாத. ஓடும் பொன்னும் ஒன்றெனக் காண்பார் என்பது.

(90) எதிர்மறையுற்ற போதும் - இன்பத்திற்கு எதிர்மறையாய துன்பம் வந்தபோது. உடல் உறு மூழ் - உடம்புக்கும் வரும் இயற்கை. முனிவு-வெறுப்பு. வன்பு-வலிமை; வன்கண்மை. மும்மலம்-காமம், வெகுளி, மயக்கம்.

(91) கமலவிலைப் புனல் போல்வான் - தாமரையிலையினிற்கும் நீரைப் போல இருப்பான் (மெய்ஞ்ஞானி) எனவே உலக வாழ்விற் பற்றில்லாமல் நடத்தல் முதலிய செயல் பலவுஞ் செய்து இன்பம் துன்பம் வந்தாலும் மகிழ்வு வெறுப்பின்றி வாழ்வான் என்பது தோன்றிற்று.

(92) பயில் - பழகிய. திக்கள்ளர் பயம் - தீய திருடர் பயம் என்றுவது தீயும் கள்ளருமாகிய இருவகைப் பயம் என்றுவது பொருள் கொள்க. வயிராக்கியர் - வெறுப்பு விருப்பற்ற துறவோர்; அவாவற்றவர். கால பயம் - யமன் வருவான் என்று அஞ்சும் அச்சம். வேட்டவர் - விரும்பியவர். அவாவற்றவர்கட்கு எத்தகைய அச்சமும் இல்லையென்க.

(93) அறிஞரும், அறிவிலாரும், துன்புற்றது கண்டு வருந்துவார். ஆயினும் அறிஞர் ஆகிய பெருமையோர், பகைவர்மேல் வேறுள்ள உயிர்மேல் உண்டாகிய துன்பத்தைக் கண்டு வருந்துவர். மற்றையோர் (அறிவில்லாத சிறியோர்) தம்முடம்பிற் பட்ட துன்பத்திற்கே வருந்துவர் ஆதலால் துன்புறுவதில் ஒத்தவர் எனினும் ஒவ்வாதவரே யாவர் என்பது. ஒன்னலார் - பகைவர். பிறிது - வேறுயிர்ப் பொருள்.

(94) நெஞ்சு அகம் - மனமாகிய உள்ளிடம். உருகுந் தன்மை அறிவுடையாரிடத்தும் அறிவில்லா வஞ்சகரிடத்தும் உண்டு, ஆயினும் சான்றோர் ஈசன் அருணோக்கத்திற்கு உருகுவர் அறிவிலார் மாதர் மருணோக்கத்திற்கு உருகுவரா் ஆதலின் ஒவ்வார் என்பது கருத்து. வஞ்சகர் - கள்ளமுடையவர். அஞ்சனவிழி - மை தீட்டிய கண்.

(95) மாசற்றார் - குற்றமற்ற பெரியோர். ஆசுற்றார் - குற்றமுள்ள சிறியோர். அறிஞர் மாதவம் செய்ய வேண்டுவதில்லை. அறிவிலாரும் மாதவஞ் செய்ய வேண்டுவதில்லை. எனினும் அறிஞர்க்கு அறிவிலார் ஒப்பாகார் என்பது கருத்து.

(96) எவ்வனம் - இளமைப் பருவம். இளமைப் பருவமாகிய இடையூறு என்க. இடையூறின்றிக் கடந்தவரே ஆண்மக்கள் என்பது. மெய்த்திறத்தோர் - உண்மைத் தன்மையுடையவர். விநயம் - அறிவு.

நிதி - செல்வம். மெய்யறிஞர் சேரும் இடமாகவும் கல்வி செல்வம் படைத்துக் கடவுளருளால் விளங்கும் தூயபண்புள்ள இளமை இவ்வுலகில்லை. வானத்திற் கானமில்லாதது போல ; என விளக்கம் கொள்க.

(97) நளினக் கண்ணாய்-செந்தாமரை மலர்போலுங் கண்ணனே !, பொருந்து மாத்திரம் - பொருந்தியவளவு. தீனம்உற - எளிமையாக, சுபாவம் ஆம் குணம் - இயற்கைக் குணம்.

(98) சகம்-உலகம், உலகத்தார். வரைவு அற்று-அளவில்லாமல் - வேண்டிய - தாம் விரும்பியபடி யெல்லாம்.

(99) மெய் யுணர்ந்தவன் - உண்மை யுணர்ந்தவன் (ஞானி). இமையப் பாவை - இமயமலையிற் பிறந்த பாவைபோல்வள் (உமை). பரவுவதும் நவில்வதும் புகழ்வதும் அவனையே.

(100) கரையில் - அளவில்லாத. பெற்றோர் - தாய்தந்தையர். தூய்து ஆம் - தூயதுவாம் ; அழுக்கில்லாததாம்.

(101) மல்லல் + ஞாலம் - வளம் பொருந்திய பூமி. சமயவாதர்- சமயங்களைக் குறித்து எம்மதமுயர்ந்தது நும்மதந்தாழ்ந்தது என்று சொற்போரிடும் அறிஞர். அல்ல ஆம் என விகற்பியார் - இது பொருந்தும் இது பொருந்தாது என வேறுபாடுங் கூறுர் (அறிவாளர்).

(102) மகம் - வேள்வி. மண்ணிய மணி - கழுவப்பட்ட மணி (இரத்தினம்). இம்மை-இவ்வுலகவின்பம். மறுமை - மேலுலகவின்பம்.

(103) வையம் மாமணி ஆதியாக - பூமி நல்ல பலவகை மணிகள் முதலாகக் கூறும் பொருள்கள். மகம் ஏறினர் - வேள்வி அளவற்ற செய்தவர். மெய்யமாதிகள் எட்டு - உண்மையான இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டுச்சித்திகள். யமம் + ஆதிகள்—இயம முதலியன. மெய் உணர்ந்தவர் - உண்மையறிவுடையோர். ஐயம் மாத்திரம் இட்டவர் - பிச்சைமட்டும் போட்டவர்.

(104) தண்ணிது ஆன - தாழ்வான். ஓதனம் - சோறு. திண்ணிது ஆம் நலன் - உறுதியாய நன்மை.

(105) அம்புயத்தின் பாசடை நீரில் - தாமரையின் பசிய இலையில் விட்டநீர் போல. அப்பின் மூழ்கினும் - (இலை) நீரில் மூழ்கினும். பற்றிலாது போல் பற்றிலார் (பரமயோகிகள்) எனக் கூட்டுக.

(106) யாவையும் - எல்லாப்பொருள்களும். போதம் என்று - ஞானமுள்ளனவென்று நினைத்து. இகழ்வுறுர் புகழார் - இழிவுடைய பொருள் உயர்வுடைய பொருள் என்று சொல்லார்.

(107) நாதன் நூல் - இறைவனுற் கூறப்பட்ட மறைநூல்கள் (வேதங்கள்). நவிலும் - சொல்லும். தான் + ஏ. அசை.

(108) அவனைக் கண்டு - அந்த ஞானியை நோக்கி. பிதிரர் எல்லாம்

நிரயம் என்னும் படுகுழியொருவி...வீடுபெற்றேம் என்றவுவகையால் ஆடாநிற்பர் எனக் கூட்டுக. ஒருவி - நீங்க. ஆடாநிற்பர் - ஆடுவர்.

(109) மன்னனை மனிதர்

வந்தனை செய்யுமாபோல மெய்ஞ்ஞானி
தன்னைத் தேவர் இருடிகள் பூசைசெய்வார் எனக் கூட்டுக.

(110) எவ்லாவுயிருங் காணும்பொருளை ஞானி காணுன் என்பதும் எல்லாவுயிருங் காணுப்பொருளை ஞானிகாண்பன் என்பதும் கருத்து. அத்தை - அதனை. ஓதரும் - சொல்லுதற்கரிய.

(111) பரமதத்துவஞானி - முதன்மையான தத்துவப்பொருளையறியும் அறிவன். வேண்டிய பரிசெலாம் = விரும்பியபடியெல்லாம் பலின்கள் பலிப்பது - பயன்தருவது (ஞானிதான்). நாமம் மந்திரம்- சலம் தீர்த்தம், திருமேனி தெய்வம், வாசகம் மருந்து எனக் கூட்டுக.

(112) தீர்வு அரும் இன்னல் - நீக்கமுடியாத துன்பம். தம்மை - தமக்கு. கனல்எழ - தீப்பறக்க. ஆர்கலி - கடல். நிறைந்துடையது என்பது காரணப்பெயர். அன்று + ஏ - அசைகள்.
ஒலி

(116) வேறு இனி வேண்டுமோ? (சான்று)
மீனும் நாறின - மீன்களிடத்தும் தேனும்...நாறின

வேண்டா என்க.
(சான்றுபோதும்)
உடன் ஆடினர் - கூடிவிளையாடியவர். (சேர்ந்தவர்). ஞானநீரவர் - அறிவுத்தன்மையுடையர் (அறிஞர்). நாவி - புழுகு. அகில் ஆவி - அகிற்புகை.

(117) பேரியலாளர் - பெருந்தன்மையுடையவர். பிடித்தும் - ஊதியம் பற்றிக்கொள்வோம். என்னுர் - என்றுகருதார். வையம் கைம்மாறு இயற்றுமோ எனக் கூட்டுக. வையம் - உலகம்.

(118) நறுவிரைகலவை - நல்ல மணமுள்ள கலவைச்சாந்து. மலக்கிழங்கு அகழ்ந்தவராய் என விகுதிபிரித்துக் கூட்டுக. மூன்று மலமாகிய கிழங்குகளைத் தோண்டியெறிந்தவர் என்பது பொருள்.

(119) ஏகுதல் - போகுவது. புகல் - புகுவது.
செயல் - பலபொருள்களின் உடம்பிற் புகுவது.

பல்காயப் பிரவேசஞ்

(120) கந்தை - கிழிந்த உடை. உடுக்கை -
இற்றுஎன்று - இத்தன்மையுடையதென்று.

உடை; ஆடை. (121) ஆய்கதிர் -
மூன்றுகாலங்களையும்.

ஆராய்ந்த கதிரவன். அம்மூன்றும் - அந்த
பெரியோர் வாய்ச்சொல் உறழா பிறழா எனக்

கூட்டுக. உறழா-மாறுபடா.
(ஒருதன்மையாயிருக்கும்)

என்றும்பிறழா - எக்காலமும் வேறுபடா.

(122) மாண்டவயம் நாவாய் - திருத்தமான வலிய கப்பல். நாவாய் வாயுவினையும் யாக்கை ஆயுவினையும நோக்கியுள அவைபோல் எனக் கூட்டுக. ஆயு வாழ்நாள்; ஆயுள். தூயவனே - தூய்மையுடைய பெரியோன். துப்புரவும் எல்லாம் - உணவுப்பொருள் முதலிய எல்லாப்பொருள்களும்

உயிர்ப்பொருள் (146) உலகத்து அவர் என்னும் பொருள்கொள்க.

எனப் பிரித்து உலகத்தில் அப்பெரியார் விழைவு ஒழிந்த நெருப்பால் - விருப்பு

நீங்கிய கவலையெனும் தியால். வாழ்வால் - இன்பவாழ்வினால். ஒருப்போல் - ஒன்றுபோல். உடுப்போல் - விண்மீன்போல. இலங்கிக் கொண்டே இருப்பார் என்க.

(147) இழுக்காளர் - தீயவர்; கொடியவர்.

அழுக்காறுஅழுக்குடைய வழி. அடைவதுபோல்; அதையும் இழுப்பதுபோல் அடங்கியிருப்பர் என்க. காயாது - மனம் வருந்தாமல்; சினங் கொள்ளாமல்.

அன்று + ஏ அசைகள்.

## ரு. அறச்சிறப்பு

(150) தருமம் என்றொரு பொருளுளது. அப்பொருள் இம்மை மறுமையின்பங்களை எளிதிற் கொடுக்கும். அஃது அருமையாகக் கிடைக்கும் பொருளாகும். அன்னது - அத்தன்மையுடைய அறம். ஒருமையினோர்க்கு - ஒன்றுபட்ட மனமுடைய பெரியார்க்கு ஒண்ணுமோ - ஒண்ணாது என எதிர்மறைப் பொருளாக்குக.

(151) அருள் எனும் குழவி - அருளாகிய குழந்தை. தருமம் செய்யின் அன்புவரும் அருள்வரும் தவம்வரும்; இவை வந்தால் அவ்வுயிர் சிவனைச்சேரும் என்பது கருத்து.

(152) யாவும் தருமம் ஆற்றிடும் எனக் கூட்டி எல்லாவற்றையும் அறம் கொடுக்கும் எனப் பொருள்கொள்க. விஞ்சை - வித்தை, கல்வி. அரும்பெறல்மகவு - பெறுவதற்கரிய குழந்தை. கொற்றம் - வெற்றி. ஆற்றல் - வலிமை. சீலம் - ஒழுக்கம். போதம் - ஞானம். குறித்திடில் - அறஞ்செய்ய நினைத்தால். கூடுமோ - செய்யக்கூடுமோ? கூடாது. இளமையிலேயே செய்யவேண்டும் என்பது.



(153) மறங்கள் முழுது அமிழ்க்கும் - தீவினைகள் முழுவதையும் கெடுக்கும். சாதாதபமுனிவன் அறைந்தான் எனக் கூட்டுக. சாதா என்பது பெயர்.

(154) உளமுன் மூன்றினும் - மனம் மூன்றினாலும். பரிந்து - வருந்து. செய்தி - வாக்குக்காயம் ஆகிய செய்வாய். ஆல்: அசை.

(155) வழுக்கு அறும் - குற்றமற்ற. இன்சொல் அழுக்காறு அவா வெகுளி ஒழுக்கிடாது - தவறாமல். இவை நான்குமில்லாமல்.

ஒல் லுறும்வகை - இயன்றமட்டும். அழுக்குளனும் - அடையாக்குக. இழுக்கு - குற்றம்.

அழுக்காறு என

(156) அன்புறுமறத்தினால் - அன்புடன் செயப்படும் வன்புறும் அறத்தினை - உறுதியாக்கிய தருமத்தை.

தருமத்தால்.

(157) ஆதுலர்சாலை - இரவலர் தங்கும் இடம்.
ஆவின் வாய்
உறை - பசுவின் வாய்க்குரிய புல் முதலிய தீனி.
கற்பவர்க்கு. கோதிலாவுரிஞ்சி - குற்றமில்லாத ஆ
தேய்க்குங்கல். சுண்ணம் - சுண்ணும்பு.

ஓதுவார்க்கு -
உடம்பைத்
(158)
நறியதின் -
திரண்டு.

அறுசமயத்தோர் - ஆறுமதத்திற் பற்றுடைய
நல்லதீனி (தின்பதற்குரிய வுணவு) எண்ணுன்கு

அறிஞர்.
- மூப்பத்

(159) பூதானம் - நிலத்தைக்கொடுப்பது. கன்னிகாதானம் - ஒரு கன்னியை வழங்குவது. கோதானம் - பசுக்களை வழங்குவது. எண்ணிரு தானம் - பதினாறுதானம்.

(160) திரு இன்பம் சிறப்பு நீக்கவும் முடியாது. தருமம்தரும் என்பது கருத்து.

புகழ் இவற்றை ஒருவராக்கவும் (161) தருமமே இல்லையெனில் அவையழிந்துவிடும் ஒப்பற்ற பொருள்.

தரையிடை இணையில்பொருள் - அறமே உலகில் (அறம்) இன்பிணையுதவி... உடன்போய் இன்பம் உய்த்து, அந்தகற்செறும் எனக் கூட்டுக. அந்தகன்செறும் - இயமனை யும் சினந்து நீக்கும். (ஆதலால் இருமையும் துணையாம்) என்க.

(162) அறம் திறம்பாது - அறத்திற்கு மாறுபடாமல்; அறநெறியில் வழுவாது. பொருள் காமந்துய்ப்போர் - பொருளைத் தேடிக் காமவின்பம் நுகர்வோர். உண்கண் - மையுண்ட கண். மகளிர் - அரம்பையர். உறங்கிடாது இன்பந் துய்க்கும் பொன்னுலகம்; சுவர்க்கம்; போகபூமி.

வானவர் உலகு -

(163) வேந்தர் தடமுடி இடறுந்தாளாய் - பகை அரசர்களுடைய அகன்ற முடிகளை யெற்றுகின்ற அடிகளையுடையவனே! விளி. பகையரசர் பணிவதால் அவர்கள் முடி படும் பாதத்தையுடையவன் என்பது குறிப்பு. ஞான்று - பொழுது. பொருள்கள் நாலு - அறம், பொருள், இன்பம், வீடு. வருணம் நாலு - மறையோர், மன்னர், வணிகர், வேளாளர் என்ப. சமயம் ஆறு - உலோகாயதம், புத்தம், சமணம், வாமனம், பைரவம், சாங்கியம் என்பன.

(164) மட்டு எடுத்து இறைக்கும் தாராய் - கள்ளினைப் பெருக்கி இறைக்கின்ற பூமாலை புனைந்தவனே. இது விளி. காலன் - இயமன். வளைவீதும் - சுற்றி உயிர் பிடிக்க வருவதையும்.

459

(165) சிறு பொருள் - குறைந்த செல்வம். உறு பொருள் - நிறைந்த செல்வம். செய்த்தகு தருமம் - தம்மாற் செய்யத் தக்கதல்ல தருமத்தை. உயர்வுறுத்தருமம் - இழிவான (தகுதியில்லாத) தருமத்தை.

(166) தாபரம் - நிலைநிற்கும் பொருள். செய்தவர்களுக்கு. சாதனம் - கருவி.

வேட்டோர்க்கு - விரும்பிச்

(167) சித்த சுத்தி அறியாத. வறிதே -

- மனத்தூய்மை. அது - சித்திசுத்தி. தேரா - வீணாக. நிரயத்து - அளற்றில். குவிப்ப - விழுவார்கள்.

(168) தரும வாஞ்சை - அறஞ் செய்யும் விருப்பம். கண்ணரும் - கருதமுடியாத. கதிக்கு அரசு ஆகி - முத்திக்கு இறைவனாகி. துளையா கிற்பர் - அழுந்துவார்.

(169) அழல் வாயினால் - தீப்போன்ற நஞ்சுடைய வாயினால். மண்டுகம் - தவளை. ஓம்பிடவல்லரே - காப்பாற்றவல்லவரோ? வல்லவரல்லர். ஏ - எதிர் மறைப் பொருள் தந்தது. புண்ணியம் போம் பொழுது அருந்துணை என மாற்றுக. போம்பொழுது - இறக்குங்காலம், சாகும் போது.

(170) யாக்கை - உடம்பு, "எய்தற்கரிய" என்ற குறிப்பால் மக்களுடம்பை உணர்த்தியது. உய்தற்கு-பிழைப்பதற்கு. கமரில் பெய்ததுபில வெடிப்பில் ஊற்றியது. ஒக்கும் - அது போல வீணாகும். என்பர் - என்று சொல்வார். ஆல் - அசை.

(171) அழியாவுடம்பு என்பது புகழ். இன்போடு அமர்தல் - இன்பத்தோடு வாழ்வது. அவன் தன் மேல் - அவனைப் போல. மருளர் - மயக்க முள்ளவர்.

(172) தருமம் ஆம் அதுவே - அறமாகிய அதுவே. தருமம் நீக்கும் கருமம் - அறத்தினை நீக்கிச் செயும் செயல்; அறத்தின் வழுவிய செயல். பசுமட்பாத்திரம் - பச்சை மண்ணாற் செய்யப்பட்ட குட முதலிய கலங்கள். பண்டத்தோடும் ஒருமையா - ஒன்றாகச் சேர்ந்து. கணத்து - ஒரு நொடிப் போதில்.

(173) பேரறம் முன்பு நின்று இசை நிறீஇ - பெரிய அறமானது முதலில் நின்று புகழை நிறுத்தி. பின்பு உறுதியைப் பயக்கும் எனக் கூட்டுக. (அவ்வறத்தனை) இன்பம்.........துறக்கலாகுமோ ? (ஆகாது) இன்பத்தும் துன்பத்தும் மறவாது அறத்தைச் செய்க என்பது கருத்து.

(174) படைக்கலம் - ஆயுதம், நிறத்தின் நேர் உற - மார்பிற்கு எதிரே வர. மறம் பயன் - வீரத்தால் விளையும் வெற்றி. அறம் துறப்பிலர் எனல் - அறத்தின் நீங்கார் இவர் என்று சொல்லப்படுவதே. சூரராவதே (வன்மை) அவ் வெற்றி வன்மையன்று என்க.

(175) அன்னதே முடிந்தது - அத்தன்மையாகவே (அறமாகவே) முற்றுப் பெற்றது. ஐய! - ஐயனே; அரசனே. என்னும் ஈது - என்று கூறும் பழமொழி.

(176) தருமம் பார்ப்பார்-அறநெறி யுணர்ந்தவர் (அறிஞர்). தாய் அவை - அன்னையர் கூட்டம். இது ஐவகைத் தாயரைக் குறிக்கும். நற்றாய் செவிலி முதலியவர்.



(177) அறம் செம்பொன் கற்பகம் - அறமாகிய செம்மையான கற்பகமரம். பூத்தலால் - தருவதால். ஓம்புமின் - ஒழித்து விடுவீர். நீக்குவீர் (மறத்தலை) கால வேல் கணீர் - காலனது வேலை யொத்த விழியுடையீர்; இது விளி. பெண்களை நோக்கியது.

(178) இன்றே - இப்பொழுதே. வரைந்து - வரையறுத்து. வாழும் நாள் இதுவென வுணர்ந்தோர் என மாற்றிக் கொள்க.

(179) மடவோர் - அறியாமையுடையவர் (மூடர்). தொழிலாளன் - இயமன்; கூற்றுவன். சுடலை - சுடுகாடு. கள்ளாட்டு - செல்வமாகிய மதுவைக் குடியால் மயங்கி.

கொடுங்
செல்வக்

(180) வளவிய - பெருக்கமான. புத்தேள் உலகம் - தேவருலகம் அறமே விழுத்துணையாவது (சுவர்க்கம் புகுவதற்கு) எனக் கொள்க.

(181) நமர்காள் - சுற்றத்தார்களே! நம்மவர்களே!; அருளைப் பொருளாக - அருள் என்னும் பண்பைப் பொருளாகக் கருதி. அறஞ் செய்தல் வேண்டும். செய்து...இயல்பு எய்தாதது என்றே எனக் கூட்டுக. வான்கண் இருள் இல் இயல்பு - வானுலகமாகி இடஞ் செல்வதற்கு இருளில்லாத வழிகாட்டுந் தன்மையை (அடையாதது).

(182) ஒருவன் உலகு விலையுண்டு ஆங்கு ஆராது

எலாம் காக்கும். ஒருவன் - மற்றொருவன். நல்கூரும் - விலைக்கு வாங்கியுண்டும் அங்கு வயிறு நிறையாது வறுமையால் வருந்துவன். இப்பார் - இவ்வுலக மக்கள். (இவ்விருநிலைமையையும் பார்த்தும்) அறம் பாவம் பாராதது என்னோ - அறம் பாவம் உண்டு என்பதை யறியாமல் வாழ்வது என்ன காரணமோ? (அறியேன் என்க.)

(183) தோம்நனி சொல்லல் - அயலார் குற்றங்களைக் கூறுவது. தீநெறி செல்லல் - தீய வொழுக்கிற் செல்வது. கைதவம் கல்லல்வஞ்சகத்தைக் கற்பது. ஓம்புமின் - ஒருத்து விடுங்கள்; நீக்குங்கள்.

(184) தியவை - கடுஞ்சொற்கள். சொல்லல் - சொல்லற்க - எதிர் மறை வியங்கோள். தீநெறி புல்லல் - தீயவழிகளிற் சேரற்க. செய்ந் நலம் கொல்லல் - ஒருவன் செய்த நன்றியை மறவற்க. நீசரைச் சார்ந்து - கீழ் மக்களுடன் சேர்ந்து; நில்லற்க.

(185) நன்மை மேவுவார் - அறஞ் செய்தவர். பெரும் பொருள் நான்கும் மேவுவார் எனக் கூட்டுக. அறம், பொருள், இன்பம், வீடு நான்கு. புன்மை - பாவம். தொன்மை - பழைமை; இது நட்பினைக் குறித்தது. இன்மை - வறுமை.

(211) நீதி திறம்பி - அற நெறிக்கு மாறுபட்டு. வாட்டுகின் றோர் - துன்பத்தை விளைக்கும் கொடியார். அறம் பற்றி அருளின் திறம் பற்றி உய்வதுதான் எங்ஙனே எனக் கூட்டுக.

## ௩௨. நன்றியில் செல்வம்

(217) துகிற்புகையும் - ஆடைக்கு மணமூட்டும் புகையும், மாலைக்கு இடும் புகையும் - பூமாலைக்கு வேறு மணமூட்டும் புகையும் அதிலோபம் மாந்தர் - மிகுந்த பொருட் பற்றுடைய (ஈயாத). மனிதர்கள். தோன்று - தோன்றி. தோன்றித் தோன்றி மறைவது பொதுத் தன்மை.

## ௭. ஈகை

(227) கோலம் வறட்டை - அழகிய வறட்டுப் பசுவை. குளகு இட்டு - இலை தழையாகிய தீனிபோட்டு. சீலம் - நல்லொழுக்கம். நோன்பு - விரதம். (பயனில்லாதது அவ்வீகை என்க.)

(228) தங்கும் அவர்க்கு ஈவது அன்றித் தங்காதவர்களுக்கு ஈவது பெரும்பிழை என்று கொள்ளீரே எனப் பொருத்துக. யோகம் - கடவுளை நினைத்தசைவற்றிருத்தல். இயமம் - விதி விலக்கறிந்து நடப்பது. நியமம் - இன்னது இன்னது இன்னவாறு செய்வது என வரையறை செய்து நடப்பது. ஈவ - கொடுப்பவையெல்லாம்.

(229) மண்மலை அத்தனை மாதனம் - பூமியும் மலையும் போல அவ்வளவு பெரும்பொருள். அண்ணல் - கடவுள். இருவரும் - வழங்கியவரும் வழங்கப்பட்டவரும் (கொடுத்தவரும் வாங்கியவரும்), குழியிலே நண்ணுவர் எனக் கூட்டுக.

(230) தானே முடிப்பது தலை, சொன்னுன் முடிப்பது இடை. சொல்லுகினும்...புரிதல் கடை எனக் கூட்டுக. தலை - முதன்மை

யானது. கடை - தாழ்வானது.

(231) கொட்டி - கொட்டி என்ற கொடிப்பூ. அது அழகானது. மணமில்லாதது. பொலிந்துளதே - விளக்கமாகத் தோன்றுவதே. (அவன் வாழ்க்கை) (ஆயினும்) வறிதே. வைகல் - கழிந்தது. பயனின்றிக் கழிந்த பகல் என்பது.

(232) எப்பேறும் - பதினாறுபேறில் எதனையும். குலவும் பூதம் அனைத்தினையும் புரக்கும் - உலாவுகின்ற உடற்பொருள் எல்லாவற்றையும் காக்கும். பூதம் என்பது ஐந்து பூதத்தால் ஆக்கப்பட்ட உடம்பை யுணர்த்திற்று.

(233) நீர் விழும் சிலை - நீரில் விழுந்த கல். புணை - மரக்கலம்; கப்பல். புரை செய்பாவத்தில் - குற்றத்தை விளைக்கும் பாவம். மேற்கதி - மேலாகிய முத்தியுலகிற்கு. கரிசினர் - குற்றமுள்ளவர். அற்று - அத்தன்மை யுடையவரே. அபாத்திரம் பாத்திரம் - தகுதி யின்மை, தகுதி. நற்பயன் வேட்டோர் - ஈகையால் நல்ல பயன்பெற விரும்பியவர். அளித்து ஒழிக்க - முறையே தகுதியுடையார்க்கு வழங்கித் தகுதியில்லார்க்கு வழங்காமல் விடுக்க.

(234) அறிவிலார்க்குச் செல்வம் எய்திற் செருக்குறும். செருக்கி னாற் பிழைகள் பெருக்கும். நல்கூரின் - வறுமையடைந்தால்... துயரம் ஈண்டும். கரத்தல் - வந்தவர்க்கு இல்லையென மறைப்பது. கடுந்துயர் - கொடிய துன்பமாம். அறிவிலார்க்கு எல்லாம் துன்பம் என்பது கருத்து.

(235) வாளா துஷக-சும்மா செல்ல. இலன் என்னும் எவ்வம் கூறுது-நான்வறியன் என்று தன் துயரினை எடுத்துரைக்கு முன்னமே. கிரப்பல் நன்றும் - வேண்டுவதையறிந்து கொடுத்தல் நல்லதாகும். இரக்கமோடு ஈதல் இசனினும் நன்றுவது ஆகும் எனக் கூட்டுக. ஆர் இயம்பிய எவ்வம் சொல் என்று இரப்பினும் - பொருந்தக் கூறிய துன்பங்களை என்னிடம் சொல் என்று வேண்டினாலும் (அதனைப்) பிறரிடங் கூறுமல்.



(236) அருத்தியின் - விருப்பத்தோடு. அளித்தலும், உதவலும், பொருத்தலும், ஒன்றின் உயர்ந்தது. இலன் என்றுரைப்பதற்கு முன் கொடுத்தல். இலனென்று கூறியபின் அயலாரிடம் அதனைக் கூறுமல் கொடுப்பது, அவன் தந்த செல்வத்தை ஏற்கின்றவனும் அவ்வாறே இரப்பவர்க்கிய அளவில்லாத செல்வத்தைக் கொடுப்பது. இவையே மூன்று.

(237) செல்வம் பேறு
நல்குரவினரைக் காத்தல் -

- ஒருவன் செல்வத்தைப் பெற்றிருப்பது.
வறியரைக் காப்பதன் பொருட்டே. அறம்

ஆதி இலன் - தருமம் இன்ப முதலிய
உரைக்கு அஞ்சியேனும் - இழிவாகக்

இல்லாதவன். எவ்வம்வலன்
கூறும் கடுஞ்சொல்லுக்கு
நாணியாவது.

(238) சாதல் - உடம்பிறக்கும் காலம்.
கோதுஅறு - குற்றமற்ற. கொடையினாற்

தனக்கு - புகழுடம்பிற்கு.
புகழின் யாக்கை செல்வங்
கூர வாழ்தலே உடையார் என மாற்றி ஈகையாற்
புகழுடம்பு வளர வாழ்வுடையார் எனப்
பொருள்கொள்க. வானமும் - வானுலகத் தேவரும்.

(239) பொருளை வைத்துத் தான் நுகரான் வழங்கான் என்க. ஈட்டுதலால் மெத்தும் வருத்தமேயன்றி - பொருளைத் தேடியதாற் பட்ட துன்பமேயன்றி பயன் வேறில்லை என்க. புசித்து வழங்கல் - தானும் உண்டு பிறர்க்கும் வழங்கலே வெறுக்கை நன்றியுறல் என்க. வெறுக்கை - செல்வம். நன்றியுறல் - நன்மை பெறுதல்; பயனடைதல்.

(240) வினைகள் தீர்ந்திடு - தீவினை
அனகம் - தீவினையில்லாத. மால்விடை -
காளைமாடு. கபாலி - சிவபெருமான்.

நீங்குதற்குரிய (தானம்).
பெரிய மாடு; திருமாலாகிய

(241) இகத்தில் - இவ்வுலக வாழ்வில். அகத்தில் - உள்ளத்திலும். இல்லென் நாமும் - இல்லை யென்ற பெயரையும் (உரைசெயார்) அவர் - கொடைப் பெருமையறிந்துளோர். வேண்டுமுன் விரும்பி ஆவியுங் கொடுப்பர் எனக் கூட்டுக. தொகுத்த ஓர் பொருள் நல்குவர் என்பது என் - சேர்த்த ஒரு பொருளை மட்டும் கொடுப்பர் என்று சொல்வது என்ன பெருமை.

(242) விழைவுறு தூதர் - யாவரும் விரும்பும் மிகுந்த காமவேட்கையர். மல்லர் - மற்போர்ப் பயிற்சியுடையார்.

தூதுவர். தூர்த்தர் -

இகழ்தரும் இனையோர் - யாவரும் இழிவாகக் கூறும் இத்தன்மை யுடையார். இது மூற்கூறியவரைக் குறித்தது.

(243) மாண்புடையாளர் - மாட்சிமையான நற்பண்புடையார். சேண்படு விரப்பின் எய்திஞேர் - உயர்ந்த வறுமையை யுடையவர். புரப்போர்த் திர்ந்தவர் - தம்மைக் காப்பவரில்லாதவர்; ஆதரவற்றவர். குரவர் - ஆசிரியர். காண்தகும் உதவி புரிந்துள்ளோர் - காணத்தகும் உதவி செய்தவர்.

(244) முடித்த இதனுல் - கொடுத்த இக் கொடையால். சாத்துவிக தானம் என்பது - உயர்ந்த பண்புடைய அறிஞர்கட்கு வேண்டும் பொருள் வழங்குவது.

(245) இராசதமாதானமே - இராசத குணத்துடன் வழங்குங் கொடையே. பரிவோடு பண்ணினவும் - அன்போடு செய்தவுதவியும். இதனுல் மேல்விளைவுண்டென்று கருதிச் செய்வனவும்.

(246) வாயாதது - வேண்டாதது. ஏயாத நிலத்திடை தாத இடத்தில். அப்பிரியத்தோடு - விருப்பமில்லாமல்.

(247) குலாமருக்கு - கீழ்மக்களுக்கு; மூடர்களுக்கு.
- பொருந்

(248) சம்பன்னராய் - நிறைசெல்வமுடையவராய். கல்லாவும் - கல்லினாற் செய்யப்பட்ட பசுவடிவம்.

(249) முற்றொடர்பில் - முற்பிறப்பில் நல்வினைசெய்த தொடர்பினால். அற்றவர்க்கு - செல்வமில்லாதவர்க்கு - வறுமையுடையவர்க்கு; ஓராமல் - ஆராய்ந்து செய்யாமல்.

(250) இலையென்று - (என்பாற்பொருள்) இல்லையென்று. புல்லர். இசைந்து இல்லை என்பர் என மாறிக்கூட்டுக. புல்லர் - அற்பர், அறிவில்லாதவர்.

(251) பரிசில் மாக்கள் - பரிசு பெறும் புலவர். வரிசை - தகுதி; தரம்; (உயர்வு தாழ்வு). புலவர்மாட்டுப் பொதுநோக்கு ஒழி என்று கூட்டுக. மதி - முன்னிலையசை. பொதுநோக்கு என்பது எல்லாரையும் ஒருதன்மையாக மதிப்பது. ஒழி - நீக்குவாய்.

(252) மன்னு உலகம்-நிலையாத பூமி - அழியும் பூமி. இன்மையின் இரப்போர்க்கு - வறுமையால் வந்து இரப்பவர்களுக்கு. தொன்மை மாக்களில் - பழங்கால மனிதரைப்போல. தொடர்பு அறியலர் - செல்வத்திற்கும் மனிதர்க்குமுள்ள தொடர்ச்சியை யறியாமலிருக்கின்றனர்.

(253) தெண்கடல் வளாகம் - தெளிந்த கடலால் வளையப்பட்ட இடம் (பூமி). ஒருமையோர் - ஒரு தன்மையுடையவர் (அரசர்). கடுமா பார்க்கும் - கொடிய விலங்கினங்களைக் கொன்று தின்ன அவற்றின் வரவு பார்க்கின்ற. ஓர் ஒக்கும் - ஒரு தன்மையாக ஒத்திருக்கும். துய்ப்பேம் (செல்வத்தை யெல்லாம்) அனுபவிப்போம்.

(254) ஒல்லுவது - ஒருவன் தன்னால் ஒல்லும் என்றல் - செய்ய முடியும் என்று

செய்யத்தகும் உதவியை. பால் - சொல்வது. கேண்மைப் போர்

நட்புக்குரிய முறையாம். வல்லே - புகழ் - காவலரது புகழினை. குறைபடு

விரைவாகவே, புரப் உம் வாயில் - குறைவு படுத்தும் வழியாகும்.

(255) கடவுள் ஆலத்து தடவுசினை - தெய்வத்திற் கிடமாகிய ஆலமரத்தின் பெரிய கொம்புகளில் உள்ள. நெருநல் - முன்னைநாள், முந்தியநாள். கலிகொள் புள் இனம் - ஒலிக்கும் பறவைக் கூட்டம். செலவு ஆனு-செல்லாமல் நில்லா (பறவைகள்). அனையர்- அத்தன்மை யுடையர். வாழி, ஓ: அசைநிலை. புரவு எதிர்கொள்ளும் பெருஞ்செய் - காப்பதற்கு எதிர்கொள்ளும் பெருஞ் செயலுடைய. ஆடவர் உடைமை யாகும் - ஆண் மக்களுக்குச் செல்வமாகும். உடைமை - அவர் வந்திருப்பது. (செல்வம்) இன்மையாகும் அவர் இன்-மை - இரவலர் வந்து தங்காமை வறுமையாகும்.

(256) பொழிந்து கழிந்தது என -மழைபெய்து நின்றது என்று சொல்லுமாறு. வான்கண் - வானத்திடப். தொலலது - பழைமையாக விதைத்தது. வாழ்க்கை+இல்=வாழ்வில்லை. ஆல் - அசை. (இல்+ ஆல்=இல்லால்,) இன்னது+(அம்ம) துன்பந்தருவத. அம்ம - அசை. நசை இழப்போர் - விருப்பத்தை நீக்குவோர். ஆற்றுதோரினும் நசை யிழப்போர் தீயர்; கொடியர். எனச்சொல் வருவித்துக் கொள்க.

(257) இழிந்தன்று - இழிந்தது. உயர்ந்தன்று - உயர்ந்தது. நீர் வேட்டோர் பெருங்கடல் உண்ணார் ஆகும் எனக் கூட்டுக. அதர் பல ஆகும் - பலவழிகள் உண்டாம். இஃது இடையறாது சென்று பலவழி களை ஆக்குவர் என்பது குறிப்பு.

(258) கடும்பின் கடும்பசி - சுற்றத்தாருடைய யாழ் : அசை. நெடுங் குறியெதிர்ப்பை - நீண்டநாள்

கொடியபசி.
வரை வாங்கிய
கைம்மாற்றுக் கடன்.

(259) இறைவர் - தலைவர் ; முதல்வர். (பாரி ; ஈதல் - மறையாது கொடுப்பது.

பேகன்.) கரவாமை

(260) அயர்ந்து - மறந்து. அல்லாந்து - மயங்கி. மாயா நிதியம் - மாயையாகிய செல்வம் ; (மறையுஞ் செல்வம்). பொதியன் மின் - மறைத்துவையாதீர். கூற்று குறுகவரும் என்க. அரோ - அசை.

(261) மாசின சின்னத்துணி முள்ளின் ஊசி துன்னம் மூசிய ஆடை - கூர்மையான ஊசியால் கிழிந்ததைத் தைத்து மூடிய உடை. முள்ளின் - முள்ளைப்போல எனலும் ஆம். கைஅகல் - கையில் அகலமான ஓடு.

(262) மின்னும் தமனியம் - ஒளிவிடுகின்ற தங்கம். பொன்னின் பெயர் - செம்பொன் கரும்பொன் என்ற பெயர். கொன்னே - வீணாக. மக்களாமாறுபோலவே எனக் கூட்டுக.

(268) வெள்ளியை ஆதல் - அறிவில்லாதவன் ஆதலால். எள்ளுவ என்றில - சிறுமையாக இகழ்வது என்ன காரணம்.

(264) இரந்தவர் வீந்தவர் என்பவர். இரவலரே இறந்தவர் என்று சொல்லப்படுவார். மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள் - இறந்தவரெல்லாரும் இறந்தவராக எண்ணப்படார்.

(265) மன்னுபு - நிலைபெற்று. நிலவும் - நிற்கும். ஈகுதும் என்று - வேண்டியதைக் கொடுப்போம் என்று. தலைமை பெற்ற. குருதி - இரத்தம்.

இரந்தது
கோவரு -

(266) உரவுநீர் - ஒலிக்கின்ற நீரையுடைய. தன்மை. தமரினும் - சுற்றத்தாரைக் காட்டிலும்.

பான்மை - இயல்பு,

(267) கிளர் நிரப்பினால் - மிக்க வறுமையால். இரப்பவர்கட்கு.
ஏற்குநர்க்கு -
(268) உஞற்றிடார் - செய்யார், கொள்ளார் கொள்ளாமல். வளம்படைத்து - செல்வம்பெற்று.

ஆகி - ஏற்றுக்

(298) தண்டாமல் ஈவது-மறுக்காமல் கொடுப்பது. முயற்சியின் வீரமாகும். எச்சம் இறுமேல் - மக்கள் மெனில். இறு - இற்றுப்போ.
தாளாண்மை-
அற்றுப்போ

# அ. இல்லறம்

(303) துப்புரவு - உணவுப்பொருள்கள். காமுறும் - விரும்பும்.

(304) மறு+இல்=மறுவில்-குற்றமில்லாத. கருதார்-பகைவர்க்கு முன். இமில் ஏற்று காமர் நடை - குட்டேற்றினையுடைய விடையின் அழகியநடை (குட்டேறு - புறக்கழுத்தினை யடுத்துத் திரண்டிருக்கும் ஒருறுப்பு) ஒருவாதவளோடு - எப்போதும் பிரியாமலிருப்பவளுடன்.



(305) வனத்துறைவோர் - காட்டில் வாழும் முனிவர். பரம்பரன்-கடவுள். தெனுதுபுலத்தவர் - தென்புலத்தோர் (பிதிரர்). பசைஉடை ஒக்கல் - அன்புடைய சுற்றத்தார். மன்துறந்தோர் - காப்பவரால் கைவிடப்பட்டவர். அரம்புசெய் இலம்பாட்டினர் - துன்பத்தைத் தரும் வறுமையுடையோர். ஐயிருவர் - பத்துப்பேர்.

(306) அத்தம் முதல் அற்றூர்க்கும் - பொருள் முதலியவையில்லாதவர்கட்கும். வித்தும் ஆம் - விதையும் ஆகும்.

(307) சகடம் ஆம் வண்டியாம். கருமம் நுகம் - இல்வாழ்க்கைக்குரிய செயல்களாகிய நுகத்தடி. ஓர் இறை - ஒரு சிறிது தூரமும்.

(308) இல்லறம் புரிவோர் கடன் - இல்வாழ்க்கையுடையார் கடமைகள். தருமம் ஆற்றல் - புண்ணியஞ் செய்தல். இகழ்வனகள் - இகழ்வாகச் சொல்லப்படுஞ் செய்கைகள்.

(309) குரவனை - ஆசிரியனை. அதிதி - புதியவன்; பரதேசி. இனிது அளித்திடாது - நன்றாகக் காப்பாற்றாமல். பதடி - பதர்.

(310) தகுகுணம்தவிர் இல்லாள் - இவ்வாழ்க்கைக்குத் தக்க நற்பண்பில்லாத மனைவி. நகுமுகத்தினரே ஆக - கண்டவர்கள் எல்லாரும் நகைக்கு முகமுடையவராக (இகழும்படி). உகுதிறம் - நீங்கும் தன்மை. துன்மரணம் என்று உடம்பினை...நன்றும் எனக்

கூட்டுக.

(311) அருந்தல் - உண்ணுதல். துறந்தவர் மூவர் - இல்வாழ்வின் நீங்கியவராகிய மூன்றுபேர் (பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி,) (நூல்கற்பவன்: மனைவியுடன் வனத்தில் வாழ்வோன்; முற்றத்துறந்த முனிவன்) திருத்தம் உற்றதற்பின் - உணவுண்டு நிறைவாகியபின்.

(312) என்புலை கடிந்து-என்று சொல்லப்பட்ட இழிதொழில்களை நீக்கி. (இல்லறம்) அணுவது வழுவின் - அணுவளவு தவறினும். நரகிடையடைக்கும் அல்லவோ - அத்தவறு நிரயத்திற் சேர்க்கும்.

(313) கடிமனைக்கிழவன்-புதிய மனைக்குரியவன் (தலைவன்). ஐவகை வேள்வி - தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றம், தான் என்ற ஐந்துயாகம். வரையா நாளின் - விலக்கப்படாத நாளில், (புணர்ச்சிக்குத் தக்க நாள் என்று சொல்லப்படும் நாளில்) பெருநலம் துய்க்கும் - காமவின்பம் நுகரும்.

(314) தாரம் நல் இதம் தாங்கி தலைநின்மின் - நல்ல குணம்வாய்ந்த மனைவியை மணந்து முதன்மையான இல்லறத்தில் வாழுங்கள். ஒரு தலை - உறுதி. எதிர்கொள்ப - எதிர் வந்து அழைத்துச் செல்வார் (விண்ணவர்) தெய்வத்துள் வைக்கப்படும் என்பது கருத்து.

(333) விழுப்பம் சான்ற வியத்தகும் - சிறப்பமைந்த யாவரும் வியந்து பேசத்தகுந்த (இல்லறம்). ஞயக் கொடை - நல்ல கொடை. சாலை - பள்ளி. இல்லறம். கற்பக மரம்; நன்மை இலை; கொடை அவ்விலையின் நிழல். மென்மை அரும்பு; மேன்மை பூ; அன்பு காய் அருள் கனி; இன்பம் தேன், என உருவகப்படுத்துக. இல்லறமாகிய கற்பக மரம் நன்மையாகிய இலைதழைத்துக் கொடையாகிய நிழலைச் செய்து என முறையே விரித்துக் கொள்க. மலை இலக்கு - மலையைக் குறியாகக் கொண்டால் எவ்வாறு தோன்றுமோ அதுபோல நன்றாக விளங்கும். செலுத்துபு - செலுத்தி. துன்பத் தீயரை - துயரமிகிய கொடியோர்களை. மாழ்கலீர் - மயங்காதீர். இல்லறம் உயக்கம் இன்று- இல்லறம் துன்பமில்லாதது.

ப. தி.—30

## ௩௯. விருந்தோம்பல்

(337) சேடம் - எச்சில். கூவல் - கிணறு.

ஈங்கு இவர்க்கு அன்றி - இவ்வுலகில் இவர்களுக்கு
நவின்றிடும் - சொல்லும்.

முதலில் இட்டு உண்டால் அன்றி.

(337 அ) எதிரின் நேர்வந்தால். வியத்தல் -

வியந்து பேசுதல்.

விருந்தினர்க்கு வழிபடும் பண்பு என்பது. வியத்தல்
பெயர்களைக் கூட்டி என்பதும் காண்க.

முதலிய தொழிற்

(338) விருந்து புறந்தருவாரை - விருந்தினரை உபசரித் தூட்டுகின்றவரை. ஐந்தருவாரே வியப்பார் - ஐந்தருமேலில் அமர்ந்திருக்கும் தேவரும் வியந்து பேசுவார். சுரும்பினங்கள் விருந்தூட்டும் - வண்டுக்கூட்டங்களுக்குத் தேனையூட்டுகின்ற (நாடு). தளவம் - முல்லை மலர். மூரல் இட - சோறுபோட. அம்புயம் - தாமரை. பாசு அடை - பசிய இலை.

(339) திருவிருந்த வீடு கடைதிறந்தது என - செல்வர் குடியிருந்த முத்தியின்வாயில் திறந்தது போல. வரையாது - நீக்காமல். தரு இருந்தது என - கற்பகமரம் இருந்து கொடுப்பதுபோலக் கொடுத்து. கொட்டாரம் - தலைவாசல்.

(340) அருந்தினர் - விருந்துண்டவர். அருந்தாமிற்க - உண்ண. ஓர் ஏர் உழவர் வித்து எலாம் வீசி...விண்ணோக்குவதுபோல் என விகுதி பிரித்துக் கூட்டுக.

(841) ஆக்குநரும்

மக்கட்பதடி - மனிதர்களாகிய

அருந்துவோரும் கற்கின்றோரும்

நெல்லுக்குள் ஒரு பதர்.

மக்கட்பதடி என்க. தாமே

அருந்துதற்கு - தாமே உண்பதற்கு. மகவிழைவு - மென்ற விருப்பம். முதுக்குறைவு - அறிவு.

மக்கள் வேண்டு

(842) நறை - தேன். நானம் - புழுகு. இன் அமுது சோறு. உண்ப - உண்பார்கள் (அங்கர மாந்தர்).

- இனிய

(843) பிறைநுதலார்க்கு - பிறைபோன்ற நெற்றியையுடைய பெண்களுக்கு. பூத்தலால் - உண்டாகியிருப்பதால். வைகலும் - ஒவ்வொருநாளும். விழைவன - விரும்பப்படுவன. யாவை - எவை (ஒன்றுமில்லை).

(844) உதவானுகின்

வுதவி செய்யாதவனுக்கு.

அவர்கு - உதவி செய்யாதவன் ஆனால் அவ்

நிரயமே இடம் எனக் கூட்டுக.

(846) தென்புலம் தெய்வம் விரும்பல் - பிரதியையும் தெய்வத்தையும் விரும்பி அவர்க்கு வேண்டுவன செய்தல். மருந்தானும் - அமுதமாயிருப்பினும். ஒக்கல் உடன் - சுற்றத்தாருடன்.

(351) மறம் நாய் - சினமுள்ள நாய்; வீரமுள்ள நாய். அண்ணாந்து ஏங்கி-உயர்ந்த மனையை நிமிர்ந்து பார்த்துப் பெருமூச்சுவிட்டு, பண்ணார் மொழியார் - இசைபோன்ற இனியசொற்பேசுவோர் (மாதர்) உண்ணு நின்றபோது - உண்ணும்போது. இவர்தாம் என்றது மேற்கூறிய பிச்சைக்காரரைக் குறித்தது. முற்பிறப்பில் இவர் உதவாதவர் என்பது கருத்து.

பால்]

467

கக. கற்பு

# கூ. பசி தீர்த்தல்

(358) முன்னது என்று - முதன்மையானது என்று. அறவரும் - அறஞ்செய்யும் பெரியாரும். சற்சனர் - நன்மக்கள். பணவிருப்பு - பணத்தின்மேல் விருப்பம். இது வெளிப்பொருள். அன்னதானம் பணவிருப்பு - சோறு இடுங்கொடை கொடுக்கும் அவா.

(359) தனது இல் சார்தரும்-தன்னுடைய மனைக்குவந்து சேர்ந்த. ஓதனம் வழங்கிடுவானேல் - சோறுபடைத்தூட்டுவானாயின். அனது - அன்னது - அச்செயல் (அன்னதானம் வழங்குவது).

(360) கனத்த - மிகுந்த. கோதானம் - பசுக்களைக் கொடுப்பது. ரசிதம் - வெள்ளி. சொர்ணம் - தங்கம். கோடிதான் - கோடிக் கணக்காக (ஒவ்வொன்றும்). அன்னதானம் இது அரிது - அன்னதான மாகிய இதுவே அருமையானது. அதிகமாகும் என்றுங் கூட்டுக.

(361) ஆற்றுநர்க்கு - முயற்சியுடையவருக்கு (வறுமையில்லாதர்க்கு). ஆற்றுமாக்கள் - முயற்சியில்லாமாந்தர் (வறுமையுடையவர்). மெய்ந்நெறி வாழ்க்கை - உண்மையான நல்லொழுக்க வாழ்வு. பசி களைவோர்மேற்றே மெய்ந்நெறி வாழ்க்கை என்க. மேற்று - மேலது; அவர்களிடத்தது.

(362) கடைநின்றவர் - வாயிலில்வந்து இரந்து நிற்பவர். உறுகண் கண்டு - துன்பத்தைக் கண்டு. உடையதம் ஆற்றலின்-செல்வமுடைய தம் வலிமையால். உண்டி கொடுத்தோர் அடுத்த பிறப்பில் வேந்தர்களாகுவர் என்பது கருத்து.

(364) சோற்றூர்திப் பாகன் - சோற்றினை வாகனமாகக்கொண்ட உடம்புடையான். (மனிதன்) ஈரப்படினும் - வாளால் அறுக்கப்பட்டாலும். அதுஊரான் - அவ்வுடம்பினைச் செலுத்தமாட்டான். ஆரக்கொடுத்து - நிறைய உணவு கொடுத்து. குறை கொள்ளல் வேண்டும் - குறைவை முடித்துக் கொள்ளவேண்டும்.

(365) வனப்பு - அழகு. செல்கதி - இறந்தபின் அடையும் இடம். தூமாண் நினைவு - தூய மாட்சிமைப்பட்ட நினைவு. காட்சி - அறிவு. காட்சியும் என்பதிலுள்ள உம்மையை வாழ்நாள் உடம்பு முதலியவற்றுடன் கூட்டுக. கொடை ஊண் கொடையோடு ஒப்பதில் எனக் கூட்டுக. கொடை - மற்றைக் கொடைகளில்.

(366) நேர்நிறை நில்லாது - ஒப்பாக நிறுத்தினால் நில்லாது. என் மனன் என்னும் - எனது மனது (நில்லாது) என்று சொல்லும்.

(367) ஏறுபொருள் - மிகுந்தபொருள். கூறுஉடையவாகிய. பணியிலா மிடியுற்றூர்க்கு - வேலையில்லாத - பல பிரி வறுமை யுடையவர்க்கு.

## ௧௧. கற்பு

(371) காண்தகைய - காணத்தக்க. ஈண்டைஉள - இவ்வுலகத்தி லுள்ள. தெய்வதம் - தெய்வம். தெய்வதமும் மாமுகிலும் மெய்யுரையி னிற்கு மென்றால் எனக் கூட்டுக. மெய்உரையில் நிற்கும் - உண்மைச் சொல்வழியே நடக்கும்.



(372) மேன இயல்பானவரையும் - மேற்பட்ட இயல்புடன் மணஞ் செய்த. தானம் உளது ஆகும் - பலவகைத்தானமும் செய்த பலன்களும் கிடைக்கும். தவம், வானம், மண் உளது ஆகும் என்க. ஊனம் இலது ஆகும் - குறைவு இல்லை.

(373) கன்னத்துள் மேவும் எல்லையில் - காதிற் கேட்டபோதில். அசனி ஏறு உண்ட வெம்பணியே போல் - இடியேறுபட்ட கொடிய பாம்பு போல. தலைபனி ஆகியது அது அன்றோ - முதன்மையான அன்பு என்று சொல்லப்படுவது அதுவல்லவோ ? (அதுதான் முதலன்பு).

(374) அட்டில் புகல் - சமையலறையுட் புகுதல். சிறுகாலை - விடியற்காலம். மறுகாலை வந்துங்காலத்தை. பின் எழாமல் - கணவன் எழுந்தபின் எழாமல் முன்னரே எழுதல். கற்புடையோர் செய்கை பன்னிரண்டும் ஆம் என்க.

(375) மிடியினர் - வறுமையுடையவர். கொழுநர் அன்பு மடிவிலர் கற்புடைய மாதரே எனக் கூட்டுக.

தம்மிடை

(376) பழுது அகல் கற்பு உயர் நெறிகொள் பண்பு மிகுபாவையர் - குற்றமற்ற கற்பாகிய உயர்ந்த வழியைக் கொண்ட நற்குண மிகுந்த பெண்கள். தாம் உண்பார் தாம் துயில்வார் எழுந்திருப்பார் என்று கூட்டிக் கொள்க.

(377) மாற்றவளுக்கு - மறுமனைவிக்கு ; ஒருத்திக்கு (காதற்கிழத்திக்கு). ஈதலினும் -

தனக்குப் பகையாகிய
கொடுத்தாலும். முனி
யார்கள் - வெறுப்படையார். அனையினும் ஓர் முது மாதர் - தாயைப் பார்க்கிலும் கிழப்பருவமுள்ள ஒரு பெண். புகுதல் செய்ய வினைதரார் - நுழைவதற்கு நினைக்கமாட்டார்.

(378) கறைமேல் - உரலின்மேல். பாய எழில் விறை வாயிற் படியின் மேல் - பரவிய அழகு நிறைந்த வாசற் படிமேல். மரீஇ அமரில் - பொருந்த அமர்ந்தால். திரு அகலும் - செல்வம் நீங்கும்.

(379) புறம் ஆகும் மூந்நாளும் - வெளியில் இ
நக்கும் மூன்று
நாளும். (பூப்புநாள் முதல் மூன்று நாளும்) மறம் யாகும். வசனியார் - பேசமாட்டார். அனையன் திறம்பாத - மாறுபடாத.

ஆகும் - தீவினை
- அப்புருடன்.

(380) நான்முகன் முதலோர் இமையவரை - நான்கு முகத்தை யுடைய நான்முகன் முதலாய தேவர்களை. நாயகன் அனுதை - கணவன் உடன்பாடு; ஒப்புதல். கண்ணியவான்-கருதப்பட்ட பெருமை யாகிய. கடப்பாட்டுக் கற்புடையார் - கற்புக்கடமை பூண்டவர்.

(381) மடம் அகல்நாயகனே - அறியாமை நீங்கிய கணவனே. கடவுளர், ஆரியன். முதலாகிய எல்லாரும் தம் கணவனே யென்று ஒன்றுபட்ட மனமுடன் வாழ்வார் என்பது கற்புடையவர் என்பது கருத்து.

(382) கற்பினில் ஒழுகிடாதார் அளற்றினுள் அழுந்துவார் என்க. ஆல்: அசை. நற்பான்மையின்றி - நற்குண மில்லாமல்; நல்லொழுக்க மில்லாமல். அணிகலன் துறந்த மாதர்-மங்கலநாண் நீங்கிய மங்கையர் (விதவையர்).

(383) நீரின் மூழ்கல் வெண்ணீற்றின் மூழ்கல் - நீராடுதல் திருநீறு பூசுதல். அண்ணலை - பெருமை பெற்ற கடவுளை. வைகல் - ஒவ்வொருநாளும். வழுக்கு அது ஆம் - அதுவே வழக்கம் ஆகும்.

(384) தான் நுகர் கொள்கை - தான் உண்ணும் செய்கை. தூங்கலும் உறங்குவதும்.

(385) பெய்கலன் யாவையும் - அணிந்த நகைகள் எல்லாவற்றையும். ஒநவி - நீக்கி. உடல் மாசு உண்டிட - உடம்பு அழுக்குப்படிய. வைகுவார் - தங்குவார்.

(386) முனியின் - சினந்துவைதால். துனிகொள் நெஞ்சோடு - வெறுப்பான மனதுடன். எறியினும் - அடித்தாலும். நெஞ்சகம் கனிவர் எனக் கூட்டுக.

(387) இல் அகல் தையலார் - வீட்டைவிட்டு வெளியேறித் திரியும் பெண்கள். சாம்புவார் - வருந்துவார். செய்தனம் என்பர் - செய்து முடித்தோம் என்று அப்போதே சொல்வார்.

(388) விழவுகண்ணுறல் - திருவிழாப் பார்ப்பது. பழுது இல் தூநதி ஆடல் - குற்றமில்லாத தூய புனிதநீர்களிற் படிவது. தோம் அறு - குற்றம் அற்ற. பண்ணவர் - தேவர்கள்; தெய்வங்கள்.

(389) வனையும் தம்கலன் - அணிந்த தங்களுடைய நகைகளை. மூப்பினர் சேர்வு உறு தனியில் - கிழப்பருவமுடையவர்களைத் துணை சேர்க்காமல் தனியே (சேர்கலார்).

(390) ஆயுள் சிதையும் - கணவனுக்கு வாழ்நாள் குறையும். இருந்தபோது அன்றி - காதலர் அமர்ந்திருந்தபோது அமர்வாரேயல்லாமல். முன் இருந்திடார் - முதலில் அமரார். மிச்சில் - எச்சில்.

(391) அன்பர் - அருளினல் - கணவர்தம் ஆணையின்படி. பகுத்து இனிது உண்பர் - பகிர்ந்து கொடுத்துப் பின் இனிமையாக உண்பார்.

(392) விழைந்தன - விரும்பிய செயல்களை. ஏவுமுன்னர் - செய்யென்று சொல்லுமுன். இயற்றுவார் - செய்வார். தாஇல் - குற்றமில்லாத. அன்பர்தமை அலர்தூற்றும் - கணவரைப் பழித்துச் சொல்கின்ற. பூவை அன்னவர் - நாகணவாய்ப் பறவை போன்றவர் (பெண்கள்).

(393) இயைவன - தகுந்த பொருள்கள். ஈட்டுவார் - சேர்ப்பார். அல்ல செய்தே - தகுதியில்லாத செய்கையைச் செய்து. வறிதின் - வீணுக.

(394) வழு இல் நல் அறம் - குற்றமில்லாத நல்ல தருமம். ஆற்றுதல் - செய்வது. பராய் - பரவி; துதித்து. பத்தினிக்கு அறம் தவம் செய்தல் தெய்வம் பராய் மலர் தூவுதல் கொழுநன்......... கொள்கையே எனமுடிவு செய்க.

(395) வீக்கம் - பெருக்கம்; மிகுதி. ஒழிவுஇல் நோய் இரப்பு உற்றனர் - நீங்காத நோயும் வறுமையும் அடைந்தவர். பழுது சொல்கலர் - குற்றஞ் சொல்லாமல்.

(396) மன் பெருந்தவம் - நிலைபெற்ற பெரிய தவமாகும். கற்புடைமாதர்க்கு துன்புறல், துஞ்சுதல், இன்புற்றிருத்தல் இவையெல்லாம் தவம் என்க.



(397) குலமங்கையர் - நற்குடிப் பிறந்த கற்புடைமங்கையர். தேவர்கள் மூவரில் - அயன் திருமால் சிவன் என்ற மூவர்களில். ஆளும் மெய்ம்மை அடிகள் - தம்மையாட்கொள்ளும் உண்மைக்கடவுள். (கேள்வரே) என்று எண்ணுவார் எனக் கூட்டுக.

(398) ஆன்ற - நிறைந்த. புனல் தோய்ந்தபின் - சான்ற - சால்புடைய ; நற்குணம் நிறைந்த.

நீராடியபின். (399) புனல் ஆடு நாள் -
மனதில் நினைத்துக் கொண்டு.
கதிரவனை.

நீராடுதற்குரிய நாளில். மனம் கொடு -
விசும்பில் பரிதியை - விண்ணிலுள்ள

(400)
மிசையும்
ருப்பினும்.

வசை இல் - குற்றமில்லாத. வைகுறில் - தங்கியிருந்தால்.
நல்லமுதேனும் - உண்ணும் நல்ல தேவாமிர்தமாயி
உளம் நசையோடும் - மனவிருப்பத்துடன்.

(401) தன்னையர்
கொழுநர் பால் காதல்

தம்மினும்-உடன் பிறந்தவர்களைப் பார்க்கிலும்.
கூர்ந்து - கணவரிடத்தில் அன்பு மிகுந்து.

(402) முறத்தினில் - சுளகில். திரு

அகன்றிடும்-செல்வம் நீங்கும்-

(403) பணித்திடாது - (கட்டளையிடாமல்)
கூறுமல். ஆற்றுவார் - செய்வோர்.

ஏவாமல் ; செய் என்று (404) பழிமொழிபவர்,
வலாகப் பிறப்பர் என்க. ஓரி

வெகுண்டுரையாடுநர். ஓரியாய் முடு
- நரி. முடுவல் - பெண்ணாய்.

(405) உழுவை ஆக - புலியாக. உருத்து - சினந்து; நெஞ்சு அழல - மனங்கொதிக்க. கழல்கண் கூகைப்பிறப்பில் - கழற்சிக்காய் போன்ற கண்களையுடைய கூகை யாகிய பிறவியில் பிறந்து.

(406) ஏதிலான் - அயலான். பேது செய்து உழல் - மாறுபாடு செய்து திரிகின்ற. காதலன் பசிக்க களித்து உண்பவர் - கணவன் பசியோடிருக்கத் தாம் மகிழ்ந்துண்பவர். தோன்றுவார் - பிறப்பார்.

(407) அருநெறி தலை வைக்கும் அரிவையர் - அருமையான வழியில் முயற்சி செய்யும் பெண்கள். புரவி நன்மகப்பேறு பொருந்துவார் - அசுவமேதம் என்ற வேள்வி செய்தவரடையும் பயனை யடைவார்.

(408) புற்று அரா கொடு புள் அரசு ஏகல் போல் - புற்றிலுள்ள பாம்பைப் பற்றிக் கருடன் செல்வது போல. எற்றுகால படர்கை பறித்து இனிது உற்ற கேள்வரோடு - தம் கேள்வரைக் கொன்ற

யமதூதர் கையினின்றும் பிடுங்கி இனிமையாகப் பொருந்திய அக் கேள்வருடன், உம்பரின் - தேவருலகில்.

(409) அன்னவள் காணின் - அத்தன்மையான கற்புடையவளை யமன் கண்டால். உழுவல்
அன்புடைய கணவனை. ஓடும்

அன்பனை - எழுமையுந் தொடர்ந்த
- ஓடுவன் (கூற்றுவன்).

(410) படர்சிகை கனல்-பரவிய
கொடிய ஒளிக்கற்றைகளையுடைய

கொழுந்துடைய தீ. வெங்கதிர்-
கதிரவன். பால்மதி-வெண்மை

யான திங்கள். கற்பினர் காந்தி-கற்புடைய மாதர்களுடைய ஒளியை. கண்ணுறின் - பார்த்தால். பொலிவு இலதோன்றும் - விளக்க மில்லா தவையாய்த் தோன்றும்.



(411) மெய்ம்மயிர் ஒன்றினுக்கு - உடம்பிலுள்ள மயிர்கள் ஒவ் வொன்றுக்கும். (ஒவ்வோர்) ஆயிரங் கோடிகாலம். இன்புறும் - இன்பத்தையடைவாள்.

(412) கனம் குழை - கனமான செவிப் பூண் புனைந்த. மரபும் - குலமும். காதலன் ஆர் உயிர் சுற்றம் யாவும் - கணவனுடைய அருமையான உயிர் போன்ற சுற்றத்தார் எல்லாரும். துறக்கத்தின் - பொன்னுலகத்தினை. எய்தும் - அடையும்.

(413) பொருவில் - ஒப்பற்ற. கற்பின் வழீஇய - கற்பு நெறி கடந்த. வெருவந்து-அஞ்சி. ஏங்கி - பெருமூச்சு விட்டு. உமிழ்கலா- உமிழாத - கக்கிவிடாத (நரகில்).

(414) சிறடி - சிறிய அடிகள். தோயினும் - அடிதோய்ந்த அவ்விடம். புண்ணியத் தலம்

பட்டாலும். அஃது -
- நல்வினையளிக்கும்
இடமாம்.

(415) குரவர் தாம் - பெற்றோர்கள் தாமே. இயைந்து - மனம் பொருந்தி. குமரவேள் - முருகனாகிய விரும்பப்பட்டவன். அருவரா நிற்பர் - வெறுப்பார். உருவிலார் எனினும் - அழகில்லாதவராயினும். அனையவர் தம்மை - அவ்வுருவிலாதவரை. பரவுவான் கடவுள் - (யாவரும்) துதிக்கும் பெருமைவாய்ந்த தெய்வம். பண்பொடும் பயிலும் - நற்குணத்துடன் பழகுவார். அன்று, ஏ: அசை.

(416) இல் பிறப்புடைய மாதர் - நற்குடியிற் பிறந்த பெண்டிர். கேள்வன் யாது உரை செயினும் - கணவன் எதனைக் கூறினும். அவன் தொழுது - அக்கணவனையே வணங்கி. பிற்பட நுகர்ந்து - உண்டபின் உண்டு. துஞ்சி - உறங்கிய பின் உறங்கி. முற்றும் கற்பினில் - முற்றிய கற்பு நெறியில். வழாது நிற்றல் - தவறாமல் நிற்பது. அவர்க்குக் கடன் ஆகும் எனக் கூட்டுக.

(417) சாம் எனில் சாதல்-இறப்பான் கணவன் என்றால் இறப்பது. நோம் (எனில்) நோதல் என வருவித்துக் கொள்க. தன்னவன் - தனக்குரியவன், (கணவன்). தணந்தகாலை - பிரிந்தபோது. மனும் - பொருந்தும்படி. சொல்லார் - துதியாமல். செல்லல் - துன்பத்தை.

(418) கடுங்கதிர் - கொடிய சூரியன் வெயிலின். தகைசால் - நற்குணம் அமைந்த. கொற்றம் சிதையாது - வெற்றியழியாது. நாடு - நாட்டில். என்னும் அத்தகு நல்லுரை நீ அறியாய்பா என்று சொல்லப்படும் அத்தன்மையான நல்ல பழமொழியை நீ யறியாயோ? (அறிவாய்).

(419) கனை எரி பொத்தி - பெருந்தீயை மூட்டி. ஊது உலை குருகின் உயிர்த்து - கொல்லன் உலைக்களத்தில் ஊதுகின்ற துருத்தியைப் போலப் பெருமூச்சு விட்டு. நல் நீர் பொய்கையின் - நல்ல நீரையுடைய தடாகத்தைப் போலத் தீ பெரியுமிடத்தைக் கருதி. நளி எரி - பெருந்தீயில். நோற்று - கைம்மையர் செய்யும் தவம் (விரதம்) செய்து.

(420) கூடலால் - பொருந்துவதால். தவர்-முனிவர். பாடுசால் மிகு - பெருமை மிகவமைந்த.

(421) மெய்க்கொண்ட உள்ளத்து - உண்மையைப் பொருந்திய மனமுடைய. தப்ப - பிழைசெய்ய. கடன் அன்று - முறையல்ல. அறிவுடையார் அறிவில்லார் ஆயினும் தம் கணவர்க்குப் பிழை செய்வது கற்புடையார்க்குக் கடமையன்று என்பது கருத்து.

(422) புலன்கள் வீக்கியும் - ஐம்புலன்களை யடக்கியும். நுங்குவ அருந்துவ - விழுங்கும் உணவும் உண்ணும் உணவும். எங்கு உளர் - எங்கு இருக்கின்றனர் (அவரைக் காண்பதரிது). நவிலற்பாலதே - சொல்லுந்தன்மையுடையதோ? (சொல்ல முடியாது அவர் தவத்தின் பெருமை).

(423) மல் அடு திரள் தோள்-மல்லரை வெல்லுந் திரண்ட தோளை யுடைய. கற்பின் மேல் - கற்புடைய மாதரிடத்தில் இருப்பதற்கு அதிகமாக. கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சம் கண்டது உண்டோ என்க. இல்லொடுந் தொடர்ந்த மாதர்க்கு - குடிப்பிறப்போடு கூடிய பெண்களுக்கு இரும்பு கேட்டி எனக் கூட்டிப் பொருள் கொள்க.

(424) எப்பணியால் காதலர் இன்புறுவர் - எத்தொழிலைச் செய்தால் கணவர் இன்பத்தையடைவர். மனம் குழையும் வண்ணம் - அவர் மனமானது கனியும் விதமாக.

(425) தணவு அரும் - நீங்குதற்கரிய. ஓர் உருவம் கொண்டு - அன்பு முதலிய பண்புகள் எல்லாம் ஒரு வடிவங்கொண்டு. நீராள் - தன்மையுடையவள். ஓர் குடி - ஒப்பற்ற நற்குடியில்.

(426) கொண்கன் நினைப்பு அறிந்து - கணவன் கருதிய குறிப்பினை யறிந்து. தேசு உறு - புகழ் பெற்ற. பெற்றதே கொண்டு உவப்பாள் - தனக்குக் கிடைத்த பொருளையே பெற்றுக்கொண்டு போது மென்று மனமகிழ்ச்சியடைவாள்.

(427) காட்சி - காண்பதற்குரிய. குதலை வாய் - மழலைச்சொற் பேசும் வாயையுடைய. குலமகளுக்கு வேறு காதலனைப் பெறலாமோ எனக் கூட்டுக. கற்புடையார்க்கு வேறு காதலரைப் பெறுவது முடியாது என்பது கருத்து. பொழியா - பொழிந்து, (கண்ணீர் வடித்து.)

(428) அயிராணி - இந்திராணி. (இந்திரன் மனைவி), விரும்பிப் .........பேணும் நறுநுதலாள் - தன்னை விரும்பித் தன்மேற் காதலால் தன் பின் வந்து நிற்கும் ஆடவரில்லாமையைக் காக்கின்ற பெண்ணே. நன்மைத்துணை - நல்ல துணையாவாள்.

(439) குரூபி - அழகில்லாதவன். பண்டு தான் செய்த பலன் - முற்பிறப்பிற் செய்த வினையின் பயன்.

(440) பித்தன் ஆகிலும் தன் கணவன் தனைக் கண்ணெனப் பேணுவாள் அவள் பெண் என்பாள் எனவும், பெண் அலள் பெண்கள் தெய்வம் என்று எண்ணும் எனவுங் கூட்டிப் பொருள் கொள்க.

பெண்ணாகிலும் அவள் பெண்ணல்லள் பெண்களுக்கெல்லாம் தெய்வம் என்பது கருத்து.

## கூஉ. மக்கட்பேறு

(445) தமது மைந்தர் தங்குடி பரித்தபின் அன்றித் தந்தையாயினோர் இனிது வீற்றிருப்பதும் உண்டோ (இல்லை). எந்தை - என் தந்தை. தொன்முறை போற்றலால் - பழைமையான முறைப்படி காப்பதால்.



(446) மகவே - குழந்தைகளே ; பிள்ளைகளே. கதி ஆக்கும் - வீடு பேற்றைக் கொடுக்கும். மக + ஆண் மகவின் மகவான் உலகந்தனை வெல்லும்-பிள்ளைகளால் இந்திரனுலகத்தையும் வெல்வான் (ஒருவன்). முடிவின்மை எய்தும் - இறவாமையைப்பெறுவான். மகவின் மகவழி தம் மகவான் மேலைப்பதம் உறும் - பிள்ளைகளாலும் அப்பிள்ளைகள் வழியிற் பிறந்த பேரர்களாலும் மேற்கதியை யடைவான் (ஒருவன்).

(447) சிறப்பும் மாண்பும் பெறுதலினால் மைந்தர் தமைப்பயந்து அவர்க்கு அவையின் முந்திருப்ப அறிவு கொளுத்தல் வேண்டும் எனக் கூட்டுக. தென்புலத்தார் முழுதும் உவக்கும் கடன்-பிதுரர் எல்லாரும் மகிழ்ச்சியடைவதற்குரிய கடமை. பெறுதலினால் மைந்தனைப் பெற்றவனொருவன் பெறுவான் என்னும் துணிவினால். குழுமும் அவை - கூடிய அவை.

(448) இம்மை - இப்பிறப்பு. மறுமை - மறுபிறப்பு. அம்மென் மைந்தரையில்லவர்க்கு - அழகான மெல்லிய மக்களில்லாதவர்க்கு.

(449) கண் இல் யாக்கையும்-விழியில்லாத உடம்பும். அண்ணல் - பெருமையுடைய. அருளில் திண்ணென் நெஞ்சமும் - கருணை (இரக்கம்) இல்லாத கடினமான (இளகாத) மனமும். புலவர் இல் அவையும் - அறிவுடையாரில்லாத கூட்டமும். ஒண் தீ பால் வண்ணம் வாய்இள மக்கள் - ஒள்ளிய இனிய பால் குடிக்கும் அழகிய வாயையுடைய பிள்ளைகள் (இல்லாதவாழ்வு) ஒப்பாம் என்க.

(450) சேறு அளைந்த-(சேற்றில் விளையாடியதாற்) சேறுநிறைந்த. அடித்தளிர், கைத்தாமரை, மார்பினேடு மகார்உந்தி ஏறும் இன்பம் உள்ளதனையே - அடித்தளிரோடும் கைத்தாமரையோடும் மார்போடும் வந்து மக்கள்உதைத்து ஏறும் இன்பமுள்ள உடம்பினையே (உடம்பு என்று சொல்வார்) மற்றுள்ள உடம்பு எல்லாம் உடம்பன்று மரம் என்க.

(451) அரிகொள் பொன்புனை-பரல்கொண்ட பொன்ஞற் செய்த. தருணம் - இளமையான. மருஅருத - மணம் நீங்காத. மழலை ஆர் அமுதம் பருகிலாச் செவி - மழலைச் சொல்லாகிய அமுதத்தை யுண்ணுத செவி. (மழலைச்சொற் கேளாத காதுகள்) பாவையின் செவி எனப்படும். மரத்தால் மண்ணுற் செய்த பாவையின் காதுகள் என்று சொல்லப்படும்.

(452) இல் ஒழுக்கம்-வாழ்க்கைக்குரிய நல்லொழுக்கம். உஞற்றி - செய்து. வான் கிரயத்துயர் சிந்துவான் வல்லமக்கள் - பெரிய நரகத்தில் அழுந்தும் துன்பத்தைக் கெடுக்கும் வன்மையுடைய மக்களை.

(453) மெத்துகின்ற - உயர்த்தும். விழுமிய - மேலான. இருமை இன்பும் - இப்பிறப்பு மறுபிறப்பு ஆகிய இரண்டினும் இன்பம்.

(454) இறைவர் ஞானம் - கடவுள் உண்டென்ற அறிவு. ஏதம் இலாமை - பிறவுயிர்க்குத் துன்பமில்லாமல் வாழ்வது. மறவர்ஏனும் - பாவிகளாயினும். வல்வினை - தீவினை.

(455) பொறியிலர் ஆய ஆற்றுன் - செல்வமில்லாதவராகிய காரணத்தால். விழைவர்-விரும்புவார். உய்த்த நன்மகவு - பெற்றநல்ல பிள்ளைகளையும். ஓர் ஏழ்பான்மையாய் - எழுவகைத் தன்மையாக.



(856) அவன் அருளால் - கணவன் ஆணையால். அயலாற்கு ஈன்றோன் - அயலானைக் கூடியவனுக்குப் பிறந்தவன். மகஎன புகுந்த - குழந்தையென்று தன்பால் வந்துசேர்ந்த- தனையைசெய் - மூத்தாள் மகன். தன்னுல் ஆவி உய்ந்தவன்-தன்னுல் உயிர்பிழைத்து வளர்ந்தவன். எழுவர்வகையை இதிற் காண்க.

(457) நெறி இகந்து தம் மரபின் நீர் அல செய்யும் மறுவின் மைந்தரைப் பெறுதலின் - முறைதவறித் தம்குலத்திற்கு ஒவ்வாத செய்கை செய்யும் குற்றமுள்ள மக்களைப் பெறுவதைககாட்டிலும். அஞர் உற்று - துன்பமுற்று. அவன் துறந்து -

அம்மைந்தனை விடுத்து.

(458) பெறினும், இருக்கை எய்திடினும் மைந்தர் வாழ்வது வாழ்வு அன்றே என்று கூட்டுக. மற்று - அசை.

இன்றியே
பார் முழு

வதும் ஒருங்கே வந்து - பூமியில் உள்ள மாந்தரெல்லாரும் ஒன்றாகக் கூடிவந்து. இந்திர ஆதியர் - இந்திரன் முதலான தேவர்கள். பெரும்பதத்து - பெரிய பதவியில்.

(459) பல படைப்பு படைத்து - பலவகை

உணவுப் பொருளைச்

சமைத்து. இடைப்பட - நடுவாக. குறு குறு நடந்து - குறு குறு வென நடந்து. குறு குறு: விரைவுக் குறிப்புச் சொல். அடிசில் - சோறு. மெய்பட விதிர்த்தும் - உடம்பிற் படும்படி யுதிர்த்து (சிந்தி) பயம் குறை இல்லை - பயனாகிய குறையில்லை. பயக்குறை: இருபெய ரொட்டுப் பண்பு. வாழ்விற்குறையாக நிற்பது அதுவே பயம் என்க.

(460) சேய்இலா செல்வம் - மக்களில்லாச் செல்வ வாழ்க்கை. போகப் புணர்வுஇலா - காமவின்பப் புணர்ச்சியில்லாத. மேவ - போய்ச்சேர. வனசவாவி - தாமரைத் தடாகம். துகில் இலா - ஆடையில்லாத. நறை - மணம். நன்னீர்ச்சிறை - நல்ல நீரைப் பெருக்கி வைத்திருக்கும் ஏரி குளம் முதலியவை.

(461) தொக்கு-கூடி. துதைவு-நெருக்கம். இனமலர் தொக்கு துதைவு இலாத எனவும் இளந்தாமரை புக்கு நகாத எனவும் இளம்பிறை மிக்கு விசும்பு இலாத எனவும் மாற்றிக் கொள்க. புக்குநகாத-தாமரை நுழைந்து படர்ந்து மலராத. மிக்கு-ஒளிமிகுந்து. சோலையும் பொய்கையும் அந்தியும் மனையும் ஒக்கும் என்க. பயனற்றவை இவை.

(462) சூழி - முகபாடம். துளைகை மா-துளையுடைய துதிக்கையையுடைய விலங்கு (யானை). மாழை - பொன். மணி - இரத்தினம். அரியது ஆவது மக்களைப் பெறுதல் எனவும், யானை பொன் மணி இவை எளிய எனவும் கொள்க.

(463) சொல் மருமகன்-பெற்றோர் சொல்லுஞ் சொல்லை மறுக்காத மகனை. பொன்னின் வார்கழல் புரந்தரன் - பொன்னாற் செய்த வீரகண்டையணிந்த இந்திரன். பிறர் ஆர் - அயலார் யார் ஒருவருமிலர்). கோன் பிழைத்தவர் மகற் பெற்றார் இவரே துயர் துறந்தார் என்க.

(464) கல்லா மழலை - பயிற்சியில்லாத குதலைச் சொல். கனி ஊறல் - பழச்சாறு.

(திருக்காத)

*(465) தென்பாலவர் தம்-பிதுரர்களுடைய வினையால் - பாவத்தால்.

(முன்னோர்களுடைய).

பால்]

(466) தானம் - சோறளித்தல் (அன்னதானம்) முதலியவற்றைக் குறித்தது. வண்மை - கொடை. இஃது எப்பொருளைக் கேட்பினும் மறுது கொடுப்பதைக் குறித்தது. மைதாழ் - மை பூசிய. இவணும்- இப்பிறப்பிலும்; இவ்வுலகத்திலும்.

(477) கருங்கழல் - பெரிய வீரகண்டை. வியலிடத்தார்-பூமியில் உள்ளவர். எண்ணார் இகல் அவிந்தார் - பகைவர் போரை (மாறு பாட்டை) விடுத்தார்.

(478) வனையும் மாமுடி - சூடிய பெரிய முடியையுடைய, தவம் அருள்தனம் எனும் தகையார் - தவம் என்றும் கருணையென்றும் பொருளென்றும் சொல்லப்படும் பெருமையுடையவர்.

(479) மழலை மொழிப்பொருள் - மக்கள்; மழலைமொழியையுடைய உயிர்ப்பொருள் என்று காரணக் குறியாக்குக. விரை - மணம். விது - திங்கள். உற்பவம் - பிறப்பு.

## கங. உடன்பிறந்தார்

(487) பின்னை உள பொருளை எல்லாம் - பின்னும் உள்ள பலவகைப் பொருள்களையெல்லாம்.

(உலகத்தில்)

(488) திண்பொருள் - திட்பமான (உறுதியான) பொருள் (செல்வம்). உடன்பிறப்பு ஆக்கல் ஆகா - உடன் பிறந்தவர்களை உண்டாக்க முடியாது. எம்பி - என்தம்பி.

(489) கம்பம் மதத்து களி யானை - கட்டுத் தறியிற் கட்டப்படும் மதச் செருக்கினையுடைய யானை. கொம்பும் - பூங் கொம்பு போன்ற சீதையும். வம்பு - மணம்.

## கச. பெற்றோர்ப்பேணல்

(495) அந்தம் இல்கடன் ஆற்றுதற்கே - கடன்களைச் செய்து முடிப்பதற்கே.

அளவில்லாத இறுதிக்

(897) அயர்த்திலன் - மறந்திலன். நயத்துறை நூலின் நீதி - நல்வழியாக நூல்களிற் கூறப்பட்ட நீதியை. சயத்துறை - வெற்றிக்குரிய வழியாம். சமைய - பொருத்தமாக.

(898) நிறையின் நீங்கிய - கற்பு நீங்கிய. அருள் துறையின் நீங்கிய வரமும் - கருணைவழி நீங்கியவர் தரும் வரங்களும். அரசின் மூந்துமோ - அரசாட்சியைப்போலக் கொடுமையில் உயர்ந்தனவாமோ? (ஆகாது.)

(899) ஞால முற்றும் உடையவன் - பூமி முழுதும் உடையவன் (சூரியோதனன்). வண்துவரை நாதனும் - வளமான துவாரகைப்பதிக்குரிய அரசனும் (கண்ணனும்). சீலம் அற்றவர் - நற்குணமில்லாதவர்.

(900) அற்ற உறுப்பு எல்லாம் - அறுபட்ட (குறைந்த) கைகால் முதலிய உறுப்புக்களெல்லாம். கழலாய் - வீரகண்டையுடையவரசனே! வெற்றிமேற்போம் எனக்கூட்டி வெற்றி உயர்ந்து நிற்கும் என்க. அவம் ஆய - தீயகுணங்களையெல்லாம்.

(901) பொங்க-பெருக; மிகுதியாக. வெகுளி பொங்கினால் மயக்கம் வரும், வந்தால் தெரிபவை சிதையும், சிதைந்தால் உணர்வு மாயும், மாய்ந்தால் அனைத்தும் மாய்ந்தொழியும் என்று பொருள் கொள்க. தெரிபவை - மனத்திற்குத் தெரிந்த நன்மைகள். சிதையும் - அழியும்.

பால்] உ அ. இன்சொல்

499

(922) முன்னைவினை பயன் ஆயிற்று ஆம் என்று அதன்கண் மெய்ம்மை நினைத்து ஒழிய நெஞ்சில் நோய் இல் - இவ்வாறு நம்மை யிகழ்ந்துரைத்தது முற்பிறப்பிற் செய்த தீவினைப் பயனால் ஆயினது தான் என்று அச் செயலின்கண் உண்மையை ஆய்ந்து சினம் நீங்கினால் உள்ளக் கவலை நீங்கும்.

(923) அறிவு

என்ற தண்ணீரால் இன்னாச்சொல் என்னுந் தீயை வேண்டாம்; இப் பொறுமையே தவமாம் என்பது கருத்து.

## ௨௭. சினம்

(940) வெங்கதம் - கொடிய கோபம். வினை விளைவிக்கும் - பாவத்தை மேன்மேலும் உண்டாக்கும். தபோதனர்க்கு - தவத்தைப் பொருளாகக் கொண்டவர் (முனிவர்) கட்கு.

(941) யாவர்க்கு நன்றும் என்னினும் (அது) முனிவர்க்குச் சிறந்ததென்று பேர் அண்ணல் இன்பம் மேவற்கு விமலன்சொன்னான் என்று கூட்டுக. அல்லமப் பிரபு சித்தராமனுக்குக் கூறிய அறிவுரை இது. மூவர்க்கும் அரிய செய்யும் முனிவர்க்கு - பிரமன்மால் சிவன் என்ற மூவராலும் செய்ய முடியாத செயலையும் செய்யவல்ல முனிவர் எனக் கொள்க.

(942) ஆக்குவது ஏது எனில்- உலகத்தில் மனிதர்களாற் செய்யப்படுவது (எச்செயல் என்று வினவின் அதற்கு விடை) அறத்தை யாக்குக என்பது. நோக்குவது - ஆராயப்படுவது.

(945) மனப்புற்றில்-உள்ளமாகிய புற்றில். இராகம் முனிவு எனும் பணிகள் இயக்கம் இல்லை - விருப்பு வெறுப்பு என்ற பாம்புகள் நடப்பது உலாவுவது இல்லையோ. அவன் - அத் தன்மையுடையவன். (ஆகிய கற்பகதரு). காமம் வெகுளி நிறைந்தோரே வேசரிபோல் - ஆசையும் சினமும் மிகுதியாக உடையவரே கழுதையைப் போலக் கருதி.

(946) செறிவு - அடக்கம்; உயர்வு சிறப்பு. நெறிகேடு - நல்லொழுக்கத்திற்குக் கெடுதி. ஈண்டு இடர் எதிர் இல்லை - இவ்வுலகில் துன்பஞ் செய்வதில் ஒப்பாவது ஒன்றுமில்லை (கோபம் போல்).

## ௨௮. இன்சொல்

(956) வந்த விருந்து மலராத வதனம் - விருந்தாக வந்தவர்களது மகிழ்ச்சியில்லாத (வாடிய) முகத்தினை. நோக்கு முன்குழையும் அந்த அடைவால் - பார்த்தவுடனே உருகுகின்ற அத்தன்மையால். அலர்ந்த முகத்தால்-மலர்ந்த (மகிழ்ச்சியான) முகத்தினால். கலவாமே- சேராமல். உந்தும் சுவை இன்மொழி - சுவையைத் தரும் இனிய மொழி. பயன் வேண்டின் உரைத்தல் வேண்டும் எனக் கூட்டுக.

•(957) இதம்செய இசைந்த நாவை - நன்மை செய்வதற்குப் பொருந்திய நாக்கினை. துனியுறு - வெறுப்பைத் தரும். துகள் உறச் செய்தல் - குற்றமுள்ளதாகச் செய்வது. தருவை - மரத்தை. கடிந்து - வெட்டி. கிளை களைந்து - கொப்புகளை நீக்கி. பனிபடு தீயில் - நடுக்கத்தை யுண்டாக்கும் நெருப்பில்.



[அறத்துப்

(958) ஐயகோ - இரக்கங் குறிக்கும் இடைச் சொல். இன்சொல லோடு மெய் உரை - இனிய சொல்லுடன் உண்மையும் பேசுகின்ற. விமலம் நாவே - தூய்மையான (குற்றமில்லாத) நாக்கே.

## உ௯. நடுவுநிலைமை

(978) ஆக்கமொடு மைந்தரை அளிக்கும் - (நடுநிலையானது) செல்வத்தினையும் மக்களையும் சேரக் கொடுக்கும். மருமான் வழிக்கு நிலையாக்கும் - அவற்றை வழிவழியாக நிலைமையாக நிறுத்தும். முதல் மூவரின் ஒப்ப - முதன்மையான தேவர் (பிரமன் மால் சிவன்) மூவரோடொப்பார். இகப்பின் - (நடுநிலை) நீங்கினால். பெரும்பிழையே பொருந்தும் என்க.

(981) நாரங் கொண்டார் நாடு நண்பர்களுடைய நாட்டினை. வாரங்

- தம் மேல் அன்பு வைத்திருக்கும்
கொண்டார்-உரிமை கொண்டவர்.

தருமப் ஈரும் - அறமானது அறுத்து விடும். கண்டகர்
கொடியவரில் எவர் பினமூத்தவர் (ஒருவருமிலர்).

உய்ந்தார் எவர்- (985)
(இருவரில்

வாரங்கொண்டு - உரிமையாக நின்று. ஓரம்
ஒருவர்) பக்கமாக வழக்கு முடிவு கூறினவர்.

சொன்னூர் -

(986) நாரிகள் வழக்கது ஆயின் - அன்புடையார் வழக்காக இருப்பினும். ஓரமே சொல்வாராகில் - ஒரு பக்கமே சேர்ந்து வழக்குப் பேசி முடிவுரை கூறுவாரானால். கிளையும் - சுற்றத்தாரும்.

## ௩௦. அருள்

(993) அத்திரம் சத்திரம் உகிர் ஆதிகளினால் - கையிலிருந்து ஏவி விடும் ஆயுதம், கையில் வைத்திருக்கும் ஆயுதம், நகம் முதலியவற்றால். அடர்ந்து எதிர்த்து - நேர்நின்று நெருக்கி. நெய்த்தோர் உள்நின்று எழ - குருதியுள்ளிருந்து மேல் வடிய. கொத்து அழலார் வெம்நிரயக் குழி - நிறைந்த நெருப்புள்ள கொடிய நிரயக் குழியில்.

(994) சத்தியம் வாதி - உண்மை பேசுவோன். திடவிரதன் - உறுதியாக விரதமுடையவன். தயவினோன் - அருளுடையவன். ஆகிய நால்வர்.

(995) ஆகரவு இலையேல் - அருளில்லை யெனில்; இரக்கமில்லை யெனில். அறத்தினிற் பொருள் - தருமத்தின் பொருட்டுப் பொருளினை. ஓர் செம்பொன் பூதரம் அளவு - ஒரு பொன் மலையின் அளவாக. (பயன் பொருள் அழிவு அளவே.

(996) சீர் - புகழ். ஒண் தவம் - விளக்கமான தவம். இவை அனைத்தும் ஆதரவு இல்லையாயின் இல்லை - மேற் கூறிய இவை யெல்லாம் அருளில்லை யெனில் அழிந்து விடும். (ஆதரவில்லாமற் செய்யும் அறத்தால்) மெய் வருத்தம் பெரும் பொருள் அழிவு பெறுவன - உடலுழைப்புத் துன்பமும் மிகுந்த பொருட்கேடுமே பெறும் பயனும்.

(997) அல்லவும் - பாவமும், தீமையும். ஆவிக்கு அருந்துணை உயிர்க்கு அருமையான துணையாம்.

பால்] ௩௦. அருள்

501

(998) எம்முயிரின் நேர் என்று - நம்முடைய உயிர்க்குச் சமமான தென்று கருதி. அவ்வியம் அகன்று - பொறாமை நீங்கி. செவ்விமையின் நின்றவர் - நல்லொழுக்க வழி நிற்ற உயர்ந்தோருடைய. உயிர் விளங்கு - உயிருடன் வாழ்ந்து விளங்குவாய்.

(999) மருள் உடை மறவருக்கு - மயக்க முடைய செயலுடையவர்க்கு. புரவல - அரசனே!: விளி. அருள் செய்து - அருளின் தன்மையான செயல் செய்து.

பாவச்
இயல்

(1000) ஆருயிர்க்கு அபயம் நல்கி - அருமையான உயிர்ப் பொருள்களுக்கு அச்சத்தை நீக்கும் உறுதி கூறி. புறங்கணித்திட்டு - வெளியிற் போக்கி விட்டு. இருள்புரி வினைகள் - மயக்கந் தரும் தீமைகள். வானவர் இன்பம் அல்லால் மருள் செய வருவது உண்டோ எனக் கூட்டுக.

(1001) வதங்கள் பன்னிரண்டு மேவும் - பன்னிரண்டு வகையான கொலை செய்யப்பட்ட. வருந்தின் - அவ்வுயிர்கள் துன்பப்பட்டால் (இரங்கிச் சிதைந்து). கதம் கடிந்து - சினத்தை நீக்கி.

(1002) கரிசு அற - குற்றம்
மனத்திலுள்ள மயக்கம் நீங்கினன்

நீங்க. மனமயல் அகன்றன் ஏனும்-
என்றாலும். இலகிய - விளங்கிய.

(1005) எண்ணுறும் எனக்கே - அத்துயரத்தை
எனக்கே. இசைத்த போது - அவ்வுயிர்கள் என்பாற்

நினைக்கின்ற
கூறியபோது.

நல்குதல் எனக்கு இச்சை - அவ்வரத்தை எனக்கு வேண்டும் என்பது என் விருப்பமாகும்.

நீ கொடுக்க

(1006) இன்புறச் செயவும் அச்சம் நீக்கிடவும்
ஓங்கவும் இச்சை எனக்கு உண்டு என்க. ஓவ்வுறு
செருக்கினற் கெடாது.
களிப்பால் அழிவுறாது - பொருந்திய
(1007) தவிர்த்து அவர்க்கு இன்பம் தரவும், உளற்

றவும், வழுத்தவும், வாழ்த்தவும் இச்சை எனக்குள்ளது என்க. தருணம்-புதுமையான. வன்புலை கொலை - வலிய இழிதொழில், கொலை செய்வது. ஒருவிய - நீங்கிய.
(1008) அறவிய - அறஞ்செய்யத் தக்க.

சுரக்கும் - பெருக்கிக் கொடுக்கும். தம்மாற் காமுறப்பட்ட எல்லாம் கறவையில் கறக்கும்- தம்மால் விரும்பப்பட்ட பொருள்களை யெல்லாம் பெருக்கித் தரும்.

பசுவைப் போலப்

(1009) தான் பரிந்து ஓம்பும் ஆறு போல் - தான் வருந்திக் காக்கும் விதம் போல. பொன் உயிராய் - பொன் போலப் பிறர் போற்றத் தக்க உயிராக.

(1010) இகந்து ஒரீஇ-நீங்கிவிட்டு. கதிகள் நல்லுரு-நாற்கதிகளில் நல்லவுருவத்தை. மதிகள் போல - அறிவுடையார் போல. மறுவிலர் தோன்றுவீர் - குற்றமில்லாதவராய்ப் பிறப்பீர்.

•(1011) இவ்வழி - இவ்வுலகத்தில். பொறியின் போகமும் - ஐம் புலன்களால் துய்க்கும் இன்பம். (கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் இன்பம்) உருள்பிலா - உருளாத (கல்லாத). தெருள் இலார்க்கு - தெளிவில்லாதவர்க்கு. திருவின் செல்வி இசைவிலள் - திருமகள் சேரான்.



(1012) கடவுள் தானம் சேர்ந்தவர் - தெய்வத்திற்குரிய இருப்பிடம் சேர்ந்தோர்; (தொண்டர், அடியார்). களைகண் இல்லார்-ஆதாரமில்லாதவர் (அனாதைகள்). அற்றவர் - வறுமையுடையவர். அனைய நீரார்க்கு - அத்தன்மையுடையவர்க்கு.

(1014) சாவைப்பெற்றவரே - சாவதுபோன்றவரே. தகை வான் உறை - பெருமை தங்கிய

துன்பத்தையடைந்

வானில் வாழ்கின்ற.

(1015) இறப்ப - மிகுதியாக. எவ்வம் நோய் - துன்பத்தொடு சேர்ந்த கவலை. எல்லார்க்கும் அவ்வாறே உறுதி எண்ணல் அறம் என்பது கருத்து.

(1016) உண்மையாகிய தகளியில் பொறுமையாகிய திரியை யிட்டுத் தவமாகிய எண்ணெயை நிறைத்து அருளாகிய விளக் கேற்றினால் அஞ்ஞானமாகிய இருள் நீங்கும் என்பது. உண்மை

பொறுமை தவம் இம்மூன்றுங் கூடினால் அருள் உள்ளத்தில் உண்டாம் என்பது கருத்து. அம்மைபால் - மறுபிறப்பின்கண். இழுது ஆவர் - வெண்ணெய்போல உருகுவர் கண்கலுழுமே (அதுபோல உருகுவர்.)

(1021) பேரறிஞர் தாங்கி காக்க விரைகுவார் - தன் மேற் கோலடி கை கடிது சென்று தாங்கும் என மாற்றுக. தன்மேற் படவரும் தடியடியைக் கை விரைவாகப் போய்த் தாங்கும்; அதுபோல் (தாங்கிக் காப்பார்).

## ௩௩. பிறர்க்குத் துன்பஞ் செய்யாமை

(1030) பிழைப்பு அற எய்தும் - குற்றம் மிகவும் சேரும். கருதல் இனியஆம் - நினைப்பது நலமாம்......அடக்கல் ஒழுக்கு எனப் புலமை யோர் புகல்வார் - அடக்குவதே நல்லொழுக்கமென்று அறிஞர் கூறுவார்.

(1031) இருள் வயிற்று ஆர்ந்த புத்தேட்கு - இருளினை உண்டு வயிறு நிறைந்த தெய்வத்திற்கு (சூரியனுக்கு). கலைமதி தன்னை - கலை நிறைந்த சந்திரனை. செவ்வி மறைத்ததால் - அழகினைக் கெடுத்ததனால். சந்திரன் பனியால் தாமரை மலரைக் கருகச் செய்தான் அப்பனியே சந்திரனொளியையும் மறைத்தது. (ஆதலால்) ஒருவருக்கின்னா செய்யின் அவை தனக்கு உறுவது என்க. அன்று + ஏ : அசைகள்.

(1032) மறம்கொடு தீயாய் - வலிய கொடிய நெருப்பாகி. சாதல் ஆகும் - சாவது போன்ற செயலாகும். ஓர்ந்து உறுதியை உணர்க - ஆய்ந்து உறுதியாய்ச் செய்யவேண்டுவது இன்னதென அறிக.

(1033) தேவர்க்கும் கைகூடா திண்ணன்பினர்க் கேயும் - தேவராலும் பிரித்துவிட முடியாத வலிய அன்புடையவர்களிடத்தும். நோவ செயின் நோன்மை இல் - அவர் வருந்தும்படியான துன்பத்தைச் செய்தால் பொறுமை இல்லாமற் போகும்.

## ௩௨. கொல்லாமை

(1042) கோறல் செய்தோர்கள் உயிரினை அவ்வுயிர் எய்தி சோர்வு உறக்கொல்லும் - கொலை செய்தவர்களுடைய உயிரை அவர்களாற் கொலை செயப்பட்ட வுயிரே அடுத்த பிறப்பில் வந்தடைந்து கொலை செய்யும்.



(1043) மாதிரம் சுழல்புள் குலம் படுப்பவர் - வானிற் சுழன்று பறந்து திரியும் பறவைக் கூட்டங்களைக் கொல்வோர். மறிதிரை பொருநீர் வாழ் சாதி - மடங்கிவரும் அலை போர் செய்யும் நீர்நிலைகளில் வாழ்குலமாகிய மீன் தவளை முதலியவைகளை. அணரியில் - மேல் வாயில். சங்கிலி முடக்கு ஏற்றி - வளைவான சங்கிலியை ஏறுவித்து. கல் தறி விட்டம் இட்டு அசைத்து - கற்றூண்களையும் விட்டங்களையும் அச் சங்கிலியில் இறுகக் கட்டி. நிணம்சோர - கொழுப்பு வடிந் தொழுகும்படி.

(1044) ஊனையுண்ண விரும்பி என மாற்றுக. என்னுவான், இரங்கான், பகர்கிலான், நண்ணுவான் எனும் நால்வரும். "இவரோடு," என்ற சொல்லினை அடுத்த கவியின் இறுதியில் உள்ள "அரக்கனும்" என்ற சொல்லுடன் கூட்டுக.

(1045) பதம் வைப்பின் வருந்துமே மரிக்குமே புழுக்கணம் என்றுளம் வருந்தியே பதம் மெல்லென வைத்திடாது அருந்தவத்தைப் பிரிந்த அரக்கனும் எனக் கூட்டுக. இவரோடு அரக்கனும் ஆகிய ஐவரும் பாவிகள் என்பது சிவதருமோத்திரம் என்ற நூலில் அடுத்த கவியிற் சொல்லப்பட்டிருக்கும் என அறிக.

(1046) கடைப்படும் பிறப்பு நாரை - இழிவாகிய பறவைப் பிறப்பிலுள்ள நாரை.

(1048) இவை இலையாம் -
ஞானம் ஆனந்தத்து இருத்தலே
இருப்பதுவேயாம்.
இந்த நரகத்துன்பங்கள் இல்லையாம்.
(ஆம்) அறிவுடன் பேரின்ப வீட்டில்

(1049) அலமரல் எவைக்கும் செய்யா அயிஞ்சையே பரமதன்மம்- எவ்வுயிர்க்கும் துன்பஞ் செய்யாத நன்மை செய்தலே முதன்மையான அறமாம். எத்தலத்தும் இலகும் - எவ்வுலகத்தும் இவ்வறம் விளங்கும்.

(1051)
உண்போன்

அன்னம் அமுதமாகும், அன்னம் வல்விடமது ஆகும், புலையனுமாறு போல......உண்போன் கொலைஞனும் எனக் கூட்டுக.

(1052) கொல்லாதான் (செய்த) தன்மந்தன் மேல் அவன் (தேடிய) செல்வந்தன்மேல் செல்வம் இல்லை.

தன்மம் இல்லை.
துறவின்மேல்

துறவில்லை ஞானத்திற்குமேல்
கொல்லாதான் செய்வனவெல்லாம்

ஞானமில்லை என்று கூட்டுக.
சிறந்ததாம் என்பது கருத்து.

(1053) தன்னைத்தான் நோக்குகின்ற தத்துவர் இட்டம் ஈது- தன்னைத் தானேயறிந்த தத்துவ ஞானியர் விருப்பம் இது. பிறவுயிரைக் கொல்வான் தன்னைத் தானே கொல்பவனாவான் என்பதும், தன்னுயிரை விடுத்தும் பிறவுயிரைக் காப்பவன் தன்னை முன்னேறச் செய்வான் என்பதும் கருத்து.

(1054) வெங்கருணை புல்லுதற்கு - விருப்பமான பொரிக் கறியுடன் சேர்ப்பதற்கு. வேறு வேறுகுறைப்ப (உடம்புவரால் வாளை இவற்றை)- வெவ்வேறு வகைப்பட அறுப்பார்கள். அவ்வாறு அறுத்தவர்கள், (அழுகின்றதை) யார் கண்ணே நோக்கும் - எவர் கண்ணாற் பார்ப்பார் அவர் கண்ணால் அவர்களே பார்ப்பார் தனியேயிருந்து அழுவார்கள் நரகத்தில் என்க.



(1057) மாக்கள் - மனிதர்களை; விலங்குகளை; சிலையினால் - வில்லால் அல்லது கல்லால். குப்பிதன்னுள் - நரகத்துள்ளே. நரகரை நாளும் நாளும் அமுதநியிட்டு நலிகுவர் எனக் கூட்டுக.

(1058) அறம் பெரிய கூறின் உயிர்க் கொலையும் வேண்டா - பெருமையான அறம் எது எனச் சொல்லின் உயிர்க் கொலையும் வேண்டா அதுவே அறம் என்க. மறம் புரிகொள் நெஞ்சம் வழியா -

பாவம் செய்ய விரும்புகின்ற மனத்தின் வழியாக. பெரிய தீவினைகள் புகுதந்து ஈண்டிச் செறும் - சென்று கடிது ஓடிப் பெரிய துன்பம் உறும் என்று கூட்டுக. செறும் - வருத்தும். உறும் - மிகுவிக்கும்.

(1059) அறிந்தார் கொலை ஒழிமின் என்று கூறினர் என்க. சீர்த்திநிலை கொள்ளின் இலை - புகழ்நிலை சிறத்துவதற்கு வழியில்லை. கதிஇல் - மேற்கதியும் இல்லை. அலகில் துயர் உயிர் அஞ்சவரும் - அளவில்லாத துன்பங்கள் உயிர்கள் அஞ்சும்படி வந்து சேரும். அஞ்சின் - ஐந்து பாவங்களால் (கொலை, களவு, கள், காமம், குருநிந்தை ஆகிய ஐந்து).

(1060) அல்லா விரதம் அனையாய் - கொல்லா விரத நீங்க அதனையல்லாத மற்ற விரதங்கள் தாயாகி அதற்கு ஆதரவாயிருக்க. கொல்லாவிரதம் குடைமன்ன எனின் - கொல்லாமை என்ற விரதங் குடைபோல மேலாக நிலைபெற்று நிற்குமாயின். வெல்லா வகை இல்லை - (வென்று விடலாம்) வெல்லும் வகையுண்டு.

(1061) கொலைத் தொழிற் கருவியேந்தி நின்று எரிநுடங்கு கண்ணுற் பாவமே நினைந்து சென்று உயிர் நடுங்கக் கொன்று செத்தார் இறந்தபின் சென்று எரிநரகில் வீழ்வர் எனக் கூட்டுக. கருவி: வில்வாள் முதலியவை. எரி நுடங்கு கண் - தீயசைகின்ற விழி; (கோபக்கண்).

(1062) உலகினுள் தலைவன் நல்லறம் தக்கது என உவந்துகொண் மின் - இவ்வுலகில் இறைவனுற் கூறப்பட்ட நல்ல தருமமே செய்யத் தக்கது என்று விரும்பிக் கொள்ளுங்கள். அலையின் நீங்கிய அவ்வுலகு எய்துதல் - மாறி மாறிப் பிறக்கும் பிறவியை நீங்கிய அம்முத்தியுலகம் அடைவதே. மூனைவர் - கடவுள்.

(1063) குறைத்தவன் தசைகளை வேறு வேருக வெட்டியவன். கொண்டவன் - புலாலை விலைக்கு வாங்கியவன். நன்று இது என்றவன்- ஊன் உண்பது நன்றென்று பலர்க்கும் கூறியவன்.

(1064) மறிகள் படுத்திடும் வேள்வி புரிந்தவன் - ஆடுகளைக் கொலை செய்யும் யாகஞ் செய்தவன். பனி விசும்பில் அடுத்திடும் காலம்- குளிர்ந்த விண்ணுலகத்திற்கு வருங்காலத்தை (இறந்த காலத்தை). மருப்பினுல் வயிறு போழ்ந்தது - கொம்பினுற் குத்தி வயிற்றைக் கிழித்தது.

(1066) கூச அறுத்தான் - (யாவரும்) நடுங்கும்படி தசையை யறுத்தவன். அட்டான் - ஊனைச் சமைத்தவன். விலக்கிடான் சென்று ஒன்றி கொன்றவனை - (கொலையை) தடுக்காமல் போய் ஓருயிரைக் கொன்றவனை. வன்கண் இட்டு - வலிய விழிகளில் தீ வைத்து. பதைத்து வீழ்வார் என்க.

(1068) வானுயர்
வானுலகத்தில் உயர்ந்த
ஊள உயர் இன்பம் -

இன்பம் மேலரல் வரும் நெறி திரியும் - இன்பமும் மேல் வரும் வழியும் வேறுபடும். உடம்பு வளர்க்கும் இன்பத்தை. மானுயர் வாழ்வு - மனிதர் வாழ்க்கை. அன்று, ஏ : அசை.

(1072) கல்லா உளத்திலும் கற்பகம் ஆய் - கற்றறியாத மனத்துள்ளுஞ் சென்று நின்று கற்பகம் போலப் பயன் தருவதாகி. அருள்கார் பயந்த - திருவருளை மழைபோலப் பொழிகின்ற மேகமாகிய கடவுள் தந்த. எங்கை கூப்புவது கொல்லாமை யோங்குவிப்பார்க்கே - எமது கை குவிவது கொல்லாமை என்ற விரதத்தை வளர்ப்பவர்கட்கே. (மற்றொருவர்க்குக் குவியாது எம் கை).

(1073) இறைவன் உடல் எல்லா உயிரும் ஆதலின் - கடவுள் உடலே உலகிலுள்ள எல்லா வுயிர்ப் பொருள்களும் ஆதலால். அல்லல் - துன்பம்.

(1074) ஊற்றம் மிகுஞ் சராசரத்துள் - வலிமை மிகுந்த சரம் அசரம் என்ற இருவகைப் பொருள்களுள். சரம் - அசைந்து நடந்து திரியும் பொருள். அசரம் - நடவாமல் இருந்த இடத்திலேயே இருக்கும் பொருள். அசரத்திற்கு மேல் சரம். சரத்திற்குமேல் நரர். நரரிற் கீழ் பல்லுயிர் செகுத் துண்டிடும். மேல் உயிர் புரக்கும் நீதிலோரே எனப் பொருள் கொள்க.

## ௩௩. புலான் மறுத்தல்

(1087) இனிது பிணம் எனில் அதுதான் இனியதுவோ - (நாய் பேய் முதலியவற்றுக்கு) பிணம் இனியது எனில் அப்பிணம் மாந்தருக்கும் இனியது ஆமோ (ஆகாது). தேயினுக்கே - ஒளிக்கே.

(1083) கான் உறு - காட்டிற்
வீசுகின்ற. தேனமர் பூ கமழ் -

பொருந்திய. கடிகமழ் - மணம்
வண்டுகள் தங்கும் மலர்போன்ற
(இன்றவனது) திருவடியை.

(1039) செல் ஆகப்பற்றி - இடிபோல வந்து
போல வந்து இறுகப்பற்றி.
பிடித்து; கறையான்

(1090) பராபரன் சந்நிதியது ஆகும் - கடவுளின் முன்னிலையிற் றோன்றியது ஆகும். உயிர் உடல் அனைத்தும் உயிரும் உடம்பும் (உயிரோடு கூடிய உடம்பும்) ஆகிய எல்லாப் பொருளும், கொன்று அருந்தும் இழிவினோரை - கொன்று ஊனையுண்ணும் இழிந்தையுடையவரை. யமதூதர் வவ்வி - யமனுடைய தூதர்கள் வந்து கவர்ந்து பற்றி.

(1091) சடம்கடத்துக்கு - உடம்பாகிய பாண்டத்துக்கு. விடக்கு அடித்துக்கொண்டு - ஊனைக் கொலை செய்துகொண்டு. படகடித்து இன்று - இறக்கும்படி கடித்துத் தின்று இப்போது. இடக்கு அடிக்கும்பொழுது - மறைவாக வைத்து

அடிக்கும்போது. (1093) ஊன்

சுவைத்து உடம்பு வீக்கி - புலாலையுண்டு உடம்பைப் பெருக்கி. புத்தேள் ஆவதே - தெய்வ மாவதுதான்.

(1094) வெம்தடி தின்ற - கொடிய தசையைத் தின்ற. வெங்கோய் வேகத்தான் - பாவத்தின் கொடுமையால். மாலே - மாலைக்காலத்தில். எழுந்து பொங்கிவந்து உடைந்து உருகி வீழ்ந்து மாழ்கபு கிடப்பர் - (பந்துபோல எழும்பி) மேற்போய்க் கீழேவந்து துன்பமுற்று மனமுருகி (நரகத்தில்) வீழ்ந்து மயங்கிக்கிடப்பார்கள். கந்து அடு வெகுளி வேகம் கடாம் முகம் களிற்று வேந்தே - கட்டுத்தறியை முறிக்கின்ற சினமும் விரைவும் உடைய மதமொழுகும் முகத்தையுடைய யானையை யுடைய அரசனே.

(1095) உணரில் தெறுபதில் - அறிந்தால் தெளிவதில். அறவகை ஓரா - தருமத்தின் வகையை யறியாத. விடக்குமிசைவோர் - ஊன் உண்பவர்.

(1096) முன் வெந்தசைகள் தின்றனை என்றே-(இங்கு வருவதற்கு) முன்னர் நீ கொடிய புலால் உண்டனை என்று சினந்து கூறி. கொது கொது எனவே - கொதித்து கொதுவென்று கொதித்து. உருகும் செந்தழலில் - சிவந்த தீயில். செம்புகள் இந்திரர்கள் திணிப்ப - உருக்கிய செம்புக் கம்பிகளைத் தேவர்கள் வாயில் வைத்துத் திணிக்க. முகனே விண்டு ஒழுகும் - முகம் பிளந்து உருகி விழும்.

(1097) வானங்கள் விழைந்து நோக்க - வானுலகத்துள்ள தேவர்கள் எல்லாரும் விரும்பிப்பார்க்குமாறு, மதங்களை - சமய நூல்களை, ஊனங்கள் - குற்றங்கள்.

(1098) மன் உயிர் வளங்களோடு - நிலைபெற்ற செல்வப் பெருக்கமுடன்.
வுயிர்க்குத்தக்க

(1100) வாயிற் சுவை வெஃகி - வாய்க்குச் சுவையுடைய உணவை விரும்பி. மான் - விலங்குகளை. நா அளவே - நாவின் அளவிலே.

(1109) உறவு ஆதிகள் - அக்கரடிக்கு உறவு முதலியவைகள். அருள் அற்று உழன்றிருக்கும் -

ஆகிய விலங்கு
கருணையில்லாமல்
கொலைபுரிந்து திரியும். புவியில் மானுடத்து என் செய்வான் செனித்தனர் - உலகத்தில் மானிடப் பிறப்பாய் என்ன நல்வினை செய்வதற்குப் பிறந்தனர்.

(1110) புலையன் ஆர் மலம் புசிக்க
யன் உண்ணுகின்ற ஊனாகிய மலத்தை

நாடும் ஈது புத்தியோ - பறை
உண்ணக்கருதும் இதுநல்லறி
வாகுமோ (ஆகாது). மும்மை - மூன்று குலமும். புலையருக்குள் ஒக்கும்-
பறைக்குலத்துக்கு ஒப்பாகும். ஐயர் ஆணை-கடவுள் கட்டளையாம் இது.

(1111) ஒருமீன் புலவு வாய்ப்படுப்பின்-(மனிதர்) ஒரு மீனைப்புலவு
நாற வாயில்வைத்துண்டால். ஒழியும் தசைகள் அனைத்தினையும்-மீனை
யன்றி வேறாகிய விலங்கு பறவைகளின் ஊன் முழுவதையும்.

பொதுளும்-நிறைந்த மீன்கள் புள்ளினம் விழுங்காது உலவும்-மீன்களைப்
பறவைக் கூட்டங்கள் கொத்தித் தின்னாமல் உலவுகின்றன. இஃது ஒரு
தீர்த்தத்தைச் சிறப்பித்ததுபோலும்.

(1112) தவகதியை வேண்டுபவர் - தவமாகிய கதியை (முத்தியை)
விரும்புவோர், அவகதியை - வீணாகிய வழிகளை. க.,கு நரி செயுந்
தொழிலை அயரா நாட - கழுகுகளும் நரிகளும் செய்யுந் தொழிலாகிய
ஊன் உண்ணுவதை மறவாமல் நாடினால்.

(1113) கோசம் பகம் ஆதி மழ உருவின் - ஆண்குறி பெண் குறி கொங்கை முதலியவற்றை இளமைப்பருவத்து வடிவில். இந்த உடை கொடு மறைப்பது எற்றினுக்கென்று ஒளிர் பருவத்து எறிகலார்... அணிவர் - இவ்வாடையைக்கொண்டு மறைப்பது எதற்காக என்று விளங்கும் பருவத்தில் விட்டுவிடாமல் அவ்வுடையை அணிவர் (அதுபோல)

(1114) ஆசு உறும் ஆன்மா இச்சை - குற்றமுள்ள உயிரின் விருப்பத்தை.

(1115) முன்னை வேதனையைவிட்டு - பழைமையாக வந்த பிறவித் துன்பத்தை நீக்கி. விகாரம் இன்றி - வேறுபாடில்லாமல். நாவழி ஒழுகி - நாக்கின் வழியாக உண்டு. நயந்தேம் - விரும்பினேம்.

(1116) அருமகத்து அன்றி - அருமையான வேள்வியில் ஊனையுண்பதல்லாமல். உடலம் வீக்குவோன் - உடலைப் பெருக்குவோன். வீக்குவோன், உடன்படுவோன், குறைத்தோன், கொணர்ந்தோன், பகர்ந்துளோன், வியந்துளோன், ஏவுந்திருவிலி, அட்டவன் ஆகிய எண்மர் என்க. குறைத்தோன்:- தசையை யறுத்தவன். பகர்ந்துளோன் - விற்றவன். வியந்துளோன் - கொலைசெய்வதையும் ஊன் உண்பதையும் வியப்பாகப் பேசிப் புகழ்வோன். ஏவும் திருவிலி - ஊனை யுண்பாய் என்று ஏவும் அறிவில்லாதவன். அட்டவன் - ஊனைச் சமைத்தவன். புரவிமகம் - அசுவமேதம் என்ற யாகம்.

(1117) குரம்பை - குடிசை; கூடு (உடம்பு) கற்பகாலம் - பிரமன் வாழ்நாள். (அளவற்ற காலம்) விழைவின் - விருப்பத்தால். தாம் நுகர்ந்த விலங்கும் - முன் தம்மால் நுகரப்பட்ட விலங்குகளும். பறித்து அருந்தும் - பிடுங்கித் தின்னும்.

(1118) விலங்கின் உடல் துன்னுமயிர் எத்துணை ஆம் அத்துணைய காலம் வெந்நரகின் உழப்பர் - தாம் உண்ட விலங்கின் உடம்பில் நெருங்கிய மயிர்கள் எவ்வளவாமோ அவ்வளவு காலம் கொடிய நரகத்தின் அழுந்திக் கிடப்பர். கொடுவிலங்கும் புலவூன் றின்னக்கருதா என்றது காட்டுச்சிறப்பு; நாட்டுச்சிறப்புப்போலும்.

(1119) நா இரசம் பார்த்து - நாவில் வைத்துச் சுவைபார்த்துண்டதனால். இருள் ஆர் உலகம் - நரகம்.

(1120) ஆவி பிரிந்த ஊன்-உயிர் நீங்கிய உடம்பிலுள்ள தசையை நாய்கழுகு... இவைகள் அருந்தலல்லாது...மனிதர் அருந்தலாவதோ (ஊன் மனிதர் உண்ணத்தகாது என்பது கருத்து.)

(1121) நான் நுகரேன் - நான் உணவுண்ணேன். குணங்கொடக்க வேண்டியது ஏன் - அப்பண்பு உன்னிடத்தில் இருக்கவேண்டியதற்கு என்ன காரணம். ஊன் உண்பவனுக்கு அப்பண்பு வேண்டுவதில்லை.

(1122) மழலைதிருந்து அறிவில் - சிறுபிள்ளைகள் திருத்தமான அறிவு வந்தபோதும். பித்தர் அறிவு பிறங்கியபோதும் - பைத்தியர் அறிவு விளங்கியபோதும். (மலத்தைத்துய்த்த லுண்டோ)

(1123) விடக்கு உண்பான் வீடே கடும்புலையன் வீடு - ஊன் உண்பான் வீடு கொடிய புலையன் வீட்டிற்கொப்பாம். கரப்பவர்தம் இல்லம் பேய் வாழும் காடே - இரப்பவனுக்குக் கொடாமல் ஒளித்து வைத்திருப்பவர் வீடு பேய்வாழும் சுடுகாட்டினைப் போலும்.



(1125) கறையதே ஆகும் - அது மிகவும் குற்றமேயாகும். பன்றி முதலியவற்றைக்கொன்று ஊன் உண்பவரே பறையர் என்பது கருத்து.

(1126) கோழிகள் கூகூவென்று கூவிபது புலையன் மலமுண்ணும் ஏங்களை யுண்பவர்கட்கு என்ன குலம் என்ன நலம் என்று இழிவாகச் சொல்வது போல இருந்தது என்பது கருத்து.

(1127) மயிர் எறும்பு யாதும் கண்டு - (சோற்றில்) மயிராவது எறும்பாவது ஏதேனும் கிடக்கக் கண்டால். அயின்றதும் கான்றிட்டாய் - உண்டவுணவையும் கக்கிவிட்டாய். ஆல் : அசை.

(1128) நாறும் ஊன் புழுத்த தேனும் - நாற்றமுடைய புலாலையும் புழுக்களையுடைய கள்ளினையும்.

(1129) தகர் உனது எதிரே சிந்த தான் தெறித்திட்ட கோழை - ஆட்டுக்கடாயானது உன் முன்னே மூக்குச்சிந்த அதனுல் தானே தெறித்து விழுந்த கோழையை. உளங்குலைந்து உற்ருய் - மனம் நடுங்கி நின்ருய் - (அவ்வாறு நின்ற நீ) அயிலறவாறு என் என்று வினவியது இது.

(1131) கொலை அஞ்சாது (ஒருவன் + கு - ஒருவற்கு) அலகுஇல் நூல்மறை ஆகமம் ஓதும் - அளவில்லாத நூல்களும் வேதங்களும் ஆகமங்களும் சொல்லும். ஆகமம் என்பது சிவ மதத்திற்குரிய நூல்.

(1132) மன் உயிர் அழிக்கும் தாழ்வினை - நிலைபெற்ற உயிர்களைக் கொன்று ஊன் உண்ணும் இழிவாகிய செயலை. இதம் புரிந்தருளின் - நன்மை செய்து வாழ்ந்தால். பேறு வந்து உமையடைந்திடும் - (பிறவியடையாமை என்னும்) பேறு வந்து உங்களிடத்திற் சேரும்.

## ௩.௬. மனம்

(1139) மெய் மொழி மனத்தை செல்லும் வழி செல்லாது அடக்கின் - உடல் சொல் உள்ளம் என்ற மூன்றையும் தாம் போன போக்கிற் செல்லவிடாமல் அடக்கி நல்வழியிற் செலுத்திஞல். நல்ல பயனேயாம்; தீவினை ஆகா; அல்லல் அறுக்கும்; அறக் கடவுள் (அவனை) அடுக்கும் (அவன்) அமரர் உலகு உறும் எனப் பொருள் கொள்க. ஆகா - வாரா. அல்லல் அறுக்கும் - (அவன்) துன்பத்தை நீக்குவான். அமரர் உலகு உறும் - அவன் பொன்னுலகத்தை யடைவான்.

(1140)
உள்ளத்திற்

மனத்தின் பால் அழுக்கு அற்றவர்க்கே பயன் அளிக்கும் - கள்ளம் இல்லாதவர்க்கே நல்லபயனைத் தரும். (மற்ற வர்க்குப் பயனைத் தராது).

(1141) துயிலை இன்பு எனச் சொல்லுதல் - உறக்கத்தை இன்ப மெனக் கூறுவதற்குக் காரணம். இந்தியத்து இயலும் நெஞ்சம் இலாமையினலன்றோ - ஐம்புலனுகர்ச்சி யின்பத்தின் வழி மனஞ் செல்லாமையால் அல்லவோ. மனம் பரந்து திரிதருஞ் செயலில் சிறிதும் சுகம் இல்லை எனக் கூட்டுக.

(1142) பிணை - மனமடங்கியபின்; ஒருத்தன் வசப்பட்ட பின். நாளும் - எக்காலமும்.



(1143) அறவினைக்கும் - தருமஞ் செய்யுந் தொழிலுக்கும். விறலினுக்கும் - வெற்றிக்கும். ஒண் துறவினுக்கும் - தூய துறவறத்தினிற்பதற்கும். (மனம் துணையாம்).

(1144) அல்ல செய்து அங்கு அளற்றிடை வீழ்ப்பவும் - பாவத்தொழிலைச் செய்து அவ்வுலகத்தில் நரகத்தில் வீழ்த்துவதற்கும் 'இந்த மனம் அல்லது வல்லது (வேறு) இல்லை என்ன மறை எலாம் இயம்பும்' என மாற்றுக.

(1145) இம் மனம் என்று - இந்த
அடக்க வல்லன்......கடிது பவக்கடல்

நெஞ்சமே தான் என்றாராய்ந்து
கடக்க வல்லவன் ஆவன் எனக்
கூட்டுக.

(1146) ஆயின் - ஆராய்ந்து நோக்கினல். நிறுத்தல் காண் - நிறுத்துவதால் (முடிவனவே) பார். தோயம் நிற்குறன் துரும்பும் நிற்கும் - நீர் அலைபாது நின்றால் அந்நீரிற் கிடக்கும் துரும்பும் அலையாமல் நிற்கும் (அது போல).

(1147) வேறு அற நோக்குதல் கூடும் தன்மை கொளும் மனம் நல் மனம் - (ஓடும் பொன்னும் என மேற் கூறப்பட்ட பொருள்களை யெல்லாம்) வேறுபாடின்றி ஒன்றாகவே பார்க்கும் இயல்பு (தன்மை) சேர்ந்த நெஞ்சமே நல்ல நெஞ்சமாம்.

(1148) ஆசு தீர்ந்த - குற்றம் நீங்கிய. ஆடி - கண்ணாடி. வதனம்- முகம். பாசம் நீங்கு பரஞ்சுடர் - மயக்கம் நீங்கிய முதன்மையான ஒளிமயமான கடவுள். காசம் நீங்குகண் - களங்கம் நீங்கிய விழி.

(1149) பிணை துணை இன்று - வேறு துணையில்லை. பின்னை ; பிணை எனக் குறைந்தது. தான் சிவமே என வாழ்வன் - சிவனே இவன் என்று பிறர் சொல்லும்படி தான் வாழ்வான்.

(1150) வாரணம் ஆகும் மனத்தை - யானை போலும் உள்ளத்தை- களைந்து அடைந்திட்டு அரும்பொருள் ஆவன் என்க. மாயை - மயக்கம். போதம் - ஞானம்; உண்மையறிவு.

(1151) மக்கள் - உலகில்
மேவும் - பொய்யோடு கூடிய.

வாழும் மக்கள் எல்லாரும். பொக்கம்
மாவினை யொத்து - விலங்குக்கிணையாகி.

(1152) எறிவளிமுன் சுடர் என்ன ஆடும் இயல்

மனம் திமனம் தன்னை - வீசுகின்ற காற்றின் முன் விளக்கின் சுடர் போல அசைகின்ற
தன்மையுடைய மனம் கொடிய மனமாம்; அதனை.

(1153) மன்னு - பொருந்தா. வாதனை தன்னால் - துன்பத்தால். ஞானிதான் தனை மாற்றி ஆற்றத் தகும் - உண்மையறிவுடையவனே தன்னை மாற்றி நன்மையாகச் செய்யத் தக்கவனாவன்.

(1154) சங்கற்பம் ஒன்றில் தொடுக்கும் - மனமானது ஒரு செய்கையில் இணைக்கும். அழிக்கும் - அச் செயலைக் கெடுக்கும். சப்தபூமி-ஏழ் உலகங்கள் போந்து - போய். பூவை போல்-பெண்ணைப் போல. கபடம் நாடகம் சாலமோ - வஞ்சகம் நடிப்பு வித்தை முதலிய (எல்லாமும்) வல்லது.



(1155) கந்துகம் - குதிரை. மதக்கரி - மதம் பொருந்திய யானை. கட்செவி - பாம்பு. (கண்ணைச் செவியாகக் கொண்டது.) இரதம், பாதரசம். ஐந்து உலோகத்தையும் வேதித்து - இரும்பு, செம்பு, வெள்ளி, பொன், தங்கம் என்ற ஐந்தினையும் தீயில் வைத்து வெதுப்பி.

(1156) மனம் இறக்க - மனம் கெட. (மனத்தில் ஒன்றுமில்லாமற்போக). ஒரு நினைவு

(1157) பால் சுரந்துடைய - பால் பெருகியிருக்கின்ற. மால் உற முயங்கும் கேள்வன் - காம மயக்கமுற்றுப் புணர்கின்ற கணவன். மயங்கும் நீரால் - பால் பெருகாது வேறுபடுகின்ற தன்மையால்.

(1158) ஏற்றம் தாழ்வாம் துன்புறு போகம் பலவால் தேர்ந்து நெஞ்சில் தோயாமல் எளிது அருந்தில் சுகமே ஆகும் - உயர்வு தாழ்வாகிய துன்பத்தைத் தரும் ஐம்புலவின்பம் பலவாதலால்

ஆராய்ந்து மனம் அவ்வின்ப துன்பத்தில் அழுந்தாமல் எளிமையாகத் தய்த்தால் இன்பமேயாகும். மனத்தோற்றம் நாசம் ஆகும் - மன நினைவு கெடும். மகத்து ஆம் - பெருமையுண்டாகும். அறிவினர்க்கு

நவைகூர் நெஞ்சம் நடைவிலங்கு ஆம் - நல்லறிவுடையவர்க்குக் குற்றமுள்ள மனம் நடைவிலங்கு போலாம். நடைவிலங்கு - நடக்கும் போது காலில் விலங்கு போட்டிருப்பது.

(1159) கடும் மனம் - விரைவாகச் செல்லும் மனம். வன்பேய் - வலிய பேயாகும் (அந்த மனம்) மலைகளினும் கடத்தற்கு ஒண்ணு - மலைகளைப்பார்க்கினும் (கடந்தாலும்) கடக்க முடியாவாம். உலகு ஈது உண்டு எனில் உண்டு - இம்மனம் உலகமாகிய ஒன்று உண்டு என்று நினைத்தால் உள்ளதாம். இதனை - இத்தீய மனத்தை.

(1161) நிராசையால் - ஆசையில்லாமையால். வையம் தனது தாள் செருப்பு உலகெலாம் தோல் மூச்சுந்தரம் போல் - உலகத்தினது காற் செருப்பிலுள்ள தோல் உலகத்தையெல்லாம் மூடுந்தன்மை போல. ஆசையில்லாமையால் மனம்
யெனக் கொள்க.

(1162) காதல் எனும் மனைவி -

நிறைவதற்கு இஃது உவமை

ஆசையென்று சொல்லப்படும்
மனைவி பின்னே. மனத்தை ஞானியாக உருவகஞ் செய்து ஆசையை மனைவியாகக் கொண்டார். பேதைமை மேவிய என்னை - அறியாமை பொருந்திய (உயிராகிய) என்னை. ஞானி பிடுங்கித் தின்னும் மலங்கத் தள்ளும் என்க.

(1163) மனம் ஆம் சிறுமகவை - உள்ளமாகிய சிறுபிள்ளையை. வேண்டுகோளால், தன்முயல்வால்,

விநோதந் தன்னால் விறுத்தல் வேண்டும் என்க. பரிசயங்கள் - பழக்கங்கள். தற்பவத்தை — தனது பிறப்பை. தேசிகன் நூல் - ஆசிரியனால் கூறப்பட்ட நூலின் வழியே.

(1164) நின்று உருது அலைகுதல் உனக்கு விருப்பு (நெஞ்சே) நில்லாமல் எங்கும் அலைவது தான் உனக்கு விருப்பம். என்றனக்கு நல்விருப்பம் வாளா இவண் இருத்தல் - எனக்கு நல்ல விருப்பம் நீ சும்மா இங்கு இருப்பதுவேயாம். தீது உயர்வீடு காண்குவல் என- (இவ்வாறு சும்மா இருப்பது) தீமையின் உயர்ந்த வீட்டினை நான் காண்பேன் என்று. திருசியம் அன்று - காட்சிப் பொருளல்ல(அது) உருது இருப்பதே - வினையாமல் இருப்பதே.



(1169) ஐம் பொறிப் பரி இவர்ந்து இம்பர் நிலத்தில் - ஐந்து புலங்களாகிய குதிரையிலேறி இவ்வுலகத்தில். கதும் என-விரைவாக. ஆய்வுழி - ஆராயும் இடத்து. பயன் இன்று இயங்கலை - பயனில்லாமல் செல்லாதே. வியல்மின் விரைவினில் - பெரிய மின்னல் வேகம் போல. துன்றிய துணையைச் சென்று சேர்தி - நெருங்கிய நண்பனைச் சென்று சேர்வாய். நின்னை மறு வழி நடத்தல் எங்ஙனம் உன்னைப் பாவ வழியில் நடத்துவது எவ்வாறு பொருந்தும். சாற்றல் அரிது-சொல்ல முடியாது.

## கடு. தவம்

(1171) ஒறுத்து - வருத்தி; (விரத முதலியவற்றால் மெலிவித்து.) அல்லார்க்கு - நல்லவர் அல்லாதவர்க்கு, கொடியவர்க்கு. வெஃகும் நெடும் பொருள் - விரும்பும் பெரும் பொருள். ஈது திடம்பட - இஃது உறுதிப்பட.

(1172) தவத்தினது ஊக்கம் அன்றோ - அல்லவோ நிற்கும். நோற்கலாது - தவஞ் எல்லாம் போக்குவது - இத்தன்மையான

தவத்தின் உயர்ச்சியால் செய்யாமல். இனைய ஆக்க முதலியவற்றை நீக்குவது.

(1174) இம்மை இன்பமும் உய்த்திடும் - இன்பத்தையும் கொடுக்கும். இப்பிறப்புக்குரிய

(1175) இம்மையும் மறுமையும் தரும் ஏது அது பிறப்பிற்குரிய பயனையும் மறுபிறப்பின் பயனையும் காரணம் அதுவேயாகும். பெறல் - பெறுக.

ஆகும். இப் தருவதற்குக்

(1176) ஒருமை கொள் மாதவம் உழந்து பின்முறை - ஒரு பிறப்பிற் கொண்ட பெருந்தவத்தால் வருந்தி அத்தவத்தின் பின்பு முறையே. திருமைகொள் - செல்வத் தன்மை பொருந்திய. இருமை - இருபிறப்பின் பயனும்.

(1177) தம் உடல் அசை ஆற்றலில் - தம் முடம்பு தம் மனவலிமையால். மேவுற்றோரெலாம் நோற்றவர் (நோற்றவர் தாம்) தேற்றுகிலீர் கொலாம் - தெளிந்திலீர்

வருந்துமாறு அல்லரோ -

போலும்.

(1178) மாதவம் நெறியொடு பயிற்றி எனக் கூட்டுக. இத்துணை யெனல் அரிது - இவ்வளவு என்று எண்ணிச் சொல்ல முடியாது. மால் ஓடு விரிஞ்சன் ஆதியோர் மெய்தவர் - திருமாலும் பிரமனும் முதலானவரும் உண்மையான தவஞ் செய்தவரேயாவர்.

(1179) அருந்தவம் ஆற்றிடாதவர்க்கு இருமையும் இன்பம் இல்லையே - அருமையான தவஞ் செய்யாதவர்க்கு இருபிறப்பிலும் இன்பம் இல்லையாம். மாய்த்து - கொன்று. அல்லல் செய்து - துன்பத்தைச் செய்து. (செய்து தவஞ் செய்யாதவர்க்கு).

(1180) தாஇல் சீர் - குற்றமில்லாத புகழ் பெற்ற. நேர்வது தானும் - ஒப்பான பொருளும். தவத்திற்குத் தவமே ஒப்பாம். வேறு இல்லை என்பது.



(1181) தவத்தின் வினை போக்குவது அன்றி - தவஞ் செய்து அத்தவத்தால் வினைகளை யொழித்து விடுவது அல்லாமல். (இவ்வொழுக்கம் பூண்டுவினை போக்குவது எதுபோன்றது எனின்). செய்யல் சின்னீரிடத்து - எடுத்துக் கொண்டு வந்து நிரப்புந் தொழிலாற் சேர்ந்த சில நீரினால்.

(11-2) மேலை நாள் வரத்தின் வீடிலன் என்ப என்றால் - முற்பிறப் பிற் செய்த தவத்தாற் பெற்ற வரத்தினால் இறந்திலன் என்று சொல்வார், அவ்வாறு சொல்வராயின். பீடுஉறு - பெருமையுற்ற.

(1183) துறக்கம் - பொன்னுலகம். நரனை தே ஆக்கும் - தேவனுக்கும். வலாரி-இந்திரன். திசைக் கிறைவர் எட்டுத்

மணி தனைத்
திசைக்கும்
தலைவர் (திசை காப்பவர்) (இந்திரன், தீக் கடவுள், யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எண்மர்) சாரங்கன் - திருமால்.

(1184) விஞ்சிய - உயர்ந்த; மிஞ்சிய; மேலான. அருஞ்சிலை ஆனாள் - அருமையான கல்லாகச் சமைந்தாள். தஞ்சம் என - எளிமை என்று நினைத்து. வஞ்சம் இழைத்தவர் என்று மாற்றிக் கூட்டுக.

(1185) உவ்வுடல் எடுத்த பேர் உறுதி என்ப - இவ்வுடம்பு எடுத்ததற்குப் பெற வேண்டிய உறுதிப் பொருள் (தவமே) என்று சொல்வார்கள்.

(1186) வடவரை
களைந்து தாங்கலாம் - இமயமலையைப் பேர்த்து வைக்கலாம்; தாங்கவும் கூடும் அனலமும் தரிக்கலாம் - தீயையும் தாங்கலாம்.

(1187) அறியாது என்னாது அறியாது ஓராது கூற்றம் வன்மையில் வந்திடும் என முடிவு கொள்க. நல்லார் என்னாது - நல்லவர் என்று நினையாமல். இன்மை - வறுமை.

(1188)
நினைத்தே.

பேதிக்க என்றே - வேறுபடுத்துவோம் நாம் தம் சிந்தை சிவன் அவன் பாலே - தம்

என்று சிவபெருமானாகிய அவன் பால்
மனம் இயலாது) என்று முடிவு செய்க.

(இருப்பதனுல் வேறு படுத்தல் (1189)
கண்டேன்

குரைகழல் - கண்டை ஒலிக்கும் பாதம். கழல், சிவகதி என்க. இவை களைந்து ஊடில் - இவற்றை நீக்கி

வேறுபட்டால். உலகோர் ஒத்தவரே - உலகில் போன்றவரே யாவர். (உயர்வு இல்லை என்பது).

வாழும் மக்களைப் (1190) அழுவத்து
வார் - ஒழுகுகின்ற.

- நீர் நிலைகளில். மாரிநாள் - மழைக் காலம். வந்தன அருந்தியும் - தமக்குக் கிடைத்த

பொருள்களையெல்லாம் உண்டும். களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும் - உவர் நிலத்திலும் (சேற்று நிலத்திலும்) கல் மேலும் (மலை மேலும்) உறங்கியும். யாக்கையை - உடம்பை. அம்மை - அடுத்த பிறவியில்.

(1191) பருதி சூழ்ந்த இ பயம் கெழுமா நிலம் - சூரியனுல் வலம் வரப்பட்ட இந்தப் பயனிறைந்த பெரிய உலகம். எழுவர் ஒரு பகல் எய்தியற்று - ஒரு நாளில் வள்ளல்கள் எழுவரும் வந்தடைந்தாற் போன்ற பயன் தரத் தக்கது. வையமும் - இல்வாழ்க்கையும்; உலக

முழுவதையும். ஐயவி - சிறுகடுகு. வெண்கடுகு. அனைத்தும் ஆற்றாது- (கடுகு) அளவும் பொருந்தாது. விட்டோரை திருவேவிடாஅள் - இல்லறத்தை விட்டவர்களைத் திருமகள் விடமாட்டாள். இவள் விடப்பட்டோரே - திருமகளால் விடப்பட்டவரே. விடாஅதோர் - இல்வாழ்வின் பற்றுவிடாதவர் ஆவர்.

(1192) தவம் நின்றால் நவை இன்று - தவம் ஒருவனிடத்து நிலை பெற்றால் குற்றமில்லை. தவம் உலந்தால் அரண் இல்லை - தவம் கெட்டால் காவல் இல்லை. குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வர் - யானைக் கொம்பிற் குத்தப்பட்டாலும் பிழைத்துக் கொள்வார். அறனே களைகண் - துறவறமே ஆதாரமாம்.

(1193) நல்தவம் பரவை ஞாலம் நாம் உடன் நிறுப்பின் - நல்ல தவத்தையும் கடல் சூழ்ந்த வுலகத்தையும் உடன் வைத்து நிறுத்தால். ஐயவி அனைத்தும் ஆற்றாது-கடுகளவும் ஒப்பாகாது. நிற்பின்-தவத்தில் நின்றால். பற்றேடே நிற்பின் - உலக வாழ்க்கைப் பற்றுடன் நின்றால், பற்றல் செல்லாள் - பற்றமாட்டாள் (நீங்குவள்).

(1194) ஆற்றிய என்னும் அருந்தவம் இலார்களாகின் - (மக்கள்). செய்த சிறிய அருமைத்தவம் இலாதவர்களானால். பொன் அன்னீரே- திருமகளைப் போன்றவரே. விழுப்பொருள் நில்லா - சிறந்த பொருள்களும் நில்லாமல் ஒழிந்து போகும். நீரும் நோன்மின்ம் - நீங்களும் தவஞ் செய்யுங்கள்.

(1195) ஊக்கம் - உள்ளக் கிளர்ச்சி. யாக்கைச் செறு-உடலாகிய வயல். ஊக்கமாகிய ஏரைப் பூட்டி, உடலாகிய வயலை உழுது, விரதமாகிய நெல்லை விதைத்து, நல்லொழுக்கமாகிய நீரை நிறைத்து, ஐம்புலன்களாகிய வேலியடைத்துக் காத்தால், வீட்டின்பம் விளையும் என்பது பொருள். தவஞ்செய்தால் முத்தி கிடைக்கும் என்பது கருத்து.

(1196) தவத்தின் மேல் உறை - தவத்தின் மேல் தங்கியிருப்பது. தவத்து இறை தனக்கு அலது அரிது - தவத்திற்கு இறைவனை கடவுட்கல்லது மற்றவர்க்கு அருமையானது. செறிதல் - அடங்குதல். அருளை நயத்து நீங்குதல் பொருள் - கருணையை விரும்பிக் கொடுத்துப் பற்று நீங்குதல் தவமாம். தனை அனையதும் நீ அறி - தன்னைப் போன்றதாகிய தவத்தின் இயல்பையும் நீ அறிவாய்.

(1197) இருளில் கதி சென்று இனி இவண் வாரீர் - இருளே இல்லாத ஒளிமயமான முத்தியுலகிற் போய்த் தங்கி அதன் பின் இவ்வுலகத்திற் பிறக்கவரமாட்டீர். தெருளல் உறினும் தெருண்மின் அதுவே - தெளிவாக ஆய்ந்தாலும் அத் தவமே என்று தெளிவீர்.

(1198) ஒன்றி உய்த்து ஏர் தந்து உழவுழுது - ஒன்றாக ஏரைச் செலுத்தி உழவு செய்து. ஆற்றவும் வித்து இன்றி - போடவும் விதையில்லாமல். என் - எவ்வாறு. இடர்ப்படுமாறு ஒக்கும் - (தவமின்றி இல்வாழ்க்கையிலிருந்து) துன்பப்படும் விதம் (விதையின்றி விளைப்பதைப்) போலும்.

(1199) உயிர்வாழா நின்றார் இல்லை - உயிர் வாழ்கின்றவர் ஒருவரும் இல்லை. தவத்தின் மிக்கது சிறந்தது இன்மையே சிந்தி - தவத்தினும் மிக்கதும் சிறந்ததும் ஒன்று இல்லை என்பதையே எண்ணுவாய் (நெஞ்சே).





[அறத்துப்

(1200) தவநிலை நிற்பார் - மிகவும் நிலையாக நிற்பார் (அழியாது நிற்பார்). அரிது - அவ்வாறு நிற்பது அருமையானது. பவஞ்செய்து - பிறவியடைந்து. பரியும் அதுதான் பெரிது-வருந்தும் அதுதான் பெரிய துன்பம் ஆம். எவன் செய்தும் என்னை - எத்தொழில் செய்தாலும் என்ன பயன் (தவஞ்செய்தால் தான் பயன்).

(1201) கருமத்து ஈட்டினால் - வினையின் கூட்டத்தால். அத்தலை மறந்திலது - பிறப்பாகிய அவ்விடத்தை மறவாமலிருப்பது. மடித்த வாயது - சினங் கொண்டு உதட்டை மடித்துக் கடித்த வாயை யுடையது.

(1202) ஈட்டுவார் தவம் அலால்-பொருளீட்டுவோர் (சேர்ப்பவர்) தவத்தையீட்ட வேண்டும் அத்தவத்தைச் சேர்ப்பதையன்றி. மற்று ஈட்டினால் இயைவது இன்மை விதியார் காட்டினார் - வேறு பொருளகளைச் சேர்த்தால் ஒரு பயனும் பொருந்தாமையை விதி காட்டுகிறது. (அதனை இலங்கை நகரில் வந்து காண்மின்) வார் பூட்டு முலை - கச்சணிந்த கொங்கை.

(1208) இத் திருநகர்க்கு இறைவற்கு - (இலங்கையாகிய) இந்தச் சிறப்பான நகரத் தரசனுக்கு (இராவணனுக்கு). ஏவரே - எவர் (எல்லாரும் ஏவல் செய்கின்றார்.) மூவர் தம்மினும் - (அயன் மால் அரன் என்ற) தேவர் மூவரினும்.

(1211) அசைஇ - நடந்து; கிடந்து. தோல் உடையா - தோலை உடையாக உடுத்து. சுடர் ஓம்பி - தீ வளர்த்து வேள்வி செய்து. ஊர் அடையார் - ஊர்க்கு வராமல்.

## ௩.௪௭. வாய்மை

(1218) வினைதீர் காசிபனே புகன்றான் - பாவவினைகள் நீங்கிய காசிப முனிவன் கூறினான். மெய்யே - வாய்மையே; உண்மையே. அழல்கால் கதிர் பிறவும் - தீயும் காற்றும் சூரியனும் வேறுள்ள பொருள்களும். சிவம் ஆகும் - தெய்வமாகும், பிரமபதமும் - நான்முகனுடைய பதவியும்.

(1219) உவமம் தீர்ந்திடு
அகன்று - பாவம் நீங்கி.
தெரியின் - ஆராய்ந்தால்.

வாய்மை - ஒப்பில்லாத உண்மை. பவம்
தலை ஆய் - முதன்மையுடையவராகி.

(1220) பன்னும் வாய்மையிற் பிறழ்ந்திடா தொழிக - சொல்லும் உண்மையினின்று மாறுபடாது நீங்குக. இப்பவம் - இப்பிறப்பு நீங்கி.

(1221) மெய்யே துணைவர், மெய்யே தருமம், மெய்யே நிதி, மெய்யே தவங்கள், வேறில்லை என்பது கருத்து.

(1222) பகர் சத்தியத்தை விட்டு - சொல்லும் வாய்மையை நீக்கி விட்டால். கேள்வி யாது; புனித நீர் யாது; மகம் யாது; சற்குணங்கள் யாது; உண்மையை விட்டவர்க்குக் கேள்வி; தூய நீராடல் வேள்வி செய்தல் நற்குணங்கள் இவற்றும் பயனில்லை யென்பது கருத்து. நலம் தொகு - நன்மை கூடிய. புனிதம் - தூய்மை. மகம் - யாகம். யாது - ஏது (ஒன்றுமில்லை). மன்ன - அரசனே.

**516**

(1223) மகம்பல - அசுவமேதம் முதலிய பலவகை யாகங்களை. அறம் கூர்ந்தார் எனும் - அறச் செயலின் மிகுந்தவராயினும் - நிரம்பு உற துளைந்தார் எனும் - (குறைவில்லாமல்) நிறைய நீராடி வந்தார் ஆயினும். கறை உறு - களங்கமுள்ள ; குற்றமுடைய.

(1224) பொருள் உலோபம் - பொருட் பற்று, பொருளைச் செலவு செய்யாமற் பதுக்கி வைப்பது. புரிதரு - செய்கின்ற. மருள்தப - மயக்கம் நீக்க. எடுத்திடு பவங்கள் தோறும்-பிறக்கும் பிறவியெவற்றினும். தெருள்தப - தெளிவு நீங்குமாறு (மயக்க முற) செயிர்-குற்றம்.

(1225) பொய்ம்மையே -
போதர - வந்துசேர. புகுத்தா

பொய் பேசுவதே. வித்தும் - விதையும்.
நிற்கும் - புகுத்தும், நுழைவிக்கும்.

(1226) ஏனை - பொய் முதலாய தீய
மற்றை யொழுக்கம். இன்மை செய்யும் -
ஒழுக்கம் தவிர. ஏனை -
அவ்வொழுக்கம் எல்லாம்

இல்லாமற் போக்கும். ஊனம் இல் - குற்றமில்லாத.
தாயிடத்திலும். ஈனம் ஆர் - இழிவு பொருந்திய.
ஈன்றாள் மாட்டும்-

(1227) குவலயத்து - பூமியில்.
ளையும் ஆறு - பிறர் வருந்தும் வண்ணம்.

(1128) ஏற்றம் ஆர் மெய்யே
உயர்வான உண்மையைப் பேசிப்

கூறிப் பொய்யினையிரித்துளார்க்கே-
பொய்யைப் பேசாமல் விட்டவர்க
ளுக்கு. கூற்றுவன் தண்டம் - இயமனுடைய தண்டனை. கோள் - சூரியன் முதலிய ஒன்பது கோள்கள். மாற்று அரும்-மாற்ற முடியாத; நீக்க முடியாத. அசனி - இடி. தீயவளி - கடுங் காற்று; சூறைக் காற்று. அராக்கள் - பாம்புகள்.

(1229) எடுத்த சன்மத்து - இப் பிறவியில். கடுத்தவை - கொடுமைகளை; தீமைகளை கழிந்த சன்மத்தும் - முந்திய பிறப்பினும். பொய்ம்மை, எல்லாம் அழித்திடும் எண்ணில் என மாற்றிப் பொருள் கொள்க.

(1230) தோம் இல் - குற்றமில்லாத. மறந்து ஓர் பொய்ம்மை உரைத்தாரேல் - (மாயையால்) மறந்து ஒரு பொய் கூறி விட்டால். (அதற்குக் கழுவாய் ஆக.) ஒரு நாள் வருந்தி உண்டி......ஆற்றிடுக. கள்ளுசுரேல் - களவு செய்தார் எனில் (அதற்குக் கழுவாய் ஆக). சிறந்த சாந்திராயண......செய்ய வேண்டுமால்.

(1231) கும்பியுள் துளைந்து அழுங்குவார் - நரகத்துள் வீழ்ந்து கலங்குவார். என - என்று. வாய்மனு - உண்மையான மனு என்பவனால் கூறப்பட்ட. வேதசாகை முற்றும் - மறை நாலின் கிளை நூல் முழுவதும்.

(1232) பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள் - பொய்ம் மொழியையே மிகவும் பேசுகின்ற மனிதர்கள். மைதாழ்ந்து இலங்கு மிடறு உடையோன் - கருமை நிறைந்து விளங்கும் கண்டமுடையவன் (நீலகண்டன் ஆகிய சிவன்) செய்வான் எனக் கூட்டுக.

(1233) மெய்யுரை ... ... மேலுலக கோபுரங்கள்; மாநகர கோபுரங்கள் கண்டீர். நின்ற புகழ் வையகத்து மன்னும் ஐயம் இலே. எனக் கூட்டுக. புறத்திடுமின் - (பொய்யுரையைப்) புறத்தே எறிந்து விடுங்கள்.

(1234) கடுந்துயர் விலங்குதல் விரும்பின் - கொடிய துன்பங்கள் உங்களை விட்டு விலக வேண்டும் என்பதை நீங்கள் விரும்பினால். பொய்யுரை புறத்திடுக - பொய் கூறுவதைப் புறத்தே விட்டு விடுக.

(1235) வாய்மையின் வழா அது - உண்மை கூறுவதில் தவறாமல். (உண்மையே கூறி) எய்தா அரும் பொருள் யாவதும் உண்டோ - கிடையாத அருமையான பொருள்கள் எதுவும் உண்டோ? இல்லை (எல்லாப் பொருளும் கிடைக்கும்).

(1236) ஐயம் இன்றி - (துன்பம் வருமோ இன்பம் வருமோ என்று) ஐயம் கொள்ளாமல். வைகல் - ஒவ்வொரு நாளும். கவ்வை இல் உலகு - துன்பமில்லாத உலகம் (என்றும்) இன்பந்தரும் உலகமாகிய மூத்தி).

(1237) நல் இல் செல்லல்களால் நலிவு உண்மையும் - நன்மை யில்லாத துன்பங்களால் வருந்துவதும். பொய் இல் பொய்யொடு கூடுதற்கு ஆகுதல் ஐயம் இல்லை
வாழ்வதால் ஆவதற்கு ஐயம்

- அழியாத பொய்யொடு கூடி நீங்கள்
இல்லை. கடிந்து ஓம்புமின் - நீக்கிக்
க ாப்பீர்.

(1238) வாய்மை யென்னும் ஈது அன்றி - உண்மையென்று சொல்லப்படும் இதனையல்லாமல். ஒன்று உண்மை சொல்லுமோ - ஒரு பண்பு உள்ளதாக (நூல்கள்) சொல்லுமோ (சொல்லா). அதில் தீய்மை தீர்தல் அன்றியே - அவ் வாய்மையால் தீமைகள் நீங்கிவிடும் அல்லாமல். மெய் ஆகவே ஆய் - உண்மையாக ஆய்ந்து பார்.

(1239) அண்ணிய கிளையும் - நெருங்கிய சுற்றத்தாரும். டகழும். பொன்றும் - கெடும். அன்று, ஏ : அசைகள்.

தேசும் -

(1240) உம்மையில்-கழிந்த பிறப்பில்; முற்பிறப்பில். விபத்தினை நீக்கும் - இடையூற்றை நீக்கும். யார்க்கும் மெய்ம்மையே விளங்கும்; அவரவர் இயற்கையாலே மெய்ம்மையே விளங்கும் எனக் கூட்டுக.

(1243) இம்மை - இப்பிறப்பு. அம்மை - அப்பிறப்பு; வரும் பிறப்பு. புலம்கொள இயம்பும் - அறியும்படி கூறுகின்ற. மும்மையும் - மூன்றையும். (இம்மை, அம்மை, வீடு என்பவை) இது மூன்று வகையான வின்பத்தையும் குறிக்கும்.

(1248) அற்று அன்று ஆதல் (ஒரு சொற்கேட்ட) அப்பொழுதே அத்தன்மையாய் விடுவது. அதுதான் மனம் செய்தல் - அச் சொல்லானது மனத்தையிடமாகக் கொள்வது தன்மாட்டு நிகழ்த்தல் - அச் சொல்லின் பக்கமாக (வழியாக) நடத்தல். பிறன் ஓர்த்தல் - அயலான் அச் சொல்லையாய்ந்து கேட்டல். இத்தன்மைபடும் ஆயின் - மேலே கூறிய இச் செயல்கள் அச் சொல்லால் உண்டானால். அது தான் குற்றப் பொய் என்று சொல்வர்.

(1249) கள்ளத்தே இட்டவழியும் - வஞ்சகமாக (மறைவாக) பேசிய போதும். வெளிப்படும் அப் பொய் என்க.

(1250) வையம் எங்கும் கண்ணுடையான் - உலகமாகிய எவ் விடங்களிலும் கண்ணுடையவன் ஆகிய கடவுள். அவன் காண்பதால் அயலாரை ஏமாற்றிப் பொருள் பறிக்கும் எண்ணம் நிறைவேறாது. இடர் - துன்பமாகவே முடியும்.

யால்] ௱எ. நிலையாமை

517

(1251) அணிகலனை - நகையை (ஆபரணத்தை). செவ்வே உடைத்து - திருத்தமாகக் கொண்டிருப்பது. கண்ணும் வாயும் அணிகலன் நண்ணும் கொல்-கண் வாய் ஆகிய உறுப்புக்கள் நகைகளை அணியுமோ? அணியா. வாய்க்கு அணிகலன் வாய்மை தான். அறக் கடவுளின் மணிமுடிதான் வாய்மை. என்னணம் - எவ்வாறு. நன்றும் தீதும் ஒன்றல் இலவாக அளத்தல் நேரிதோ - நன்மையும் தீமையும் பிறர்க்குப் பயத்தல் இல்லாதனவாக அப்பொய் மெய்யை அளப்பது ஒழுங்காமோ? அளக்க முடியாது என்க.

## ௩௭. நிலையாமை

(1264) மலைபடு வெறுக்கையும் - மலை போல உண்டாகிய பொருட் குவியலும். அலைபடும் புற்புதம் ஆகும் - நீரின் அலைமேற் றோன்றும் நீர்க்குமிழி போல நிலைபாமல் மறைந்து விடும்.

(1265) போம் ஆறு ஏதோ - இவர்கள் இனிமேற் போகின்ற வழியும் எவ்வழியோ? எவ்விதமோ? எவர் வாயிலாகவோ எவ்

விடத்திற்கோ? மாயம் ஆம் - மறைவாய்ப்போம். சிந்தையீர் - என்பவரே! மனத்தைப் பெரியாராகக் கொண்டழைத்ததாம்

மனம்

இது.

மனத்தையுடையவரே என்று மக்களை யழைத்ததாகவும் கொள்ளலாம். எந்தையார் - சிவபெருமான் - (எம் தந்தையாகியவர் என்பது பொருள்.)

(1266) இன்று உளார்...ஊமர்காள் - இன்றைக்கிருந்தார் நாளைக் கிரார் என்னும் பழமொழியின் பொருளையறியாது உழன்று திரியும் ஊமை மக்களே! கண்டனார் - கழுத்துடையவர், (சிவபெருமான்). காட்டுப் பள்ளி - திருக்காட்டுப் பள்ளி யென்னும் தலம். கண்டு - அத்தலத்தைக் கண்டு சிவபெருமானை வணங்கி. உய்மின் - பிழைத்துக் கொள்ளுங்கள்.

(1267) அட பண்ணி வைத்தார் - சமையல் செய்ய வேண்டுவன வெல்லாம் கொண்டு வந்து வைத்தார். மந்தணம் கொண்டார் - மறைவாகப் பேசிக் கொண்டார். இறை - சிறிது.

(1268) பரிணமித்து - உற்பத்தியாகி; தோன்றி. தருணனாய் - இளமைப் பருவமுள்ளவனாய். உள்ளபோதே உய்யப்பார் - இவ்வுடம்பு இருக்கும்போதே பிறவி நீங்கிப் பிழைப்பதற்குரிய வழியை யாய்ந்து பார்த்து ஆவன செய்.

(1269) அநித்தியத்தை - அழியும் பொருளை. நித்தியம் - அழியாப் பொருள்; நிலை நிற்கும் பொருள். மருவார் - கூடாமல்; சேராமல். மோனம் அந்தம் ஆம் - மௌனத்தின் முடிவில் தோன்றுகின்ற.

(1270) மாயும் - மறையும். குமாரப் பருவம் - ஐந்து வயதுக்கு மேற் பதினாறும் வயது வரையுள்ள பருவம். யவ்வனமும் - இளமைப் பருவமும். நலமும் - அழகும். நிலையாமையன்றே நிலை - நிலையாமை யல்லவா நிலைமையானது.

(1271) நிலையாமை மயமே ஞாலம் எல்லாம் - நிலையாமை வடிவமானது உலக முழுவதும்.



(1230) தமர் தாரம் மகவு - சுற்றத்தார், மனைவி, குழந்தைகள். சதுரங்கசேனை - யானை, குதிரை, தேர், காலாள் என்ற நான்குறுப்புக்களை யுடைய படை. இந்திரசாலம் கோலம் - இந்திரசாலம் என்ற வித்தை காட்டுவது போலத் தோன்றும் வியப்பான அழகுடைய வடிவம். யான் என்பது அறவும் மூழ்கி - நான் என்ற அகங்காரத்தில் மிகவும் மூழ்கி. தேசு ஆமயம் ஆனந்தமே - ஒளியுருவாய் விளங்கும் இன்பப் பொருளே! (கடவுளே).

(1281) செகத்து இருள் சொப்பனமே என வெளிகண்டே இருக்கவும் - உலகத்துள்ள மாயை கனவுபோல வெளியாகக் காணுமாறு தோன்றவும். பாசம் பந்தம் இனமே - அன்பும் கட்டும் பொருந்திய சுற்றத்தார்களையே.

(1282) நிதியும் - செல்வப் பொருளும். வேண்டுவன - இவையே மக்கள் வாழ்வுக்கு வேண்டியவையாம். நிற்கின் அன்றோ - இவைகள்

நின்றால்
அழிந்து

நன்றாம்; நில்லா என்றால் எவ்வாறு நலமாம் வீந்து போகும்
விடும். சரா மரணம் உறும் - நரை சாவு பொருந்தும்.

-

(1283) மாண்டன - அழிந்தவைகளை எண்ணினால் அது (நுண் மணலை எண்ணுவது போலாம்) எண் நாடும் - எண்ணுவதற்கு வரும். கண் நாடும் அவை - கண்ணாற் கண்ட அவையெல்லாம்.

(1284) மன்னும் நீர் மொக்குள் ஒக்கும் - பொருந்திய நீர்க் குமிழியைப் போலும் (இளமை) இன்பம் மின்னின் ஒத்து இறக்கும் - துகரும் இன்பமெல்லாம் மின்னலைப் போலத் தோன்றி மறையும். வெயில் உறுபனியில் - சூரியனைக் கண்ட பனியைப் போல. இனி - ஓரிசை. வினையின் ஆக்கம் அன்னது - இருவினையால் உண்டாவது அத் தன்மை. அழுங்குதற்கு - வருந்துவதற்கு.

(1285) கடல் கடம்பு எறிந்த காவலன் - கடலில் நின்ற காவல் மரமாகிய கடம்பினை வெட்டிய மன்னன் (சேரன் செங்குட்டுவன்). விடர் சிலை பொறித்த விறலோன்-இமயமலைக் குகையில் விற்கொடியை நாட்டிய வெற்றியுடையோன். நான்மறையாளன் செய்யுள் கொண்டு
மேல் நிலையுலகம் விடுத்தோன்
ஆகிய புலவர் பாடிய செய்யுளை

- நான்கு மறையை யோதும் அந்தண
யேற்றுக்கொண்டு அம்மறையவனைத்

துறக்க வுலகத்துக்குச் செலுத்தியவனும்.
செழுகுட்டுவன்) போற்றி மன்னுயிர்

(இவன் பல்யானைச் செல்

முறையிற் கொள்க என
கூற்றுவரை நிறுத்த கொற்றவன் - நிலைபெற்ற உயிர்களைக் காத்து மூத்த முறைப்படி கொள்க என்று படுத்திய மன்னவனும்.

கூறிக் கூற்றுவனை வரையறைப் வன் சொல்

யவனர் வளம் நாடு ஆண்டு பொன்படு நெடுவரை புகுந்தோன் - கடுஞ் சொற் பேசும் யவனருடைய வளம்பொருந்திய நாட்டினை ஆண்டு இமயமலையிற் புகுந்த அரசனும், மிகப் பெரும் தானையோடு இருஞ் செரு ஓட்டி அகப்பா எறிந்த அரும் திறை - மிகவும் பெரிதாகிய சேனையோடு பெரும் போரினைத் துரந்து பகைவர் மதிலையழித்த அரிய திறலுடைய மன்னனும். உருகெழு மரபின் அயிரை மண்ணி இருகடல் நீரும் ஆடினோன் - உட்குப் பொருந்திய முறையுடைய அயிரை மலையிற் கொற்றவை யென்ற தெய்வத்தை நீராட்டி வழிபட்டு ஒரு பகலில் இரண்டு கடல் நீரையும் வரவழைத்து நீராடிய மன்னனும், சதுக்கப் பூதரை வஞ்சியுள் தந்து மதுகொள்





வேள்வி வேட்டோன்-சதுக்கப் பூதங்களை அமராவதியினின்றும் வஞ்சி நகரத்திற்குக் கொணர்ந்து சோமயாகத்தினைச் செய்த மன்னனும். மீக் கூற்றாளர் - (மேற் கூறிய) புகழ் பெற்ற மன்னவர். நரைமுதிர் யாக்கை நீயும் கண்டனை (ஆதலால்) இளமை நில்லாது என்பதை உரைக்கல் வேண்டா எனக் கூட்டுக. விண்ணோர் உருவின் - தேவர் வடிவத்தில்.

நரகரைக் காணினும் காணும்-நரகர் ஆகப் பிறந்தாலும் பிறக்கும். தேவர் கதி, மக்கட் கதி, நரகர் கதி, விலங்கு கதி ஆகிய நால்வகைக் கதியில் மாறிமாறிப் பிறக்கும் உயிர் என்பது இங்குக் கூறியது.

செய்வினை வழித்தாய் உயிர் செலும் என்பது அவ்வவ்வுயிர் செய்யும் நல்வினை தீவினைகளுக்குத் கதிகளிலும் செல்லும் என்பது அறிவுரையாம்.

பொருள் உரை -
தக்கவாறு நாற்

(1286) வித்து நீர் செய்து கொண்மின் - உழவர்கள் தாம் உழு நிலத்திற்குத் தக்க விதையை வைத்துக்கொள்வது போல எக் காலத்தும் மக்களாகிய நீங்கள் செல்லும் நாற்கதிக்கும் உரிய விதையாக வேண்டிய அறத்தைச் செய்து கொள்ளுங்கள்.

(1287) மனைத்திற வாழ்க்கையை மாயம் என்று உணர்ந்து - இல் வாழ்வின் பாகுபட்ட வாழ்வெல்லாம் பொய் என்றறிந்து. மலையா அறத்தின் - திகைப்பில்லா அறஞ் செய்வதுடன்.

(1288) மலை ஆகம் போழ் ஆக - மலைபோன்ற (மார்பு) உடம்பு பிளக்க (பிளவாக). நிலைபாமை சால நிலை பெற்றது அன்றே - (வந்தான் சாய்ந்தான் ஆதலால்) நிலையாமை இவ்வுலகத்தில் நிலை யாயிற்று அல்லவா?

(1289) மலர்திரண்டால் போல் இளமை வாடும்

- பூக்கள் கூடி
நின்றன போல அழகாகத் தோன்றும் இளமையானது. பூக்கள் கூடி வாடி நின்றன போல முதுமை வந்து தோன்றும். (செல்வம் இளமை வாழ்நாள் மூன்றும்) மெய் என்று - நிலையானவை என்று நினைத்து.

(1290) சார் உறு - பொருந்திய. அநந்தம் - பல (ஒன்றல்ல). பலர். கன்மப் பெருக்கமும் - இருவினைப் பெருக்கமும். இன்னும் சேர்வதும் - இனிமேல் வந்து சேரும் பிறவி முதலானவைகளும்.

(1291) வீதல் கேட்டும் ஆல் - கெட்டுப் போவதைக் கேட்டோம். ஆல் - அசை. எண்ணில் - ஆய்ந்தால். நாம் இனி நயக்கற்பாலது ஈறு இலாதது ஆம் இன்பம் - நாம் இனிமேல் விரும்புந் தன்மை யுடையது கேடில்லாதது ஆகிய பேரின்பமே.

(1292) வானத்து இடு வில்லின் ஈண்டை மாயும் - விண்ணிலிட்ட இந்திரவில்லைப் போல் இவ்வுலகின் மறையும். வாரி புதியதன் வரவு போலும் - புதுமையதான கான்யாற்று நீர் வருகை போல வந்து நிற்கும். ஆயுவும் - வாழ் நாளும். உளபகல் - தாம் வாழ்நாளில்.

(1293) தமனியம் பீடம் ஆக - பொன்னுற் சமைத்த ஆசனமாக. இந்திரவிபவம் - இந்திரனைப் போன்ற செல்வம்; இந்திரனுடைய செல்வம் போன்ற செல்வம்.



[அற்த்துப்

(1299) முன்சென்று வருநாள் கண்டார் யாரே - முன்னே சென்று பின் வருநாளைக் கண்டவர் யார். அடுத்துப் பின்வரும் நாள் என்று முன் அறிந்தவர் ஒருவரும் இலர். அந்நாளிலேயே மறைந்தாலும் மறைவர் என்பது கருத்து. ஒருநாள் கை படுத்து உடையோர் இன்மையின் - இறக்கும் நாள் இன்னது எனக் கையிற் பிடித்து வைத்தவர் போல அறிந்தவர் உலகத்தில் ஒருவரும் இல்லாமையால். புகினும், ஏறினும், அப்புறம் புகினும், கூற்றத்து மீளி கொடுநா விலக்குதற்கு அரிது எனக் கூட்டுக. நிரகம் - பாதலவுலகம். விசும்பின் பிடர்தலை-விண்ணுலகக் கழுத்தின் மேலிடம். நேமிமால்வரைக்கு அப்புறம் - சக்கரவாள கிரிக்கும் அப்பாலுள்ள இடம். கொட்கும் - சுழல்கின்ற. கூற்றத்து மீளி கொடுநா - யமனுடைய வலிய வளைந்த (கொடிய) நாக்கினை.

## ௩.அ. யாக்கை நிலையாமை

(1311) காலன் ஆகிய ஓர் சேர்ப்பன் - யமன் ஆகிய ஒரு நெய்தல் நிலத்தலைவன் (பரதவர் தலைவன்). உலகமாகிய தடாகத்தில் (குளத்தில்) காலம் என்ற வலைவீசி உயிர்களாகிய மீன்களை இழுத்து நிற்கின்றான். முடிவு என்ற கரைக்கு வரும்போது அவன் கைக்குள் அகப்பட்டு விழுவோம் என்பது. வீடும் - விழுவோம்; வீடுதும் என்பது குறைந்து நின்றது எனின் இறப்போம் என்பது.

(1312) பேய் நமது என மனமதிக்கும் பெற்றிபோல் ஆய்-பேயும் நம்முடையது இவ்வுடம்பு என்று மனத்தால் மதிக்கும் தன்மையுடையது போலாகி. நமது எனப்படும் யாக்கை யாரதே - நாமும் நம்முடையது என்று சொல்லப்படும் நம்முடம்பு யாருக்குரியதாம். ஒன்றும் பயன்படாதது.

(1313) விடம் பயில் எயிற்று அரவு உரியும் - நஞ்சு பொருந்தும் பற்களையுடைய பாம்பின் உரிந்த தோலும். வீநுழை குடம்பையும் - பறவை குடிபுகும் கூடும்.

(1314) அணி இழையார் - அழகிய நகையணிந்த அதனில் - ஒரு நொடிப்பொழுதில், பிறந்து இறும் பிறந்து இறக்கும் இவ்வுடம்பினால்.

மகளிர். கணம்
இக்காயத்தின் -

(1315) அருவினை - செய்தற்கரிய நல்வினை தீவினைகளால். எவையும் கருவுறும் - எல்லாப் பொருளும் பிறவியடையும். கால வயத்த ஆம்-காலத்தின் வசப்பட்டனவாகிக் கெடும். உந்தியோன்-நான்முகன் (திருமாலுந்திக்கமலத்திற் பிறந்தவன்) மனுக்கள் தாமும் பொன்றுவர் எனக் கூட்டுக. கற்பத்து-நான்முகன் படைத்த கற்பம் என்ற நாளில். பதினான்கு இந்திரர் மறைவதும் மனுக்கள் பொன்றுவதும் ஆகிய கற்பம் ஒன்று.

(1316) இக்கற்பம் என்பது மேற்கூறப்பட்டது. (அது) வேதற்கு ஒருதினம் - நான்முகனுக்கு ஒருநாள், ஏதம் இல்வருடம் நூறேல் - குற்றமில்லாத வருடம் நூறானால். அன்னான் - அந்நான்முகன். மன்ற பொன்றுவன் - உறுதியாக இறப்பன்.

(1317) அம்மலர்க் கிழவன் காலம் - அப்பிரமன் இறக்குங் காலமாகிய கற்பம். அரிக்கு ஒரு தினம் - திருமாலுக்கு ஒரு நாளாம். அம்



முறை...எய்திற் பொன்றும். அம்முறையே நாள் முப்பது கூடித் திங்கள் ஆகி அது பன்னிரண்டு சேர்ந்து ஆண்டாகி அவ்வாண்டு நூறு சென்றால் அம்மாலும் இறப்பான். அம்மையில் - அப்பிறப்பிலேயே.

(1318) படும்கலை...காலம் கழிவுறும் - உண்டாகும் கலை, விகலை விநாடி நாழிகை முகூர்த்தம், காட்டைகள் என்றும் பகல் இரவு பக்கம் திங்கள் இவற்றுடன் சேர்ந்த இருது (பருவம்) ஆண்டு யுக முதல் யுக முடிவு என்று கூறும் உறுப்புப் பிரிவினால் துன்பம் நீங்குங்காலம் கழியும். நெடும் புலம் குறும்பு கடந்துளீர் - நீண்ட ஐம்புலக்குறும்பினை யடக்கிய முனிவர்களே! குறும்பு - அறிவில்லாத செயல்கள்.

(1319) வழும்பு - கிணம்; கொழுப்பு. செங் நீர் புண் அசும்பு ஒழுகி நாறி - குருதியாகிய செந்நீர் வடிந்து நாற்றம் தோன்றி. உடம்பே பிணி என்க.

(1320) நெய்த்தோரும் குருதியும் ஒரு மூன்று தொடியாம்; மூன்று பலம் ஆகும். (இருவகை நெய்த்தோரும்). ஆக்கை அனைத்தையும்... அளவிடின் - உடம்பிலுள்ள எல்லாவற்றையுங் கூட்டி நிறுத்தளந்தால். இயக்கங்கட்கு - மலம், சிறுநீர், வேர்வை முதலாக ஏறுவதும் இறங்குவதும் ஆகிய இடங்களுக்கு.

(1321) தமனியம் கடம்-பொன்னாற் செய்த குடம். விழைஞரும்-விரும்புவோரும். முடை உமிழ் யாக்கை சுசி உறுது - நாற்றத்தை வெளிவிடும் உடம்பானது தூய்மையடையாது.

(1322) கருவினில் - சூற்கொண்டிருக்கும் போது. மழவினின் - குழந்தைப் பருவத்தில். பருவம் மாறில் - பருவங்கள் மாறியபோதும். பருவம் ஆறில்-கார் முதலிய ஆறு பருவங்களில். பெருகிய பொழுதில்- பெருக்கமான இரவு பகல் என்ற பொழுதில். சாவின் - இறக்கும் பொழுதில். மனித்தற்கு வன்துயர் உண்டு எனக் கூட்டுக.

(1323) விதித்தன...மேவரிது - மக்கட்கு விதிக்கப்பட்ட நூறு ஆண்டு வரை யாரும் வாழமுடியாது. சில்ல - சில நாட்கள். இளமை தின்னும் - (சில நாட்களை) இளமைப் பருவம் தின்றுவிடும் என்றுவது இளமைப் பருவத்தை (சில நாட்கள்) தின்றுவிடும் என்றுவது பொருள் கொள்க. நல் உணர்வு உதிக்கின் மேலே உறுபிணி நாட ஒட்டா என வும் மூப்பு நண்ணின் மதித்தனர் ஒழுகல் ஆறும் வழுவிக்கும் எனவுங் கூட்டுக.

(1324) கொழுவும் - கொழுப்பும். ஈருளும் - ஈரலும். வழும்பும்- அடரும். உவர்நீரும் - நெருங்கிய உப்புநீரும் (சிறுநீரும்) பண்புடையோர் கினைப்பரோ எனக்கூட்க.

(1325) மிதவையில் நோக்கு அழைத்து உழலும்- தூண்டிலிலுள்ள மிதப்பு (கெட்டித்தண்டு) மேற்பார்த்துத் திரியும். பதம் இது - வேளை யீது; அமையம் இது. பாழ்ங்கூற்று - வீணான யமன். இதம் அகிதம் - நன்மை, தீமை.

(1326) ஆன் அமுதும்-பசுவின்பாலும். உதரம் அதில் - வயிற்றில். கடியும் உவர்புனல் ஆதல் - நீக்குகின்ற உப்பு நீர் (சிறுநீர்) ஆவது. முடைகுரம்பை - நாறும் கூடு ஆகிய உடல்.

[அறத்துப்

(1327) நறும் தவளம் துகில் - நல்ல வெண்மையான பட்டாடை. நவை உடம்பில் உறும் துயரு - குற்றமான உடம்பில் உள்ள பிழை.

(1328) வினை நெறியால் புலனும் வரும் எனவும், வினையனைத்தும் பொய்யாகும் எனவும் கூட்டுக. பொறி மூன்றின் தடுமாற்றம் - மனம் வாக்கு காயம் என்ற மூன்று பொறிகளும் ஒன்றற்கொன்று மாறுபட்டு நிற்கும் நிலையுள்ளது. இதனால் உடம்போடு கூடியின்பமடைய முடியாது என்பது கருத்து.

(1329) சுக்கிலம் - விந்து (வெண்ணீர்). உதிரம் - சுரோணிதம் (செந்நீர். பலிதம் - பயன்பட்டு மெய்திரங்கி - உடல் சுருங்கி. மரணம் வாராததோ? (வரும்) என்க.

(1330) இறந்த அப்பிறப்பு - முந்திய பிறவி. அடங்கலும் - வருபிறப்பு முழுவதும். அப்படி அன்றே - துன்பமேயல்லவா. விறல் மருத்தின் வைப்பு அனையாய் - வெற்றி பெறும் வாயுவின் காவல் நிதியம் போன்றவனே (அனுமானே) உணர்ந்தோர் வரும் பிறந்தை வேண்டுவரோ எனக்கூட்டுக. பிறந்தை - பிறவி.

(1331) இழிபு உறும் அ சனனத்தால் - கேவலமான அப்பிறவியினால். உது நீங்கில் - இப்பிறவி நீங்கினால். (உயிர்) உறும் இன்பம் என்க.

(1332) நசிக்கும் - மறையும்; கெடும். உயர்ந்தவெல்லாம் தாழ்ந்திடும். பாழ் துடவைபடும் - பாழான காடாகும். அனுமான் அனுமானே! (அண்மை விளி இது) சரீரந்தான் விளியாதோ? விளியும்.

(1333) இது தான் புதிது புதுமையல்ல (பழமைதான்).

அன்றே - இவ்வாறு உடல் கழிவது மாருதியே - அனுமானே!

(1334) அடுக்கல் முழை - மலைக் குகைக்குள். எறி அதனின் - அலைவீசுகின்ற கடலில். இறப்பு அதனோடு உடம்பும் சாவும் ஒன்றாகச் சேர்ந்தது.

தரங்கக் கடல்
ஒற்றுமையது-

(1335) உததியிடை நீரிடத்து புரிவினையால்-கடல்நீரிற் செய்யும் எழுத்து முதலிய தொழில் போன்றது ஆதலால். பவர்க்கம்-பாதலம்.

(1336) இலகும் இப்பொருள் மேல் - விளங்கும் இவ்வுடம்பாகிய பொருள் இறக்கும் என்ற பொருளைக் குறித்து. அந்தகன் ஆணை தன்னில் நிற்பது - இயமன் ஆணையால் (உடலில் உயிர்) நிற்பது.

(1337) உவையிற்றின் - (கோழை மூளை முதலிய) பேரில. ஆகுவாரே - ஆவாரோ? ஆகார். (அறிவிலார்).

இவற்றைப்

(1338) சீவடியும் செய் அகம் - (உடம்பு) சீ ஆகிய நீர் வடிந்து நிறையும் வயலிடம் போன்றது. வழுக்கு உடல் - நிணமுள்ள உடம்பு. முழுகுடல் - முற்றிய குடல். எண்ணுமோ - (அறிஞன்) மதிப்பானோ?

(1339) உழு - புழு. இந்தனம் - விறகு. சட்டகம் வடிவுடையது.

- சட்டப் பலகை

(1340) நட்ட புன்குடில் - நிறுத்தப்பட்ட சிறிய குடிசை. மடுத்த வான் கலம் - தாங்கிய பெரிய பாண்டம். சிற்றறைக் குரம்பை - சிறிய வீடாகிய கூடு.



(1341) வயிற்று மின்போல் அழியும் - வயிற்றில் மின்னலைப் போலக் கருவாகத் தோன்றிப் பிறவாமலே யழிந்துவிடும். மடவார் உடனே முயங்கி அதன்பின் போய் அழியும் - பெண்களுடன் கூடியின்ப நுகர்ந்ததன்பின் இறந்தொழியும்.

(1342) சிகரிலிதன் திருவாக்கை - ஒப்பற்ற கடவுளின் போலத் தோன்றி மறைவதை, சிறந்த ஒலி

(1343) சரீரத்துள் என் இருப்பு ஆம் எனத் துளங்கி இளையாத இழுதைக்கு - உடம்புக்குள் எவ்வாறு இருப்போம் என்று கலங்கி வருந்தாத கயவருக்கு. காட்சியினில் துணியாரே சொல் விரையில் துணிவாரோ - கண்ணாற் கண்டும் தெளியாதவர் சொல்வாற் கேட்டுத் துணிவாரோ? துணிவு கொள்ளார்.

(1344) அ கடத்தை - அப்பொற்குடத்தை. மக்கள் தமது தாம் - மனிதர்கள் தம்முடைய உடம்பினையே.

உடலினைத்

(1345) எறிந்த வான்சிலை - மேலே எறியப்பட்ட பெரிய கல். காரியம் என்பது - செய்யப்பட்ட ஒரு பொருளானது. காரணம் எனப்படுவது இறந்திடாது - முதற்காரணம் என்று சொல்லப்படும் பொருளே அழியாததாம்.

(1346) பண்டை வாசனை - முற்பிறப்பிற் பழகிய வறிவு. காயம் - உடம்பு. அண்டரேனும் - தேவர்களாக இருந்தாலும். காயம் விண்டு

இறப்பது - உடம்பு கழிந்து சாவது.

(1347) படர்சிரித்......போந்தவர் - பரந்த மலைமேற்றோன்றும் சந்திரனைப்போல யானை யெருத்தின்மேற் குடைபிடித்துவர வந்த மன்னர். கடன் - காடு. ஒருவினார் - நீங்கினார்.

(1348) குருடு தீர்ந்தார்-அஞ்ஞானம் நீங்கியவர் (அறிஞர்) பெயர் தரித்த பொல்லா குழுவினை - (குழவி, காளை, முதுமை என்ற) பல பெயர் பெற்று வளரும் தீய கூட்டத்தை.

(1349) வித்தியம்
சக்கரம் போன்றது.

இன்றி - நிலையில்லாமல். சகடக்கால் - வண்டிச்
ஈங்கண் - இவ்வுலகத்தில்.

(1350) நடலைவாழ்வு - வஞ்சகமான உடல் வாழ்க்கையை. சுடலை சேர்வது - இறந்து சுடுகாட்டிற் போய்ச் சேர்வது. சொல்பிரமாணம் - ஒரு சொற்பேசுங் காலவளவுதான். ஊர் முனி பண்டம் - ஊரிலுள்ளவ ரால் வெறுக்கப்படும் பொருளாம்.

(1351) பூ கைகொண்டு - மலரைக் கையில்
அலமந்து - சுழன்று.

எடுத்துக்கொண்டு.

(1352) கண்டீர்-பார்த்தீர். கண்டீர்: அசை. இரு வினைப் பாத்திரம் - நல்வினை தீவினை என்ற இருவகை வினைகள் அடங்கிய பண்டம். எண் நின்ற - எண்ணும்படியிருக்கும்.

(1353) சூரைஅம் காட்டிடை - சூரைச்
சுடுகாட்டில்.

செடிபடர்ந்த அழகான

(1354) வளத்து இடை முற்றத்து - வளமான முற்றமாகிய இடத்தில். மாநிலம் முற்றும் - பெரிய நிலத்தை வளைத்திருக்கும். இறைப்போதும் - சிறிது பொழுதும்.



[அறத்துப்

(1355) பால்துளி பெய்யில் என் - பாலில் ஒரு துளி வாயில் ஊற்றினாலென்ன? தோற்பையுள் நின்று - உடம்புக்குள் இருந்து. கூத்தன் - உயிர். இக் கூட்டையே - இவ்வுடம்பினையே.

(1356) காது அளவு ஓடிய கலகம் பாதகம் கண்ணியர் - காது வரையும் ஓடுகின்ற கலகத்தையும் பாவத்தையும் செய்யும் விழியுடைய மங்கையர். கள்வர் ஐவர் - ஐம்பொறிகள் (மெய் வாய் கண் மூக்குச் செவி). கானகம் - காடுபோன்றது (உடம்பு). சலமலம் பேழை - சிறுநீர் மலம் அடங்கிய பெட்டி. பெட்டகம், சீறூர், கட்டளை, பாண்டம் பீற்றல்துண்டம், தோட்டம், பம்பரம், மரக்கலம், பஞ்சரம் துருத்தி, பத்தம், கானப்பட்டம், வெட்டுங்கட்டை, சட்டை விருந்து, சருகு சருமி, கொழுகொம்பு பிண்டம், உபாதி, பூளை பனிக்கூட்டம், இந்திர சாபம், அருநிழல், கனவிற் கண்ட காட்சி, மாயக் களங்கம் இவை போன்றது உடம்பு என உவமையை விளக்கிப்பொருத்துக. அமையும் அமையும் (இவ்வுடலோடுகூடிய வாழ்க்கை) போதும்போதும். இமைய வல்லி - இமயமலையிற் பிறந்த கொடிபோன்றவுமையாள். நால் முழத்து ஒன்பது பீற்றல் துண்டு - நான்கு முழமுடைய ஒன்பது கிழிந்த துளையுடைய ஆடைத்துண்டு தோட்டம்போன்றது. இவ்வுடம்பில், பேய்ச்

சுரைக்காய் போலக் கை கால் முதலிய உறுப்புக்கள் பயன்படாதவை என்பது கருத்து. பம்பரம்போல ஆசை யொழிந்தால் ஆடாது என்பது. பஞ்சரம் - கூடு. மாயம், வேறுபாடு சாவு இவைதங்கும் கூடு போன்றது. அம் சருமி - அழகிய தோலுடையது. சருமிக் கிழங்கு என்க. பவம் கொழுந்து - பிறவியாகிய கொழுந்து. பிணமேல் - பிண மான பின்பு; பிணமானால். கால் எதிர் குவித்த பூளை-காற்றுக்கு நேரிற் கூட்டுவித்த பூளைப்பூ. அந்தரத்து இயங்கும் - வானத்தில் வருகின்ற. இந்திரசாபம் - பச்சை வில். இந்திரனுடைய வில். அதிரும் மேகத்து உருவின் அரு நிழல் - இடிக்கின்ற மேகத்தின் வடிவாற்றோன்றிய அருமையான நிழல்.

(1357) அனுராகம் - காமம், ஆசை. சரிக்கு ஓதுவேன் - அப் பெண்களுக்கு உடன்பாடாக வேண்டிய சொற்களைப் பேசுவேன். விரை - மணமுள்ள பொருள்.

(1358) ஆபாசம் கொட்டிலை - அருவருப்புக்குரிய தங்கிய தொழுவை.

மலம் சிறுநீர்

(1359) காம்பு இணங்கும் பணை தோளார்க்கும் - மூங்கிலுக்கு ஒப்பாகும் பருத்த தோளுடைய பெண்களுக்கும். இனிமேல் சாம் பிணம் - இனிமேற் சிலநாளிருந்து சாகும் பிணங்களாகிய மனிதர்கள்.

*(1363) பேயும் நடனம் இடுங் கடம் ஆம் - பேய்கள் நடமாடும் சுடுகாடாம் இந்த உடம்பு.

(1364) காஞ்சிரங்காய் - எட்டிக்காய். நாய்க்குச்சூல் உள்ளது; மருத்துவம் இல்லை. பேய்க்கு அறிவு உள்ளது; உண்மையறிவு (ஞானம்) இல்லை. காஞ்சிரங்காய் உண்டு; தின்பார் இலர். உண்டு அதனாற் பயன் இல்லை என்று உவமையைப்

அதுபோல் உடல் பொருத்துக.

(1370) வைப்பு இருக்க - தேடிவைத்த செல்வம் இருக்க. பஞ்சு இட்டு - (கண்) பஞ்சடைந்து. அப்பை கக்கி - நீரையும் உமிழ்ந்து. கண்டு நம்பியிருப்பரோ எனக்கூட்டுக.

525

(1371) வெள் விடையோன் சிலம் - வெள்ளைக்காளை யூர்தியுடைய சிவபெருமான் கருணையை (திருவருளை). கொட்டையிட்டு - தலையணை வைத்து, திண்டு வைத்து. கட்டையிட்டு - விறகுக் கட்டையின் மேல் வைத்து.

(1372) அலகை - பேய். துருத்தியை - துருத்திபோன்ற உடம்பை. நவவாசல் ஒன்பது வாயில் (வாய் கண் காது மூக்கு எருவாய் கருவாய்). மோகம் ஆசை முறிஇட்ட - மோகமாகிய ஆசை என்ற முறிச்சீட்டு (ஆவணம், பத்திரம்) வைத்திருக்கின்ற, மூடங்கல் ஆர் - வளைவு பொருந்திய. மாகம் இந்திரதனு - வானத்திற்றோன்றும் பச்சை வில். குலாலனார் - குயவனார். வேதம் ஓதிய என்ற குறிப்பினால் நான்முகன் ஆயிற்று.

(1373) என் பொலா மணியே - எனக்குரிய மணிபோன்றவனே (சிவனே).

துளையிடப் படாத

(1380) நகுநடை குழிவிழி பிறழ்பல் பேயினுக்கு - யாவரும் நகைக்கத்தக்க நடையையும் குழிந்த விழிகளையும் ஒன்றற்கு மாறு பட்ட பற்களையும் உடைய பேய்க்கு.

(1381) துவக்கை - உடம்பை. பைமறி என நோக்கி - பையின் மடங்கிய உட்புறம் போலப்பார்த்து. இன்பம் வாரிதியில் - பேரின்ப மாகிய கடலில்.

(1382) வளமை பெற்றுடைய மகற்கும் - செல்வம் பெற்று வாழ்ந் துள்ள மனிதனுக்கும். உளம் மிக பறை கின்று அறையுமேல் - மிகவும் மனம் பறையடிப்பது போலத்துடிக்குமானால். மற்றையர் இன்பம் உடையரோ எனக் கூட்டுக. நரரே - களிமிகுத்து இருப்பர் என்று கூட்டுக.

(1383) மற்றதை - மீண்டும் அந்தக்கருவியை. செய்துநோக்குதல் போல் (ஆம்) என்று கூட்டுக.

(1384) (உடையான்) அருள் இல்லவர்க்கு ஒருகால் இது என் என்று உணர நெஞ்சம் ஒட்டாது என் - கடவுள் திருவருள் பெறாதவர்க்கு (இவ்வுடம்பின் தன்மை கண்டும்) ஒரு வேளையாவது இது என்ன இவ்வாறுளதே என்று ஆராய்ந்து காண்பதற்கு அவர் மனம் பொருந்துவதில்லை என்ன காரணமோ? அறியேன்.

(1385) அறியாமை விதையால் வினையாகிய மரங்களாகத்தோன்றி வேட்கை என்றவேர் ஊன்றி முதிர்ந்து காதல் களிப்பு என்ற கொம்பு கணைப் பரப்பிக் கேடு என்ற பூப்பூத்துத் துன்பம் என்ற காய்காய்த்துச் சாவு என்ற பழம் பழுத்து நிற்கும் இவ்வுடம்பு.

(1386) மான்சென்ற நோக்கின் மாதே - மான்பார்க்கும் பார்வை போல் பார்வையுடைய பெண்ணே! இது விளி. தேன் சென்ற நெறியும் - வண்டுகள் பறந்துபோன வழியும். தண்ணீர் சிறு திரை போர்வை போர்த்து மீன் சென்ற நெறியும் - நீரில் தோன்றும் சிறிய அலைகளாகிய போர்வையால் மூடப்பட்டு மீன்கள் போன வழியும், நெறியும்போல மக்கள் யாக்கை விழித்திமைப்பவர்க்கும் தோன்று மாய்ந்துபோம் என்று கூட்டுக.



(1387) இற்று என பெயர்க்கல் என்று அந்நாளைப் போர்த்துக்கொண்டு

ஆமோ - இத்தன்மையுடையது வர வியலுமோ? இயலாது.

1388 மைதிரண்ட - நெமை கிறம் பொருந்திய. வார் - நீண்ட. காரிகையார் மருள - பெண்கள் கண்டு காதல் கொண்டு மயங்குமாறு. ஐ ரண்டு - கோழை கூடிகின்று. கண்டம் குரைப்ப - குரல் ஒலியை யடைப்ப. நெய்திரண்டாற்போல் வெண்ணெய்திரண்டு வந்தது போலக்கோழையைக்கக்கி (உமிழ்ந்து).

(1389) பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென - செம்பொன்னும் வெண்பொன்னும் சேர்ந்ததுபோலச் செந்நீரும் வெண்ணீரும் (சுரோணி தமும் சுக்கிலமும்) சேர்ந்து. மின்னும் மொக்குளும் என - மின்னலும் நீர்க்குமிழியும்போல.

(1390) வீங்குபு - பருத்து. கூன்புறயாமை வண்ணம் எய்தலும் - வளைந்த முதுகுடைய ஆமைவடிவமாய்க் கருவடைந்தபோதும். வழுக்க வும் இறும் - இறந்துபோகவும் கூடும். கண் அனார் அழ - கண் போன்ற நண்பர் அழுதுவருந்தும்படி.

(1391) அருநிதி இரவலர்க்கு ஆர்த்தி முழுநம் பேர்பெறும் எல்லையுள் - அருமையான பொருளை யாசகர்க்குக்கொடுத்துப் பெய ரிட்டு வளர்க்கும் நாளில். கெழீ இயினரொடும் - பொருந்திய நண்பர்க ளுடன்.

(1392) குழகும் - இளமையும். விடையில் - காளையைப்போல்.

(1393) எரிபொன் மேலை - விளங்கும் பொன்னாற் செய்யப்பட்ட மேகலையும். சிலம்பும், கிண்கிணியும், இழையும், அணிந்த அரிவையர் என்று கூட்டுக. அரி - பரல். சிலம்பும் - ஒலிக்கின்ற. தெரிவில் போகத்து - ஒன்றும் அறியாத இன்பவாழ்வில். சிதைந்து முரியும் - வேறுபட்டு உடல் அழியும். அழவே முரியும் என்க.

(1394) பேதுசெய் பிணிபெரும் புலி பாய்ந்திட - மயக்கஞ் செய்யும் நோயாகிய பெரிய புலி பாய்ந்தபோது. ஓதம் மா கடல் உடை கலத்தவர் உற்றது உறவே பிணம் ஆம் - ஒலியுடைய பெருங்கடலில் கவிழ்ந்த கப்பலிற் பட்டவருற்ற துன்பத்தைப்போல வீட்டிலுள்ளார் துன்பப்பட்டலறும் வண்ணம் பிணமாகும் (உடல்).

(1395) காமம் பைப்பயக் கழிய - ஆசையானது மெள்ளமெள்ள (சிறிதுசிறிது ஆக) நீங்க. தம் கடைப்பிடி சுருங்கி - தமது உறுதியான எண்ணங்கள் குறைந்து. உறுப்பினில் உரையா - கை கண் முதலிய உறுப்புக்களாற் சைகையால் உரைத்து தூய்மையில் குளம் தூம்பு விட்டு ஆம் பொருள் உணர்த்தி - அழுக்குடைய குளமானது உடைந்ததுபோல நீர்மலம் ஒழுகி வெளிவரக் காட்டி.

(1396) இமையவர் அமையலர் கடந்த தேவர்களையும் பகைவர்களையும் வென்ற; தேவர்கட்குப் பகைவராகிய அசுரர்களை வென்ற தாங்கு மா வண்கை சக்கரம் மிக்கு உயர் பிறரும் - பெரிய கொடைத்தன்மையுடைய கையிற் சக்கரத்தைத்தாங்கும் மிகவும் உயர்ந்த பிற மன்னர்களும், (பெரிய சக்கரவர்த்திகளும்). யாங்கணூர் - எவ்விடத்தில் இருக்கின்றார் (எல்லாரும் மறைந்தனர்.)

பால்] கூஅ. யாக்கை நிலையாமை

527

(1397) கடுங்கால் நெடுவெளி வீசுகின்ற நீண்டவெளியிடத்தில் உடன் - ஒன்றுபட்டு உடன்கூடி.

இடுஞ் சுடர் என்ன - பெருங்காற்று வைத்த விளக்குப்போல. ஒருங்கு

(1398) விளிவுடையது - சாகும் இயல்புடையது. குற்றம் கொள் கலம் - குற்றங்களை (மலநீர் முதலியவைகளை)த் தாங்கும் பாண்டம் போன்றது. புற்று அடங்கு அரவின் செற்றம் சேர்க்கை - புற்றின்கண் மடங்கிக்கிடக்கும் பாம்புபோலச் சினம் வைராக்கியம் சேர்ந்திருக்கும் இடம். புறம்மறிப்பாராய் - புறத்தோற்றத்துள் மடங்கிய உட்புறத்தைத் திருப்பிப்பார்.

(1399) தண் அறல் வண்ணம் திரிந்து - குளிர்ந்த கருமணல் போன்ற கரிய நிறம் வேறுபட்டு. நரை மயிர் திரை தோல் தகை இன்று ஆயது - நரைத்த மயிருடன் திரைத்த (சுருங்கிய) தோலுடன் அழகில்லாமல் ஆகிவிட்டது (நுதல்) இறவின் உணங்கல் போன்று - இறு மீன்வற்றல் போலாகி. கழுநீர் கண் காண் - செங்கழுநீர்ப் பூப் போன்ற கண்களைப்பார். வழுநீர் - பீளை. நகையும் - பற்களையும். புலால் புறத்து இடுவது - புலால் நாற்றத்தை வெளியே சுரைவித்து ஏய்ப்ப பிறழ்ந்து - சுரைவிதை போல ஒன்றற்

வீசுவது.
கொன்று
மாறுபட்டுச் சருச்சரையாய். இறும்பூது சான்ற - வியப்பாக விம்மிய. ஆவம் கணைக்கால் - அம்புக்கூடு போன்ற கணைக்கால். மூளி முதிர் தெங்கின் உதிர் காய் உணங்கல் - கரிந்த முற்றிய காய் வற்றல் போன்றது (தளிரயூ வண்ணம்)
யாத்து எனக் கூட்டுக.
தென்னையில் உதிர்ந்த
துசினும் மணியினும்

(1400) யாம் விழை அ கோல் கண் நெறிகாட்ட - நாம் விரும்பும் அந்தக் கைத்தண்டானது கண்ணைப்போல வழிகாட்டி வர. உழையது ஆம் - அடுத்திருப்பதாம். இகந்தாம் - கடந்தோம்.

(1401) பாளை ஆம் தன்மை
வயது மீளும் - இவ்வாழ் நாளும்

- கருவாயிருக்குந்தன்மையில். இவ்
மீண்டும் வருகிறது. நமக்கு நாம்

அழாது என்னே - நம்மைக்குறித்து (பாளை, பாலன், காளை, யாகிய பருவங்கள் நீங்கிச் செத்துச் செத்து மீண்டும் வருவது

இளமை
குறித்து)
நாம் அழுது வருந்தாமல் இருப்பதற்கு என்ன காரணம்?

(1402) தோள் வலைப்பட்டு - பிடிக்கும் வலையுளகப்பட்டு. கண்டும் - கண்டோம்.

(1403) நன்கு என நாளும் இது என்று இவ்வுடம்பு நயக்கின்றது ஆயின் - நாம் இவ்வுடம்பினை ஒவ்வொரு நாளும் நல்லது இது வென்று கருதி விரும்புவதானால். நன்றாற்றம் இன்பம் - நறுமணமும் அதனால் வரும் இன்பமும். எதனால் கொள்ளலாம் - எப்படி (எவ்வகையால்) (இன்பம் நறுமணம் கொள்ள முடியும்) நாற்றமும் துன்பமும்தாம் கொள்ளலாம்.

(1404) எரிபுரை எழில் அது ஆய - தீயை யொத்த அழகுடையது ஆகிய. மரகதம் உருவம் ஆகி - மரகதமணி போன்ற பச்சை வடிவமாகி. கருகு இலையாகி - வாடுகின்ற இலையாகி. என் மார் வெளிற்றினை - என்று கூறுவோருடைய அறியாமையை (வெள்ளறிவை).

(1405) அலங்கல் - மாலை. தூகறும் சுண்ணம் - தூய நல்ல வாசனைப்பொடி. புறம்செயப்பட்ட - வெளியில் அழகு செயப்பட்ட.



[அறத்துப் சிகையின் ஓர் சிறு முள் தீண்ட - தலையில் ஒரு சிறிய முள்ளானது பட்டிழுக்க. நெஞ்சே! இதனை மகிழ்தல் நாளும் நகை பெரிதுடைத்து என்க.

(1406)
ஒழுகுகின்ற

ஒழுகிய நடையும் நீரும் முதல கை இகப்ப
பழக்கமான மலமும் நீரும் முதலியவை யளவு

ஊறும் - ஊறுகின்ற. அகம்புறம் ஆயிற்று ஆயின்
கடந்து மாறி விட்டால். காத்தும் - காப்பினும்.

- உட்புறம் வெளிப்புறமாக
ஆயிரச்சாதி சூழலும் என்க.

(1407) வீழா - வீழாமல் நிற்க. எந்திரம் அனைய வாழ்க்கை - யந்திரம் (பொறி) போன்றது இவ்வுடல் வாழ்வு. சிலர் உகந்து என் - சில மக்கள் விரும்பினால் என்ன பயன்?( பயனொன்றும் இன்று).

(1408) வினையின் கட்டு அற மெய் எனல் பாலதோ - இருவினையின் கட்டு (பாசம்) நீங்குவதற்குரிய உண்மைப்பொருள் என்று சொல்லும் தன்மையுடையதோ?

(1409) ஆர்த்திடா - ஆர்த்து; கட்டி.
லாமல். வேயப்பட்டது - மூடப்பட்டது.

போக்கு அற - குற்றமில்

(1410) உற்ற இளமையோர்க்கு அகம் களிப்பார் - இளமைப் பருவம் பொருந்தியவர்களைக் கண்டு மனமகிழ்ச்சியடைவோர். கிழவுத் தன்மை அளவு கண்டிலர்கொல் - கிழப்பருவத்தின் இயற்கையளவைக் காணாரோ. (கண்டால் மகிழார் என்பது).

(1411) தூ நகை கரிய வாள்கண் சுடர் தொடீஇ - தூய பற்களை யும் கரிய வாள் போன்ற கண்களையும் விளங்கும் வளையலையும் உடைய பெண்ணே! பேலம் ஆர் - நுரை நிறைந்த.

(1412) குரம்பை தன்மேல் - கூடாகிய உடம்பின்மேல். அன்பு அருமாந்தர் - அன்பு நீங்காத (அன்பு வைத்திருக்கும்) மனிதர்கள். அறிவினற் சிறிய நீரார் - அறிவிற் சிறுதன்மையுடையவர்; சிற்றறிவுடையவர்.

(1413) இந்திரவிபவம் பெற்ற - இந்திரனுக்குத் தக்க செல்வத்தை யடைந்த. மகுடகோடி தமனியப் பீடம் ஆக தம் திருவடிகள் ஏந்தும் இமையவர் இறைவனேனும் - கோடிக்கணக்கான கிரீடங்கள் பொன்னு சனமாகத் தம்முடைய சிறந்த பாதங்களை ஏந்தும் பெருமையுடைய தேவர்க்குத் தலைவராயிருந்தாலும். அனந்தம் அன்றே - அளவற்றபேர் அல்லரோ?

(1414) திகிரி அம் செல்வரேனும்-சக்கரவர்த்திகளாயிருந்தாலும். அக்குலத்து உடம்பு தோன்ற - அந்தக்குலத்துப் பிறந்த சக்கரவர்த்தி யின் அவ்வுடம்பு தெரியுமாறு.

(1429) மெய்
களும் மேலேறிச்

ஐந்தும் மீதூர வைகாது-உடம்பிலுள்ள ஐந்துபுலன்
செல்ல வாழாமல். ஐயைந்தும் ஆய்வது அறிவு -
இருபத்தைந்து தத்துவங்களையும் ஆராய்ந்து புலன்களை அடக்கி வாழ்வதே அறிவாகும். தத்துவம் இருபத்தைந்து : பூதம் ஐந்து, பொறி ஐந்து, புலன் ஐந்து, தொழிற்கருவி ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு, மான் ஒன்று.

(1430) சிற்றின்பம் கண்டு வினைக்கு ஆள் ஆம் கணக்கு; தன் மெய்யையறிந்தான்போன்றது எனக் கூட்டுக. மந்திரம் வாள்-மந்திரங் கூறி வெட்டும் வாளாயுதம்.



(1431) கடைப்பிடி - உறுதியான துணை. அருளிச் செய்வாய் - திருவருள் செய்து செய்விப்பாய்.

(1432) மண் ஆளும் ஆக்கையை - மண்ணில் விழுந்து மறையும் உடம்பை. நம் ஆத்மமெய் இன்பத்திற்கே ஆங்நாள் உழைப்பது - நமது உயிர்க்குரிய உண்மையான பேரின்பத்தையடையும்பொருட்டு எக் காலத்தில் முயற்சி செய்வது.

(1433) முன்னம் குடிகொண்ட முன்னவன் சந்நிதி-நம் உள்ளத்துட் குடியாக வாழும் முதல்வனாகிய கடவுள் முன்னிலைக்கு. மனம் என்னுவது உண்டோ எனக் கூட்டுக.

## ௬௬. செல்வ நிலையாமை

பொன்னகர்பாடு சேர்ந்தது - பொன்னுலகம் அழிந்து போயிற்று. விண்பதச்செய்கை ஈது - பொன்னுலகத்தில் நடந்த செய்கை இது. எம்பிரான் நல்கும் வீடதே - கடவுள் கொடுக்கும் வீடு ஆகிய முத்தியே.

(1438) இயக்குறு திங்கள் இருட்பிழம்பு ஒக்கும். துயக்குறு செல்வத்தை - விளங்குகின்ற சந்திரனொளி முன் இருட்கூட்டம் போல அசைந்து தொலையும் செல்வத்தை. வானவர்கோனை நாடுமின் - தேவர்கட்கெல்லாம் தலைவனாகிய சிவனை ஆய்ந்து வணங்குங்கள். பெயல்கொண்டல் போல - பெய்யும் மழையைப்போல.

(1439) தன்னது சாயல் தனக்கு உதவாது - தனது நிழல் தனக்குப் பயன்படாது. என்னதுமாடு என்று - என்னுடைய செல்வம் இதுவென்று.

(1440) இரதமும்
ஓட்டி முடுக்கிவிட்டு.

- சுவையும். ஓட்டித் துரத்திட்டு - தேனீக்களை
அவை - அத்தேனீக்கள்.

(1443) முல்லைமுகை சொரிந்தாற்போன்று - முல்லையரும்புகளைத் தூவியதுபோலத் தோன்றும். கருணையால் நாள் வாயும் - பொரிக்கறி

யுடன் ஒவ்வொரு நாளும். அல்லல் அடைய - வறுமைவந்து சேர. ஓட்டகத்து அடகு இடுமின் - மண் சட்டியிற் கீரையாவது போடுங்கள்.

(1444) அமர்ந்து உண்ணு அரிவை - அமைதியாக இருந்து குடியாத பெண். (செல்வத்தாற் சிறந்தவள் என்பது குறிப்பு.) அகல் கை ஏந்தி - ஓட்டைக் கையிலேந்தி. கொள் கொம்பில் ஒசிந்து - பிச்சையை வாங்குவதற்குப் பூங்கொம்புபோல நாணத்தால் தலை வளைந்துநின்று.

(1445) வண்ணத்துகில் உடுப்பின் வாய்விட்டு அழுவதுபோல் வருந்தும் அல்குல் - பலவகை வண்ணம் (நிறம்) பொருந்திய ஆடையை உடுத்தால் வாய்திறந்தழுவதுபோலத் துன்பப்பட்டு மெலிகின்ற இடையில். அடகு உரீஇ - கீரையையுருவி.

(1446) ஈண்டல் அரிது ஆய் - வந்து சேர்வது அருமையாகி. நாண்டல் சிறிது ஆகி - நிலைநாட்டுவது சிறிதுகாலமாகி. மாண்பின் இயற்கை மருவு இல் அரும்பொருளை - பெருமைத் தன்மை பொருந்தாத அருமையான செல்வப்பொருளை. விறலோ விழுமிதே - (ஒழிந்தார் தது) வெற்றியே சிறப்புடையது.

ப. தி.—34



[அறத்துப்

(1447) தாயம் - தாயத்தார் (உரிமைச்சுற்றம்). இவ்வாற்றில் - இவ்வழியில். கைகாப்ப நீர்ந்து அகலும் - ஒழுங்காகக் காப்பினும் நீங்கிச் செல்லும். உறுபொருளை - வந்தடைந்த செல்வத்தை. உள்ளில் ஒழிந்தவாறு ஒட்டாது - நினைத்தால் தொலைந்த படியே வந்து பொருந்தாது.

(1451) ஒருபொருள் விரும்ப மறுத்து வெறுத்து வாரியின் வீழ்த்திலும் (அது) அவற்கு உரித்து ஆயின் தன் மருங்கு வந்து உறும் என்று கூட்டுக. விரும்ப மறுத்து - வேண்டாம் என்று. உறை நின்று தான் தானே பொறுத்து - அப்பொருள் உறையுளில் தானேநின்று தானே தாங்கி. போம்பொருள் மாய்ந்து போம் - அவனை விட்டு நீங்கும் பொருள் மறைந்தே போய்விடும்.

(1452) கறைகெழு கரவு செய்வார்-குற்றமான களவு செய்வோர். மறைவது தாயமாக்கள் வெளவுவர் - மறைந்திருப்பவராகிய உரிமையான மனிதர் கவர்ந்து கொள்வர்.

(1453) பாழ்பொருள் பற்றுளோர்க்கே - வீணான பொருள் தன் மேற் பற்றுடைய மனிதர்கட்கு. ஒல் ஒழுக்கினரை - பொருந்திய நல்லொழுக்கமுடையவரை.

(1454) கோடிர் - கொள்வீர். ஊடிய கிளைக்கு - வருந்திய தார்க்கு. சிமிழ்த்தல்விட்டு ஒழிவரே கொல் - கட்டுவதை நீங்குவாரோ? நீங்கார்.

சுற்றத் (1455)
விட்டு கட்டுக்களை

பொருஅறுபந்தம் எல்லாம் புணர்த்திடும் - ஒப்பற்ற (பாசபந்தங்களை) யெல்லாம் சேர்க்கும் (பொருள். தெய்வ

சிந்தை ஒருவ - தெய்வம் என்னும் எண்ணம் டதனால் அன்றோ - இத்தன்மையான குற்றம்

நீங்க. இன்ன கரிசு கண் பல கண்டதனாலல்லவா?

1456) பாடுசெய்கதிரேபோல-மறைந்துபோம் சூரியனைப்போல. செல்வம் என்று உறுவதற்கும் - போவோம் நாம் என்று சொல்லி விட்டுப் போவதுபோல அயலாரிடம் புகும் செல்வத்திற்கும் செல்வம் ஆகாது எனக் கூட்டுக.

(1457) இம்மைதனில் - இப்பிறப்பில். வினையாவிற்கும் - உண்டாக்கும். அம்மை நிரயத் துயரும் உறும் - அடுத்த பிறப்பில் நிரயத்துன்பமும் வந்து சேரும்.

(1458) மாயாத தெவ்வர்-இறவாத பகைவர்; மறையாத பகைவர். பொருள் வைத்தார்கள் எப்பொழுதும் இடர் நீங்கார் எனக் கூட்டுக.

(1463) துப்பு உறுபொருளினை - வலிமையுடைய கருத்து மோகம் ஆம் - மனம் மயக்கமாகும். அல்லல்

செல்வத்தை.
ஆம் - துன்பம்
உண்டாம்.

(1464) ஆரம்-முத்துமாலை; பூமாலை. முருகு-மணம். புடையன - பக்கத்திலுள்ளன. கவரியின் கற்றை-சாமரையின் திரள் முன்னுது-முன்புறமாகச் செல்வது. மாசு மீ போர்த்த யாக்கை பொடு - தூசி மேலே மூடிய உடம்புடன். ஒரு சிறை - ஒரு பக்கம் நெருநல் இவ்வாறு வந்தனர் இன்று (இவ்வாறு) இருந்தனர். இதனால் செல்வ நிலையாமை தோன்றிற்று.

(1465) உண்டாய்விடில் - (செல்வம்) வந்து விட்டால். கயவர் கொல்வர் - (செல்வர்களை) கீழ்மக்கள் கொன்றுவிடுவர். கொலப் பட்டும் வீடுவர் - செல்வராற் கொல்லப்பட்டும் இறப்பார். உண்டாய் விடில் - செல்வம் வந்து விட்டால். இம்மை இல்லை - இப்பிறப்பில் (இன்பம்) இல்லை. மறுமைக்கும் புல்லென்று காட்டும் - மறுபிறப்பிற் கும் பயனில்லாமல் தோன்றும். புணர்வதும் அன்று - (நாம் விரும்பிய போது) செல்வம் வந்து சேர்வதும் இல்லை.

(1467) தரித்திரம் என்னும் - நாம் ஓரிடத்தில் தங்கியிருக்க மாட்டோம் என்று (தரித்திரம்) சொல்கின்றது. செல்வம் என்னும்-நாம் ஒருவரிடத்திலிருந்து மற்றொருவரிடத்திற்குப் போவோம் என்று (செல்வம்) சொல்கிறது. இச்சரித்திரம் உணர்ந்தும்-(வறுமை செல்வம் ஆகிய) இவ்விரண்டின் வரலாற்றை (நாம்) அறிந்தும்.

## ௬௦. துறவு

(1470) சிந்தையர் சீரியோர்-சிந்தையராகிய சிறந்தவர். வெம்மை என்பதை - கொடுமை (தீமை; பாவம்) என்று சொல்லப்படும் செயல்களை. விட்டி-நீக்கி; விட்டு. தம்மையுந் துறந்து-யான் எனது என்ற மயக்கத்தையும் நீக்கி.

(1472) விடை ஊர் தோன்றலுக்கும் - காளையை யூர்தியாகச் செலுத்தும் தலைவனுக்கும் (சிவனுக்கும்). இருத்தும் - இருக்குமாறு செய்யும். துருவாசன் சொற்றான் என்க.

(1473) கனைத்து

அலைகள் சுருண்டு

அளவில்லாத.

அலை சுருட்டும் வேலைக்கடல் நிகர் - ஒலித்து வருகின்ற கரையுடைய கடலைப் போன்ற

(1474) சிற்றில் இழைத்து ஆடுசீர்பாற் செறிந்து ஆடும் விளையாட்டு - மணலாற் சிறு வீடு கட்டி விளையாடும் கன்னியரிடத்தில் நெருங்கி அவ்வீடுகளையழித்து விளையாடுகின்ற விளையாட்டானது. பொற்ற மணியறம் புரிகால் புந்தி செயின் நகை தரல்போல் - அழகிய-

இல்வாழ்வு நடத்தும்போது ஆய்ந்தால் சிரிப்பினை உண்டாக்குவது போல். அற்றம் இலா - சோர்வில்லாத. அருட்பற்று மிகும்போது - கடவுளது திருவருளிற் பற்று மிகுந்த (துறவு) காலத்தில்.

(1475) பிறவினும் படும் - மற்றுமுள்ள பொருள்கண் மேலும் வைக்கும்.

(1477) பூ கனக வரை
பொன்மலையை (இமயத்தை)

சிலை கொண்டு அவுணர் மாய - அழகிய
வில்லாகக் கொண்டு அசுரர்கள் மறைய.

உதரவழி வருங் கவலை - பெண்கள் வயிற்றில்
பிறந்து வருகின்ற (பிறவியாகிய) துன்பத்தை.

கருவாகித் தங்கிப்

(1478) வாழ்வு எனும் ஆழியுள் - இல்வாழ்க்கையென்ற கடலுக்குள். தலை தடுமாறுமே-மேல் கீழாகப் பிறந்து இறந்து மாறி வராமல் (பிறவியில் வீழாமல்).

(1479) மலம் இருள் நீங்க-காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்று குற்றமாகிய அஞ்ஞானம் (அறியாமை) நீங்கும்படி. சுடர் ஒளி ஆம் - சூரியனொளிபோல(மெய்ஞ்ஞானம்) உண்மையறிவு தோன்றும்.



(1480) அறவன் பிறப்பு இலி - தருமமுடையவனும் பிறப்பில்லாதவனுமாகிய கடவுள். காட்டகம் உறைவது பிச்சை உண்பது (ஆதலால் அவன்) துறவனும் (ஆவன்) கண்டீர்.

(1481) அந்தக் கரணம் அடங்க - மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய நான்கு அகக்கருவிகள் முழுவதும் அடங்கி நிற்குமாறு.

(1482) உடற்கு இச்சை வையா சுத்தர்களே - (யான் என்ற அகங் காரமுண்டாக்கும்) உடம்பின் மேலும் விருப்பம் கொள்ளாத தூய வர்களே.

(1483) ஐவகை துவம் துவங்கள் மயக்கினை - ஐந்து வகையான பூதம் பொறி புலன் தொழிற்கருவி, அகக்கருவி உயிர் ஆகிய தத்துவங் களாகிய மயக்கத்தை. உய்வகைத் திறத்தை - பிறவியினின்று நீங்கும் வழியை. ஓர்வான் ஒருப்படல் வழிப்படுவது மக்கட்குத்தக்கது.

அடுப்பது - ஆய்வதற்கு மனம் ஒரு

(1484) வேட்கை வேரோடும் - ஆசையை அடியோடும். யான் எனது அறவே - நான் என்ற அகங்காரமும் எனது என்ற மமகாரமும் சிறிதுமில்லாமல். கடன் உடை - மனிதர்க்குக் கடமையாயுள் ளிருக்கும்.

(1485) ஆரொடும் ஆர்வம் - தந்தை தாய் முதலிய சுற்றத்தார் நண்பர் பலரிடத்திலும் வைக்கும் ஆசையை. தேரிய எவையும் - தமக் கென்று தேர்ந்தெடுத்த எல்லாப் பொருள்களையும். பொய்த்தேர் - கானல்நீர்.

(1486) ஊர் கேள் - ஊரில் உள்ளவர் நண்பர்கள். காணி நன் செய் புன்செய் முதலிய நிலங்கள். என்ன எனும் சொல் நினைவு - என்னுடையவை யென்று சொல்லுகின்ற நினைவு (எண்ணம்).

(1487) கருப்பம் என்னும் அக்கார் இருள் சிறையினில் - கருப்பை என்று சொல்லும் அந்தக் கரிய இருளுடைய சிறைச்சாலையில். கதுவும்- பற்றிய. நெருப்பில்......போந்தமை - தீயில் வெந்த நிலைமை நீங்கத் தலை பிளந்து போகும்படி மலையினின்று விழுந்தவனைப்போல (கருப்பையினின்று) வெளியே பிறந்த துன்பத்தை.

(1488) அறியா துன்பம் - அறியாமையால் விளையும் துன்பம். குரவரால் - தாய்தந்தை ஆசிரியர்களால் விளையும் துன்பம். வெறுக் கையை - செல்வப்பொருளை.

சடு

(1489) அல்லலால் - நோய்கவலை வருவதால். நல்குரவு அழிவுறலால் - பெருமை கெட்டுப் போவதால்.

- வறுமை.

(1490) செடிகொள் மூப்பு அதனால் - துன்பத்தைக் கொண்ட கிழப் பருவத்தால். துயக்கம் செய்யும் - கலக்கம் விளைக்கும். துயரம் நீங்கத் துறப்பதே கருமம் எனக்கூட்டுக. கருமம்-செய்யுந்தொழிலாம்.

(1491) ஏமம் நீர் உலகம் ஓர் இம்மிப்பால் என - நம்மாற் காவல் செய்யப்பட்ட கடல் சூழ்ந்த உலகமெல்லாம் ஒருமத்தங்காய்ப் புல்லரி சியின் பகுதி என்று கருதி. நன் கலம் - நல்ல அணிகலன்களையும் தூமம் ஆர் - மணப்புகை நிறைந்த.

பால்]



(1492) ஆளி - அரிமா. அடுகளி - கொல்லும் செருக்குடைய. வாளி வில் தடம் கை - அம்பும் வில்லும் அகன்ற கையிற்கொண்ட. நச்சு அறை ஆக - நஞ்சுள்ள ஓர் அறையாகக் கருதி (துறந்து) தூய்தா தவஞ்செய்வல் எனக் கூட்டுக.

(1493) முன்னது - முதலிற் கூறப்பட்டதாகிய துன்பம். பின்ன னது - அடுத்துக் கூறப்பட்டதாகிய இன்பம். அற்றோர் உறுவது அறிக என்று அருளி - பற்றற்றவர் (துறவிகள்) அடைவது அறிந்து கொள்க என்று அருளிற் கூறி.

(1494) கலிங்கத்தை - ஆடையை; உடையை. உற்ற உதிரம்பட்ட குருதியை (இரத்தத்தை). ஒழிப்பான் - நீக்கக் கருதி. மற்று அது தோய்த்து - பின்னும் அக்குருதியையே ஊற்றித் தோயும்படி செய்து. பறைக்குறும் ஆறு ஒக்கும் - நீக்கும் (ஒழிக்கும்) விதத்தைப்போலும். என் - அதனால் என்ன பயன்.

(1495) மானம் தீர் கொள்கையார் மாற்றம் - குற்றம் நீங்கிய அறிவுடையவர் சொற்கள். தானம் செய்திலம் - அன்ன தான முதலிய பலவகைத் தானங்களையும் செய்யாதிருந்தோம். அன்னதே - அத்தன்மையுடையதே (செய்யாது விடப்பட்டதே) கானம் தோய் நிலவிற் கழிவு எய்தினம் - காட்டுக் கெறித்த நிலவு போலப் பயனின்றி வாழ் நாட்களைக் கழித்து விட்டோம். குழல் - கூந்தலுடைய பெண்ணே.

(1496) இறப்பு எனும் மெய்ம்மையை - சாவுண்மை யென்பதை. தெப்பமே - மரக்கலமே; கப்பலே.

(1497) ஒன்ற இத்தொடர்ச்சி துக்கம் என்று துணிவு பூண்டோர் துறப்பர் - ஒன்று சேர்த்து இத்தொடர்புகள் எல்லாம் துன்பந்தருவன என்றெண்ணி மனத்துணிவுடையவர் துறந்து விடுவர். மிக்கது - மேலாகிய அத்துறவு.

(1498) அருந்திய - உண்ட உணவுகள். பொருந்திய போக துன்பம் - வந்து சேர்ந்த பொருள் போயினும் துன்பமாம். உஞற்றல் - முயற்சி செய்வது. இருந்தவாறு இருத்தல் - (உண்ணாமலும் உறங்காமலும்) இருந்தபடியே சும்மா இருப்பதும்.

(1499) சோகம் மதம் - இரக்கம், செருக்கு, (மயக்கம்). நன்னூற் பின்போய் - நல்ல நூலிற் கூறிய வழியே நடந்து. நசிக்க வேண்டா - மெலிய வேண்டுவதின்று. அருத்தங்கள் அநர்த்தம் ஆகும் - பொருள்கள் எல்லாம் அழிந்துவிடும். நிராசை தானே பேரின்பம் - ஆசையின்மையே பெருகிய இன்பமாம்.

(1500) இடும்பை கூர் சங்கம் இன்றி - துன்ப மிகத் தரும் சிற்றினத்தாரோடு கூடுதலின்றி. குறித்திடா பெருமையோர்க்கு - நினையாத பெருமையுடைய துறவிகட்கு. வசந்தகாலம் கொடிகள் போல்படுபலன் பலிக்கும் - இளவேனிற் காலத்துத் தளிர்த்த பூங்கொடிகளைப்போல உரிய பலன்கள் உண்டாகும். அன்று, ஏ: அசைகள்.

(1501) பித்தரைப் போல் புறப்பட்டார் எனவும், முற்றத்தே சிற்பரோ எனவும் கூட்டுக. இயல்பு அப்படிக் காண் என்க. துறந்தவர் கானகத்துக்கே போய் விடுவார் அழைத்தாலும் வாரார் என்பது கருத்து.



[அறத்து

## ருக. அவாவறுத்தல்

(1511) கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர் - கெடுவதும் பெருகுவதும் இல்லாத செல்வமுடையவர், பொருள் கேடுற்ற போது துன்பமடைவதும் பொருள் பெருகிய போது இன்பமடைவதும் ஆகிய

மன நிறைவாகிய செல்வத்தையுடையவர் என்பது கருத்து. "போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்ற பழமொழிப் படி நிறைமனம் உடையவர் சிவனடியார். வீடும் - முத்தியும்.

(1512) ஏவர்வல்லார் - எவர்வல்லவர்? ஒருவரும் இலர். வளம் மிக்கு ஈண்டி - செல்வம் மிகுந்து நிறைந்து. தழைத்து அவர் போறல் வேட்டு - பெருகி அவர் போல வாழ்வதை விரும்பி.

(1513) கிம்பம் நெட்டிலை கொள்வாரி - வேப்ப மரத்தின் நீண்ட இலையிற் கொண்ட நீர். காஞ்சிரம் பழம் - எட்டிப் பழம். வருக்கை உதவு மிக்க பழம் - பலா மரந்தரும் உயர்ந்த பழம். மரம் கொள் பாவை ஆ - ஒரு மரத்தில் எடுத்துக் கொள்ளும் தெய்வப் பாவையாகிய (அரம்பை). விழைவது-விருப்பம். இமயமலையும் சிறிதாகத் தோன்றும் விருப்பமில்லையாயின் என்பது.

(1514) திரிப்பது - வேறுபடுத்துவது. கவரில் - பிளவு பொருள் விருப்பு அன்றே - பொருளாசையால் அல்லவா?

படாத"

(1515) ஈட்டுறன் காலையின் - தேடும் போதும். ஏமஞ் செய்வுழி - காவல் செய்யும் போது. கூட்டலில் - பொருளைச் சேர்க்கும் போது. துயரினைச் செய்வித்தலின் எனவும், சுற்றமும் பகைஞராம் வகை செய்வித்தலின் எனவும் கூட்டுக. வேட்டிடும் வெறுக்கையை வெறுக்கை இன்பமே - எல்லாரும் விரும்பும் செல்வப் பொருளை வெறுத்து விடுவதே இன்பமாகும்.

(1516) பெண்ணிடத் தாசை - காமம். எண்ணிடத்து அஃது உற - ஆய்ந்து பார்க்கும் போது அது மிக. கண்ணிட - கருதும் போது. கனகம் ஆசையே கொடியது ஆம் - பொன்னாசையே மிகவும் கொடியது ஆம்.

(1517) அறவர் மேலவர் - அறஞ் செய்பவராகிய மேலோர். அருள் கலப்பினர் - கடவுளுடைய திருவருளிற் கலந்தவர்.

(1518) அளற்றிற் பட்டவர் - சேற்றுளகப்பட்டவர் போலத் துன்பப் பட்டவராவர். அயர்விற் பட்டவர் - சோர்வாக மறந்திருப்பவர் போன்றவர். அரங்கப் பட்டவர் - வருந்தப் பட்டவராவர்.

(1520) அஃது உற - அவ்வெகுளியைப் பொருந்த. ஈசையார் - உமையையுடையவர். (ஈசன், ஈசை ஆண்பால் பெண்பால் எனக் காண்க.) இன்ன - இத் தன்மையான காமம் வெகுளி மயக்கங்கள்.

(1521) மலைபோல வெண்சோறு வேண்டுங் கொல் வயிறு உள்ளது ஒரு சாண் கையேற்கு மாறு இதற்கோ, ஆவல் அமையாதது என் (மக்களுக்கு) எனக் கூட்டிப் பொருள் கொள்க. அண்டாத - சேரத்தகாத.

பால்]

(1522) அரிய தேசன் - அருமையான ஒளிமய மானவன். செறிந்தார் - சென்றடைந்தவர். தியங்கு மானிடரே பெருமையினைப் பெற்றாரல்லர் என்று கூட்டுக. அந்தக் கரண சுத்தியே - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கு அகக் கருவிகளும் தூய்மையா யிருப்பதுவே. அறிதற் சாதனம் - உண்மையறிவைப் பெறுவதற்குக் கருவியாம். கருமம் - அதற்குரிய தொழில். ஆரணங்கள் - மறை நூல்களைக் கற்பது. பிண்டப் பெயர் அன்றே அடவன் என்க.

(1524) மனிதர், சிவனுதல் திண்ணம் என நன்று அறிந்திருந்தும் ஆசையுறுதல் என் கொண்டோ அறியேம் எனக் கூட்டுக.

(1525) கழறுவாரை - இடித்துக் கூறும் பாகரை. முனிந்திடு களிறு போல்வார் - சினந்து பார்க்கும் யானையைப் போன்றவர். சுணங்கனைப் போலும் நீரார்-நாயைப் போலும் இயற்கை யுடையவர்.

(1526) வாசியும் மூசியும் பேசி – இடைகலை, பிங்கலை சுழிமுனை யென்ன மூச்சினை யோட்டுவதும் நிறுத்துவதும் ஆகிய வழிகளையும் வாய்மூடி மௌனியாயிருக்கும் வகைகளையும் விரிவாகக் கூறி. பிதற்றி - மாறுபாடாகக் கூறி. இடம் - இடத்திற்குச் செல்வது.

(1527) மாடத்து உளான் அலன் - (கடவுள்) மாளிகையினுள்ளே யிருப்பவன் அல்லன்; (இரான்). கூடத்து - மாளிகையி னுச்சி. வேடத்து - (துறவுக்)கோலத்துள். நெஞ்சின் மூடத்துள்ளே - மன மாகிய மறை விடத்துள்ளே. முத்தி தந்தான் - பேரின்பம் தருவான்.

(1528) ஈசனோடாயினும் ஆசையறுமின்கள் - கடவுளிடத்திலும் வேறு விருப்பமில்லாமல் பணியுங்கள்.

(1529) அடைகாய் - அடையுங் காய்; கிடைக்கும் காய். வான் பிறைக்கே வடகோடு உயர்ந்து என்ன தென்கோடு சாய்ந்து என்ன - வானிலுள்ள பிறையின் வடகோடி யுயர்ந்தால் வளமும் தென்கோடி சாய்ந்தால் பஞ்சமும் நேரினும் நமக்கு என்ன குறை வரும்; ஒரு குறைவும் நேராது. உயர்வதும் சாய்வதும் அவற்றின் அறிகுறிபோலும்.

(1530) அகிலம் எல்லாம் - பூமி முழுவதையும். அளகேசன் நிகராக - குபேரனைப் போல. ரசவாத வித்தைக்கு - பாதரசம் என்பதைக் கொண்டு இரும்பு முதலிய உலோகங்களை யெல்லாம் தங்கம் ஆக்கும் வித்தையை யறிவதற்கு. காய கற்பம் - உடலை யழியாது பன்னாள் வைத்திருப்பதற்குரிய மருந்து.

(1531) மனத்தை இலவம் பஞ்சாகவும் ஆசையைக் கடுங் காற்றாகவும் உருவகஞ் செய்தார். மோசம் வரும் என்றது, இலவம் பஞ்சானது எங்குப் போய் விழுந்து எவ்வளவு இழிந்த நிலையடையுமோ அது போல மனமுஞ் சுழன்று தகாத விடத்தில் விழுந்து இழிவான நிலையை யடையும் என்பதை யுணர்த்தியது. நல்வாசமும் - நல்லோரிடத்திற் சேர்ந்து வசிப்பதும் கெட்டு. நிராசை யின்றேல் தெய்வம் உண்டோ - ஆசை இருந்தால் தெய்வம் உண்டோ? இல்லை. ஆசை யற்றால் தான் அம் மனத்துள் தெய்வம் வரும் என்பது கருத்து.

(1532) பூ ஆசை - மண்ணாசை. மருள் ஆசை ஆம் மாசை மாற்றி - மயக்கமாகிய ஆசை யென்ற குற்றத்தை நீக்கி. பூந்தராய் நாதரை - சீர்காழியில் இருக்கும் சிவபெருமானை.

(1533) பொது நீங்கு திகிரி-சிறப்பாகிய (தனக்கேயுரிய) ஆணைச் சக்கரம். செவியிற் கண்டு கண்ணிற் கூறி - அமைச்சர் முதலிய அறிஞர் கூறுஞ் சொற்களைக் கேட்டு அக் கேள்வியால் நாட்டின் நலம் தீமையை யறிந்தும், கண்ணாற் குறித்துக் காட்டுவதால் இன்னது செய்வீர் என ஏவலாளர்க்குச் சொல்லியும். மிக்கோன் ஒருவன் வெறுக்கை நோக்குழி - தன்னினும் உயர்ந்த ஒருவன் செல்வத்தைப் பார்க்கும் போது. இழப்புறு விழுமம் எய்தி அழுக்கறுத்து - தன் செல்வத்தை யிழந்தது போலத் துன்பப்பட்டுப் பொறாமை கொண்டு. மற்றது பெறுதற்கு உற்றன தெரீஇ - பின் அப் பெருஞ் செல்வத்தை யடைவதற்குரிய வழிகளை யெல்லாம் ஆராய்ந்து தெரிந்து. அயில் சுவை - உண்ணும் சுவையாகிய இன்பம். தோள் நலம்-தோளிற் கூடிப் புணரும் காமவின்பம். பெறுஅன் - பெறுமல். காண்டும் - கண்டோம். புற்கையும் அடகும் மாந்தி-கூழும் கீரையும் (இலைக்கறியும்) குடித்துத் தின்று. அயல்மனை முயற்சியில் மகனை இழித்தனன் எள்ளி - அடுத்த வீட்டில் உள்ள முயற்சி செய்யாத மனிதனைக் கண்டு இழிவாகப் பேசி- வினையன் - தொழிலனாகிய. அல்கா நல்குரவு - குறையாத வறுமை. ஐ உணர்வு - ஐந்து வகையாகிய புலன்களால் உண்டாகும் உணர்ச்சியாகிய ஆசை. உவா கடல்-நீர் நிறைந்த கடல். அவா கடல் - ஆசையாகிய கடல். மெய்யுணர்வு அல்லதை அரும்புணை இன்று - உண்மையறிவல்லாமல் அருமையான மரக்கலம் வேறு ஒன்றும் இல்லை.

(1534) வடித்த குடாரத்தால் - கொல்லனால் இரும்பை யடித்துத் திருத்திய கோடரி என்ற கருவியால். கண்ணு-விழி போல; விழியாக. போதம் - ஞானம். செனித்து மரிக்கும் துயர் - பிறந்து இறக்கும் துன்பம். சிறந்த தன்மைத் திறம் - பிறவி நீங்கியப் பேரின்பம் அடையும் தன்மை. எங்கே - எங்குள்ளது! இல்லை அவர்களிடத்தில்.

(1535) பரமாதித்தனை......சிதறிப் போகும் - பரம்பொருள் என்ற சூரியனை மறைத்துக் கறுப்பு நிறமாகி யறிவடைந்து செருக்குற்றுச் சென்று திரும்பி வரும் நிலைமையான அகங்காரம் ஆகிய மேகமானது அறிவு என்னுங் காற்றினால் சிதறிப் போய் விடும். வரம் ஆன பதம் வேண்டின் - மேலான பதவி (நிலைமை) விரும்பினால். வினை பயன்கள் உறுகின்றார் - செய்த தொழிலின் பயனாகிய விளைபொருள்களை அடைகின்றார். அகங்காரம் மேகம் போல எல்லாவற்றையும் மறைக்கும். அஃது அறிவு வந்தால் சின்ன பின்னமாய்க் கெடும் என்பது கருத்து.

(1536) ஆகுவினால் தந்திரி போல் - எலியால் நரம்புகள் கடிக்கப் பட்டுச் சிதைவது போல. நற்குணங்கள் ஆசையால் சேதமுறும் என்பது. சொருப நிலை செறிதர-பரம் பொருளின் வடிவ நிலைமை வந்து மனத்தில் அடைய. சிந்தையேங்கள் - மனமுடைய நாம். கோது இல் அமுதில் குளித்தும் - குற்றமில்லாத நின் திருவருளாகிய அமுதத்தில் மூழ்கியும். குறிக்கின்றேன் - நினைக்கின்றேன்.

(1537) காதல் எனும் கிழ மடந்தை - ஆசை யென்னும் கிழவி. நடுக்க செய்யும் - பீதி செய்யும். பீதி - அச்சம். தீரரையும் - வீர முடையவரையும்; தைரியமுடையவரையும். உபசாந்தத்தோர் தமை யும் - மனவமைதி யுடையவரையும். இன் நிதியம் - இனிமையான ஆசை யென்ற பொருள். மனோரதமும் - மனத்தில் எண்ணமும் உள்ள. பின் உறு பக்கத்து இருள் போல் - மறை நிலாப் பக்கத்தில் வரும் இருள் நாளுக்கு நாள் வளர்வது போல்.



(1538) வற்ச நாபிக் கொடி - உயிரைக் கொல்லும் மருந்து ஆகிய கொடி வளரும். கோள் ஆன பொருள் - தீமையாகிய பொருள். மீளாத பாவனையால்-திரும்பாத எண்ணத்தால் வேசரியே-கழுதையே போல்வார்.

(1539) ஈர்க்க - இழுக்க. இறவுச்சுழியால் - இறப்பு என்ற சுழியினால். இதயம் நாவாய் ஓட்டா ஆம் - மனமாகிய மரக்கலங்கள் துணையாகா. உளத்தை உளத்தால் மாய்த்து - மனத்தை மனத்தாற் கெடுத்து; மனமில்லாமல் (நினைவில்லாமல்) செய்து. உய்விப்பாய் - பிழைக்குமாறு செய்வாய்.

(1540) குடும்பபாரம்-குடும்பத்தினது சுமை; குடும்பமாகிய பாரம். குடும்பச்சுமை காதற்பாம்புக்கு ஒரு புற்றாம் என்பதும் அது வெறும் பொய் என்பதும் தெரிந்து ஆசையை நீக்கவேண்டும் என்பது. கந்தர்ப்ப நகரம் என்பது மக்கள் வசிக்கத்தகாத நகர். அஃது இருந்தாலென்ன தொலைந்தாலென்ன அதுபோல மனைமக்களையும் எண்ணுக என்பது கருத்து.

(1541) தளை - கட்டு; கால் விலங்கு. விரகு உடையார் - சூழ்ச்சி (தந்திரம்) உடையவர். கூரிதை ஆம் - கூர்மை யுடையதாகிய. தீரதை ஆம் - வீர முள்ளவர் ஆகிய. விரத்தி - வெறுப்பு; பற்றில்லாமை.

(1542) உடம்பின் வாதனைகள்-உடம்புக்கு வாதனையைத் தருவன. உடை ஆடு ஆய் - ஆடையும் ஆடும், தாயும். கூடத்தொடுத்த வலை கண்ணி தொடக்கு - சேரும்படி ஒன்றோடொன்றாகத் தொடுக்கப்பட்ட வலையிலுள்ள கண்ணிகள் போன்ற பிடிக்கும் கருவியாகும். மேல் ஏன் பிறப்பார் - இனிமேல் பிறவார்.

(1544) ஆ: வியப்புக்குறிப்பிடைச்சொல். முன் - முதலில். ஆம் உன் என்று பிரித்து (நெஞ்சே) உன்னிடத்துண்டாகிய என்று பொருள் கொள்வதும் பொருந்தும். மறுத்திடு - மறுத்து விடுவாய் (நெஞ்சே). சுவறும் + ஏ: அசை. அப்பொழுதில் எலாம் நினைவும் இறந்து போம் - (மாய்ந்த) அப்பொழுதே நினைவெல்லாம் கெட்டுப்போம். அப் பொழுது - கெட்ட அப்போது. சோமசேகரத்து எந்தை - சந்திரனைச் சடைமுடியில் வைத்த என் தந்தையாகிய சிவன்.

(1545) உனை துரத்தி ஆசை தொடாமல் என்று கூட்டுக. துரத்தி - முடுக்கி, விரைந்து செலுத்தி. விரத்தி -வெறுப்பு. பரத்தில் அன்பு செய்யடா - பரம்பொருள்மேல் அன்பு வைப்பாய். அடா என்பது தோழன் முன்னிலை விளிச்சொல். பிரபஞ்சம் எல்லாம் - உலகத்தில் தோன்றிய பொருள்கள் எல்லாம்.

(1546) சாதித்தாலும்-உறுதியாகச்செய்து முடித்தாலும். சித்தமே இன்புரு எனவும், உலக வாழ்வனைத்தும் பொய்யாகத்...தோன்றாத போது மெய்யாகத் தோன்றிவிடும் எனவுங் கூட்டுக.

(1547) வரிசை - மதிப்பு. நேசப்பொருப்பானை - அன்பு மலையா யிருப்பவனை. போக்குவரவு அற்று - இறப்பும் பிறப்பும் இல்லாமல்.

(1548) உபாயம் இத்தடுமாற்றம் - சூழ்ச்சி (தந்திரம்) ஆகி. மாறிமாறி வருவது. அவா -ஆசை. பற்று-விடாமற் பற்றிக்கொள்வது. வினைமுதிர்வு - நல்வினை தீவினையின் பெருக்கம். சாக்காடு - சாவு, இறப்பது.



[அறத்துப்

(1549) நேசம் ஆர் - அன்பு நிறைந்த. காசுஉலாம்

வெரு - குற்றம் பொருந்திய அச்சம். காமம்விட்டவர் - ஆசையை நீக்கியவர். கண்படை - கண்ணைமூடுவது; உறக்கம்.

(1550) திடர் ஆயோர் - குருடராகியவர். தெருள்படும் - தெளிவாகத் தோன்றும். சேர்அதர் - சேருதற்குரிய வழியை. முயலாநிற்போர் - முயல்வோர்; முயல்கின்றவர். வீட்டில் - முத்தியில்.

(1551) உடற்கு உள்வந்து எழும் ஒள் குள்ளே வந்து எரியும் ஒளிபொருந்திய கிடையாததுபோல.

அழல்போன்று - உடலுக் நெருப்புப் பின் கைக்குக்

(1552) வளநிதி - பெருகிய செல்வம். நந்திய - குறைந்த. சேமவைப்பு - காவலாக வைத்த பொருள். எந்திடம் - எந்தவிடம் என்பது குறைந்தது: செய்யுள்விகாரம். எந்த+இடம் எனப் புணர்ந்தது அகரங் குறைந்தது.

(1553) இடிப்புஉண்டு - போர்செய்து

மோதப்பட்டு. அரிபரந்த

உண்கண் துடி இடை பேதை-விரி செவ்வரிபரந்தமையுண்ட கண்களையும் உடுக்கைபோன்ற இடையினையும் உடைய பெண்ணே என்பது பொருள். சொல் - சொல்லுவாய். பேதையே! சொல்வாய் எனக் கூட்டுக.

(1554) தான் அல் உடலை - தானல்லாத (தன்னின் வேறாகிய) உடம்பினை. யான்என்றும் எனதென்றும் நினைப்பது மயக்கம், அதனை மாய்ப்பவனே மேலுலகம் செல்வான் என்பது கருத்து. மறைநூல்கள் புகுவான் என்னும் எனக் கூட்டுக.

(1555) அஃது ஒன்றும் - ஆசையாகிய ஒன்றினை மட்டும். பிற ஏதுக்கள் எல்லாம் - ஆசைக்குக் காரணமாகிய சினம் முதலிய எல்லாவற்றையும். உறு பிறவி ஒழிந்தான் கொல்லோ - வரும் பிறவியை நீங்கியவன் ஆவானோ? ஆகான்.

(1556) பவம் மீட்டும் பாய்த்தி கெடுக்கவல்லது அவா - பிறவியை மீளவும் பரப்பி அவனைக்கெடுக்கவும் வலிமையுடையது ஆசையாகும்.

(1557) திரிய - வேறுபட. கிடைஉய்ப்பது - பல பிறவிகளிற் கிடந்து வருந்தும்படி செய்வது. மறம்ஆவது - பாவம்ஆவதும். (அவர்) அறம் ஆசு அற - புண்ணியத்தின் பற்றுக்கோடற்றுப்போக.

(1558) ஒற்றைமா மதிகுடை அரசும் உண்டு - ஒன்றாகிய பெரிய அறிவென்ற குடையைக்கொண்ட அரசும் இவ்வுலகில் உண்டு. மேற்கூறிய:உண்மையறிவுடைய ஒருவனும் உளன் இவ்வுலகத்தில்.

## ௬௨. காலத்தின் அருமை

(1572) ஒள் நித்திலம் நகையாய் - ஒளிபொருந்திய முத்துப் போன்ற பற்களையுடையவளே! நீயே வந்து எண்ணி குறையில் துயில்- நீயே எழுந்துவந்து எண்ணிப் பார்த்துக்குறைந்தால் பின்னர்ச்சென்று உறங்குவாய். ஏல் ஓர் எம்பாவாய் என்பன அசைமொழிகள்.



(1578) நேரம் அன்றோ பொருள் - காலமல்லவா பொருள்; காலந்தான் நமக்குப் பொருளாகும், கர்த்தன் தந்த வரம் அன்றோ- கடவுள் நமக்குக் கொடுத்த அன்பு அல்லவோ? நன்மையை மன்னுவித்தல்பாரம் அன்றோ-நலத்தை நிலைபெறச் செய்தல் கடமையல்லவா? அதுதான் கடமை.

(1574) பொன் நேரமே என்று அறிந்து - பொன்போன்ற காலந்

தான் என்று தெரிந்து. மாண்செயலால் - நற்செயலால்.

(1575) நாள் என்ற வாழ்முதல் - நாம் வாழ்வதற்கு அடிப்படையாகிய நாளினை. கூற்றனுக்கே கேள்-யமனுக்கு நண்பு. பின் வாள்என்று மாறும்-பிறகு அவ்வியமனுக்கே வாள்என்றுமாறும் நிலைமையுடையது. அறஞ்செய்யும் ஒருவனைக் கூற்றுவன் விரைவிற் கொல்லான் என்பதும் பின்னர்ப் பிறவிநீங்கும் என்பதும் கருத்து.

## ௯௩. ஊழ்

(1578) நன்றினொடு தீதுசெயல் - நலமும் தீமையுஞ் செய்வது. ஊழ் உய்த்தபடி அல்லது இலை ஆம் - விதிசெலுத்தியபடி அன்றி வேறில்லையாம். ஒண்செய் - ஒளிபொருந்திய (நல்ல நிலத்தில்.) வித்து பயன் - விதையை விதைத்ததனால் விளையும் பயன்.

(1579) பொதுவறு திருவொடு பொலிவர் - எல்லார்க்கும் பொது என்று சொல்லாத (தமக்கே சிறப்பாகக்கொண்ட) அரசுபுரியுஞ் செல்வத்துடன் விளங்குவர்.

(1580) தீர்வுழி பருவரல் எய்தியும் - செல்வம் நீங்கும்போது

துன்பத்தையடைந்தும்.

(1581) அமுதம் நஞ்சு இரண்டினுக்கும் - அமிழ்து நஞ்சு இரண்டிற்கும். சுவையின்பேதம் - இனிப்பதும் கைப்பதும் சுவைவேறுபாட்டினை.

என்ற

ஆகிய

(1582) முன்பு உறுதொடர்பை ஓர்வார் - முற்பிறப்பிலே இவ்வினைகள் தொடர்வதற்குக் காரணத்தை அறிவார். ஆதலால் இன்பமும் துன்பமும் இவ்வுடற்கியற்கையென்று நினைப்பார் என்பது கருத்து.

(1583) எறிகதிர் வழங்கும் ஞாலத்து - யுடைய சூரியன் நடக்கின்ற உலகத்தில்.

வீசுகின்ற ஒளியை

(1584) மேக்கு உயர் - மேலே உயர்ந்த. நிலாக் கதிரின் கற்றை நிலவின் ஒளித்திரள் (கலை) போக் கொடு வரவு நாளும் முறை முறை பொருந்திற்று அன்றே - ஒவ்வொரு கலையாக ஒவ்வொரு நாளும் போவதும் வருவதும் (வளர்வதும் தேய்வதும்) முறை முறையாகப் பொருந்தியது அல்லவா? அது போலவே ஊழ் அமைந்திருக்கும் என்று கூட்டுக.

(1586) ஆமே - ஆகுமோ ; கூடுமோ? கூடாது. தலையிற் பொறித்தான் பிறழ்ந்து வினைப்பினும் புசிப்பது அன்றி போமே - தலையில் விதியை எழுதிய நான்முகனே வேறுபட்டு நடக்க நினைத்தாலும் அவரவர் செய்த வினையை யவரவர் நுகர்வதல்லாமல் நீங்குமோ? நீங்காது.



(1587) மனம் முதல் மூன்றின் - மனம் வாக்கு உடல் என்ற மூன்றினால். இதம் அகிதங்கள் - நன்மை தீமைகள். மாய்வின் - உடல் இறந்த போது. ஒரு தனு விளைப்ப...கேடிலவாய் இருவினை தோற்றும்- ஒருடல் நல்வினை தீவினைகளைச் செய்ய அவற்றின் பயனை அடுத்த பிறப்பில் மற்றோருடல் அனுபவித்துக் கெட்டும் மீண்டும் கெடுத லில்லாதன போல இறந்த பின்னும் இருவினைகளும் வந்து சேரும்.

(1588) கொன்படு வினைகள் ஒழி இருவினைகள் - வீணாகச் செய்த வினைகள் நீங்கிய நல்வினை தீவினைகள். நல்வினை தீவினையென நினைத்துச் செய்யும் வினைகள் எல்லாம் பயன் தரும் என்பது கருத்து.

(1589) நலம் பயப்பது - நன்மையைத் தரும் ஊழ். இழப்பது - நன்மையைக் கெடுப்பது; (தீமையைத் தருவது).

நலம்
இடை

ஏது ஆன அன்னவர் தம்மை நோவ வழக்கு இலை - துன்பங்கட்குக் காரணமாக இடையில் நிற்பவரைக் வதாற் பயனில்லை.

நடுவில் இன்பம் (1590) ஆலமது நல்கும்
கண்டு வருந்து அதனை வாங்கியவர் (நஞ்சினைக்

அவர் - நஞ்சினை உண்ணக் கொடுக்க கொடுக்கப்பட்டவர்). ஆர் அமுதம் -

அருமையான அமுதத்தை. உண்ணும் பால் உண்ணும் தன்மையுடையவராவது. படிக்கண் -

உடையர் ஆவது -
பூமியில்.

(1591) ஊழ்வினை உறுந்த காலத்து - முற்பிறப்பிற் செய்த தீ வினை நல்வினைகளின் பயன் வந்து பொருந்திய போது. தீவினையால் பாலு நஞ்சாம் நல்வினையால் நஞ்சும் அமிழ்தமாம் என்பது கருத்து.

(1594) நல்வினை மிகவும் செய்து ஒரு பிறப்பில் மாய்ந்தால் அடுத்த பிறப்பிற் செல்வம் வந்து சேர்ந்து தீவினையை மிகவும் செய்வான். அப்பிறப்பிற் செய்த தீவினைப் பயனால் வறுமையும் பிணியும் வந்து சேர்ந்து அறிஞனாய் நல்வினை செய்வன்; இவ்வாறே மாறி மாறி நல்வினையும் தீவினையும் ஒருவனுக்கு விளையும் என்பது கருத்து.

(1595) அதிகம் வந்து எய்தா மேனாள் அமைத்தவே அடுக்கும் அல்லால் - முற்பிறப்பிற் செய்த இருவினைக் கேற்றபடி முன்னமைத்த விதியின்படி இன்பம் துன்பம் பொருந்தும் அல்லாமல் அதிகம் வந்தடையா.

(1598) அடைய - அடையும் இன்பம் துன்பம் பொருள் முதலிய வைகள். அதனில் - அவ்வஞ்சுவதால். நஞ்சு அனவினைகள் - நஞ்சு போன்ற தீவினைகள்.

(1599) கதி ஒரு நான்கினுள்ளும் - தேவர், மக்கள், நரகர், விலங்கு என்ற நாற்கதியினுள்ளே. பேச ஆகா - இவ்வளவு என்று சொல்ல முடியாத பிறவிகள். இதுவும் - இப்பிறவியும். அவ்வியல்பிற்றேயாம் - அத்தன்மையாக அழிந்து போவதேயாம்.

(1600) மேலைக்கு - வருங்காலத்துக்கு. விளைந்தவை வித்தும் உணவுமாகி வருமா போல - விளைந்த உணவுப் பொருள் விதையும் உணவுமாகி வரும் விதம் போல. இதம் அகிதங்கட்கு - நன்மை தீமைகட்கு. மூலத்தது ஆகி - விதை போன்றது ஆகி.

பால்]

சுகூ. ஊழ்

541

(1601) பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்னும் ஆறும் பிறப்பிலே யமைந்தவை. முன்பு செய்தகன்மம் - முற்பிறப்பிற் செய்த செயல்கள். மேல் உடல் சேரும் - இனிமேல் எடுக்கும் உடம் பிற் போய்ச் சேரும்.

(1605) இணைஇல் ஞானம்
அகிய கடவுள். பணைகொள்

பூரணன்-ஒப்பற்ற அறிவுநிறைந்தவன்
தாவரம் - கொம்புகளைக் கொண்ட
மரங்கள். மானம் இன்மையின் உருபற்றி நின்றில கொல்லோ - மானம் இல்லாமையால் (மனிதரைப் போல) வடிவம் பெற்று நின்றிலவோ?

அன்று பிரமன் படைத்ததனால் நிற்கின்றன. ஊழ் உள்ளவாவிடாது என்றே - விதியுள்ளபடி நடக்கும், நம்மை விதிவிட்டு விடாது என்று நினைத்து.

(1606) வினையின் - முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளால். போகம் - இன்பம் அடைவது. ஆதரவு ஆர் என நாடி - நமக்குத் துணை யார் வருவார் என்று ஆராய்ந்து.
ஒருவர் செய்த வினையாற் சேருந் துணை.

கன்மத்து அடையும் ஆதரவு-
ஆதரவு ஆமோ-துணையாகாது.

(1607) நோதலும் தணிதலும் - வருந்துவதும் அவ்வருத்தம் நீங்குவதும். அவற்று ஓர் அன்ன - தீதும் நன்றும் போல ஒரு தன்மையுடையன (பிறர் தரவருவனவல்ல). புதுவது அன்றே - புதுமையானதல்லவே (பழைமையாய் வருவன) மகிழ்ந்தன்றும் இலம் - மகிழ்ச்சியடையோம். இன்னாது என்றலும் இலம் - துன்பமுடையது என்றும் நினையோம். வானம் - மேகம். தண்துளி தலைஇ - குளிர்ந்த துளிகளைப் பெய்து. கல் பொருது இரங்கும் மல்லல் - கல்லிற் பட்டு ஒலிக்கும் பெருகி வரும். நீர் வழிப்படூஉம் புணைபோல் - காட்டாற்று நீர்வழியே செல்லுகின்ற வள்ளம் போல. முறை வழிப்படூஉம் என்பது - விதி வழியே செல்லும் என்பதை. திறவோர் காட்சியில் - அறிவுவன்மையுடையோர் கூறிய அறிவுரையால்.

(1608) அவை பொருட்கு இயல்பு - பிறப்பதும் இறப்பதும் தோன்றுவதும் மறைவதும் ஆகிய அச் செயல்கள் உலகத்திலுள்ள பலவகைப் பொருட்கும் இயற்கையாகும். நோதலும் பரிவும் – உடலம் வருந்துவதும் உள்ளத்திற் கவலையும். பேதை – அறிவில்லாதவள். வளை பெய் தோளி - வளையலை யணிந்த கைகளை யுடையாய்.

(1609) வினையின் ஆக்கம் இன்னது - நல்வினை தீ வினைகளால் உண்டாகும் பயன் இத் தன்மையுடையது. இவனைக் கொல்வலி யான் என்றும், என்னைக் கொல்லும் இவன் என்றும் அல்லன நினைத்தல் செல்லார் - இவனைக் கொல்லும் வலிமையுடையவன் இவன் எனவும் என்னை இவன் கொன்று விடுவான் எனவும் முன் நடவாததை நினைக்க மாட்டார் (அறிஞர்) என்பது.

(1610) அகப்படு பொறியினரை-கீழ்ப்பட்ட அறிவுடையவரை. மிகைப்படு பொறியினரை - மேலான அறிவுடையவரை. வெறியராச் செய்யலாமோ - அறிவில்லாதவராகச் செய்ய முடியுமோ? (முடியாது.) நகை கதிர் மதியம் - விளங்கும் நிலவுடைய சந்திரன். பகைக் கதிர்ப் பரிதி - சந்திரனுக்குப் பகையான வெயிலுடைய சூரியன். சந்தும் ஆலியும் பயத்தல் உண்டோ - சந்தனமும் மழைத் துளியும் வழங்குவதுண்டோ? இல்லை.



(1611) பொற்கோல் - பொன்னாற் செய்யப்பட்ட அழகாகிய. கோலம் - கோல் என விகாரப் பட்டது. சென்று அற்ற போதே - போய்க் கெட்டபொழுதில். தேம்பின் அல்லால் - குறையுமே யல்லாமல்.

(1613) பாடகம் போல - காலில் அணியும் பாடகம் என்ற அணியைப் போல. சூழ்ந்த பழவினை. அலங்கல் தெள்நீர் - அசைகின்ற தெளிந்த நீர். ஆடகம் - தங்கத்தில் ஒருவகை. கூடு அகம் கொண்ட வாழ் நாள் உலந்தபோதல் - உடம்புக்கு ஏற்பட்ட ஆயுள் நாள் கெட்ட தென்றால். பவ்வத்து ஊடு அகம்புக்கு முந்நீர் அழுந்தினும் - கடலின் நடுவே புகுந்து மூன்று வகையான நீருள்ளே மூழ்கினாலும். உய்வர் - பிழைப்பார்.

(1614) அழிப்புண்ணா - கெடுக்கப்படா. பொறியின் வகை வண்ணம் - ஊழின் வகையான இயற்கையால். தேம்புனலை - இனிய நீரை. சென்று தரல் இன்று போய்க் கொண்டு வருவதில்லை (தானே வந்து சேரும்). வீங்கு - பெருக்கமான. மழை வேண்டி யறியாது - மழையை நோக்கி நீ பெய் என்று வேண்டிக்கொள்வதில்லை (மழை தானே பெய்து யாறு நிறையும்).

(1615) அல்லித்தாள் - அல்லிக் கொடியின் அடி. அறுத நூல் அதனைப் போல் - நூல் அற்றுப் போகாமல் நீர் வந்தவுடன் நூல் வந்து கொடியுந் தோன்றுவது போல. நீங்கா புல்லிக் கொண்டு - நீங்காமல் தழுவிக் கொண்டு.

(1616) பெரு முழங்கு...பிணியுறினும் - பெருமையாக முழங்கு கின்ற மலைபோன்ற அலைகளை நீந்திப் பொருள் தேடி வருந்தினும். திருமயங்கல் இல்லையெனில் - திருமகள் (செல்வம்) சேரும் விதியில்லை யென்றால். சேறல் இலர் எனினும் - செல்லாமல் இருப்பர் என்றாலும். பொருள் வரும் வழியினும் உழந்து ஊர்க்கே வரும் - பொருளானது அவனிருக்கும் இடத்தை வழிகேட்டு வருந்திச் சென்றடையும். (விதியிருப்பின்) தவம் வாழ்க - அவ்வாறு செய்யும் தவம் என்றும் வாழ்க.

(1618) மதியினை மலர சூழ்ந்து - அறிவினை விரித்து ஆராய்ந்து. நுகர்தும் - துய்ப்போம் (அனுபவிப்போம்). பதியினைக் கலக்கி - அவ்விடத்தை விட்டுப் பிரித்து.

(1619) துதியறு
மனிதப் பிறவியில்.

பிறவியின் - புகழில்லாத (இகழ்ச்சி யுடைய)
வல்லமோ - வன்மையுடையோமோ? (வன்மை
யிலம் நாம்.)

(1620) திறத்துளி நோக்கின் - பிரித்துக் கூறுபட ஆராய்ந்தால். பூவின் மேல் புனிதற்கேனும் - தாமரை மலர்மேல் வாழும் தூயவன் ஆகிய பிரமனுக் கெனினும். அறத்தினது இறுதி - அவன் செய்த தவத்தின் முடிவே.

(1621) மடத்தகை அணங்கு - அறியாமைப் பண்புள்ள பெண்ணே! முற்பவத்தில் - முந்தின பிறப்பில். இப் பவத்தில் - இப் பிறப்பில். ஒருங்கு-முழுவதும். இதற்கு-இவ்வாறு வரும் துன்பத்திற்கு.

(1622) கருமம் என்பர் - வினையென்று சொல்வார். நோக்கி - ஆய்ந்து. பொலி சுடர் திகிரி வள்ளல் - விளங்கும் ஒளியுடைய சக்கரத்தை யேந்திய திருமால். உயிரையெல்லாம் தரித்திரம் செல்வம் நல்கிப் போற்றுவன் எனக் கூட்டுக.

(1623) அலரவன் திட்டி வைத்த - மலரில் இருக்கும் பிரமன் எழுதி வைத்த. விருப்புணு வெறுப்புணு - ஆசை வைத்து நுகர்கின்ற இன்பமும் வெறுப்பாக நுகர்கின்ற துன்பமும். இலக உண்டு - விளங்கும்படி நுகர்ந்து. உணு என்பது உணவு எனப் பொருள் தந்து ஐம்புலனுக்கும் உரிய உணவுப் பொருள்களை யுணர்த்தியது.

(1624) அல்லலில் துளைவர் - துன்பத்தின் மூழ்குவர். தொல்வினை - பழவினை. முற்பிறப்பிற் செய்த வினைகள். தம்தம் புல்வினையால் - தாம்தாம் இப்பிறப்பிற் செய்த சிறிய தொழில்களால்.

(1625) கற்பம்
னுலகம்) குழைமிடி

நாடு - கற்பகத் தருவையுடைய நாடு (பொன்
ஆதி - வருத்தும் வறுமை முதலாகிய.

(1626) கன்மத்தை - அவரவர் செய்த நல்வினை தீ
வரும் பயனை. கடப்பார் ஆர் உளரே எனக் கூட்டுக.

வினைகளால்
நன்மத்தை
நாகத்து அயல் சூடிய நம்பனே உன் மத்தனுனன் - நல்ல ஊமத்தை மலரைப் பாம்பின் அருகே சூடிய சிவனைப் போல மதிமயங்கியவன் ஆயினன்.

(1628) நோற்றார்க்கு - முற்பிறப்பிற் றவஞ் செய்தவர்க்கு. வீற்று வழியல்லா வேண்டினும் கைகூடா - வேறுபட்ட விதியல்லாத வழிகளில் எப்பொருளை விரும்பினும் வாரா. தேற்றார் - தெளிந்த அறிஞர்.

(1645) வேதனத்தால்-தீயில் வைத்துச் சுடுதலினால். மேதையால்- அறிவால். சாதகத்தால் - பழக்கத்தால். கீழ்ச் செய்த ஊழ்விடா - முற்பிறப்பிற் செய்த வினைப்பயன் விடாது. உண்டு அறுத்து - அனுபவித்துத் தொலைத்து.

---

# உ. பொருட்பால்

## ௬௬. அரசு

(1650) தன் பரிசனத்தால் - தன்னுடைய சுற்றத்தாரால். இடையூறு என்பதைத் தன்னால் இடையூறு. பரிசனத்தால் இடையூறு என ஐந்திடத்தும் கூட்டிக் கொள்க. இடையூறு வரும் என அஞ்சும் அச்சம். அவ்வச்சத்தை நீக்குவான் என்பது கருத்து.

(1652) உள்ளக்கோள் - மனக் கொள்கை. தொல்லோர் நெறி - முன்னோர் சென்ற வழியை. கொண்ட சலத்தினை - கொண்ட கோபத்தின் காரணத்தை. வலத்தினை - வெற்றியை; வலிமையை. கேட்டறிந்து தான் போர் செய்யத் துணிவர் என்பது.

(1653) ஒற்றர்-மறைந்து சென்று பகைவர் இட முதலியவற்றை யறிந்து வருவோர். அனிகம் - படை வகுப்பு. வேய் ஓர்இ தேர்வர் - ஒற்றரை நீக்கித் தாமே சென்று ஆய்ந்து தெளிவார்.

(1654) மூ இயல் மரபினாலும் - மேற் கூறப்பட்ட மூன்று வழிகளாலும். கோவியன் மரபுக்கு - அரசியல் நெறிக்கு. ஏ இயல் - கணை முதலிய ஏவுகின்ற இயற்கையுடைய. மேவலர் பான்மை - பகைவருடைய இயற்கையை.

(1658) வருவதும் முதலும் பயனும் பிறவும் தூக்கி - முடிந்தவுடன் வரும் பயனும் அடிப்படையும், அதனாற் பெறும் பயனும் வேறு வருவனவும் ஆய்ந்து. குறுகவல்லதோ - சேரும் வலிமையுடையதோ? (குற்றம் சேராது).

(1659) திரை கொள் வேலை போல் நிறைதரு கோட்டகம் - அலையடிக்கும் கடல் போல் நீர் நிறைந்த பொய்கையானது. அன்னது கடுப்ப - அதனை ஒப்ப. அன்னவை - அப்படைகள்.

(1660) திருத்தகு வளத்தர் - சிறப்புப் பொருந்திய யுடையவர். விறல்வலி - வெற்றியும் வலிமையும்.

செல்வத்தை

(1663) சாடினர் அல்லரோ - போர் செய்தவர் அல்லரோ? நவைக்கண் டங்குவார் - குற்றத்தில் சேர்ந்தவர்.

(1664) வெருவித் தொலைவோரை - அஞ்சிப் புறங் காட்டி ஓடியவர்களை. மிக்குளார் - மேலோர். இகழ்தல் வேண்டுவது இன்று - பழித்துக் கூறுவர் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

(1665) கடந்திடு சூழ்ச்சி - நீங்கிப் போகக் கருதும் உபாயம் (தந்திரம்), சாய்ந்திடல் - புறங்காட்டி யோடுவது.

(1666) அறத்தின் ஆற்றல் - அரச நீதி முறையே. புரையறும் அரண்-குற்றமற்ற காவல் மதில். வரை செய்யப்படாத-நீக்கப்படாத. யாக்கை உறுப்பு என - உடலின்கண் உள்ள உறுப்பைப் போல. கோடி - கொள்வாய்.

(1667) வினையில் - போர் செய்யுந் தொழிலில். வினைஞருக்கு அளித்தல் - போர் செய்வார்க்கு உதவி செய்தல். வல்லே - விரைவாக.

(1668) ஆறில் ஒன்றும் விடுவது செய்து - ஒருபங்கினையும் வாங்காமல் விடுதலைசெய்து-

அரசனுக்குரிய ஆறில்

(1669) நிறை - வரி. (பகுதிப்பணம்) புல்லலர் - பகைவர். ஆதி - முதலியவர். பருகுதல் இலாமை காத்து - குடிகளைக் கெடுக்காமல் காப்பாற்றி.

(1670) ஐயமே திரிவே என்னும் அவை அற - ஐயமும் (சந்தேகமும்) வேறுபாடும் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டும் நீங்குமாறு. வையம் - தேர். மால்யானை - பெரிய யானை; மயக்கம்கொண்ட யானை. வன் படைத் தொழில் - வலிய வாள்வேல் முதலிய ஆயுதப் பயிற்சி. உரைத்தவா - சொல்லியபடியே.

(1671) சிறப்பது ஒப்பது ஒன்மை வினையை எனக் கூட்டி. அரசன் தனக்குச் சிறப்புத் தருவதும் தன்பெருமைக்குப் பொருந்தியதும் ஆகிய விளக்கமான ஒரு தொழிலை யெனப் பொருள் கொள்க. முதல் விளிக்கும் வினையை - முதற்பொருளைக் கெடுக்கும் செயலை.

(1673) பெரிய முயற்சியாவது. செயலால்வரும் ஊதியத்தைக் கருதாத வினைப்பயனைப் பேணுவினை - தொழிலே. வினைக்கு மறுதலை ஆம் - பகையாகும். உரிய வினையை - அரசன் செயலை. தனக்குரிமையான

(1674) வழங்கல் ஆதி மூன்றனையும்-தானம்

பேதம் சாமம் ஆகிய மூன்று சூழ்ச்சிகளையும்.
ஒறுத்தலையும் - தண்டிப்பதையும். நலிவாம் - குறைவாம்.

(1675) ஆறுநவையும் - ஆறுவகைக் குற்றங்களும். (காமம், வெகுளி, உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பன) அடி பிழைப்பு - முன்னோர் செய்தமுறை தவிர்தல். ஆசு அற்றார் - குற்ற மற்றவர் (பெரியோர்). வெளிறு மருவிடும் - அறியாமை சேரும்.

(1676) பொச்சாப்பு - மறதி. பொரும் செய்யும் அகப்பகை புறப்பகையாகிய இரண்டு

இருபகையை - போர்
பகைகளையும்.

(1677) பாழ்த்த பொச்சாப்புச் சேரின் - வீணான மறதிவந்து சேர்ந்தால். இடவலி காலவலி தொழில்வலியாகிய மூன்றையும் உணர்த்தும். உபாயங்கள் நான்கு - சாமம் பேதம் தானம் தண்டம். தொழில்கள் ஐந்து - செயல் ஐந்து. தன்னால் உண்டாம் அச்சம் நீக்கல், பகைவரால்வரும் பயந்தீர்த்தல், தன் சுற்றத்தாரால்வரும் பயந்தீர்த்தல், கள்வரால் வரும் பயந்தீர்த்தல், விலங்கினால் உண்டாம் அச்சந்தீர்த்தல் ஆகிய தொழில். குணங்கள் ஆறு. தூங்காமை, கல்வி, துணிவுடைமை முதலியவை. சாரின் அனைத்தும் கேடாம் என்று முடிவு கொள்க.

(1679) பிழைதப வாழுமாறும் - குற்றமில்லாமல் மக்கள் வாழும் நிலைமையும். பிறழ்தராக் கோலின் ஆகும் - மாறுபடாத (நீதிதவறாத) செங்கோல் அரசனால் உண்டாகும்.

(1680) கருவி - வேல் வாள்முதலிய ஆயுதங்கள். காமர் ஆர் உயிரை - அழகிய அருமையான பலவுயிர்களை. ஆறு அலைப்போர் - வழியில் நின்று வருவாரை யடித்துப் பொருள்பறிப்போர். உருவலர் பிறனில் வேட்போர் - அழகுமிகுந்த அயலான் மனைவியை விரும்புவோர். உவர் - இவர். பருவரு - துன்பப்படுத்தும்.

(1682) முட்டாதுசெய்து - வழு (குற்றம்) இல்லாமல்செய்து. செங்கோல் காக்கும் - இறைவனை (அவன்) செங்கோலே காக்கும். முறைசெய்யானை-நீதியுடன் அரசுபுரியாத அரசனை. பாவம்தேய்க்கும்- அவ்வரசன் செய்த பாவமே அவனைக் கெடுக்கும். பகை இன்றும் எனும் - பகையில்லை யென்றாலும் (தேய்க்கும்.)

(1683) கறையின்மேற் பொருள் கைக்கொண்டு காவலை விடுப்பின்- அரசன் தனக்குரிய வரியினும் அதிகமான பொருளைக் கவர்ந்து காப்பதையும் நீக்கிவிட்டால். பயனின்றாகும் - ஒருங்கு நீங்கும், பயன் குன்றும் ஒளிநிலைபெறாது எனக் கூட்டுக. ஒருங்கு - ஒன்றாக; (ஒன்று சேர). ஒளி - புகழ். உறைபெயல் ஒழியும் - மழைபெய்யாமல் நின்றுவிடும். அறுதொழிலாளர்-மறையோர் (ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறுவகைத் தொழில் செய்வோர் என்பது காரணம்.)

(1684) ஊறுசேர் வினையை புரிதரார்-இடையூறு வருந் தொழில்களைச் செய்யார். துளங்காது - சோர்வுறாமல். வல் விரைவார் -

மிகவும் விரைந்து செய்வார். வீறுசேர் இவரை உருவு கண்டு எள்ளா -

பெருமைசேர்ந்த இவர்களை யெல்லாம் வடிவத்தைக் கண்டு இகழாது.

(1685) உழையரொடு - அமைச்சரோடு. சிவபெருமான் தமர்களொடும் - சிவனடியார்களொடும். தமர்கள் - சுற்றத்தார்கள். மனுநூல் செல்வர் - மனுவாற்சொல்லப்பட்ட நீதிநூல்களையறிந்த அரசர்.

(1686) முன்னவர் தவத்தால் - மறையோர் (பிராமணர்) செய்யும் தவத்தினாலும்.

(1688) உற்பலம் செறி மாலையாய் என்பது விளி. உற்பலம்செறி-நீல மலராற் கட்டப்பட்ட. வரம்பினைக் கடந்தால், விழுந்தால், வளைந்திடுமானால் விலக்குவாருண்டோ எனக் கூட்டுக.

(1691) தெருண்ட சிந்தனை - தெளிவான ஞானம். திசையில் உருண்ட தேரினன் - திசையெல்லாம் உருண்டுசெல்லும் தேருடைய சூரியன். இவையே உலகிற்கு மூன்று கண்கள். மன்னனும் விழி மருண்டு ஒளிமறைந்திடின் - அரசனுடைய நீதி என்ற கண்கள் மயங்கி மறைந்துவிட்டால்.

(1692) திறம்பின் - மாறுபட்டால். பாந்தள் முடிகிடந்த - பாம்பு (ஆதிசேடன்) தலைமேற்றாங்கிய. அஃகும் - குறையும்.

(1693) இரைவட்டிக் காம் உண்ணும்- வேள்வித்தீக்கு அவிமுதலிய வற்றைக் கொடுத்து. (உண்ணும் மறையவர்) காயம்-உடம்பு. நோன்பினோர் - விரதங்கொண்டவர். வேய்வைட்டு தோளார் - மூங்கில்போன்ற அழகு தரும் தோளார் (பெண்கள்).

(1694) பூவலயம் - பூமிவட்டம். திறம்பார் -

மாறுபட்டு நடவார்.

•



(1695) உற்றவை அஞ்சா படையும் - வந்த துன்பத்துக்கு அஞ்சாதசேனையும். முற்றுலவா பைகூழும் - முழுவதும் கெடாத நல்ல பொருளும். முன்வருதல் சேமிக்கும் பெற்றிஅமைச்சும் - பின் வருவதையறிந்து முன்காக்கும் இயல்புடைய மந்திரியும். வேடபரி வேட்டஞ் செய்யார் - வேடர்கள் செய்யும் வேட்டையாடார். வினை தரும் - பாவத்தைத் தருகின்ற.

(1698) ஒற்றும் - ஒற்றர்களும். அல்லவை - பாவச்செயல்களை. குறைத்திறம் - குறைபாட்டின் தன்மைகளை. சூழ்ச்சியும் - உபாயமும் (தந்திரமும்). வினையமும் - நுண்ணறிவும்.

(1703) தத்தம் சமயத்தகுதி - தங்கள் தங்கள் கொள்கைக்குத் தகுந்தவாறு. அம்மையில்-அடுத்தபிறப்பில். மெய்த்தண்டம்-உண்மையான தண்டனை ; அல்லது உடம்பிற்குத் தரும் தண்டனை.

(1704) உருவுடைவண்ணங்கள் - மன்னரது வடிவத்தில் உள்ள அழகுகளை. உலகு அளந்தான் - பூமியை யோரடியால் அளந்தவனாகிய திருமால். தேஇல்கள் - தெய்வத்தின் மனைகள். வெருவிலும் வீழ்விலும் - அச்சத்திலும் விருப்பத்திலும்.

(1705) கதம்பரிய கலிமாவும் - விரைந்துசெல்லும் பருத்த குதிரையும். புகல்நெஞ்சுடைய மறவரும் - போர்விரும்பும் மனமுடைய வீரர்களும். வானத்து அன்ன வண்மையும் - மேகம் போன்ற கொடைத்தன்மையும். இல்லோர் கை அற - வறியவர் சிறுமை நீங்க.

(1706) மலர்தலை உலகம் மன்னன் உயிர்த்து - பரந்த இடத்தையுடைய உலகமானது அரசனாகிய உயிரைக்கொண்டது. வேல் மிகுதானை - வேலால் சிறந்த சேனைகளையுடைய. யான்உயிர் என்பது அறிகை - நானே யுயிராயிருக்கின்றேன் என்பதையறிவது. (கடன்)

(1707) கவளம்கொளின் - யானைக்குக் கவளந்திரட்டிக் கொடுத்தால். மாநிறைவில்லதும் - ஒருமாவிற்குக் குறைந்த நிலமும். செறு - வயல். தமித்துப் புக்கு உணின் - யானை தனியே நுழைந்து உண்டால். கோடி யாத்து-கோடிபொருளைச்சேர்த்து, நந்தும் - பெருகும். கிழவன்- உரிமையுடையவன்.

(1708) பார்கால்கோத்து - பூமியைச் சக்கரமாகக்கொண்டு. காவல் சாகாடு உய்ப்போன் - அரசாட்சியாகிய வண்டியைச் செலுத்துவோன் (அரசன்). மாணின் - நற்பண்புடையனாயின். ஊறு இன்று ஆகிஆறு இனிதுபடும் - இடையூறில்லாமல் வழியில் நன்றாகச் செல்லும். பகைக்கூழ் அல்லற் பட்டு - பகையாகிய சேற்றில் துன்பப்பட்டு.

(1709) கறங்கு - ஒலிக்கின்ற, சுழல்கின்ற. தெண்டிரை - கடல் சூழ்ந்த. இறங்கு - தாழ்ந்த ; கவிழ்ந்து. அறங்கள் வெளவ - தாம் செய்த தருமங்களையெல்லாங் கவர்ந்து செல்ல.

(1710) கோள்நிலை திரிந்து-சூரியன் முதலிய ஒன்பது கோள்களும் தாம்தாம் நிற்குநிலை வேறுபட்டு. அறங்கள்மாறி - தருமங்கள் வேறுபட்டு. ஆணை இவ்வுலகு - அரசன் ஆணைப்படிநின்ற உலகம். கோடின் நீதிதவறுவான் ஆனால்.

[பொருட்

(1711) பெட்டதே - விரும்பப்பட்டதே. விதியீட்டுதல் காட்டுதல் பகைகடைப்படல் பிளந்திடல் இந்நான்கும் பெட்டதே எனக் கூட்டுக பேது - மாறுபாடு.

(1712) கொற்றம் கொள்குறி கொற்றவற்கு - வெற்றியைக் கொள் கொள்கையையுடைய அரசனுக்கு. சூது - சூழ்ச்சியாகும்.

(1713) மடப்படல்இன்றி - அறியாமை இல்லாமல். ஓரு பொய்கையில்; தடாகத்தில். அழுங்கச்செற்று வருத்தி.
தடத்திடை -
- மயங்குமாறு

(1714) மதவேழத்தையும் வீறு இன்மையின் எறியான். ஏறுண்டவர் நிகர் ஆயினும் பிறர் மிச்சில் என்று - ஆயுதம் ஏறப் பட்டவர் தன்னையொத்தவர் எனினும் அயலவரால் எறியப்பட்டவ ராதலின் அவருடைய எச்சில் என்று கருதி. மாறு அன்மையின் - தனக்குத் தக்க பகைவன் அல்லாமையால். அயில் உழவன் - வேலைப் பிடித்த வீரன்.

(1715) தருமன், ஈகையால் வருணன், உயிர்மாற்றலின் கூற்று, அருமையால் வாமன், அழகில் திருமகன், மாநில மன்னன் எனக் கூட்டுக. கூற்று-இயமன், வாமன் - அருகன், திருமகன் - இலக்குமியின் புதல்வன் (காமன்.)

(1717) ஒருமையால் -
பிறப்பினாலே. இருமையும் '

ஒருபிறப்பில். உம்மையாலே - மூற்
இருபிறப்பின் இயற்கையும்.

(1718) காவலன், கல்வி, வெய்யவன் இம்மூன்றும் உலகத்திற்குக் கண்கள். தலைக்கண் வைத்த கண் - முதன்மையாகச் சொல்லப்பட்ட கண்ணாகிய காவலன்.

(1719) ஐயதாரினான் - அழகிய
அரசன். வையம் - உலகத்தார்.
மாலையையுடையவன் ஆகிய

(1721) தன்னை வென்ற - தன் குற்றங்களை
வெல்வது. மன்னி - நிலைபெற்று.

நீக்கிய. வேறல் -

(1722) மால் அமர் - பெருமை பொருந்திய; கருமை பொருந்திய; திருமால் அமர்ந்திருக்கிற. மதலை - மரக்கலம்; கப்பல். கால் அமைந்து ஒழுகுமேல் - காற்றுவீசுவதற்குத் தக்கவாறு. வேலவர் ஒழுக்கமும் - அரசர்களுடைய நீதியும். வேலை காணும் - முடிவுபெறும். (நன்மை யாம்). கரையுங் காணும் அதுபோல என உவமையாகக் கொள்க.

(1723) மண்ணிய வளாகம் - மண்ணையுடைய வளைந்த பூமியை. வரைக்கல் ஆகா - தாழ்த்த முடியாத. நீரர் ஏனும் தன்மையுடையவரென்றாலும் உணர்தல் தேற்றார் - அறியமாட்டார்.

(1724) மறம் தலைமயக்கி - வீரத்தால் கலக்கி.
நோக்கி - ஆய்ந்து தன்புறமவிருப்பது குறித்து.

இறந்து அலையுறாமை
பூணாய் : விளி.

டுXஎ (1725) திறம் தலைமயங்கி வெம்பி - திறமும் வேறுபட வெதும்பி. இறந்து அலைபெருகும் - மிகுந்து அலைவீசுகின்ற. அறம் தலைமயங்கி-நீதிகெட்டு; நெறிமுறை மாறுபட்டு.



(1726) அரசர் என்னும் வடிவுகொண்ட எந்திரத்திற்கு, அமைச்சர் கண்கள்; குடிகள் அடிகள், தோள் தோழர் - செவிகள் ஒற்றர். உணர்வு நூல் என உருவகஞ் செய்யப்பட்டது. வாய் தூதுவர் என்பதும் அது.

(1727) பெற்றதன் முதலா - பெற்றுக் முதலாகக் கொண்டு. பிறர் காவலன் ஆகுவன் அரசனாவான்.
கொண்ட பொருளை
- அயலார்க்கெல்லாம்

(1728) முகையின் வேய்ந்த மென்மொய்மலர்க் கண்ணியாய் - அரும்பினால் புனைந்த மெல்லிய நெருங்கிய மலர் மாலையையுடையாய்- மிகையின் மற்று அவை - மிகுதியால் அச்செயல்கள். வெதுப்பும் - வருத்தும்.

(1729) அறம் இயல் மனத்தை ஆகி - நன்னெறி பொருந்திய மனத்தையுடையவனாகி. சிறை அன பிறவிபோக்கும் - சிறையில் அடைப்பது போன்ற பிறவியை நீக்குகின்ற. வல் என்ற சொல்லும் - கடினமான சொல்லும். வழீஇய - நீங்கிய. கொல் என்று சொல்லும் உரை - கொல்வாய்; கொல்வீர்; என்று சொல்லும் சொல்லையும்.

(1735) ஐம்பொறியும் கோளும் குறைய - மெய்வாய் முதலிய ஐந்து பொறிகளும் அவை கொள்ளும் ஊறு சுவை முதலிய புலன்களும். பொருள் நாளும் கண்டு-செய்யவேண்டிய செயல்களை ஒவ்வொரு நாளும் ஆராய்ந்து. நோன்மையின் - பொறுமையுடன். அன்னது - அவ்வரசு. (மாதவமாகும்) என்க.

(1736) ஓங்குபுள் ஊர்திக்கும் - உயர்ந்த பறவையாகிய கருடனை வாகனமாகக் கொண்ட கடவுளுக்கும். ஆற்றுதல் ஆற்றலே - செய்வதே நற்செயலாம்.

(1737) வையம் - உலகத்து மக்கள். அவனைவிட்டு நீங்காது. அருள் மெய்யின் வாய்மை வழியே நின்றால். (நடந்தால்)

அறம் கடவாது - தருமம்
நின்றபின் - கருணையுடன்

(1739) துலைத்தாலம் அன்ன - தராசின் நாக்குப் போன்ற. காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ - காலம் அல்லாமல் வேறுவிழியும் உண்டாகுமோ? இல்லை. காலமே அவர்க்குக் கண் என்பது.

(1740) ஓர்வின் - ஆராய்தலுடைய. நல்வினை ஊற்றத்தினர் உரை - நற்செயல் புரியும் ஊக்கமுடையவர்களது சொல். பேர்வில் தொல்விதி பெற்றுளது என்று - அசையாத பழைமையான விதிநிலைப் பெற்றதென்று கருதி. செவ்வியோர் ஆர்வம் - நல்லோர்கள் அன்பே.

(1741) நயத்தினை நயந்து ஒன்றிலே நிற்றல்போல் ஆம் உத்தமர்க்கு உரியது - நற்செயல் புரிதலை விரும்பி அந்நலத்திலேயே நிற்பதுதான் மேலோர்க்குரியது. பின்றுமேல் - மாறுபட்டு நடப்பானாகில்.

(1742) இரும்பழி - கொடிய பழிச்சொல்லை. தருமனாலே - இயமனாலே.

(1743) தேறலார்தமை - பகைவர்களை. தேறினர்த் தேறாமையும் - தெளிந்த நட்பினரை ஐயப்படுவதும். மாறலார் உடன் - பகையில்லாதவருடனே. மாறுடன் - பகைவருடன். ஆறலாதன - நல்வழியில்லாதவை. கூறலாதன - சொல்லத் தகாத சொற்கள்.

(1744) துன்று - நிறைந்த. முறைமை ஒன்றும் உணராதவர் - நீதியொன்றினையும் அறியாதவர். என்றும் - எக்காலத்தும். மந்தணத்தின் - மன்றத்தில்; அவைக்களத்தில்.

(1745) ஞானமுறைவரும் உணர்வும் - உண்மையறிவின் முறையால் வந்த அறிவும். (உண்டோ? இல்லை, அதுபோல்) அருபர்தம் இயற்கை - அரசருக்கியற்கையாம்.

## ருசு. அமைச்சு

(1770) செவி அழல் மடுத்தது போல. அமைச்சர்கள் துணைவர் ஆம் என - காதில் தீயை மூட்டியது மேலையோர் - மந்திரிகள் நண்பர், மேலோர்கள் ஆவார்.

(1782) அடையார் மனமும் களிதூங்க - பகைவர் மனமும் மகிழ்வடையுமாறு.

(1778) பழையேம் இறை உள்கொளப்பட்டேம் என்று எமாப்பு எய்தார் - நாம் பழமையாய் வழிவழி வந்தோம் என்றும் அரசன் உள்ளிடத்திற்கு அமைச்சராகக் கொள்ளப்பட்டோம் என்றும் எண்ணிச் செருக்கடையார். விழைவு ஏது அதனை - விருப்பம் எதுவோ அவ்விருப்பத்தை.

(1774) நடக்கையில் மறுக்குஞ் செயல் நீத்து - ஏவல் கேட்டு நடக்கும்பொழுது மறுப்பு இல்லாமல். இறுக்கும் பொருளே - வரியாகக் கொடுக்கும் பொருளே.

(1775) வானம் நிறத்து ஆடி நீழல் என - வானம் போன்ற நிறத்தையுடைய கண்ணாடியிற்றோன்றும் சாயைபோல. மற்று அது - அரசன் மனக்கொள்கையாகிய அப்பண்பு. இறைக்க வொண்ணார் - செய்யவிடார்.

(1776) சிறுமுயற்சியினால் ஙணிபயன் பயப்ப நலந்தருவினையும் - எளிய முயற்சியால் மிகுந்த நலம் பயக்கத்தக்க நற்செயல்களும். முடிவு போக்கிடும் ஆறும் - முற்றுவித்தற்குரிய வழியும்.

(1777) அசைவுறு வன்கண் - சோர்வில்லாத மனத்திண்மையும். வினை நூல் வகையுறச் சூழ்ந்து - வினைசெய் வகையை நூலிற் சொல்லியவாற்றால் ஆராய்ந்து. தகையுறச் செய்தல் - தடுத்தல். விழுகுடி காத்தல் - சிறந்த குடியைக் காப்பது.

(1778) திறுவுபா தொன்றால் ஒருவினைக்கியைந்த பல்செயலும் வாய்ப்ப - தான் நிலைநாட்டும் ஒருபொருளால் ஒருதொழிலுக்குப் பொருந்திய பல செயல்களும் பொருந்த.

(1779) அகிதம் என்னுமந்திரியும் எழுது சித்திரத்திலும் ஆகார் - இங்கு இனைக்கின்ற மந்திரியும் சித்திரமாக எழுதினும் ஆகார். உறுவரில் - சுற்றத்தார்களில். உறுர் - பகைவர்கள்.

(1780) மெல்லியரே - மந்திரிகளில் (மெல்லிய தன்மை) குறைந்த தன்மையுடையவராவர். அமைச்சரிற் குறைந்தவர் அவர் என்பது.



551

(1781) அறம் புகழ் பயவா புரைபடு வினை - அறத்தையும் புகழையும் தராத குற்றமுற்ற செயல்களை. பெருமிதப்படாத வினை - இழிவான செயல்களை. உலகு பேணுநர்க்கு ஏமஞ்செய் - உலகத்தைக் காக்கும் அரசர்க்கு இன்பஞ் செய்யும்.

(1782) இகலை அடர்த்தல் - பகையை வெல்லுதல். அழிவுறுங்கால் - பகைவராற் கேடுவருங் காலத்து.

ஒட்டார்க்கு

(1783) தொடர்ச்சிபோல ஆய நெறி மன்னவரால் - மேற்கூறிய அத்தொடர்புபோல ஆகிய வழியே அரசர்களைப்போல் தீய அரசனால் தீய மந்திரியாவான் நல்ல அரசனால் நல்ல மந்திரியாவான் என்பது. கிருபற்கு - அரசனுக்கு.

(1784) விழுநுகம் - சிறந்த நுகத்தடி- நூல்வலார் - நூலறிவிற் சிறந்த அமைச்சர். பாகம் ஆகப் பொறுக்கும் - அமைச்சர் ஒருபாகம் தாங்க அரசன் ஒருபாகமாகத் தாங்குவன் என்பது.

(1785) மலரும்
ஞாற்றுவர் தந்திரக்

மாண்பு இல - விரியும் தன்மையில்லை. ஈரைஞ்
கிழவர்கள் - ஆயிரம் அமைச்சர்கள்.

(1786) அற்றம் இல் - சோர்விலாத.
கூறிய மனமுதலியவாக அமைந்திருப்பவர்

ஆபவர் அமைச்சர் - மேற்
மந்திரிகளேயாவார்.

(1787) தெரிந்து கூறியறிந்தவை யியற்றுகிற்கும் அமைதியார் - சிறந்த செயல்களை எடுத்துக்கூறி யரசன் கருத்தறிந்து அவற்றைச் செய்யும் மனவமைதியுடையவர்.

(1788) சூழ்ச்சி என்பது ஆராய்தல்; தந்திரம். அமர்ந்து செல்லும் ஆற்றலான் - தங்கியாய்ந்து முடிவு செய்து செல்லும் வலிமையுடையவன். அரியது - அவ்வரசனாற் செய்யமுடியாத செயல்.

(1789) தடத்தவேயெனினும் - குளத்தில் இருப்பனவேயென்றாலும். புண்ணியப் பொதும்பரே புரிந்து வைகினும் - தருமம் புரியும் கற்பகப் பூஞ்சோலையில் விரும்பித் தங்கினாலும். கண்ணிய - கருதிய.

(1790) திரை வளாகம் - கடல் சூழ்ந்த பூமி. நுணங்கு போது அணங்கு தாரீர் - நுட்பமான மலராற் கட்டிய அழகுடைய மாலையையுடையவரே! இது விளி. விலக்கின்றூர் புலவரன்றே எனக் கூட்டுக. நூல்வினை புலவர் - நூல்களால் உண்டாகிய அறிவுடையார் எனவும், நூல்களை உண்டாக்கும் அறிவுடையவர் எனவும் பொருள் தரும்.

(1792) செம்மையின் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் - நடுநிலைமையில் மாறுபடாத தெளிவுடையவர். மும்மையும் - இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற மூன்று காலத்தில் நிகழ்வதையும்.

(1798) மாற்றல் ஆற்றும் பெற்றியர் - அதனையும் மாற்றுஞ் செயல் புரியும் தன்மையுடையவர். கவரிமா அனைய சீரார் - மயிரிழப்பின் உயிர் வாழாத கவரிமான் போல மானம் இழப்பின் உயிர் வாழாத தன்மையுடையவர்.



[illegible].

## அடைந்தோர்ப் புரத்தல்

(1805) தம் அடங்காத் திங்குபெறின் - தமக்கு வந்து சேர்ந்தால்.
அடங்காத தீமை.

(1806) ஓவில்
ஒன்றுடையாராயின்.
வாழ்வாரேல்.

குறை யொன்றுளரேல் - நீங்காத குறைபாடு
மறுத்துளரேல்-அக்குறையை முடியாது மறுத்து

(1807) பேதைமைப் பாலினுதல்-அறியாமைத் தன்மையாலாவது. இழமை - உரிமை. காதுதற் பாலவல்ல - மோதித் தீர்க்குந்தன்மையுடையனவல்ல நோதக ஓச்சி - வருந்தும்படி யெடுத்துக்காட்டி. நோன்றவே எறிகுவார் - பொறுமையாகவே களைவார்.

(1808) பனவக் கொலை முன் பாதகங்கள் பாற்றற்கு உளது - பார்ப்பாரைக் கொலை செய்வது முதலிய பாவங்கள் நீக்குதற்கு வழியுண்டு. கனகவரையும் - இமயமலையும்.

(1810) பாம்பு இழை பள்ளிவள்ளல் - பாம்பினைப் படுக்கையாகக் கொண்ட வள்ளலாகிய இராமன். நலியலீர் - வருத்தாதீர்.

(1811) பெற்றியர் - இயற்கையுடையவர். நேர் வருதாயத்து விரப்பினோர் - சமமாக வரும் உரிமையில் நிறையக் கரவு செய்து கொண்டவர். பிறர் சீரியர் கிளைஞரை - அயலாரையும் சிறந்தவர்களையும் சுற்றத்தாரையும்.

(1812) பின்னை பின்றும் என்றாலும் - பின்
வேறுபடுவான் என்
றாலும். பிறிது - பழி. உண்டாமோ?
உண்டாகாது.

(1813) தலைபுக்க பெரியோன் பெற்றி - புறவுக்காகத் தராசில் ஏறிய பெரியோன் ஆகிய சிபியின் தன்மையை. துறந்த நாட்கு - வேண்டாம் என்று நீக்கிய நாளினும்.

(1814) இடைந்தவர்க்கு - வருந்தியவர்களுக்கு.

(1815) நகை மழுவாளன் - ஒளிரும் பரசு
கொண்ட சிவன். அபயம் என்ற அந்தணன் -

என்னும் ஆயுதங்
அடைக்கலமென்று
வந்த மறையவனாகிய மார்க்கண்டன்.

மன்னரைச்சேர்ந்தொழுகல்

(1821) தன் கரத்தின் - அரசனுடைய கோளும் - விரும்பாத கொள்கையும்.

கையில். விழையா-

(1822) வெருவுறுத் திண்மையும் - அஞ்சாத வலிமையும். தொடு செவ்வி அறிந்து - இடமும் காலமும் தெரிந்து.

இடத்-

(1823) முடங்கல் குறுகுபு கொடுப்பான் - வோலையைக் கொண்டுபோய் நெருங்கிக் கொடுத்து

கொடுத்த திருமுக-

வருவான்.

(1824) சேர்ந்தவர்க்கு ஆகா - முன் கூறிய பண்பு செயல்களைத் தனையும் மன்னரைச் சேர்ந்து வாழ்வார்க்குக் கூடாதனவாம். ஆதிகள்

தாம் உறல் - முதலியவைகளைத் தாமும் பெற்றுக் கொள்வது. போதல் - போரில் விட்டுப் புறங்காட்டி யோடுவது.

அறை-

(1825) வினை வலித்தார் - மன்னவன் கீழ்ப் பணியாற்றுவோர். சிறப்புற ஓர்வது ஆயினும் மறை தான் செப்பிடக் கேட்பர் - சிறப்பாக எல்லாரும் அறியத் தக்கதென்றாலும் மறைத்த செய்தியை (இரகசியப் பொருளை) அரசன் தானே கூறினாற் கேட்பார்.

(1827) சொற்பொருள் ஆய்ந்தோர் - சொல்லின் பொருளை ஆராய்ந்த அறிவுடைய அமைச்சர். மூன்று அவையும் - மூன்றாகச் சொல்லப்பட்ட அவைக்களம் (சபைகள்). நவை படா-குற்றமில்லாத.

(1828) வல்லவர் அவையுள் - கற்று வல்ல சான்றோர் கூடிய அவைக்களத்தில். அவை அஞ்சாதாரை போற்றுக - அவையோர்க்கு அஞ்சாது எடுத்துரைக்கும் நாவன்மையுடையவரை வைத்துப் பேணுக.

(1833) பார்த்திபர் தூது ஆய் அடைந்தார் பண்பு-மன்னவர்க்குத் தூதுவராகி வாழ்வாருடைய நற்குணங்களாம்.

(1834) மேலையோர் தூது உரைத்தவாறு - முன்னோர்கள் தூதுவர்க்கு உரியனவாகக் கூறிய விதம் இது. தலை - முதன்மையான தூதுவன். இடை அது - நடுத்தரமான தூதனாகிய அவன். கோன் அறைந்தது ஈது என்று கூறும் - மன்னவன் சொல்லியது இதுவென்று மட்டும் சொல்வான். கடை - கடைசியான தூதுவன்.

(1835) இற்பிறப்பு - நற்குடியிற் பிறப்பது. கற்று வல்லவனாய் அடங்கியிருப்பது.

(1836) தன் மனையின் வார்க்கும் நறுநெய் உண்டு ஒளிர்வதே- தன் வீட்டில் ஊற்றும் நல்ல நெய்யைக் குடித்து விளங்குவதுதானே யென்று நினைத்து. (முத்தமிட்டால்) எல் அடர் சுடரை-ஒளி நிறைந்த விளக்கினை. அற்றம் நோக்காது - அமையம் பாராமல்.

## சு அ. மானம்

(1854) வெதிர் - செவிடர். பங்கு - முடவர். யாக்கையோடு ஒழிவர் - உடலினோடு அவர்கள் குறைவும் ஒழிந்துவிடும். ஏனையர் - மற்றவர். வசையின் மாற்றம் - பழிச்சொல். எழுமைக்கும் - ஏழு பிறப்பினும்.

(1856) உயர் மானம் உருக்கும் வினையை - உயர்ந்த மானத்தைக் கெடுக்கும் தொழிலை. ஊழ் வந்து உருக்கும் எனில் - விதி வந்து வருத்துமென்றால். உன்னல் - நினைக்க வேண்டும். சாமரை மான் - கவரிமான்.

(1857) இழிந்த தொழிலின் நாணுவதே-இழிவான (கேவலமான) தொழிலைச் செய்வதற்கு நாணுவதே (ஆடவர் நாணமாம்.)

(1858) (அமைச்சர்) மான நோக்கின் - மானத்தை ஆய்ந்தால். கவரிமா அனைய நீரார் - கவரிமான் போன்ற தன்மையுடையவராய் உயிர் இழப்பர்.

(1859) வரிசை - மதிப்பு. தோற்றம் - புகழ். மரபு - முறைமை. ஒண் பூணும் - ஒளிரும் நகை போன்றதாகிய.



## ௩௦. பொருட்சிறப்பு

(1903) இறந்தது ஓர் பொருண்மையது - மிகுந்த ஒரு பொருளின் தன்மையுடையது. (பொருள்) திரு எனச் செப்பல் ஆகும் - செல்வமென்று சொல்லத் தகும்.

(1904) ஆக்கம் யாவையும் - செல்வம் எல்லாவற்றையும். அவை வளர்த்தலின் - அவற்றைச் (செல்வம் வளர்த்தலால்). கிளத்திடின் - ஆய்ந்து சொன்னால்.

(1905) மேலுறு திருவொடு மேவுறார் - இய செல்வத்தொடு சேரார் ஆயின்.

எனில் - மேன்மை பொருந்

(1906) விஞ்சையேயன்றி - கல்வி மட்டும் அல்லாமல். வளத்தினின் சிறந்தது மற்றொன்று இல்லை - செல்வத்திலும் சிறந்தது வேறொன்றும் இல்லை.

(1907) ஏற்றோர்க்கு இம்மியும் உதவாராயும் - இரப்பார்க்கு (யாசகர்க்கு) மத்தங்காய்ப் புல்லரிசிபோன்ற சிறு பொருளையும் கொடாதவராகியும். ஈட்டப்பட்டதோ - தேடப்பட்ட பொருள் (நம் பொருள்) அறத்து ஆற ஈட்டு நம் பொருள் - நல்வழியிற் தேடப்பட்ட பொருள். படுமோ - கெடுமோ? (கெடாது.)

(1908) சேண் ஆர் திருவுடை-பெருமைபெற்ற செல்வம் உடைய. செந்தாமரைக் கண்ணன் என்றே சொல்வர். (இவ்வாறு சொல்வதற்குக் காரணம் பொன்னுடையுடுத்ததுதான்.)

(1909) பொன் துஞ்சு ஆகத்தினாய் - பொன்னாற் செய்த அணி கலன்கள் தாங்குகின்ற மார்புடையவனே!

(1910) பொரு படை-போர் செய்யுஞ் சேனைகள். தரணி-பூமியை யரசு புரிவது. தரணியில் - பூமியை யாள்வதால். துன்னும் காலை - நிறைந்தபோது.

(1911) அலந்த கிளைகள் அழிபசி நீக்கும் - வருந்திய சுற்றத்தார் களது மிகுந்த பசியைப் போக்கும். நிலம்பக - பூமி பிளக்கும்படி. புலம்பு இல் - தனிமையில்லாத. புன்கண்மை - துன்பம். கூறியது இதன் மேல் இல்லை கொழும் பொன் நீர் தொண்மின் - மிகுந்த சிறப்புடையது இப்பொருளைக் காட்டிலும் வேறொன்றில்லை. செழிப்பான பொருள் இப்பொருளை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்.

(1914) பொலம் கையுடையவர்க்கலது - கையிற் பொருளுடையவர்க்கல்லாமல். புகழ்ச்சியினையடையா - (மேற்கூறப்பட்ட குலம் குண முதலியவை) புகழைத் தரா. பொருள் ஆதல் இனி அழியல் - பொருள் உண்டாக்குவதை இனிமேல் கெடுக்காதே. அலங்கல் வரை - மாலை புனைந்த மலையைப் போன்ற.

பால்] ருக கல்வி 555

# ருக. கல்வி

(1935) மாற்படு புந்தியில் மறுவில் சேதனம் பாற்படும் உயிர்க் கெலாம் பவத்தின் மாண்பயன் - மயக்கத்தைத் தரும் அறிவிற் குற்ற மில்லாத அறிவு தோன்றும் மக்களுயிர்கட்கெல்லாம் பிறவியின் நற்பயன்.

(1936) திருமைகொள் வளனொடு - சிறப்புடைய செல்வத்தோடு - இருமையின்-இரண்டில். அதனில்-அப்பிறப்பினும், பேயின் தோற்றமே பெருமையது உடையது - பேய்ப்பிறப்பே பெருமையானது.

(1937) சாதி உடல் வயத்து ஆகும் - குலம் என்பது உடம்பைப் பொறுத்ததாகும். அகக்கண்ணுகித் தொடர்பு உறும் கல்வி - மனத்திற்கு ஒரு கண்ணுகி உயிரினைத் தொடர்ந்து செல்லும் கல்வியானது.

(1940) வாள் முகத்தில்-ஒளி பொருந்திய முகத்தில். வாள் இரவி-ஒளி பொருந்திய சூரியன். இம்மை இப்பிறப்பின் பயன். மறுமை - வரும் பிறப்பில் பயன். வீடு - முத்தி என்பது.

(1941) நுனித்து- நுட்பமாக. மாலொடும்-மயக்கத்துடன். வீறுக. இருநூல் - பெரிய நூல்களில்.

வாரா-

(1942) பொருவிலா இதிகாசம் - ஒப்பில்லாத
ஓர்ந்தவரே - அறிந்தவர்களே.

இலக்கியங்கள்.

(1945) கருத்திலோர் கண் உண்டு - மனத்தில் ஒரு

ஞானம் என்ற விழியுள்ளது. காட்டக்கு - காட்டுவதற்கு.

(1946) வல்லார் - அறிவில் வல்லவர்கள். வழி ஒன்றி-இறைவன் கூறிய நல்வழியைப் பொருந்தி. கலப்பு அறியாரே - இறைவனோடு கலப்பதற்குரிய வழியை அறியார்.

(1947) நில்லாக்குரம்பை நில என்று உணர்வீர்காள் - நிலையில்லாத (மாய்ந்து போகும்) கூடாகிய உடம்பினை நிலையானது என்று அறிந்து வளர்க்கும் அறிவில்லாதவர்களே!, காண ஒண்ணுதே - இறைவனைக் காண முடியாது.

(1948) வல்லார் - அறிவில் வன்மையுடையவர். அறத்துள்ளும் - தருமம் செய்வதிலும். பொல்லா வினைத் துயர் போகம் செய்வாரே - தீய தொழிலாற்றுன்பமும் தமக்குரிய காமவின்பமும் அடைவாரே.

(1949) கல்லாதார் நல்லார் ஆம் - மூடர்க்கு மூடர் நல்லவராவர். கருத்து அறியார் - அறிவுடையார் சொல்லின் கருத்தினை மூடர் அறியார்.

(1950) சிவஞானம் - சிவனை

மக்கள். வீடார் - விடமாட்டார்.

நீங்கார்.

அறியும் அறிவு. கலதிகள் - கீழ்

துரிசு அறுர் - குற்றத்தை விட்டு

(1951) கல் ஆல் எம்மான் குற்றம் அற கை காட்டும் கருத்தைக் கண்டு - கல்லால மரத்தினடியிலிருந்து எம்பெருமான் ஆகிய சிவன் நால்வர்க்குக் கைக்குறிப்புக் காட்டி அறிவித்த ஞானத்தையறிந்து. குணம்குறியற்று - அயலார்க்குப் பண்பும் பெயரும் தோன்றுதவாறு.



[பொருட்

(1952) உற்றுழி உதவியும் - ஆசிரியனுக்கு இடையூறு நேர்ந்த போதெல்லாம் உதவிசெய்தும். உறுபொருள் - மிகுதியான பொருளை. பிற்றை நிலை முனியாது - ஆசிரியன் பின் நின்று வழிபாடு குற்றேவல் செய்வதை வெறுக்காமல் இருந்து. உடன்வயிற்றுள்ளும்-ஒருவயிற்றில் உடன்பிறந்தவர்களிலும். சிறப்பின் பாலால் - அறிவிற் சிறந்த பகுதியில். ஆறு அரசும் செல்லும் - வழியில் அரசனும் நடப்பான். நாற்பால் - நான்கு பிரிவாகிய குலம். அவன்கட்படும் - அவனிடத்தில் அடங்கி நடப்பான்.

(1953) கற்றல் - கற்கவேண்டும். மெய்ப்பொருள் விளக்கும் - உண்மைப்பொருளாகிய ஞானத்தை உண்டாக்கும். பொய்ப்பொருள் பிறகள் - பிற பொருள் எல்லாம் பொய்யான (அழியக்கூடிய) பொருள்கள். பொன் ஆம் - (கல்வியே) பொன்னும் புகழும் ஆகும். இப்பொருள் - கல்வி.

(1954) வலம் மிகுதிகிரி செங்கையாய் - வெற்றியில் மிகுந்த சக்கரத்தையேந்திய சிவந்தகையுடையாய்; இது கண்ணனை விளித்தது. வாகைத் தார்புனை தாரை மாவல்லான் - வெற்றிமாலை புனைந்த குதிரை நடத்துதலில் வல்லவன் ஆகிய நகுலன்.

## ௫௨. பெரியாரைத் துணைக்கோடல்

(2228) விழுப்பொருள் நான்கையும் சிறந்த பொருள்களாகிய அறம் பொருள் இன்பம் வீடாகிய நான்கினையும். தெள்ளுபு-தெளிந்து. முனிந்து - சினந்து ; வெறுத்து. குழுபுறத்து - கூட்டத்தில். ஆதரம் - ஆசை.

(2229) எண்மை புரியாது - எளிய செயல்
வழியே - (கற்றவர்) சொல்லின்படியே.

செய்யாமல். இயம்பும்

(2230) விழையன்மின் - விரும்பாதீர். விழைமின் - விரும்புவீர். எம்பிரான் - எமது கடவுள் (சிவபெருமான்). உரகங்கள் - பாம்புகள். கலுழனை - கருடனை. வாழ்ந்தனையோ என்ன விஞயின எனக்கூட்டுக.

(2231) உணர்வு சான்ற - அறிவு நிறைந்த. அசுபம் - கேடு ; தீமை. சுபம் - நன்மை. அறிவிற் சிறந்தவர் கூட்டத்தைக் கங்கை நீராக உருவகப்படுத்தினர். இறக்க அரிய - கெடாத. இடர் பந்தம் அறுத்து - துன்பந்தரும் பாசத்தினை நீக்கி. வேலைப்புணையாம் - பிறவியெனும் கடல் கடப்பதற்குக் கப்பலாகும்.

(2032) பவங்களை - பாவங்களை அல்லது பிறவிகளை. அறவும் - முழுவதும். சுவங்களின் - நன்மை வழியில்.

(2033) அஞ்சையும் அறுத்த - ஐந்து புலன்களையும் கண்டம் சேர்தலால் - கழுத்தில் (நஞ்சு) சேர்ந்திருப்பதால். தொழப்படும் - நஞ்சும் வணங்கப்படுகின்றது.

அடக்கிய,
நஞ்சமும்

(2034) வேதகக்குளிகை - ரசத்தாற் செய்து வெந்த உருண்டைகள். ஆங்கே - அதுபோல. எய்தல் உற்றார் - அடைய நினைவுடையவர். அவன்தாள் - சிவன் பாதத்தை.



(2036) எம்மனோரையும் - எம்மைப்போன்றவர்களையும். இடித்துகண்டித்தறிவு கூறி. பெறத்தகாதன உண்டோ - பெற்றுக்கொள்ளப் படாத பொருள்களுண்டோ? இல்லை

(2037) விரியும் பூதம் ஓரைந்திலும் - பரந்த நிலம் வானம் ஆகிய ஐந்து பூதங்களினும். மெய்யினும் -

நீர் தீ காற்று
உண்மையைப்
பார்க்கினும்.

(2038 மைந்த - வலிமையுடையவனே; மகன்போன்றவனே! இது விளி. முனியவும் - சினந்து சொல்லவும். நொய்து உயர்ந்தாரையும் - விரைவிலுயர்ந்தவர்களையும்.

(2039) அறம் மறம் பாத்து - நல்வினை தீவினை இரண்டினையும். பிரித்து. வீயினும்தான் - இறந்தாலுமே. மேதையோர் - அறிவுடையார்

(2040) நல்லார் நன்று என்று உரைப்ப - நல்லோர் நல்லது என்று சொல்வார்கள். நவிற்றிய இ எல்லாம் அடங்க - மேற்சொல்லப்பட்ட இவ்வெல்லாம் அதனுள்ளடங்க. நன்று அன்றே - நல்லவல்லவா?

(2041) இருந்தவர் தம் நட்பு இலனேல் - பெரிய முனிவர்தம் நண்பு இல்லாதவனானால். என் இல்லான் ஆவன் - எப்பொருளில்லாதவன் ஆவன். (எல்லாம் உடையவனாவன் என்பது).

(2042)
புகழத்தக்க

தூயோரும் புகழ் தூயோர் ஆயோர்கள் - தூயவர்களும் தூயவர் ஆகிய மேலோர்கள். ஏயோ: வியப்பிடைச்சொல்.

(2043) இமையவர் தம் உலகு - விண்ணுலகம்; சுவர்க்கம். இருள் உலகம் - நிரயமாகிய இடம். அமைய - பொருந்துமாறு. அந்தோ - ஐயோ! இது இரக்கக் குறிப்பிடைச்சொல். கமை உடையோர் - பொறுமையுடையவர்.

(2044) கூடாத கூட்டத்துப் படுநட்பு - தகாத சிற்றினத்தாரோடு கூடும் நண்பானது. வீடுதற்குத்தக்கதாய் - கெடுவதற்குத் தகுந்ததாகி.

(2045) தேவர் பெறற்கு அரும் திருவும் சித்திக்கும்படி அருளும் - தேவரும் பெற்றுக்கொள்ள முடியாத செல்வமும் வந்து சேரும்படி செய்யும். செப்ப அரிது - (அந்நட்பின் பெருமை) சொல்லமுடியாது.

(2046) அணியது ஆகி பெரிதும் வயங்கிற்று - விளங்கியது. வெங்கோது - கொடிய குற்றங்கள்.

அழகாகி மிகவும்
ஒடிவு அறும் -
நீங்காத.

(2047) அளி செயும் - அருள் பொருந்திய. உவப்பு அரும் சமன் உற்று - மகிழ்ச்சிக்கருமையான நடுவுநிலை பொருந்தி; கல்லறிவு கலக்கும் என்று கூட்டுக.

௫௩. பெரியாரைப் பிழையாமை

(2068) நெருப்பு உயிர்த்திடல் - தீப்போன்ற சாபம் இட்டால். ஏத்துவதே கடன் - (நீத்தவர்களை)த் துதிப்பதே கடமையாம். ஆத்தர்கள் - முனிவர்கள்.



(2069) குரவரை தாய் தந்தை முதலிய ஐந்து பெரியார்களையும். மேதகும்படி பரவுதல் - மேன்மை பொருந்தும்படி துதித்தல். அவர் பாங்கர் சிந்தனை கரவு உற - அப்பெரியார் பக்கத்தில் வஞ்சகமாக சிந்தித்துப்பேசுவது.

(2070) தேற்றம் மிகும் சார்பினரேனும் சிதைவர் - தெளிவு மிகுந்த துணையுடையவரென்றாலும் கெடுவர். முப்புரர் சூரன் - முப்புரங்களையுடைய அசுரரும் சூரனும்.

(2071) கடவுள் கற்பின் மடநலார் தமை - தெய்வத்தன்மையான கற்புடைய மகளிரை. கடிய வெங்கொள்ளிதன்னால் - கொடிய வெப்பமான தீப்பற்றிய கட்டையால்.

(2072) பை அரா அணிந்த
பாம்பினைப் புனைந்த சடையுடைய.
தெய்வம்.
வேணி - படத்தைக்கொண்ட
ஐயனும் - குருவாகிய. புத்தேள் -

(2073) ஒல்லென - விரைவாக. உம்பர்கோன் - தேவர்கட்கு அரசனாகிய இந்திரன். புரந்தரன் - இந்திரன். குரவர்ப்பேணா நவையினால் - குருவை வணங்காத குற்றத்தால்.

(2074) ஓர் கற்பம் அழுந்தும் என்று - ஒரு கற்பமாகிய வரை கிடந்து வருந்துவான் என்று. புரிவிலா - செய்யப்படாத;

காலம்
கற்பம்
என்பது பிரமன் வாழ்நாள். சதுர்யுகம்கூடிய முடிவு
வரே முப்பது கூடி மாதமாய்ப்பின் ஆண்டுகளாகி
செல்லும் பிரமன் இறப்பான் என்பது இலக்கிய மரபு.

ஓர்நாள்; அவ்
நூறு ஆண்டு (2075) தா அற்ற - கேடில்லாத.
பண்ணிய வினைத கொடிய வினை என

ஓ அற்ற - ஒழியாத; நீங்காத.
மறையுரைக்கும் எனக்கூட்டுக.

(2076) சொல்லல் - சொல்லாமலிருக்கவேண்டும்.
கோடி - பசுவை வதைத்த பாவத்திற் கோடிபங்கதிகம்.

கோவதைதீற்

(2077) பொருட்களவதனிற் கோடி - அயலார் பொருளைக் களவு
செய்யும் பாவத்திற் கோடிபங்கதிகம். மத்தம் ஆம் அவரிற்கூடல் -

அறிவில்லாத மயக்கம் பிடித்தவர்களோடு நட்புக்கொள்வது.
பானத்திற்கோடி - கள்ளுண்ட பாவத்திற் கோடிபங்கதிகம்.

மத்ய

(2078) கொடுகிய மொழிகொடு - வளைந்த (தீமையான) சொல்
லால். உடுவது பேசிடு - குற்றமாகப்பேசும். உடு மதி அளவும் - விண்
மீனும் சந்திரனும் உள்ள காலம் வரையும்.

(2079) அசிர்தனும் - சிறந்தவனாகிய. மறுவது பேசிடும் - குற்றமாக நிந்தித்துப்பேசிய. இறு துயர் - இறக்கும்போதுபடும் துன்பத்தையொத்த துன்பம்.

(2080) உன்னரும் - நினைப்பதற்கரிய.
வான் என்று மறைநூல்கள் சொல்லும்.

விழ வேதம் ஓதும் - விழு

(2081) துகள் உரைத்தவர் - குற்றமாகப் பேசியவர். பஞ்சபாதகரில் தண்ணியோர் - ஐந்து பாதகமுஞ் செய்தவரிலும் மேற்பட்டவர்.

(2082) கள்ளத்தார் தம்மை - வஞ்சகமுடையவரை. அறத்தையும் அவித்தது அன்றே - தருமத்தையுங் கெடுத்ததல்லவா (காணல் முதலிய செயல்களெல்லாம்).



(2083) ஆதல் - ஆக; ஆயினும். எண்ணில் - (யாவராயினும்) ஆய்ந்தால். பழிப்பு அரு - பழித்துச் சொல்லமுடியாத.

(2084) தகையுறு தம்முனை - பெருமைபெற்ற தமையனை. பகை உற வருதலும் - பகையுற்று வந்தவுடன் துறவியாவது. நகை உறல் - சிரிக்கத்தக்கது. நயக்கற்பாலதோ - விரும்பத்தக்கதோ?

## ௫௨. குடிமை

(2096) உன்னல் மொழிதல் செயல் மூன்று - நினைப்பதும் சொல்வதும் செய்வதும் ஆகிய மூன்றும். இழுக்கார் - தவறமாட்டார். நன்னர் பயவா வினை - பிறர்க்கு நன்மை தராத செயல்களை.

(2097) கொண்மூ நீர் - மழைத்தண்ணீர். நிலத்தியல்பு அற்றே - சேர்ந்த மண்ணின் இயல்பு போலவேயிருக்கும். தொல்லை நலத்தது - பழைமையாகச் செய்து வந்த செயல்.

(2098) திறம் திறம்பினும் - பண்பு வேறுபட்டாலும். செயிர் தீர் மறம் - குற்றம் நீங்கிய வீரம். வரல்முறை திறம்புதல் வழக்கோ - பழக்கமாகச் செய்து வந்த தொழிலினின்று மாறுபடுவது முறையாகுமோ? ஆகாது.

# ருரு. நட்பு

(2013) அழிதரும் நெறியில் பயில் தொறும் - பழகுந்தோறும். செலவினை தடுத்து. யில் கடவாமல் (நட்பினரை) விலக்கி - கேடுவரும் வழி அல்லாந்து - வருத்தி.

(2111) உறின் - (ஆயாது) நட்புக் கொண்டால். புன்மையும் - இழிவான செயலும். இருபயனும் - இப்பிறப்பு மறுபிறப்பு ஆகிய இரண்டிலும் அடையும் பயனே.

(2115) இளந்திடாது - சொல்லாமல். கெடும் வகை செய்தல் - கேடு வரும்படி ஒன்றைச்செய்வது. வேண்டினதாமே கெழுவுதல் - விரும்பிய பொருளைத்தாமே எடுத்துக் கொள்வது. ஊழில் - முறையாக. நேரலார்தாமும் - பகைவர்களும். கேள் - நட்பு.

(2116) இவர் தமையே காதலரேனும் விடு - (மேற் கூறப்பட்ட) இவர்களையே அன்பராயினும் நீக்கிவிடு. விலைமாதர் கள்வரில் - வேசையரையும் கள்ளர்களையும்போல. உறல் குறிப்போர் - வருவதையே எண்ணுவார். நகுவித்து - நகைக்கும்படி செய்து. ஆதரு கருமம் - தம்மாலே செய்யக்கூடிய காரியத்தை. உளமும் ஓதலும் - மனமும் சொல்லும்.

(2117) கயத்துப் பூவை நிகர்தராது - குளத்தின் மலரும் பூவுக்கு ஒப்பாகாமல். கோட்டின் அலரென - மரக்கொம்பில் உள்ள மலர் போல. வறங் கூர்காலை - பொருளின்றி வறுமையுற்ற காலத்தில்.

(2118) காணுதல் ஒழிக நல்லார் - நல்லவரைப் பாராமல் விடுக. காணின் அங்கு அவர் பால் நட்பு பேணுதல் ஒழிக - கண்டாலும் அந்நல்லாரது நட்பினை விரும்பாமல் விடுக. பார்ப்பென - பறவைக் குஞ்சுகளைப்போல.

[பொருட்

(2119) உலக மீக்கூற - உலகத்தார் மேலாகப்புகழ்ந்து சொல்ல. தலைப்போகன்மையின் - மேற்செல்ல முடியாமையால். இடம் கொடுத்து அளிப்ப - நண்பர்க்கு இடங்கொடுத்துக் காப்பார்.

(2120) விளைபதம் சீறிடம் நோக்கி வளை கதிர் வல்சி கொண்டு

அளை மல்க வைக்கும் - விளைந்த காலமும் சிறிய இடமும் பார்த்து வளைந்த நெற்கதிராகிய உணவைப் பறித்துக்கொண்டு போய்த் தன் வளை நிறைய வைக்கின்ற. தம் வளம் வலியுறுக்கும் - தமது செல்வத்தை நிறைத்துப் புலப்படுத்துகின்ற. இல்லாகியர் - இல்லாமல் விடுக. விடரகம் - மலைக்குகைகள். களிற்றொருத்தல் - ஆண் யானை உரனுடையாளர் - அறிவுடையவர். உள ஆகியர் - உள்ளது ஆகுக.

(2121) துகிரும் - பவளமும். காமரு - அழகிய. சேய - நெடுந் தூரத்திலிருப்பன. தொடை புணர்ந்து - மாலையாகச்சேர்த்து. பாலர் ஆப - பக்கத்தர் ஆவர்; பகுதியில் உள்ளவர் ஆவர். சாலார் - சான்றவர் அல்லாதவர் (கீழோர்).

(2167) பிழை இயற்றினர்க்கும் இன்னமை புரியாயேல் என மாற்றுக. இன்னா ஆங்கு இயற்றின் - துன்பம் பகைவரிடத்துச்செய்தால்.

(2168) எள்ளிய பகையே - இகழ்ந்த பகைவர். தாழ்வுறில் - பகைவர்க்குப் பணிந்து நடந்தால். நொதுமலரே - அயலார்களே. பகைமை அறவகை ஆய்ந்திருக்க. பகை கெடுக்கும் விதத்தை ஆராய்ந்தேயிருக்க வேண்டும்.

(2169) சுற்றம், வலிகள், பொருள், நட்பு படையின் மெலியார் - சுற்றத்தாரினும் வலிமையினும் பொருளினும் நட்பினும் சேனைகளினும் தன்னிற் குறைந்தவர். அச்சம்......மறு உடையார் இவர் மேற் பகை

உறுக. அச்சமும் அறியாமையும் பொருந்தா இயற்கையும், கழிகாமமும் கல்லாமையும், பழியஞ்சாமையும் ஆகிய குற்றமுடையார் மேற்பகை கொள்க. மெலியார் மேலும் மறுவுடையார் மேலும் எனக் கூட்டுக.

(2170) பாரம் பரிக்க வேண்டின் - சுமையைப்பொறுக்க விரும்பினால். துணையால் தனிமையுறின் - தனிமையாகப் பொர நேர்ந்தால் துணையாக ஒன்றை உறவு ஆக்கல்).

(2171) அமராவிற்கும் - அமர்ந்திருக்கும். கடிக - நீக்குக. நமர் ஆம் எனவே கண்ணோடில் குடியோடு நுன்னை எளிது அழிக்கும் - நம்மவர் என்று கண்ணோட்டம் செய்தால் அப்பகை உன்னைக் குடியோடு எளிதாகக் கெடுத்துவிடும். தேய்க்கும் தணிப்பிக்கும் எனவுங் கூட்டுக.

(2172) அஞ்சனக் கோலின் ஆற்று நாகம் - மையெழுது கோலிற் குத்துவதற்கும் பொருத ஓர் பாம்பானது. எயிற்றாற் - பற்களாற் கடித்து.

(2173) கையினுள்ளும் முடியகத்தும், கண்ணீரினுள்ளும், அணிகலத்தகத்தும் படையுடன் ஒடுங்கும் (பற்றார்). (பகைவரை) தெளிகுற்றார் விளிகுற்றாரே - தெளிந்தவர் இறந்தவரேயாவர்.

பால்] ௫௬. கயமை
561

# ௫௭. சிற்றினஞ் சேராமை

(2188) வல் இழுதையரும் - வலிய கீழ்மக்களும். விடரும் காமுகரும் - தூர்த்தர்களும் பரத்தையரைப் புணர்வோர்களும். நடரும் - கூத்தரும். திரித்து - வேறுபடுத்தி. பொருளும் புகழும் கெடுக்கும் என்க. இருமைப்பொருளும் - இப்பிறப்பின் பயனும் மறுபிறப்பிற்

குரிய பயனும்.

(2189) நாணார், பார்த்திடார் பேணார் செயலார். கைவிடுவார், எய்தார் கொடார் இவர் பேதையர்.

மகிழ்வுடையார்,
ஒழிக - இவரை
விட்டு நீங்குக.

(2190) வன்மையையுடையான், கேளான், தெரிப்பான், நடிப்பான், நாட்டுவன் (ஆகிய) இவனையும் நண்ணேல். இவ்வியல்புடையவனோடு நட்புக் கொள்ளாதே என்பது கருத்து.

(2191) இணங்குபு திரிதரும் இழுதை மாந்தரை - இணங்கி (சேர்ந்து) திரியும் மூட மனிதரை. பதடி - பதர். மனிதர்களாகிய நெல்லிற் பதர்போல்பவர் இவர் என்க.

(2192) தொழில் வெய்யவர் - கொடிய(தீய) மூடர். அந்நாட்டு இடை - (கொடியோர் வசிக்கும்)

செயல் செய்யும்
அந்த நாட்டினுள்.

(2194) உடலிடைத் தோன்றிற்று ஒன்றை டோன்றிய கழலை புண் முதலியவற்றில் ஒன்றை. மருந்த. கருமம் அன்று - நல்ல செயல் அன்று.

- உடம்பின் கண்
கோட்டம் - ஒரு

(2195) வீடு உறும்மால் - மயக்கம் நீங்கும். அறிவிலார் மருங்கு ஐயுற்று அடைந்திடின் எனக் கூட்டுக. வேலை உற்று - கடலிற் பொருந்தி. பவக்கோலம் - பிறப்பின் உருவம்.

## ருஅ. கயமை

(2222) காஞ்சிரம் கனி - எட்டிப்பழம். அத்தன்மை போன்றது தான்.

அத்தகவு அல்லவோ -

(2223) காண்பார், புரியார், உய்த்து மொழிவார், கவலார் செம்மாப்பர், பயன்படுவார் ; இடார், இவரே கயவர் என்க. மறை - மறைவாகக் கூறும் மொழி (அந்தரங்கம்). செம்மாப்பர் - செருக்குக்கொள்வார். யழுக்குவார்க்கே - வருத்துகின்றவர்கட்கே. வறிதும் - வீணாகும் பொருள்களையும், சிறிது ஆகிய பொருளையும். இடார் - கொடார்.

(2224) ஐந்தும் - மேற்கூறிய பொருள், கல்வி, செல்வம், கிளை, இளமையாகிய ஐந்தினையும். காமம் விடரிடை வீழ்ப்பது ஆனான் - காம வின்பமாகிய மலைப்பிளப்பில் கொட்டுவதிற் குறையான்.

(2228) அவிவேகிக்குச் சாத்திரம் பாரம் - அறிவில்லாதவனுக்கு நூல்கள் சுமையாம். செவிது ஆன உரு - அழகான வடிவம். சுமடர் சுமைபோல புந்தி நலம் கூடாதார்க்கு செயல்கள் எல்லாம் குவிபாரம் ஆம் எனக்கூட்டுக : சுமடர் - சுமை சுமந்து செல்வார்.

ப. பா.—36



## ருக. காமக்கேடு

(2280) தந்திடும் ; கெடுக்கும் ; தொலைக்கும் ; தடுத்து இருள் உய்த்திடும் (ஆதலால்) காமம் ஒருவனுக்குப் பகையாம். கருதில் - ஆராய்ந்தால். உண்டுகொல் - உண்டோ (இல்லை). ஏமம் நன்னெறி - இன்பத்திற்குரிய நல்வழி.

(2282) பருவரலின் மூழ்குவிக்கும் - துன்பக்கடலின் செய்யும். நிரயப் பெரும் பிலத்தின் ஊடு - நரகம் ஆகிய லத்தின் நடுவே.

மூழ்குமாறு
பெரிய பாத

(2283) ஞாளிதசை இல்லா என்பு கறித்திட்டால் லாத எலும்பைக் கடித்தால்.

- நாய் ஊனில்

(2286) உலவை இடை - காட்டிடத்தில். புலிங்கம் - தீப்பொறி பலவினும் போய்ப்பற்றிடும் - பச்சைச்செடி மரம் கொடியாகிய பல வற்றினும் அந்நெருப்புப் பற்றும்.
எனலாம் - மகளிரைப் புணர்கின்ற
யுடைய தென்று சொல்லலாம்.

அரிவை முயங்கு ஆதரம் அற்று
காமவின்பமானது அத்தன்மை

(2287) குந்தம் ஒத்த நாட்டத்து - வாள் போன்ற விழியுடைய.

(2288) கூன் முகத்திங்கள் நெற்றிக்கோதையர் - வளைந்த முக முடைய பிறைபோன்ற நெற்றியையுடைய பெண்கள். இறைவி ஆக- தலைவியாக. மான்முகநோக்கி - மான் பார்வைபோன்ற விழியுடையவள் (திலோத்தமை).

(2291) அந்நோயினை - அக்காம நோயை. வீட்டினர் வீடு சேர்ந்துளார் - கெடுத்தவரே முத்தி சேர்ந்தவராவர்.

அல்லரோ

(2292) வினைந்துளார்தமை உய்த்து வீழ்த்தும் நெஞ்சினும் வினைப்பரோ? வினையார் (அறிஞர்).

காமம் ஆதலால்

(2294) அணங்கு நோய்-வருத்துகின்ற துன்பத்தை. அனங்கனைல்-காமனல். இடன் அறிந்து - தகுதியான இடத்தினைத் தெரிந்து. ஒழுக்கம் குன்றல் - ஒழுக்கக் குறைவினையும். எண்ணு - ஆராயா. (காமம்).

(2295) கருத்து அறை போக்குச் செய்வது ஞுள்ள அறிவினை அற்றுப் போகச் செய்வது.

- மனத்தின் கண்

(2297) வழும்பு - கொழுப்பு. தடி - தசை; சதை.

வார்-நீண்ட. நெய்த்தோர் - குருதி.
சருமம் - தோல்.
தழும்புகண்-வடுப்போலத் தோன்றும் கண்கள்.

(2300) உள்மயக்கு மும்மையுண்டு அதில் திண்மயக்கு பெண் மயக்கு அதிற் பிழைத்து நீங்கலே அரிது எனக் கருத்துக் கொள்க. கேட்டிர் + ஆல் - ஆல்: அசை. இரணிய மயக்கு - பொருளாசை மயக்கம். மும்மை - மூன்று; (மண், பொன், பெண் ஆகிய மூன்று மயக்கம்.)

(2301) இருவகை இயக்கம்-மலம் மூத்திரம் கழித்தல். கழிக்கும் போது எவ்வளவின்பமோ அவ்வளவு இன்பம் மாதரைப் புணரும் இன்பம் என்பது கருத்து. பவ்வீ வீழ்ந்து ஒருவரும் வன்றியே போல் - மலத்தில் வீழ்ந்து நீங்காது கிடக்கும் பன்றியைப் போல், உணர் விலாதவர் உழல்வர் என்று கூட்டுக.

(2302) புரை - போன்ற. கோல்புரை நயனம் - அம்புபோன்ற விழி. வடம்புரை உதரம் - ஆலிலை போன்ற வயிறு. திடப்புரை படும் மின்னார் - வலிமையிற் குறைவு பட்ட பெண்கள்.

(2303) நெய்த்தோர் - குருதி. ஈரலும். வழும்பும் - கொழுப்பும். வெயர்வையாகிய நீரும். பவ்வீ -

கொழுவும் ஈருளும் - பொருந்திய வெஞ்சுவேத நீரும் - கொடிய பீ; மலம். அரிவையரிடத்து - பெண்கள்பால்.

(2306) கண்டரால் ஒறுப்புண்ணுதே - கண்டவரால் தண்டிக்கப் படாமல். சாமத்து வேதம் - மூன்றும் வேதம். ஏமத்தும் - பகலிலும்.

(2307) விலகுறு நெஞ்சினை வெய்து மனத்தை விரும்பிக் கொள்ளுங்கள்.

கொள்ளீரே-விலகிய (நீங்கிய) (2309) விளிவு குறங்கை - துடையை.

எளிமாக்கள் - சாவதில் எளிய மனிதர்களே!
துடிபிடி - உடுக்கையிற் கைபிடிக்கும் இடம்.
நகுவார்க்கு இடமாய் நான்றுவற்றும் - நகைப்பவர்க்கு இடமாய்த் தொங்கிப் பின் திரைந்து சுருங்கும். தப்பு முருக்கின் தூய்மலர்-பவளம், முருக்க மரத்திலுள்ள தூய பூ. வெய்ய அதரும் - கொடிய புழுதியும்.

(2319) கண்ணி வைப்போர் - (பெண்கள்) குழலின் மாலையை வைப்போர் எனவும், நெஞ்சப் பறவை சிக்குவதற்குக் கண்ணி வைப்பவர் எனவும் இருபொருள் பட்டது.

(2325) நச்சு என்று அறிந்து - நஞ்சு என்று தெரிந்து.

(2326) உந்திச் சுழியால் - கொப்பூழ் என்ற நீர்ச்சுழியால். உளத்தைச் சுழித்த - மனத்தைச் சுழித்திழுத்த. தந்தித்தனத்தார் - யானைக் கொம்பு போன்ற கொங்கையுடைய பெண்கள்.

(2329) இரும் தராதலப் பரப்பில் - பெரிய பூமியாகிய பரந்த விடத்தில். பருந்தின் வாய்ப்......அருந்தும் ஆறு - கருடன் வாயிற் பற்றிய பாம்பு, அப்பாம்பு கடித்த தவளை, அத்தவளை பிடித்த சிறு பறவை, அப்பறவை பற்றிய சிறு தேன் இவை யொன்றினையொன்றுண்டு அடையும் இன்பம்.

(2330) பிணையைத் துரத்தி - பெண்மானை விரட்டி. படைவேல் கோலின் - ஆயுதமாகிய வேலைப் போன்றும் அம்பைப் போன்றும். குமிழில் - குமிழம் பூப்போன்ற மூக்கின்.

(2331) பதுமந்தன்னை - தாமரையை. இரவிக்கதிர் - சூரியனுடைய வெயில். மிளிர்விக்கும் - மலர்விக்கும். இருப்புப் பொறியும் - இரும்பினாற் செய்த யந்திரமும்.

(2335) கன்றி வின்ற - மிகுந்து நின்றதாகிய. வாமனூர் - புத்தர். சமம் சேர் மாலைபோல - சுடுகாட்டிற் கிடக்கும் மலர்மாலையைப்போல. இது தெரியில் - இக் காமத்தைக் குறித்து ஆய்ந்தால்.

[பொருட்

(2336) காமத்து இன்பம் நீர்ப் புள்ளியற்று - பெண்கள் மானது நீர்த்துளி போன்றது. கேட்டும் - கேட்டோம்.

இன்ப

(2337) பீடு இல - பெருமையில்லாதன. உள்நிறைவு உடைய அல்ல - மனத்தில் நிறைவு இல்லாதவை. அங்கை இட்டால் அழகிய (அகங்கையில்) கையில் கொடுத்தால். பின் நிற்கும் - கொடுத்தவன் பின்னே வந்து நிற்பள்.

(2338) முடிபொருள் உணர்ந்தோர் - முடிவாகிய பொருளை அறிந்தவர் (சான்றோர்) கடியப்பட்டன - நீக்கப்பட்ட பொருள்கள். அல்லவை-பாவச் செயல்கள். நீங்கார் அன்றே-நீங்காதவர் அல்லவா. (நரகந் தன்னிடை உழப்போர்).

(2340) காமம் கண்ணின்று - காமத்துக்குக் கண் இல்லை. நய வாரை - விரும்பத் தகாதவரை. உரவோர் உரை-அறிவோர் கூறும் அறவுரை. கோடல் இன்று ஆம் - கொள்வது இல்லையாம் (காமம்).

(2341)
விட்ட கணை

கோடல் ஈயார் - கொள்ளமாட்டார். காமன் தான் மெய்ப்படும் ஆயின் அக்கால் - மன்மதன் தாங்கியே

தாங்கி
விட்ட
அம்பு தம்முடம்பில் பட்டால் அவ்வமையத்தில்.

(2342) மா என்று - குதிரையென்று. மடல் - எருக்கின் இணர் - எருக்கம் பூவின் கொத்துக்களை.

பனை மடலில்.-

(2343) தேம் மிடை-தேயங்கள் நெருங்கிய. குவாலும்-கூட்டமும். காமுடை மனத்தினர்கட்கு - காமத்தை மனத்தின் மிகுதியாகக் கொண்டவர்களுக்கு, களைகண் ஆவார் யார் உளர் எனவும், அவர்கட்கு அரணம் ஆகா தம் பாலவாகா எனவும் கூட்டுக.

(2344) எண்ணம் அது அலாமை செய்யும் - காமம் ஆனது காமத்தையயன்றி வேறு எண்ணமில்லாமற் செய்யும். மாய்க்கும், வளர்க்கும், உடைக்கும், சிதைக்கும், கலக்கும், கடைப்படு காமம் என்று கூட்டு கு.

(2345) மணி நிறம் குஞ்சி - நீல நின்ற - வேறுபாடு செய்கின்ற. அகை தீயுடைய (பள்ளத்தை) கிடங்கினை.

நிறமாகிய குடுமி. விசுற்பிக் அழல் அழுவந்தன்னை - எரியும் (2346) உவர்ப்பு என்று சொல்லாமல்.

நீரால் - வெறுப்பு என்ற பண்பினால். என்னார்- நீக்குறும் என்று நிற்பார் - நீக்குவேன் என்று நிற்பவர்கள். புனலினை.........வைப்பார் - நீரினால் நீரினையடைத்து வெளியே போகாமல் வைப்பவர் யாவர் (ஒருவரும் இலர்).

(2347) அந்தரம் உற்றான்-விண்ணுலகத்திலிருப்பவன் (இந்திரன்). மந்திரம் அற்றார் உற்றது - சூழ்ச்சி யறிவில்லாதவர்களிடத்திற் பொருந்திய அறிவினை.

(2348) தூம கேது - வால் நட்சத்திரம் கோள்கள். வாமம் - அழகிய.

போன்ற மறைந்துறை

(2349) இழிந்து ஏறுவது - இழிந்த உயர்ந்த பிறப்பிற் பிறந்து.

பிறப்பிற் பிறந்து பின்



(2350)
மொய்க்கும்
மறைந்தார்,

களிவண்டு உறை தாமத்தாரினர்-செருக்குற்ற வண்டுகள் ஒழுங்காகிய பூமாலையணிந்த அரசரில். அவிந்தவர், இறந்தார், (இவர்களை) யெண்ணினும் சால்வரோ எனக் கூட்டுக.

(2351) இருள் உண்டாம் என - மயக்கமுண்டாகும் தெருள் உண்டாம் - தெளிவு வேறு உண்டாம் என்று, எண்ணலர் எனக் கூட்டுக.

என்று.
சிரியோர்
(2352) அனங்க சரத்தால் ஏவுண்டு - காமன்

கணையை ஏவ அது -தைக்கப்பட்டு.

(2353) நாடிகளும் - நரம்புகளும். தடியும் - தசையும். உண் மயங்கா நிற்பர் - (இவ்வுடம்பைக் (அறிவில்லாதவர்.) கண்டு) மனமயங்குகின்றார்

(2354) கோது உற - குற்றம் பொருந்த. பலதுவாரம் தோறும்- பல துளைகள் வழிவழியாக. கும்பம்-குடம் போன்றது. மாழ்குவார்- மயங்குவோர்.

(2355) அம்பொன்தாது.........மாதர் - அழகிய பொன் போன்ற மகரந்தத்தை மொய்க்கின்ற அழகிய சிறகுகளையுடைய வண்டு மொய்க்கின்ற மணம் வீசுகின்ற கூந்தலையுடைய பெண்கள். பைம் புல் மூசிய பாழ் பெருங் கூவலின் - பசிய புல்லால் மூடப்பட்ட பெரிய பாழ்ங் கிணற்றில். அவனி - உலகத்து மக்கள்.

## ௬௨௦. வரைவின் மகளிர்

(2371) அழிபவர் பொருள் கொண்டு - வருந்துவோரது பொருளை வாங்கிக் கொண்டு. போகம் விற்பார் - இன்பத்தை விலை செய்வார். ஆவணப் பண்பு - தெருவின் இயற்கை.

(2372) வெங்நோய் கோட்பட்டார் - கொடிய தொழு நோயாற் கொள்ளப்பட்டவராயினும். வாழ்வார் (வரைவின் மகளிர்) என்க.

(2373) வெறுப்பவே விளக்கின்ற சிறப்பினால் முழுதுந் திறை கொள்வர் என முடிவு கொள்க.

விலைமாதர் பொருள்

(2374) எழிலால் - அழகினால். ஆய்ந்த பண்புடையர் எனவும், பேதைமையார் ஒழியார் எனவும் கூட்டுக.

பற்றார்

(2375) எறும் - வலிமை. இங்கிதத்தின் - குறிப்பின். மிக்குளரே னும் - (மேற்கூறிய சிறப்பின்) மிகுந்தவராயினும். இருமனத் தையலார்க்குப் பொன்னில் தளர்வினர் ஆயின் நஞ்சே எனக் கூட்டுக. இரு மனத்தையலார் - பரத்தையர்.

(2376) இருநிலத்தில் (மயல் பூண்டானை) வாரோ எனக் கொள்க.

தெளிந்தாரும் தெளி • (2386) உய் அடா - இது.

அடா! (நீ) பிழைத்துக் கொள். - அடுக்கு (238 நீங்க.

7) வாரி - பொருள் வருவாய். புரைப - ஒப்ப.

அறு - மறை



(2388) வீபொருளானை - கெட்ட பொருளானை; (பொருள் கெட்டவனை). மாபொருளான்-பெரும்பொருளுடையவன். உண்கணார்- பரத்தையர்க்கு மாவும் புரைப எனக் கூட்டுக. மாவும் - விலங்குகளும்.

(2389) நச்சலால் நாயும் போல்வர் சிதைத்தலால் தீயும் போல்வர் நுகர்தற்கு நோயும் போல்வர் அருமையால் வேயும் போல்வர் எனக் கூட்டுக. நச்சலால் - விரும்புவதால். இன்பத்தைத் துய்க்க நோய் வருதலால், நோய் போல்வர். வேய் - மூங்கில். இது வளர்ந்து எட்டித் தொட முடியாதிருப்பது போல் பொருளில்லார் யால் "அருமையால்" வேய் போல்வர் என்றார்.

அணுகமுடியாமை

(2389) நயந்தனர் இழி - கச்சுக் கட்டிய. (பரத்தையர்.)

கோடலின் - விரும்பிக் கொள்வதால். வம்பு குரங்கும் புரைப - குரங்கினையும் ஒப்பர்

(2390) பூங்குழலார் - பரத்தையர். மாரி அறவே - மழை வுடன். வாரி அறவே - பொருள் வருவாய் நீங்கியவுடன்.

நீங்கின

## சுஉ. கள்ளுண்ணுமை

(2415) கருத்து அழிப்பது கள்ளினும் உளது கொல் - இவர்களது அறிவைக் கெடுப்பது கள்ளினைப் பார்க்கினும் வேறு ஒன்றும் உண்டோ? இல்லை.

(2416) படுகர் பாங்கினும்-நீர் நிலையின் பக்கத்தும். வயலினும். களிப்பவர் தமக்கும் - கள்ளுண்பார்க்கும்.

செறுவினும்-

(2417) மைந்தா கட்குடியை விரும்பாதே. என்று கூட்டுக.

கள்ளுண் டலைக் கொள்ளேல் - மகனே !
அழிக்கும்...விளைக்கும் ஆதலாற் கொள்ளேல்

(2418) வீறு ஆய - வலிமையாகிய. பெறுநற ஊண் - கட்குடிப்பது. சுழி : இருட்படலம் ; தோட்டி ; கதவம் இவை போன்றது. தவமாகிய கரையில் ஏற விடாமல் அமுத்துகின்ற நீர்ச்சுழியாம். அறிவை மறைக்கும் இருட் கூட்டமாம். நரகிலழுத்துகின்ற அங்குசமாம் கதியாகிய வாயிலை யடைக்குங் கதவு ஆகும் என்பது.

(2419) எவ்வம் உற - துன்பம் பொருந்த. கவ்வை உற - பழிச் சொற் பொருந்த. புலை மதுவே - இழிவான கள்ளைக் குடிப்பதுவே (நெறியோர்கள் விலக்குவதும் அதுவே.)

(2420) பின்னவர் - சூத்திரர் ; வேளாளர். மற்றையவரினும் - அப்புலையரினும் இழிந்தவராவார். அம்புவிக்குக் கடவுளர் ஆம் முன்னவர்க்கு - அழகிய பூமிக்குத் தெய்வமாகிய முதல்வர்க்கு (அரசர்க்கு.)

(2421) கற்பகாலம் - நான்முகன் வாழ்நாள் ஆகிய காலம். இரௌரவ நரகு - இது நிரயத்தின் மிகவும் கொடியது.

(2422) வள்ளத்தே உற - கிண்ணத்திற் பொருந்த. அள்ளறல் பள்ளத்து அழுந்தினர் - சேறுடைய பள்ளத்திற் கிடந்தனர்.



(2423) சுரபானம் செய்த பாவி - கட்குடித்த பாதகன் உயிர்களா ; பறவைகளா ; கிருமி கீடமா ; பவம் எடுத்து பற்பல நாள் சுழன்று திரிவான் எனக் கூட்டுக.

(2424) கள் - கள்ளுண்பது. வாய்மை - உண்மையை. ஞானத்து மூந்தார் இயங்கும் இடை - அறிவில் உயர்வில்லாதவர் செல்லும் வழியில்.

(2425) கருத்து அறியார் - அறிவுபெறுர். பசு பாசம் உணரார் - உயிர்களையும் பாசத்தையும் (மலத்தினையும்) அறியார். நாதன் - பதி.

(2426) சமயம் மலம் மன்னும் மூடர் - பல சமயங்களையும்
ஆணவம் கன்மம் மாயை யாகிய மலத்தினையும் பொருந்திய அறி
வில்லாதவர்.

(2427) மஞ்ஞைச் சூழ்வளையார் தோள் - மயில் போன்ற வளையல்
சூழ்ந்த கையுடையவர் தோளில். நற உண்ணு நல்லொழுக்கம்.
சீலம் - கட்குடியாத

(2428) எள்ளுநர்கள் தன்மை - இகழ்வார்கள் இயற்கை இது.
(2429) அளித்தவர் அஞ்ச - தம்மைக் காத்தவர் அஞ்சுமாறு.
குடைந்த ஏரி ஒளித்தவர் - நீராடிய குளத்திலே மூழ்கியவர்.
மறைந்து நீர்க்குள்
(2430) தாக்கும் - வருத்தும். கஞ்சம் மேல் அணங்கும் திரும் - தாமரை மலர் மேல் வாழும் திருமகளும் நீங்குவாள். நஞ்சமும் நரகினை நல்காது - கள் நரகத்தை நல்கும் எனக் கருத்துக் கொள்க.

## கஉ. சூது

(2447) உறுப்பு ஒழியும் - படைகுடிகூழ் அமைச்சு நட்பு அரண் ஆகிய உறுப்புக்கள் கெடும். ஒன்றும் ஒளி - பொருந்தும் புகழ். மறுமை - மறுபிறப்பிற்குரிய பயன்.

(2448) கைதவம் நுனித்த கவறு ஆடல் - வஞ்சக மூனையிற் பொருந்திய சூதாடுவது. உருள் ஆயம் - உருள்கின்ற சூதுவிளையாடல். பொருளாசை ; வழங்குநெறி, பெய்தகலன், செந்தீ ஆம். மைபடுவினைதுகள் - குற்றம் தரும் வினையின் தூசியை. மாயம் செய்தபொருள் - வஞ்சகத்தாற் றேடிய பொருளை. செம்மைசுடும் - நல்லொழுக்கத்தைக் கெடுக்கின்ற.

(2449) சலம் தோன்றும் - (பொய்) வஞ்சகம் தோன்றிச். வெகுளி - சினம்.

(2450) மேல்நிலத்தார் கேட்டுக்கு வித்து-மேலிடத்தில் இருப்பவர் (செல்வர் ; மன்னர்) கெடுவதற்கு விதையாம். பிழைப்பிலார்ச் சீறல் - குற்றமில்லாதவர்களைச் சினப்பது. அறன் கேடன் ஆயமே சூழ்தல் - பாவஞ்செய்வான் கூட்டத்திற் சேர்வது. தீநிலத்தார் - கொடிய கூட்டத்தார்.

(2451) வரித்து - எடுத்து. போதில் - தாமரைப்பூவில் வாழும். புரிசடையவனும் - முறுக்கிய சடையுடையவன் (சிவபெருமான்).



[பொருட்

(2452) அடியும் - ஆதாரமும்; திணையும். தேசும் - புகழும். படியும் - படிந்த ; பயின்ற. சேரமடியும் - எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து கெடும். மடியும் + ஆல். ஆல் : அசை.

(2453) குழகராய் - இளமைப்பருவமுடையவராகி. உணராமல் பழகுவார் என மாற்றிப் பொருள்கொள்க. அழகு......கொண்டவர் - அறிவையே தமக்கு அழகாக எண்ணியவர் (நல்லோர்). கழகம் ஆடவும் - சூதாடுவதையும்.

(2454) இளைஞரில் - இளமைப்
தோதகத்துடன் - வஞ்சகத்தோடு.

பருவமுடையவரைப் போல. (2455) திறத்தையே

வேர்கல்லும் - வேரினைத் தோண்டியெடுக்கும். சேர்க்கும் - சேர்க்கும் வலிமையையே. மறத்தையே - பாவத்தினையே.

(2456) உரு அழிக்கும் - வடிவத்தைக் கெடுக்கும். ஒன்றுஅல்ல - ஒன்றுமட்டுங் கெடுக்கும் என்று சொல்ல முடியாது பலவற்றையுங் கெடுக்கும். தக்கோர் சூதுபுரிந்து பொருவரோ? எனக் கூட்டுக.

(2457) தெண்டிரைவேலை முற்று இருநிலக்கிழமை அலைகடல் சூழ்ந்த பூமியரசாட்சியுரிமையைக் கெடுக்கும்.

வீழ்த்திடும் -
கவறு ஆடல்-
சூதாடுவது. கோல் இழுக்கு அரசர்தம் கொள்கைத்து என்ப-செங்கோல் (அரசுநெறி) தவறிய மன்னர் கொள்வதற்குரியது என்று சொல்வர் (அறிஞர்).

(2458) நல்குரவினுக்கு - வறுமையை

யழைப்பதற்கு.

(2459) சூதினை எள்ளுக - சூதாட்டத்தை இகழ்ந்து மறந்துவிடுக. வென்றதூஉம் - சூதாட்டத்தில் வென்ற பொருள்களும் எது போன்றதெனில். வேட்டுவர் கள்ளமேற்......போலும் என்ப - வேடர் வளைத்த வலையில் மறைத்து வைத்த வுணவை யறியாக்கூட்டம் உண்டன போலும் என்று சொல்வர் (அறிஞர்).

(2459) கலைமயக்கம் - அறிவு மயக்கம். சூதின்கட்டங்கல் கொலை முனிந்து பொய்ம்மயக்கம் - சூதாடல் கொலையை வெறுத்த பொய்யாகிய மயக்கமாகும்.

## 58. செல்வச்செருக்கு

(2472) அண்ணல் அம்திருவிடை அழுந்தி - பெருமைவாய்ந்த அழிகிய செல்வத்தில் மயங்கி. கண்ணிலன் - கண்ணோட்டமில்லாதவனுன். களிப்பின் - கள்ளுண்ட மயக்கத்தால். வழிக்கொண்டால் என - வழியிற் சென்றதுபோல.

(2473) நாலும் உள்ளவர் செயல் - மேற்கூறிய கிழமை, பொருள், அறியாமை ஆகிய நான்கும் செயல்களை.

இளமை, நிலக்
உடைவர் திச்

(2474) பொழிமதுவன்றியும் - கட்குடியாமலிருந்தும். அரசர் வண்ணம் அழிதருகாலம் ஆம் - மன்னர் இயற்கை கெடுங்காலமே செல்வச்செருக்கு வந்துசேரும் எனச்சொல் வருவிக்க.



(2475) மூச்சுடர் இயற்றி-சூரியன், சந்திரன், தீ என்ற மூன்றொளிகளையும் உண்டாக்கி. மனச்செருக்கு என்னும் இருளை நான்முகன் அகற்றவல்லனே? அல்லன் என்பது கருத்து.

(2478) (செல்வச் செருக்கானவை) மன்னவர் வலிதின் வெளவா - மாற்றரசரால் வலிமையாகக் கவரப்படா. துயிலை ஓட்டா - உறக்கத்தைச் சேரவிடா. தோகையர் காதல் கூட்டா - மயில்போன்ற சாயலையுடைய பெண்கள் காமவின்பத்தையும் கூட்டா.
உடைமையின்
இன்மை நன்று - செல்வத்தினும் வறுமை நன்று.

(2480) மூகராவர் - ஊமையராவார். பறி
அணி - பொன்னணி
கலம் புனைந்த.

## ௬௰௬. வறுமை

(2488) கழி நிரப்பினல் - மிகுந்த ஆவரேல் - இல்லாதவர் ஆனல்,

வறுமையால். அற்றவர்

(2489) நிரப்பு-வறுமை. கரப்பிலார்களும்-மறைத்துவையாதவர்களும். இழிந்தவும் - கேவலமான பொருள்களையும்.

(2490) மறு இல் (இல்லாமற் போம்).

- குற்றமில்லாத. இறுதிபடும் - முடிவு பெறும். இரப்பு ஆதி - இரப்பது முதலாகிய இழி தொழில்கள். ஈன்றாளும் பிறனில் நோக்கும் - தாயும் அயலானைப் போலத் தன் மகனைப் பார்ப்பாள். அது - அவ்வறுமை. இறத்தல் - சாவதுதான் நன்று.

(2492) ஆடுநனி மறந்த - தீயெரிந் தசைவதை மிகவும் நீங்கிய. ஆம்பி பூப்ப - காளான் முளைக்க. உழவா - வருத்தமுற்று. இல்லி தூர்ந்த - பால் வருந்துளை மறைந்து போன. மகத்து - பிள்ளையின். ஈர் இதழ் - குளிர்ந்த கண்ணிமை கூடிய. கிற்படார்ந்திசின் - உன்பால் வந்தேன். தொடுத்துங் கொள்ளாது அமையலன் - விடாமற் பற்றி வாங்காமலும் விடேன். பண் - இசை. மண் ஆர் முழவின் வயிரியர் - மார்ச்சனை பொருந்திய மத்தளத்தைக் கொண்ட கூத்தர்.

(2498) விழுப்பம் கொல்லும்-சிறப்பைக் கெடுக்கும். பெரும்பணை விடூஉம் - பெரிய பற்றினை நீக்கும். நாண் அணிகளையும் - நாணம் ஆகிய பூணை நீக்கிவிடும். புறங்கடை - வாயிலின் வெளி.

(2494) அதன் பயன்-அவ்வறச் செயலால் உண்டாகிய பயனாகிய செல்வத்தை. துய்ப்போர் தம்மனை - நுகர்வோருடைய வீட்டில். சிதர்துணி - கிழிந்த துணிகளை. முனியாது - வெறுக்காது. புயலென மடியாது - மழை பெய்கிறதே யென்று கருதிச் சோம்பாமல். புன்கண் கூர்ந்து - துன்பமிகுந்து. அறம் கடை யில்லாது - தருமத்திற்குக் கீழ் ஆகிய பாவவழிச் செல்லாமல்.

(2495) வெண்தரை - வெளியான பூமி மேலிருந்து. அது - அத் தன்மையுடையது (மதியாது). வீறு - பெருமை. அஃகுப - குறைவார்.

(2496) தொழுமகன் - தொழு நோயுடைய மனிதன் (தொழு நோய் - குஷ்டம்). துற்று உடையானை - உணவுக்குரிய செல்வமுடையானை.



(2497) இருளினுள் இட்ட இருள் மயிர் என்றே - இருட்டில் எறிந்த கருமயிர் போலத் தோன்றாத ஒன்று (பொருள் இல்லாத குடிப் பிறப்பு முதலியவை).

(2498) சுருங்குபு சூழ்ந்து உணர் நல்லவை - சுருக்கமாக ஆராய்ந்து| அறியும் நல்ல பொருள்களை. பயிற்றிய கல்வியும் எனக் கொள்க.

(2499) செல்வத்தின் வளம் - செல்வப் பெருக்கம். ஒருவா அன்பு - நீங்காத அன்புடைய. இருவா நின்றிடு மிடியில் - இருக்குமாறு செய்த வறுமையில்.

(2501) களிப்பு ஆம் கடல் - மகிழ்ச்சியாகிய சமுத்திரம். பேர் ஆகரம் - பெரிய இடம். நன்மை சால் ஒழுங்கு என்னும் தழைவனம் தனக்கு அழல் - நலம் அமைந்த ஒழுக்கம் என்ற செழித்த காட்டிற்கு நெருப்பாம். (நல்லொழுக்கத்தைக் கெடுக்கும் வறுமை என்பது).

(2502) தூ நகை
போன்றவளே! இரப்பு

மலர் கொம்பே - தூய விளங்கிய பூங்கொம்பு
உறுநரை - வறுமையுற்றவர்களை.

(2503) கல்வி சால் ஊர் குடியிருந்தறியானேனும் - கல்வியமைந்த பள்ளிக் கூடம் பொருந்திய ஊரிலும் குடியிருந்து வாழாதவனாக (ஒருவன்) இருந்தாலும். வேத்தவைக்கே-அரசர் கூடிய அவைக்களத்துக்கு.

## ௨௫௩. இரவாமை

(2519) காழ்த்த மானம் - உறுதியான மானம் என்ற பண்பு. எண்ணில் சிறந்தார் - மதிப்பில் உயர்ந்தவர் (நல்லோர்.) உப்பில் வறும் புற்கை - உப்பில்லாத (வறுமை) வீணான கூழினை.

மல்

(2520) பருவரல் - துன்பம். துணைக்கரம் - இரண்டாகிய கைகளை. எலாம் அகல - பெருமையெல்லாம் நீங்க. வீட்டி-கெடுத்து.

(2521) தெறு விரப்பு
மறு உறுத்து - குற்றத்தை
எண்ணாதே.

உளோர் - வருத்தும் வறுமையுடையவர்.
யவர்களிடம் பொருத்தி. எண்ணல் -

(2522) செல்வர்பால் சென்று எனக்கு ஈ என்னும் இம்மாற்றம் மானம் துடைப்பது ஓர் வாள் எனக் கூட்டுக. ஈ என்னும் மாற்றம் - எனக்கு (இப் பொருளைக்) கொடு என்று வேண்டுகின்ற இச் சொல்லானது.

## ௨௫௭. அருமை

(2533) பிறப்புள் உயர்மானிடத்தின் அடைவுற்று வைகல் அரிதாம் - பலவகைப் பிறப்பினுள் உயர்ந்த மனிதப் பிறவியிற் பிறந்து

தங்குவது அருமையாகும், பிறத்தல், ஆதல், அலத்தல் இவை ஒவ்வொன்றும் படிப்படியாக மேலான அருமையுடையன. இது என் சொல் அறிவே - இது என்ன நல்லறிவோ? இல்லை.



571

(2534) எனும் துயர் செயும் பன்மைய தப்பியே - என்ற துன்பத்தைத் தரும் பலவகைய பிறவிகளை விட்டு நீங்கி. நன்மைகொள் உயிர்க்கு - முற்பிறப்பிற் செய்த நன்மையுடைய உயிர்க்குத்தான் (மானிடப் பிறவி) கிடைக்கும். அலால் அரிது - அல்லாமல் வேறு உயிர்க்கு (மானிடப் பிறவி) அருமையானது (கிடையாது).

(2535) நன்மை யாற்று உரு மரபினில் - புண்ணியஞ் செய்யாத முறையால். அறம் வளர்க்கும் அங்கம் மருவுதல் அரிது - (அவ்வாறு பிறந்தாலும்) நலம் புரியும் கை கால் முதலிய உறுப்புக்களுடன் பிறப்பது அருமையானது.

(2536) அறம் இங்கு அரிது - சிறப்பாகத் தருமஞ் செய்வது இவ்வுலகத்தில் அருமையானது. சமயங்களை நேர்தல் அரிது எனக் கூட்டுக.

(2537) பெரிய யோனிகள் பிழைத்து அரிது - கொடிய பிறவிகளை விட்டு நீங்கி இவன் மானுடம் பெறலே மானிடப் பிறவியாக இவ்

வுலகிற் பிறப்பதுவே யருமையானது. பரவை வெண்திரை - விரிந்த வெள்ளிய அலைகளையுடைய. வடகடல்........செறிந்தென வரிது -

வடக்குக கடலிற் போட்ட நுகத்தின் (ஏர்க்காலின்) துளையுள்ளே தென்கடலிற் போட்ட வலிய மூளைக் குச்சி பொருந்திக் கோத்தது போல வருமையானது.

(2538) விண்டுவேய் நரல் - பிளந்து மூங்கில் ஒலிக்கின்ற. கானவர் இடனும் - வேட்டுவச் சேரியும். குறும்பும் - சிற்றூரும். நீர் உண்டு என உரையினும் அரியன ஒருவி-தண்ணீருள்ளது இஃது என்று சொல்வதற்கும் அருமையான பாலைவன முதலியவற்றிற் பிறவாமல், நாடு எய்தல் அரிதே - நாட்டிற் பிறப்பது மிகவும் அருமையானதே.

(2539) மா - விலங்குகள். வெள் நிணத்தடி-வெளிய கொழுப் போடு கூடிய தசைகளை. இழிதொழில் இழிகுலம் ஒருவி - கேவல மான தொழில் புரியும் இழிந்த குலத்திற் பிறப்பது நீங்கி. நரபதி - அரசனே! இது விளி.

(2540) கருவி-உலகிற்குத் துணைக்காரணம் ஆகிய. கனை பெயல் - மிகுந்த மழை. அருதன வரும் பிணி அழலுள் - நீங்காமல் (இடை விடாமல்) வருகின்ற நோய்த்தியில். கருவில் காய்த்திய - பிறப்பில் வடித்த.

(2541) பலவினை வலியினாலே எனக் கூட்டுக. மனிதரில் தோன்றுதல் அரியது ஆகும் எனவுங் கூட்டுக. அன்னது - அவ்வாறே யருமையானது.

(2542) நனி உயர்குடி - மிகவும் உயர்ந்த நற்குடியில். தோன்றல், யாக்கை யாதல், வல்லாராதல், அறிவே யாதல், அறங் கோடல் என்று ஆங்கு அரிது எனக் கூட்டுக. ஒன்றற்கு ஒன்று மேன்மேல் அருமை யானது என்பது கருத்து.

• (2543) அறிவு அறிந்தார் என்பார் - அறிவினைப் பெற்றவர் என்று சொல்லப்படுவார். வழுவார் ; ஒழுகுவார் என்க.

(2545) மூங்கையும் - ஊமையும். பேடு - ஆல்லாத பிறப்பு. நயத்தல் - விரும்புவது.

ஆணும் பெண்ணும்

(2546) சோமன் : ஒரு வள்ளல். ஔவையார் காலத்தில் வாழ்ந்தவன் அவன். புல்லர் இடத்தே போய் அறிமின் - அற்பர் களாகிய பற்றுள்ளமுடையவர்களிடத்திலே சென்று நின்று வறிதே வந்து பின் சோமனைக் கண்டு அவன் கொடையின் அருமையைத் தெரிந்து கொள்க.

(2547) அந்நிலை நிற்பு அரிது - நற்பயன் கண்ட அந்நிலைமையின் நடந்து வாழ்வது அரிது.

## ௯௩எ. ஒழிபு

(2548) உலப்பிலாது - நீங்காது. செய்வோர், ஈவோர், ஆறு உற்றோர் ஆவோர் வெஃகார் ஓரார் ஆகிய இவர்கள் மகிழ்வர் எனக் கொள்க. இற்றிட - கெட, போக.

(2549) அளவி - கலந்து. முடித்தி உயிரை நீக்கியது என்க.

அலை - கொன்றாய் அல்லை. தவறு

(2550) ஈதும்-கொடுப்போம்? தாதையர்......தக்கபரிசோ - தந்தையர்க்கு மக்கள் தம்மைக் கொடுப்பது தகுந்த பரிசாகுமோ? ஆகாது.

(2551) தானையும் - சேனைகளும். நின்றே - தளர்ந்து நின்று.

பகடும் - யானையும். ஒங்கா

(2552) செய்திடாதவர் துன்பு உருர் எனவும். வேண்டினோர் - (துன்பத்தை) விரும்பியவர். எண்ணலாய் கொலோ - நினைக்க மாட்டாயோ?

(2553) எண் - எண்ணங்கள். குணிக்கும் தகைமையதோ - இவ் வளவு என்று கணக்கிடுந் தன்மையதோ? இல்லை. தேவும் - தெய்வமும்.

(2554) அவிச்சை - அஞ்ஞானம்; அறியாமை. மாபோல் - சினக்கும் பாம்பு கெடுமாறுபோல.

தழல் அரா விளியு (2555)
புதல்வன்.
மூழ்குவது.

கொழுநன் கைத்தலம் - கணவன்கையிடத்தை. காதலன் -
ஓதம் ரீராடுதல் (பெண்கள்) ஒலிபொருந்திய நீரின்

(2556) குழிய வாங்கல்
வாக்கும் செயிர் அறுபுருவப்

- குழிவிழும்படி பெருமூச்சு இழுப்பது.
ஏறல் - வாயும் குற்றமில்லாத புருவமும்

மேலேறுவது. பயில் தரும்-பழகிய. மிடறு வீங்கல்-கழுத்து விம்முதல். எயிறது காட்டல் - பல்லைக்காட்டல். இவை இசை பாடும்போது நிகழுங் குற்றம் எனக்கொள்க.

(2557) வெள்ளை - சுருதி வழி கூடாத ஒலி. காகுளி - மேலோங்கும் ஒலி. வெடிகுரல் - பெருகிய ஒலி. எழாலின் குற்றம் - இசையின் வழுவாம். எல்லை தள்ளிய கழிபோக்கு - அளவு கடந்து நீண்டு போவதாகிய ஒலி. ஓசை இளைத்தல் - ஒலிதளர்வது. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு விடுதல். தள்ளிதுள்ளல் - சுருதி கடந்து ஒலித்தல்.

(2558) பிறத்தல் அல்லலே - பிறப்பது துன்பமேயாம். இரவலர் சார்பின், ஆகுதல் - இரப்பவர் சார்பிற் பிறப்பு. ஆங்கு அதனின் அல்லல் - மேற்கூறிய பிறப்புக்களினும் துன்பமுடைய பிறப்பாம்.

(2559) கலியின் - வறுமை வந்தால்; வைதிக நெறி; நல்லறம் வருணம் ஆச்சிரமம், மாணுக்கர்கள் ஆரியர் நல்லொழுக்கமும் இல்லை என்க. வைதிகம் - மறையொழுக்கம். வருணம் - குலம். ஆச்சிரமம். நால்வகை நிலை (மணமில்லாநிலை) இல்லறம். தலைவனும் தலைவியும் கூடித் தனியே வாழ்வது, பற்றற்ற துறவு (பிரமசரியம் கிருகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசம் என்பன.) ஆரியர் - ஆசிரியர்.

(2560) காவல் நான்முகன் - பூமியைக் காக்கும் நான்முகனுடைய. இன்பமே, துன்பமே ஆகிய இருபயனும் எனக்கொள்க. பூவர் ஆயினரே நுகர்வார் - பூமியிற் பிறந்த மனிதரேயடைவார்.

(2561) இளிவந்து உட்கும் உடற்றும் - போர் செய்வான்.

- இளிவு (கேவலம்) வந்து நாணுவன். அன்று, ஏ: அசைகள்.

(2562) தகைமையுடைய - பெருமைபெற்ற. வெறுப்பு செய்யும்- அறிவினர்களது வெறுப்பைக் கொடுக்கும். நவிற்றும் - எடுத்துக் காட்டும். மிகைசெய்விழுப்பம் தரும்-மிகுந்த துன்பத்தைக்கொடுக்கும். உரையல் - பேசாதே. உரையேல் : அடுக்கு.

(2563) முனிசெய் - வெறுப்பைக் கொடுக்கும், புனிதம் உடைய - தூய்மையான.

சினக்கின்ற.

(2565) அணங்கை கொடுத்தவன்-பெண்ணை (மகளை)க் கொடுத்தவன். பூவையும் - அப்பெண்ணும். புழுக்கையே ஒப்பாள் - குற்றேவல் செய்யும் அடிமையைப் போல்வாள். கருநிலை ஆதிகருமம் இல்லவளும் - சூற்கொள்ளும் நிலைமை முதலிய செயல் இல்லாத மனைவியும்.

(2566) பிரமசரியம் நோற்றவர்க்கு - நாற்பத் தெட்டியாண்டு மணமில்லாமல் விரதங்காத்த முனிவர்க்கு. அரவம் மேகலையை - ஒலிக்கும் மேகலையணிந்த கன்னியை. அங்கி - தீ.

(2567) கோடற்குரியவன்-மணவாளன். ஆடகத்திரட்டி-பொன்னில் இருமடங்கு. ஈர் ஆவை - இரண்டு பசுக்களை.

(2568) மகட்பயந்தவளை - பெண்ணைப் பெற்ற தாயை. ஒக்கலார்க்கு - சுற்றத்தார்க்கு. அசுரம் ஆம் - அசுரமணமாகும். பயந்தவளை பகஅலைத்து-பெற்றதந்தையைப் பிளவுபட வருத்தி: பாழியில்-போரில்.

(2569) களித்தவர் - கள்ளுண்டு மயங்கிக்கிடந்த பெண்கள். கரவினால் - வஞ்சகத்தால். கவர்வது - புணர்ந்து கொண்டுபோவது. மன்றல் எட்டும் தெளித்தனம் - எட்டுவகைப்பட்ட மணத்தையும் தெளிவாகக் கூறினோம். முந்திய நான்கு - பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்ற நான்கு. அந்தணர்க்கு - மறையோருக்கு. ஒருவர்க்கும் மருவுறு பசாசம் - ஒருகுலத்தார்க்கும் பொருந்தியதன்று.

(2571) அனந்தரில் - துயிலும்போது. இலக்கு எய்தல் - வைத்த குறியை அம்பினாலெய்வது. அருமகந்தனை- அருமையான வேள்வியை.

(2573) ஓவா-ஒழியாத; நீங்காத. மற்றொருவர் ஒருவரால் ஏவப்படாமல் (அடிமையாக வாழாமல்).

ஏவாது -அயலார்

(2574) நும் பாரமுலை - நுமது சுமையாகிய கொங்கைகள். ஈகை-இலிபால் நிலைய பொன்னும் - கொடையில்லாதவனிடத்தில் நிலைத்திருக்குஞ் செல்வமும், பெறுநூலும் - பெற்ற நூலினறிவும்.



(2575) கறங்குபோல் பிறவி - காற்றாடிபோலச் சுழன்றுவரும் பிறவியை. ஞானத்து அன்றி - மெய்யறிவாற் பிறவியைக் கடக்கலாமே

யல்லது வேறு ஒன்றுள்.

(2576) தாயைப் பயந்தாள் - அன்னையைப் பெற்றவள் (பாட்டி). தந்தைதனை ஈன்றுள் - தந்தையைப் பெற்றவள் (பாட்டி). குருபன்னி - ஆசிரியனுடைய மனைவி. காயும்......மடந்தையர் - கொல்லும் கூரிய வேலையுடைய அரசர்கட்குரிய காவல் அரண்மனையில் வாழும் பெண்டிர்கள். அன்னை யனையர் - தாயைப் போன்றவர் ஆவார்.

(2577) ஓதுவித்தோர் - மறையைக் கற்பித்த ஆசிரியர். தான் உய்யப் பரித்தோன் - தன்னைப் பிழைக்கும்படி காத்தவன். வருண சேட்டன் - குலத்திற்கு முதல்வன். பொருவில் - ஒப்பில்லாத. குரவர் - பெரியார்.

(2578) கடையுகத்தில் - கடைசியுகமாகிய கலியுகத்தில். கமலத் தார் - தாமரைப் பூ மாலையுடைய. ஓடிவு இல் மறை நவில்கலார் - கெடாத வேதங்களை யோதாமல் விடுத்தார்.

(2579) பின்னவர் - நாற் குலத்தாரிற்

வேளாளர்).

பின்னுள்ளவர் (சூத்திரர் ;

(2580) ஆக்கள்......நிலம் எலாம் - பசுக்கள்

சிறப்பாக மிகுத்த இடமெல்லாம். பசு வுண்ட நீர்

தூய்மையாம் என்பது.

மிஞ்சிப் பள்ளத்தில் இருந்தால் அது

(2581)

யும் துன்று

நன்கு உறும் - நல்லதாம். ஆல் - அசை. தெள்

பூகுழலார் - தெளிந்த கருமணல் போன்ற

அறல் புரை

பூ விரைந்த

கூந்தலையுடைய மகளிர். காழியர் - வண்ணார். மன்ற: இடைச்சொல் - தேற்றப்பொருள் தந்தது. ஈந்திட்ட ஆடை - வெளுத்துக் கொடுத்த உடைகள்.

(2582) மயிர்வினை செய்வோர் - கூந்தல் குடுமிகளுக்கு எண்ணெயும் சாந்தும் தேய்க்கும் தொழில் செய்வோர். கூலத்தில் - கடைகளில். செயிர் இல ஆகும் - குற்ற மில்லாதவையாம். செந்தடிகள் - செவ்விய தசைகள். வாய் நின்று......திவலையும் வாயிலிருந்து மயக்கத்தால் வெளியே தெறித்த எச்சிலின் துளியும்.

(2583) நான்காம் நாளில் ஆறு நாளில் எட்டா நாளில், பத்தா நாளில், பன்னிரண்டா நாளில், பதினான்காம் நாளில், பதினாறு நாளில் கருவுற்றால். ஆண் மக்களைப் பெறுவர் என்பது கருத்து.

(2584) துகளில் - குற்றத்தில். துன்னலர் பகழிக்கும் - பகைவர் ஏவும் அம்புக்கும் என்னுள்ளம் வெருண்டு ஓடும் என்க. வெருண்டு அஞ்சி.

(2587) உலகு இறப்பதில் - உலக முழுவதும் கெடுவதைப் பார்க்கினும். முறையே, ஒருவன் ஈறு இனிதே - ஒருமனிதன் சாவது இனிமை யானது.

(2590) வெப்பு நோய் - காய்ச்சல் ஆகிய பிணி. அருத்திய - ஊட்டிய. அமையும் - தீரும். சிந்தை வெப்பு - மனத்துள் எழுகின்ற பொறாமை முதலிய தீயகுணங்கள். ஈண்டும் - குறையும். ஆல்: அசை. இது மாற்ற வல்லர் மருத்துவரோ எனக் கூட்டுக.

(2592) புலமை நன்கு உணர்ந்தோர் - நல்லறிவிற் சிறந்தவர் (புகன்றனர்), புலவியில்-ஊடற்காலத்திலும். அந்தணர் ஆவி உய்யும் என்பு உழியும்-(இப்பொய் கூறினால்) மறையோர் உயிர் பிழைக்கும் என்று கூறும் அமையத்தும். அளிக்கும் - காப்பாற்றும். தையலார் மணத்தில் - பெண்களை மணம் புரியுங்காலத்தில். சிறந்ததாகும்.

விழுமிது ஆம் -

(2593) பொறைக் கயிற்றின் (புகழை)

அசைப்பவர் - பொறுமையாகிய கயிற்றினற் (புகழை)க் கட்டுவார். விறல் - வலிமையான. விருந்தை இனிய சொல்லாற் கட்டுவர். மனத்தை மறைக்கயிற்றாற் கட்டுவார் திருவை அறக்கயிற்றாற் கட்டுவர் அங்கு வாழ்வார் என்பது.

(2594) உற்றவரே - உறவினரே. செற்றவரே - பகைவரே. மற்று அவரே - மீண்டும் அவர்களே - இரண்டும் - பகையும் நட்பும்.

(2595) ஓரம் உரைப்பவர் பால் - நிலைமை யில்லாதவரிடத்தில்.

ஒருபக்கஞ் சார்ந்து பேசும் நடு (2598)
கூறலாம்.

கன்மத்தை-தொழிலை. பாவத் தொழிலை எனவும் பொருள் கன்மம் முக்கியம் என்று - கருமமே முதன்மையானது

ஞான முதன்மையுடையதன்று என்று சொல்லி. வெருட்டி விட - அஞ்சியோடும்படி செய்ய.

திராவிடம் - தமிழ்.

(2599) தர்க்கம் - சொற்போர். அகம் வேறதாம் வித்தை - மனம் வேறுபடுவதாகிய கல்வியை. சந்தை கூட்டம் போல.
போல - ஒலி பெருகுஞ் சந்தைக்

(2600) யாதினும் - எல்லாப் பொருள் மேலும். அபிமானம் பற்று. சும்மா இருந்து - ஒன்றினையும் வினையாமலிருந்து.

(2601) சொற்றருமம் சிதைக்கும் மன்னர் - சொல்லாற் புண்ணியத்தைக் கெடுக்கின்ற அரசர்கள். பித்தர்க்கு - மயக்கங்கொண்ட வறிவினர்க்கு. உற்ற குணம் - அப்பித்தருடைய குணம். உழுவை - புலி. அறம் ஓதின் - அறவுரை கூறினல். கடுங் கொலைமா - அக் கொடிய கொலை புரியும் புலியானது.

(2602) அடும் அடாது இது என்பது - தக்கது இது தகாதது இது என்பதை. மனுவால் உரைக்கப்பட்ட நீதி நூலிற் கூறிய நீதி மொழியை "மநுவசனம்" எனக் கூறினர்.

(2603) அடக்கமிலாப் பெருமிதத்தால் - மனம் மொழி சொல் ஆகிய மூன்றும் அடங்காத பெருமையால். அத்தனைக்கும் - மேற் கூறப்பட்ட அவ்வளவு நற்பண்பு செயல்களுக் கெல்லாம்.

(26 5)
பெயர்ந்தது

நெஞ்சுசோர்வு என மறதியுற்ற போது - மனத்தைவிட்டுப் பெயர்ந்தது என்று சொல்லும்படி மறதிவந்து சேர்ந்தபொழுது.

(2606) துயரிலாதவர் துன்பமடையாத பெரியோர்
சழக்கு - வஞ்சகம்; பொய்.

நீலே குறுக கொள்ளற் பாலது - நாம்
நிலைமையே. சேர்ந்த கொள்ளத்தக்கது.
யாம் ஏது எவன் என்றே - நாம் யார்,
உலகப் பொருள் எவை இஃது என்ன என்ன ஆராய்ந்து அவரால் அறிவினால் தீர தெள்ளற்பாலது குருவால் அறிவினால் உறுதியாகத் தெளியுந் தன்மையுடையது.



(2607) விச்சையின் - அறிவின். கொச்சை சாதி பேதம் - இழிவான குலங்களின் வேறுபாட்டினை.

(2608) போதியாமையின் வரும் புன்மை யாகுமே - அறிவைக் கற்பிக்காத காரணத்தால் வந்த இழிவாகும் (பிறற்றுவது).

(2609) சிந்தை கெடுக துணிவு கடிது என மாற்றுக. மூது இல் மகளிர் - பழைமையான வீரக்குடியிற் பிறந்த பெண்டிர். இவள் தன்னை - இவளுடைய தமையன். நிரை விலங்கி - பசுக்களை மீட்டி. வெளிது - வெள்ளையுடையை. உடீஇ - உடுத்து. பாறு மயிர்க்குடுமி - விரிந்த மயிரையுடைய குடுமியில். விடும் - விடுகின்றாள் (இன்று).

(2610) உலறிய - வற்றிய. நிரம்பா - தசை நிறையாத. முளரி - தாமரை நூல் போன்ற. மருங்கின் - இடையுடைய. சிறுவன் - மகன். படை அழிந்து மாறினன் - சேனையைக் கண்டு அஞ்சிப் புறங்காட்டி யோடினன். சினை இ-சினந்து. படுபிணம் பெயரா-கிடந்த சவங்களைப் புரட்டிப் பார்த்து. படுமகன்-இறந்த மகனுடைய. கிடக்கை காணூஉ-கிடந்த விடத்தைக் கண்டு.

(2611) இந்திரர் அமிழ்தம் - இந்திரருக் குரிய அமுதம்; (தேவாமிர்தம்.) உண்டலும் இலர் - உண்ணார். முனிவிலர் - வெறுப் படையார். துஞ்சலும் இலர் - உறங்கவும் மாட்டார். அஞ்சுவது - (உயர்ந்தோர் செய்ய) அஞ்சுகின்ற பழிபாவச் செயல்களுக்கு. அயர் விலர் - சோர்வு (தளர்வு) இல்லாதவராகி. உண்மையான் இவ்வுலகம் உண்டு எனக் கூட்டி (முயலுநர்) வாழ்ந்திருப்பதால் இவ்வுலகம் கெடாது நிலைத்து நிற்கின்றது எனப் பொருள் கொள்க.

(2612) நாடு ஆக, காடு ஆக, அவல் ஆக, மிசை ஆக - நாடாக இருந்தாலும் காடாக இருந்தாலும் பள்ளமாக இருந்தாலும் மேடாக இருந்தாலும். எவ்வழி - எவ்விடத்தில். நிலனே அவ் வழி நல்லை - பூமியே நீ அவ்விடத்தில் நலமுடையாய்.

(2613) துற்று அவிழ் ஈதல் செய்யில் - உண்ணுதற்குரிய சோறு கொடுத்தால். துறக்கும் ஆயின் - நீக்குவானுனல். விண்ணும் மண்ணுறுமடிய - பொன்னுலகமும் மண்ணுலகத்தில் கீழ்வந்து நிற்கும். அன்று, ஏ: அசை-

(2614) வாரம் பட்டுழி-அன்பு உண்டாயபோது. தீரக் காய்ந்துழி - மிகவும் வெறுத்த போது. சினந்தவிடத்து எனவும் கூறலாம்.

(2615) செந்நில்லா - செம்மையாக ஒரு நிலையில் நில்லா. புகை செய்வேலினீர் - கொதிக்கின்ற வேலாயுத முடையவரே! இது விளி. ஓம்பு சென்மின் - பாதுகாத்துச் செல்லுங்கள்.

(2616) தெவ்வரை செருக்கல் ஆகும் - பகைவரைக் கொல்ல முடியும். உடன்பிறப்பு ஒண்பொருள் ஆவது - உடன் பிறந்தவரே ஒளி பொருந்திய செல்வமாவர். ஆக்கல் ஆகா எம்பியை - பெற்றுக் (படைத்துக்) கொள்ள முடியாத என் தம்பியை.

(2617) உயிர்வாழ்வுழி உடல் உற்றதை உணரும் - உயிரானது பொருந்தி யுடம்பில் வாழும்போது அவ்வுடல் (தொட்டதை) பட்டதை யறிந்து கொள்ளும். தடிந்து-பிளந்து; வெட்டி. ஓர் புக்கில்- ஒரு மனை. காவதம் - காதம் (பத்து மைல்; ஏழரை நாழிகை நடக்கும் தூரம்). சேண் சேறல் - தூரத்திற் செல்லுவதை. யாக்கையில் - உடம்பில்.

(2618) உண்டியுள் - உணவிற்கு. விழுப்பொருள் - சிறந்த பொருளாகிய. பெண்டிரைக் காப்பது இலம் - பெண்களைக் காப்பதற்கு வழி காணோம். கற்றறிந்தோர் மொழிந்தனர் எனக்கூட்டுக.

(2619) பனிமதி - குளிர்ந்த சந்திரன். முறுவல் - மகிழ்ச்சியை. துனிவளர் கதிகளுள் - துன்பம் பெருகும் தேவர் மக்கள் நரகர் விலங்கு ஆகிய நான்கு பிறப்பினுள்ளே. கடையில் காலம் - அளவில்லாத காலம். ஆடுவர் (காடகம்) என்க.

(2621) தளிபெயல் தண்துளி - மழை பெய்த குளிர்ந்த துளியானது. வளிபெறும் மாத்திரை - காற்று வரும் அளவும். நின்ற அற்று - நின்றது போன்றது. துளக்கிலர் நில்லார் - அசையாமல் நிற்க மாட்டார்.

(2622) அந்தகன் - குருடன். ஆறு சொல்லல் - வழி காட்டுவது. வீட்டின் நெறி சொல்லும் ஆறு யாது ஒக்கும்? ஆறு சொல்லலையே ஒக்கும் எனப் பொருள் கொள்க.

(2623) பூவிரி உருவம் கண்ணி சோதித்தேவரே எனினும் - மலர்பரந்த

பொலம் குழை இலங்கு வடிவத்தையுடைய மாலையும்

பொன்னாற் செய்யப்பட்ட காதணியும் தேவரே வந்தனர் எனினும். ஏவரே போல

விளங்கும் ஒளிபொருந்திய நோக்கி இகழ்ந்து உரைத்து

எழுவது - அயலாரைப் போலப் விட்டு நீங்குவதுதான் (மனிதரது

பார்த்து இழிவாகக் கூறி அவரை இயற்கை) என்க.

(2624) யாத்த - கட்டப்பட்ட. உருவம் - உடம்பு. மற்றை யாக்கை - புகழுடம்பு. திருஅமர்ந்து - சிறப்புடன் தங்கி (நிலைபெற்று). உற்றவர் - நட்பினராகப் பொருந்தியவர். விண்டுழி - பிரிந்தபோது. கூழ் உடன் உண்டுழி - சோற்றை உடனிருந்து உண்ட காலத்தில்.

(2626) நலன் நிறைந்த - அழகு மிகுந்த. கோதுஇல் ஞானசரிதர் ஆம் நல்தவர்க்கு - குற்றமில்லாத அறிவொழுக்கமுடைய நல்ல முனிவர்க்கும் (துறவிகளுக்கும்).

(2627) அன்று அரி பிறந்தது தூணில் - பிறந்தது கற்றூணில். இது நரசிங்கமாகப்

முற்காலத்தில் திருமால் பிறந்ததைக் குறித்தது.

பரவை உண்ட முனி - அகத்தியன். பரவை - கடல். பரத்துவாசன் மைந்தனும் - துரோணனும், வேயில் ஆயினன் - மூங்கிலில் இலிங்கமாக முளைத்தான்.

(2628) அறமும்......மேகமேனியனும் வெல்லுக எனவும், தயித்தியர் குலம் வெல்லாமற் செல்லுக எனவும் கூட்டுக.

பாவும் மேனியன் - திருமால்.
மேக பேயாகிய. கோட்டிய

தயித்தியர் குலம் - அசுரர் குலம். அலகையாம்- - எழுதப்பட்ட. வெங்கொடியோன் - தருமன்.

(2629) மறலியும் - இயமனும். மகன் (வீமன்) இறுதியே வரினும் -

வாயுவின் மைந்தன் - காற்றின் சாவு வந்தாலும்.

(2630) ஒருமொழி அன்னை - சத்தியமே எனக்குத் தாய். உற்பவ காரணன் - தந்தை. பொறையே மைந்தன் - பொறுமைக் குணமே மகன் ஆவன். ஆர் உறவு - யாவர் உறவினர் (ஒருவரும் இலர்) கிடை. எடுத்து கிடக்கும் எண்ணத்தை உயர்த்தி (மொழிந்தனன்) என்க.

ப. தி.—37

Page No. 577 & 578 Found missing.



(2631) நறைமலர்க் குழலார் தமக்கு - தேன்ஒழுகும் பூ முடித்த கூந்தலையுடைய பெண்களுக்கு. அமளிவாய் நாணம் நிகழ்வுறு நிகழ்ச்சியே நிறையுடைப் பெரும்பூண் - படுக்கையறையில் நாண மில்லாத ஒழுக்கமே நிறையுடைய பெருமையான அணிகலனாகும்.

(2632) பாய்பரி - தாவுங் குதிரைகளையுடைய. இதம்பட - நன்மையாக; இனிமையாக. பகழி துரந்தபோது - அம்பு ஏவியபோது. அவர்க்குச் சொன்னவையெல்லாம் உதவுவர் எனக் கூட்டுக.

(2633) விதலை நோய் - நடுக்கந்தரும் பிணி. கதம் உறு காலர் - சினங்கொண்ட இயமனார். சேயால் இதமுறல் எந்நாள் - பிள்ளைகளால் இன்பமடைவது எக்காலத்தில் (ஒருநாளும் இன்பம் அடைவதில்லை).

(2634) இயற்றும் தண்டம் - பெற்றோர் செய்யுந் தண்டனைகளை. தளர்வு அறுபருவம் சார்ந்தால் - சோர்வுற்ற காளைப்பருவத்தை (மக்கள்) அடைந்தால். அளமரு தம் மனம் செல் அவ்வாறே - சுழல் கின்ற தமது மனஞ் செல்லும் அவ்வழியே.

(2635) முறிதரும் ஏதிலர்-முறிந்து செல்லும் (பிரிந்து செல்லும்) அயலார். முனிதுயர் மனையாள் - வெறுப்புடைய துன்பஞ் செய்யும் மனைவி. மண் இறல் நேர் கெடுதி உறும் - உலகங் கெடுவது போன்ற கேட்டைத் தரும்.

(2636) அகத்தே இருந்து - இல்லறத்தில் வாழ்ந்து. மஞ்சுதுயில் பொருப்பை புணையா - மேகம் படுத்துறங்கும் மலையை மரக்கலம் (கப்பல்) ஆக. பெயர்த்து, இட்டு அதுபற்றி ஏதம் அகலக்கரையேறுதல் போலும் என்க. இல்லறத்திருந்து முத்தியடைவது மலையைப் புணையாக் கொண்டு கடலின் கரையேறுவது போலும் என்பது கருத்து.

(2637) தியானம் உற-கடவுளை நினைத்து உலகத்தை மறந்திருக்க. வினையத்தும் விநோதத்தும் - அறிவினும் விளையாட்டிலும். தழுவிடவும், பேசிடவும், அளித்திடவும் பொழுது கழியும் எனக்கொள்க. நினைப்பு அழியும் - தியானங் கெடும்.

(2638) தேயம் சொலற்கே - உலகத்தார் புகழ்ந்து சொல்வதற்காகவே. மன்ற-உறுதியாக. என்று ஆயினும்-எக்காலத்திலாவது. வழங்கல் - (நமக்கு) கொடுக்கக்கூடும்.

(2639) கல்முதல் இடம் பல் உயிர்க்கு எலாம் - கல் முதலிய இடத்தில் இருக்கும் பலவகையான உயிர்கட்கெல்லாம். வரைத்த - அளவுபடுத்திய. தரைதலை வந்த ஞான்றே - பூமியிற் பிறந்தபோதே. விரைத்த - மணங்கமழும். மேவுமேகொல் - பொருந்துமோ?

(2640) கண்ணிளூர்க்கு - பெண்களுக்கு. இழிக்கத் தக்கன அவ்விடம் - இழிவாகச் சொல்லப்பட்ட அவ்விடம் - (பெண்குறி). உய்விடம் யாது - பிழைக்கும் வழி எது.

(2726)
வழிப்பட்டு
தலைவன்.

ஒலி நிரை ஓம்பி - செழித்த பசுக்களைக் காத்து. அழல் - வேள்வி செய்து. வணிகர்க்கு அரசு - வைசியர் குலத்

(2727) மூவரு - கெடாத. மீண்டு
சொல்லாமல்.

உரையான் - மறுத்துச் பால்]

## ௬அ. இன்பச் சிறப்பு

(2744) அரிசனம் மேனி நல்லாள் - மஞ்சள்
பூசிய உடலுடைய
பெண்ணொருத்தி. கரிசனம் அன்ன - திரவியம்
போன்ற. பரிசனந்
தன்னில் - தொட்டுப் பற்றும் போது.

(2745) பொற்பு உறு படாத்தின் நீங்கி - அழகான
னின்று விலகி. நோற்று - தவஞ் செய்து.

மேலாடையி

(2746) ஓ அரும்தவம் - ஒழிதற் கருமையான தவத்தை. மங்கை யர்...விட்டிருந்தோர் ஏவர் - பெண்கள் கொங்கையிடத்துச் சேர்ந்து நுகரும் காமவின்பத்தை நீக்கி வாழ்ந்தவர் யாவர் (ஒருவரும் இலர்.)

(2747)
முதலாகச்

மோகம் ஆதிய மூவிரு குற்றமும் முருக்கி - மோக
சொல்லப்பட்ட ஆறுவகைக் குற்றங்களையும் கெடுத்து.

(மோகம், காமம் குரோதம், உலோபம், மதம்,
யோகு - யோகம். போகம் - காமவின்பம்.

மாச்சரியம் என்பவை)

(2749) அமிழ்தினைக்கமருகுத்த ஆங்கு -
அமுதத்தை (பாலை)
விலப்பிளப்பிற் கொட்டியது போல. வீடுபேறு
உன்னி - முத்தி
பெறுவதை நினைத்து.
(2752) வீயும் - மலரும். வெறி - மணம்.
அணிந்து கொள்வாய் என்று.

புனைகிற்றி என்ன -

(2753) வள்ளல் வார் கழல்கள் -
திருவடிகள். சந்து - சந்தனம்.
கடவுளுடைய நீண்ட

(2754) சடம்படும் -
அடுத்து வரும் உடம்பு.

உடலிலுள்ள. உடம்பு அடுமெய் - உடலாக
வலித்தி - வலிமையுடையாய்.
(2755) வறம் கூர்ந்த - ஒரு பொருளும்
பிறகு உண்ணுவோம் என்று.

இல்லாத. பின்பு மாந்த -

(2756) மணிநகையாரே - முத்துப் போன்ற
பற்களையுடைய

பெண்களே. வருடுவதே - தடவுவதே.

## ௬௪௬. கற்பனை

(2805) வாகுவின் - வீரவாகு என்பவர். வாகுவின் முழக்கம் -

புயத்தைத்தட்டும் ஒலியை. சூர்மகன் சிலைஒலி - நாணொலியை.

சூரபதுமன் வில்லின்

(2806) நற்றவர் போல் சேனை காவலற் கண்டனன் எனக்கூட்டுக. பகழிப்படலிகை - அம்புவரிசையை. சோனை வாளியால் - மழை போலச் சொரிந்த பாணத்தால். வீட்டி - கெடுத்து. தாணுவை - சிவ பெருமானை.

(2807) படியிலாது அமர் பண்ணவன் - உவமையில்லாது தேர் மேலேறிய தேவன் (முருகன்). கடிய தானவர் - கொடிய அசுரர்கள். கங்குல் - அசுரர்களாகிய இருட்டு. வைகறை வேலையை - விடியுங்கால மாகிய கடற்கரையை. கூயது காட்டல் போலிருந்தது என முடிவு கொள்க.



[பேர்குட்

(2808) தூய நுண்

குற்றங்களின் கூட்டம்.

துகளின் ஈட்டம் - தூய்மையான நுட்பமான

(2810) தூயது அன்றுகிய புனல் எலாம் - தூய்மையில்லாத கலங்கிய நீர்களை யெல்லாம். தெங்கின் காயின் வந்திடுபயன் - தேங்கா

யில்வரும் பயனாகிய இளநீரையும் உட்பருப்பினையும். தண் தேறலை குளிர்ந்த தேனை. அன்னார் - அப்பெண்களுடைய, மெல் அமிர்தினை மெல்லிய அமுது போன்ற எச்சிலை.

(2811) ஊனமுறு காலதனில் - குறைவு நேரும் அமையத்தில் - கான்ற அனைய - கக்கினதுபோல. தொன் மரத்தின் - ஆலமரத்தினது. மேனி - படிவம். வீழின் - விழுதுகளின்.

(2813)
மருத்தினும்

எருத்தம் மேல் - பிடரியின் மீது. (கழுத்தின் அடியில்);
- காற்றைப்பார்க்கினும். கரித்தண்டம் - (வேற்று) யானை

சென்ற வழியை நோக்கி.
வும். கணிகை நெஞ்சில் -

உருத்திடு - சினந்த. ஒறுக்கவும் - தண்டிக்க
பரத்தையர் மனம்போல.

(2814) பொற்பு அகல் சிகரியுள் - அழகு பரவிய அரண்மனையில் -
அல்பகல் நுகரும் மீன் அவரை நுங்கும் - இரவும் பகலும் அவரால்
உண்ணப்பட்ட மீன்களே அவ்வசுரர்களைத் தின்றன.

(2816) இகபரத்து (ஆசை) கழிந்த - இவ்வுலகத்தாசையும்.
மேலுலகத்தாசையும் நீங்கிய. உவரி உண்டு - கடலிலுள்ள நீரைக்குடித்து.
எழிலி - மேகம்.

(2817) பத்தி வித்தி - அடிமையை (பத்தியை) விதைத்து. ஆர்வம் நீர் - ஆசையாகிய நீரினை. வைகலும் நாளும். செவ்வி நோக்கி - பருவம் பார்த்து.

விதையாக

- ஒவ்வொரு

(2818) புலால் - மீனுற்றம். சோறு கால்வன - சோற்றினைக் கக்குவனபோல மலர்பூத்தன. அது வாய் திறந்து சொல்வனபோல மலர்ந்தன. முல்லை தூறுவார் என......அலர் தூற்றுவ

- முல்லை மலர்

தாழை கக்கியதைக்கண்டு சிரித்துப்பழித்துச் மலர்ந்தன.

சொல்லுவனபோல

(2820) வான் துறை தோன்ற - பெரிய நீர்த்துறை தோன்ற; பெரிய அகப்பொருட்டுறை, புறப்பொருட்டுறை தோன்ற. செல் ஆறு - போகும் வழி. இறுத்தது - தங்கிற்று (யாறு).

(2822) உருப்பம் மொண்டு இறைக்குங்கள்ளி - (சூரியனுடைய).

வெப்பத்தைக்கொண்டு பின் வீசுகின்ற கள்ளியது.

தருக்கு அற வீரப்

பூகல் - செருக்கு நீங்கி வறுமையால்.

(2823) செல்லல் - துன்பம். கருவி

மள்ளர் - அரிவாளைக்கொண்ட

உழவர்.

(2824) நெற்படலை வையினின் நீங்க - நெல்லின்

கூட்டம் வைக்

கோலை விட்டு நீங்கியவுடன். பகட்டினம்

அடையவும் - எருமைக்

கூட்டமூழுவதும்.

(2825) கழி நெய்தல் - உப்பங்கழிகளையுடைய நெய்தல் நிலத்துள்ள. மம்மர் விடம் ஆலம் - மயக்கத்தைத்தரும் ஆலகால நஞ்சினை. நாடி பொய்மொழி உரை கைதை- ஆய்ந்து பொய் பேசிய தாழையின் மலர். கம்மைய அளக்கரொடு - ஒலியுடைய கடலோடு.



583

(2826) காமர் அளி - அழகிய வண்டுகள்- பயப்படார் - பயன்படாதவர். கணி - வேங்கைமரம். குடுமி தன்னை - உச்சியை. பவளக் கரம் நீட்டி - பவளக் கொடியாகிய கையால்.

(1828) குவளை பறிதரக் களைந்தெறி பாவைமாரை - நீலமலரானது தன்னைக் களையாகப் பறித்து எறியும் பெண்களை. கால் வளைத்து - அம்மங்கையர் கால்களைக் கொடியால் சுற்றி. பொறி வெருவுறச்செய்யும் - அறிவு கலங்கச்செய்யும்.

(2829) வறங்கூர்ந்த காலையும் - வறுமை மிகுந்த காலத்திலும். வள்ளியோர் - கொடைத் தன்மையுடையவர். வெள் அனம்மகிழ - வெள்ளையன்னப் பறவைகள் மகிழ்ச்சியடையுமாறு.

(2830) ஈன்றெடுத்தோர் - தாய்மார். முன் விளர்த்துப் பின்பரந்த தொடர்பினால் - பிள்ளை பெறுவதற்குமுன் வெளுத்துப்பின் பசப்பு நிறம் பெற்ற தொடர்ச்சியால் அதுபோல. மான்று - பசந்து.

(2832) உருதிட்பம் உருக்காலை-வடிவம் வன்மையடையாதபோது தருக்கு அற்று - செருக்கில்லாமல். தடஞ்சாலி - பெருமையுற்ற நெல். மொழியின் சுவை தேற்றும் - அக்குறளின் பொருளைத் தெளிவாகக் காட்டும்.

(2833) ஏதிலர்கள் - அயலார்கள். கொள்ளேங்கள் - வாங்கமாட்டோம். கைப்படை - கையில் உள்ள ஆயுதங்கள். கடாவும் - செலுத்திய. மெய்ப்படு பெரும்படை பறித்து - உடம்பிற் பட்டுருவிய ஆயுதத்தைப் பிடுங்கி.

(2834) இகலி - பகைத்து. விந்தம் - பெருமையும்.

விந்தமலை. வீறும்-

(2835) அலைக்காகம் - கடற்காக்கைகள். சிலை

தாசரதி மனையை - விற்பிடித்த இராமன் மனைவி சீதையை. வங்கம் - கப்பலில்.

(2836) கொடும் பரவர் - கொடிய மீன்பிடிக்கும் பரவர்கள். அடும் பயத்தோடு அலமரும் - காய்ச்சும் பாலோடு திரிந்து சுழலும். கடுங் கருமத்தொடர் - கொடிய வினைத்தொடர்ச்சி.

(2837) குரும்பையை - இளநீரை. பொடிஇடி - சுண்ணப்பொடி யிடித்த. மீளா முன்னம் - அவ்வுலக்கை திரும்புவதற்கு முன்னே. இடர்க்கு இடர் எதிர் செய்வோரின் - துன்பத்துக்கு உடனே துன்பம் எதிரே செய்பவரைப்போல.

(2838) வரி அளி முரலா வாடா மாலைய - கீற்றுக்களையுடைய வண்டுகள் மொய்க்காத வாடாத பூமாலையையுடையன வாகவும். தாள - காலுடையவாகவும். தயங்கு சித்திரம் காட்சி - விளங்கும் ஓவியங்களின் தோற்றமானது. வரைவிலா மகளிர் இன்னோர் - பரத்தையராகிய இத்தன்மையுள்ளவரது.

(2840) இருமை வாணிபத்தில் - பெருமையான வணிகத்தில். இம்மியின் - மத்தங்காய்ப்புல்லரிசியினுடைய.

(2841) உயிர்க்கு பின்னர் - வினை செய்த அவ்வுயிர்க்கு அடுத்த பிறப்பில். கொய்வளம் வருவ-கொண்டு வரும் செல்வங்கள். நாய்கர் - வணிகர் மாற - வைசியர் இறந்துவிட. பௌவ நீர் - கடல் நீர் சூழ்ந்த. மாடம் உதவுவ எனக்கூட்டுக.



(2842) முழவம் - மத்தளமானது. மாந்தர்கள் - ஆடவர்கள். ஆடவர் தம் புயத்தழகினைக் கவர்ந்தமை தெரிந்து (மத்தளத்தைத்) தாக்க (அது) அலறுவபோல் வேலையும் சமழ்ப்புற வயின்றொறும் கறங்கும் எனப்பொருள் கொள்க. வேலையும் சமழ்ப்புற - கடலும் நாழும்படி. வயின் தொறும் - வீடுதோறும்.

(2843 ஊடலின் மாதரார் - ஊடிய பெண்கள். பறித்து எறி - பிடுங்கியெறிந்த. செங்கேழ் - சிவந்த நிறமுடைய. அவர் - களைந் தெறிந்த பெண்களுடைய. உளைய - வருந்த. பேதுறுத்து அவிர்வன - மயக்கப்படுத்தி விளங்குவன.

(2845) மாயை காரிய உருக்களும் - மாயையின் செய்கையால் உண்டாகிய வடிவங்கள் எல்லாம்.
விளங்கும்.

துகளறத் தோன்றும் - குற்றமின்றி

(2846) அருவிதாரை-அருவியோடும் ஒழுங்கானது.பாலிவைப்பின் பாலியாற்றுக்குரிய நிலங்களில். அலகில் - அளவில்லாத. அணிமையின்- (ஊரை) அடுத்த இடத்தில். ஈற்றில் - முடிவில். தோற்றம் போலும் எனக் கூட்டுக.

(2847) பொருப்பர் - குன்றில் வாழும் குறவர். தாமம் முளி - உலர்ந்த. சந்து - சந்தனமரம். இடுபலி - பிச்சையிடும்

- புகை.
உணவு.
வாழ்க்கையார் - துறவு வாழ்க்கையுடையவர்.

(2848) இதை - வெட்டிப்புதுக்கிய புனமானது. எண்ணுது, கடைப்பிடித்து, செயல் போல், விளைத்திடும் எனக் கூட்டுக. ஏறு - பாரம் ஏறிய. பொறை எலாம் தொலைத்த - சுமைகளையெல்லாம் நீக்கிய. பொருப்பர்க்கு - குறவர்க்கு.

(2849) இருசுடர் பெருஞ்சிலைகள் - சூரிய என்ற பெரிய கற்கள். வெங்கதிர் - வெயில்.

காந்தம் சந்திரகாந்தம்
தண்கதிர் - நிலவு.

(2850) வாங்கி குழைத்தமை - வளைத்து நெகிழச்செய்த செயல். மென் முலைக்குச் சாலக்குழைந்தமை - காஞ்சியில் உமை தழுவியபோது வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பட்ட காட்சியானது.

(2851)
கொழிதிரை

நன்கு ஈட்டிய - நல்வழியாற் சேர்த்த. கடுப்ப - ஒப்ப.
- அலைவீசும். வழுவுறாது - தவறாமல். கால் - வாய்க்கால்.

(2852) அகழியுள் இழிகின்றோரும் - அகழியாகிய கிடங்கினிறங்குவோரும். உட்கொடுமை - உள்ளேயிருக்கும் தீமைகளை. சேயிடை - நெடுந்தூரத்தில். வெரீஇ - அஞ்சி. இழிகின்றோரும் அகப்பட்டோரும் ஒப்பர் எனவும் விலகுவோரும் அகல்கின்றோரும் ஒப்பர் எனவும் சொல் வருவித்துக்கொள்க.

(2853)
தங்குவது.

குறைத்த - அறுத்த. கதிர்ச்சாலி - நெற்கதிரை.
அறுத்தவர்போல் - துறவிகளைப்போல.

இறுப்பது-

(2854) விண் அறுத்து - வானத்தைப்பிளந்து. மேக்கு இவர்ந்தார் - மேலேறிய வீரர்கள். துறக்கத்தவர் - பொன்னுலகில் (சுவர்க்கத்தில்) வாழ்பவர். அண்ணல் - பருத்த. அறிஞர்மண் அகலார் - அறிவுடையோர் பூவுலகத்தை விட்டு நீங்கார். என - என்று கருதி.



(2855) குரும்பை பாளைஅம் குரூஉ துகில் மிசை போர்த்திட்டு - தென்னங் குரும்பைகள் பாளையாகிய மேலாடையைத் தோன்றுவதற்கு முன் மூடியிருந்த. அரும்பிமுன் வருகால் அது நீவுவது - தோன்றிமுன் வரும்போது பாளையை நீக்குங்காட்சி கண்டு. புறவத்து - முல்லை நிலத்துள்ள. விறந்த - வேறுபட்ட. பழங்களால் தளவினை - தேங்காயால் முல்லை மலர்களை.

(2856) நன்பொருளினுக்கியைய - (ஆடவர் தந்த) நல்ல பொருளுக்குத்தக்கவாறு. வேசையர் வித்தகன் கிகர்த்தார் எனக்கூட்டுக.

(2857) இளவேங்கை - புலிக்குட்டிகள். வாய்வது ஆகிய பொருளினை - தங்கட்குக் கிடைத்த செல்வத்தை. அன்னை - இரக்கக்குறிப்பு. ஆக்குவான் புகுந்து அழிப்பார்போல் - உண்டாக்கத்தொடங்கிக் கெடுப்பவர்போல. கதழ்ந்து - சினந்து. வீவது ஆக்கி - சாவுண்டாக்கி.

(2858) இறால் இனத்தோடு உருவ ஆசினி உக்கன அசும்பின நிலத்து - தேன் கூடுகளோடு நல்ல பலாப்பழங்களும் நீரூற்றுடைய பூமியில் விழுந்து சிந்தின. இனைவர் - வருந்துவர்.

(2859) அலகு ஆதிகள் - பலகறை முதலிய சிறு பொருள்கள். இறைவ - தங்குவ. வயின்தொறும் - வீடுதோறும் அல்லது இடங்கடோறும். அரியவேல் - அருமையான பொருளாயிருப்பின்.

(2860) தாது உண்டு - கல்லினையுண்டு. ஓ அற - ஒழிவில்லாமல். புல்லுவன - புணர்வன. ஏது உணவு உண்ணினும் - என்னவுணவை யுண்டாலும். தெளிப்ப போன்ற - காட்டுவன போல இருந்தன.

(2861) விளல் தரும் தகையரும் - வீணான செயலைச் செய்யும் கீழ் மக்களும். அளமரு - சுழல்கின்ற. உக - கெட. தாழ்க்கற்பாலரே - தாழ்வு செய்யப்படுபவரே.

(2862) சுகுணர்
தாம் புனல் அளித்து

- நற்குணமுடையவர். கடலும், முகிற்கு தீய நதிகளால் தீம் புனல் பருகின எனக் கூட்டுக.

(2863) வீங்கி - பெருகி. கதுவிய - பற்றியிருக்கும். ஒல்லை பாய்ந்து உழலா நிற்கும் - விரைவிற் பாய்ந்து திரியும். சகலத்தின் - எல்லாப் பொருள்களினும். வழங்குமா போல் - செல்லுமாறு போல.

(2864) கதிர் செந்நெல் - நல்ல நெற் கதிர்கள். வளர்த்தவரே ஒல்லாரின் ஒறுத்து வரிந்து எடுத்து ஏகி களத்து இட்டு மிதித்துப் போர் செயப்பட்டு உரைப் பொருளை நாட்டியது எனக் கூட்டுக. ஒல்லாரின் - பகைவரைப் போல. ஒறுத்து - அறுத்து. வரிந்து - கட்டி. வெல்லாத களத்து - போர்க்களமல்லாத இடத்தில்.

(2865) கருமமே - செய்கையே; தொழிலை. கருமமே வேண்டாத காட்சியின் - தொழிலை விரும்பாத தன்மை போல. மடைகற் சித்து கவிழ்த்தனர். நீர் மடையை அடைத்திருந்த கல்லை நீக்கி நீரை வெளியிற் போக விட்டனர்.

(2866) வல்விதன் பாகனுர் - சிவபெருமான். அல்லது என்று - தீயதென்று. தெளிதர - தெளிந்து கொள்ளுமாறு. கபோதகங்களே - தூதுணம் புறுக்களே. கல் இரை தேருவ - கல்லையே உணவாகக் கொண்டன.

[பொருட்

(2867) மிமிர் அடுக்கல்-உயர்ந்த மலைகள். இறுக்கிய போகு உயர் கழை சீர் தருவ

பொருநர் வன்கயிற்று
- கூத்தாடிகள் வலிய
கயிற்றாலிறுக்கிக் கட்டப்பட்ட மிக நீண்ட மூங்கிலின் தன்மையைக் காட்டின. அன்னவற்று - அம்மலைகளின். எதிர்ந்து ஆலுவ எனக் கூட்டுக. ஆலுவ - ஆடும்.

(2868) கலுழி என்ன-காட்டாறு எனவும். விரைதரு-வேகமாகச் செல்லும். நீத்தம் ஒன்றே - வெள்ளமாகிய ஒரு பொருளே. மூவர் என்னப்படுவது ஒத்து உரை வேறு எய்தும் - அயன் அரி அரன் என்று மூவராகக் கூறப்படுவது போல வேறுபாடாகக் கூறப்படும்.

(2869) வளம் நிலம் - செல்வம் நன்செய் புன்செய்களாகிய நிலங்கள். கணிகை மாதர் - வேசையர். வினைஞர் புதல்வர் தாழ்த்தி - தொழில் செய்யும் மனிதரைப் பணிவித்து.

(2870) பூணி - ஏரிற் பூட்டிய எருமைகள். முடித்த - உழவாகிய தொழிலை முடித்தன. முடித்தாம் என்று - முடித்தோம் என்று கருதி. முதலினை - அடியாகிய வைக்கோலை.

(2871) சாலி செய்யும் நாள் - நெல்லறுக்கும் காலத்தில். காவி உடன் இருந்து உணங்கும் - குவளை மலர்கள் கூடவிருந்து வாடும். இழோர் பிரிவர், மேலோர் மெலிவர் எனக் கொள்க.

(2872) வாள் வகுத்த படை இரும்பு - வாள் போல வகுத்துச் செய்த இரும்பாகிய கொழுப்படை. ஆள் வகுத்த கூன் இரும்பு-உழவர் பிரித்து வைத்திருக்கும் அரிவாள். கேள் படைத்த-நட்பான. தெவ்வர் தடிவார் - பகைவர் கொல்வார்.

(2873) மணித்தொகை வரன்றின போரிடை கொண்டு வந்த மணிக் கூட்டங்களைப் போரிற்

போகட்டு - வாரிக் போட்டு விட்டு. எயினர் - வேடர்கள். தெரிதரார் பாற்படின் - இனைவு இலா - வருத்தமில்லாமல். தரம் ஒரு பொருளின் தரம் தெரியாதவரிடத்துப்

போய்ச் சேர்ந்தால். இழிபு உயர்பு உயர்பு இழிபு எனல் ஆம்-உயர்ந்த பொருள் இழிந்ததாகவும் இழிந்த பொருள் உயர்ந்ததாகவும் கொள்வர்.

(2874) ஒரும் - ஆராயும். மால் உந்தி ஆயும் - திருமால் கொப்பூழ் ஆக இருந்தும். உறுப்பு நள்ளாச்சாரும் ஓர் பகையால் - உறுப்புக்களை நட்புக் கொள்ளாமற் சார்ந்த பகையினால்.

(2876) உந்தி நீர் - யாற்று நீரானது. உவர் படைத்தன - உப்புச் சுவையைப் பெற்றன. முருக்கி - கெடுத்து. தம் தொடர் உறுநர் - தமது தொடர்ச்சியாகிய இயற்கையை.

(2877) பசாசரதம் - பேய்த்தேர் — (கானல்) கரப்பவரை - இரப் பார்க்குப்பொருள் கொடாமல் மறைத்துக்கொள்வோர். பரப்பவர் - பரந்து திரியும் இரவலர். சுரப்புறு - பெருகிய. விரப்புஉறு - வறுமை யால் உற்ற. நித்தலும் நடத்தி - பல நாளும் நடந்து தம்பால் வருமாறு செய்து.

(2878) துஞ்ச வந்த நாள் - இறக்கும்படி துன்பம் வந்த காலத்தில். அயல் துறக்கும் - அயலாரிடத்திற் செல்லும். கஞ்சம் - தாமரை மலர்-

(2879) ககம் தரும் கொடி - மலை பெற்றமகள் (உமை) மான் மகிழ்ந்து இடம் திரும்பும் எனவும் வீரமழுவலம் தயங்குற எனவும் கூட்டுக.

(2880) அகழி தாழ்ந்து அனந்தன் முடிமேல்
எயில் உதிப்பவன் தாட்கீழ் நின்றது எனவும்

நின்றன்று எனவும்,
கூட்டுக. எயில் -
கோட்டை. உரை கண்டாம் - அந்நீதி
எயிலிடத்தும் நாம் கண்டோம்.

மொழியை அகழிடத்தும்

(2881) யானையொடு பரிகள் தெருவகலா எனக் கூட்டுக. ஒரு கோட்டுயானை - விநாயகர். வாசவனை - இந்திரனை. ஈர் இருகோட்டு யானை - நான்கு கொம்புடைய ஐராவதம். மானும். எனும் - என்று நினைக்கின்ற (யானை) எனவும். பாண்டில் இழுக்கும்பகடு - வண்டியிழுக்கும் எருமை. என்னும் பரிகள் - என்று நினைக்கும் குதிரை எனவுங் கொள்க.

(2882) கலை அணிந்து ஒருதலை - மேலாடை புனைந்த அவ்வாடையின் ஒரு முனையை. கடபடாம் என்றல் - குடம்போன்றமுலை மேலிட்ட ஆடை என்று கூறியது. கடபடாம் என்ற சொல் தோன்றியது.

(2883) வெண்மணி மூக்க அணி - முத்துக்கோத்த மூக்குக்குத்தி என்ற நகையை. அவ்வணி, வாயையடுத்து முத்து நிற்குங்காட்சி என்னைப் பழிக்கின்றாய் உன் மனைவாயிலில் நான் ஞான்று இறப்பேன் பார் என்று சொல்வது போலத் தோன்றியது. அங்கது அவ்விடத்தில் அம் முத்து. ஞான்று கொள்முறைமை - கயிறு கழுத்திற் பூட்டியிறக்கும் விதம்.

(2884) தாய்வாய் என்பது கடவிடத்தைக் குறித்தது; நிலவு கடலிற்றோன்றிய காரணத்தால் திருமகள். (அவள்) கடிமனையை - அவளுடைய புது மனையாகிய தாமரை மலரை.

(2885) தாளிற்படும் நீ - சிவபெருமான் காலாள் மிதித்துத் தேய்க்கப்பட்ட நீ. மீண்டிலாய் - இறங்காமற் றலை மேலேயே நின்றிருய். நக்கன் - சிவபெருமான். என்பது அறியாமை - என்று சொல்வது அறியாமையாய்ச்சாஞ்... ...

(2886) உயிர்த்த பொழுதே - (உன்னைப்) பெற்ற துறந்தது - நீக்கியது. காவகத்தில் - சோலையிடத்தில்.

போதே

(2887) மால் அருந்தியபோது - திருமால் பூமியை விழுங்கிய காலத்தில். பாலை அன்று உடன் உமிழ்ந்திலன் ஆயின் - பாலைநிலத்தை அக்காலத்தில் உண்டவுடனே கக்காமலிருந்தால். வேலையின் தலை - கடலின்மேலும். உண் வெண்ணெயாலும் - வெண்ணெயை யுண்டதானும். உய்குவன் அலன் - பிழைக்க மாட்டான்.

(2888) சொல் - நெல். அருஞ்சூல் - இளஞ்சூல். மேல்அலார் - கீழ்மக்கள்.

(2889) தெருண்ட - தெளிவான. மருண்ட - மயக்கமான. பொன் உருள் - பொன்னாற் செய்யப்பட்ட சக்கரம். இருண்ட கல்லையும் - கரிய பாறைகளையும். இரதம் - தேர்கள்.



[பொருட்

(2890) அணியாய் - அழகாகி. ஆன்ற பொருள் - அமைந்த பல வகையான பொருள்களை. புலத்திற்று - வயலிடத்தது (அறிவு தருவது). அவ் அகத்துறைகள் - வேள்வி செய்யும் இடமாகிய நீர்த்துறைகள் (அமுதம்போன்ற அகப்பொருட்டுறைகள்), ஐந்திணைநெறி - குறிஞ்சி முதலிய ஐந்து நிலங்களின் வழி (ஒழுக்கத்தின் வழி). சவி உற - ஒளி பொருந்த.

(2895) சால்பினால் - பெருமையால். குண்டிகை தாங்கும் - நீர்க் குடுக்கையைத் தாங்கிய. நான் முகனையும் போலும் என்பது.

(2896) பத்தியின் பாலர் ஆகி - அன்பின்

தன்மையுடையவராகி.
நீள் பத்தியின் பால் - நீண்ட வரிசையாகிய
தன்மைபோல் - அவ்வடியாரியற்கை போல.

பகுதியால். வித்தகர்

(2897) கமலைப்பதி - கமலாலயம் ;
தேோர். அருள் பொழிதல்போல் மழை

திருவாரூர். தியாகர் - தியா
பொழிந்த எனக்கூட்டுக.

(2899) நார் - அன்பு. சீலம் - ஒழுக்கம். அம்மான் - கடவுள். அருள் வெள்ளம்-கருணையாகிய கடலில். வீரர்தொட்ட - சகரர்களாற் றோண்டப்பட்ட. கார் அருள் - மேகம் வழங்கிய. வெப்பம் கழித்தது என்க.

(2900) உவர்நீர் எச்சில் எழிலிகள் உண்ண நல்கி - உப்புச்சுவை யுடைய நீராகிய எச்சிலை மேகங்களுக்கு உண்ணும்படி கொடுத்து. ஆழிகன்னீர் அருந்தியது எனக்கூட்டுக. ஆழி - கடல்.

(2901) சீர்த்திப்போர்வை - புகழாகிய போர்வை யாடையை. திரையிற்கொண்ட - கடலில் முகந்து கொண்ட. பயோதரம் - முகில் கள். விளர்த்த - வெள்ளை நிறமாயின.

(2902) சே ஒன்று - உழிஞ்சில் மரம் ஒன்று. கொன்றையின் அடி - கொன்றை மரத்தின்கீழ். காசை ஒன்று - ஒரு காயாமரம். வளைந்து உறல் - வளைந்து நிற்கும் தோற்றம் (காட்சி). கடுக்கும் - ஒப்பாகும்.

(2903) சுரும்பு செறி - வண்டுகள் மொய்த்த. அறல் நின்றும் - நீரிலிருந்தும். பருங்கயல் - பருத்த கெண்டை மீனை. குருகு எடுத்து தாது அகல - கொக்குகள் எடுத்துக் கொண்டு போய் மகரந்தப் பொடி நீங்கும்படி. தோய்த்தல் - தோய்க்கும் காட்சியானது. இருந்தை - கரி. அழல் நடுவண் இயைத்த இரசதக் கட்டியினை-தீ நடுவில் வைத்திருந்த வெள்ளிக் கட்டியை. கைக்குறடு எடுத்து - கையிலுள்ள பற்றுக் குறட்டினாற் பற்றியெடுத்து. திறனே மானும் - தன்மையை ஒக்கும்.

(2905) இருள் விழுங்கு மஞ்சு கான்றிடும் ஆலி - கரிய நீரைக் குடித்த மேகங்கள் கக்கிய ஆலங் கட்டியாகிய மழை. மலை மீது மறித்து எழல் - மலைமேல் விழுந்து தெறித்து மேல் எழுந்த தோற்றம். இளங்கிளி அஞ்சொலார் - இளமையான கிளிபேசும் சொல் போலப் பேசும் அழகிய சொல்லுடையவர் (பெண்கள்).

(2906) துன்றளை புயல் - நெருங்கிய கரிய மேகங்கள். செம்பொற்குவடு - பொன்மலை; தங்கமலை. வானவன் - தேவன். சிவபெருமான். குன்றம் - வெள்ளிமலை. குவடு குன்றம் ஒத்தது எனக் கூட்டுக.

பால்] ௭௦. மெய்யுணர்தல்

589

(2907) நாகம் - புன்னை. திலகம் - மஞ்சாடி மரம். மாகதம் மதம் மா - மிகுந்த சினமும் மதமும் கொண்ட யானை. ஆரம் - சந்தன மரம். மேக்குற - மேலே. வேலைவாய்மைந்தற் காண்பான் - கடலில் உள்ள மைந்தனைக்காண்பதற்கு. ஆக்கம் மீக்கொள்ள - பொருள்களை மேலெடுத்துக்கொண்டு. சேறல் அன்ன - செல்வது போல்வன.

(2908) கன்னி ஆறு - அழியாத ஆறுனது. அற்பு அகலாது - அன்பு நீங்காமல். பொற்பு இல - அழகு இல்லாமல். கொடியோர் தம்மில் போந்தது - தீயோரைப்போல வந்தது. கற்பகவனம் - (தேவருலகில் உள்ள) கற்பகமரம் நிறைந்த சோலை.

(2909) கொண்டல் முழவினும் இசை எழ — மேகங்கள் மத்தளத்தைப்போலவும் முழங்க. களிகள் - கள்ளுண்டு களித்தவண்டுகள். வலம்புரி உமிழ்ந்து நித்திலம் உதவின - சங்குகள் ஈன்று முத்துக்களை வழங்கின.

(2910) பருவரலுடன் - துன்பத்துடன். ஆண்டு உன்னுதோறும் - அவ்விடத்தில் நினைக்கும் போதெல்லாம். கோ இணையில் நீர் உகுத்த மாது ஒத்த - இரு கண்களிலும் கண்ணீரை வடித்தழுத பெண்போலத் தோன்றின. கன்னல் - கரும்பு. கண்தொறும் - கணுக்களில் எல்லாம்.

# எo. மெய்யுணர்தல்

(2911) எத்தாயர்...சும்மாடு ஆம் - எவ்வகையான தாய்மாரும் தந்தைமாரும் சுற்றத்தாரும் எவ்வகைப் பொருள்களும் சுமை (பாரம்) ஆகும். சித்து ஆய வேடத்தாய் - ஞானமாகிய வடிவுடையவனே! பொன்னி - காவிரியாற்றின் கரையில் உள்ள. அல்லகண்டம் கொண்டு - துன்பத்தைக்கொண்டு.

(2912) தேரில் - ஆராய்ந்தால். சிந்திக்கின் - நினைத்தால். செப்பில் - துணிந்து சொன்னால். உள் தெளிவார்க்கு - மனந்தெளிந்த அறிவுடையோர்க்கு.

(2913) கண் ஆர் அமுதனை - கண்ணிறைந்த தேவாமிர்தம்போன்ற சிவனை. உள் நாடி - மனத்துள்ளே ஆய்ந்து. கலந்து இருந்தானே - உயிருடன் கலந்து வாழ்வானே யாவன்.

(2914) துன்பமும், வெருதுயரும், துன்பமும், துயரும், வெருவர எண்ணி, மேவ, உணர்தலே, வேண்டும் எனக் கூட்டுக. கருவிடை - சூற்கொண்டிருந்தபோது. கூற்றுவன் உருவினை யொருவும் - இயமனால் உடம்பினை உயிரைவிட்டுப் பிரிக்கும். மீட்டும் - மறுபடியும் (மீண்டும்). வெருவர - அச்சமுண்டாக. வீடதனை மேவ - முத்தியையடைய.

(2915) அணிவரு சிவகதியாவது - அழகிய முத்தி என்பது. மணியில் ஒளியும் சந்தனத்துணியில் நாற்றமும் மலரின் மணமும் தோன்றுவதுபோல முத்தியில் இன்பந்தோன்றும் என்பது கருத்து. மலர்ந்து

உமிழ் ஒளிவனப்பும் - பரந்து வெளிவிடும் ஒளியின் அழகும். குளிர்ந்த சந்தன மணமும். துணி - துண்டு, கட்டை. என்ன - எவ்வியல்புடையன. அன்னது - அவ்வியல்புடையது.



(2916) உள்பொருள் இது என உணர்தல் - உண்மைப்பொருள் இதுதான் என்று அறிவது. விள் அற - பிரிவின்றி.

(2917) காழ்த்த - முதிர்ந்த. செற்று - அவித்து; அடக்கி. ஊழ்த்த மென் சருகு மாந்தி - உதிர்ந்து கிடந்த மெல்லிய சருகுகளையுண்டு. தொகுதியும் - கூட்டமும். சுருதி நான்கும் - நான்கு மறைகளும்.

(2918) நெஞ்சகம் குழைந்து - மனம் இளகி. நெக்கு - நெகிழ்ந்து. குஞ்சித சரணம் - வளைவாகிய (மேலே தூக்கி நின்றுடிய) அடியை. அஞ்சலித்து - கைகுவித்து. மும்மலம் பொதிந்த - மூன்று மலங்களும் நிறைந்த. மலம் குரம்பையில் - மலங்களின் கூடாகிய உடம்பில். செம்மாந்திருப்பது - செருக்குற்று வாழ்வது. மெய்ம்மையில் பொலிந்த - உண்மையாக விளங்கிய.

பண்டித வித்துவான் திரு.

தி. சங்குப்புலவரவர்கள் எழுதிய

பன்னூல் பாடற்றிரட்டு குறிப்புரை

முற்றிற்று.

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

# பன்னூல் பாடற்றிரட்டு

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

## ஈ

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

### ள்

# அ

பன்னூல் பாடற்றிரட்டு

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

## அ

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

கரு.

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

**கள்**

ப. பா.—ந

| பாட்டு எண் | பிழை |
| --- | --- |
| 74 | ஒழுகும் |
| 79 | ஒைரங்கும் |
| 104 | ொன்ொண்று |
| 110 | ேராதரு |
| ,, | காண்பார் |
| 118 | விறப்பு |

164 இரைக்கும்
182 பாரதா
337
417 காமனையென் றுஞ்
446 மகவழித்த
582 அவ்வெனும்
596 இவற்றோடு
611 ரெழுவரவர்
707 பகர்ந்தொரும்
764 பிள்ளையென
770 பாதாள மூலீ
827 வுண்டவில்
830 கன்னின் றுருகுக்
889 மெலியவளிடத்து

891 எவனபுரியப்பட்டு

923 பிறிதெனினும்

1029 பூப்பர் ரொருகால்

1162 கடியஞானி

1208 ளன்னையிக்

1424 பூசிப்பொழிந்த

14[illegible]3 கருயானை

1502 மதிழ்ந்தார்

1589 வழக்கிலை வந்தோ

1729 பிறபி

1776 துணிவற

1777 விடுவெண

1875 தெட்டான்

1952 வேற்றுமைதெரிந்தா

விருப்பு
இறைக்கும்
பாராத
337 அ
காமனையொன் றுஞ்
மகவளித்த
தவ்வெனும்
இவற்றெடு
ரொழுவரவ
பகர்ந்தோரும்
பள்ளையென
பாதாளமூலி
வுண்டவில்
கன்னின் றருகக்

மெலியவனிடத்து
புரிவனபுரியப்பட்டு
பிறிதொன்றும்
பூப்பவொருகால்
கடியனாளி
என்னையிக்
பூசிப்பொதிந்த
கருணையா
மகிழ்ந்தார்
வழக்கிலையந்தோ
பிறவி
துணிவற
விடுவன
கெட்டான்

வேற்றுமை தெரிந்த
வாய்நெரித்து
னெப்பொருளும்

பிழை திருத்தம்

| உ. ங. | | |
|---|---|---|
| 2120 | அன்றவனுண்ணு | அன்றவனுண்ணு |
| 2150 | கடிநட்புங் | கடுநட்புங் |
| 2174 | மேற்செரியில் | மேற்செறியில் |
| 2269 | நாடி | நாடு |
| 2297 | பொதியைக் பகுத்திடுங்கால் | பொதியைப் பகுத்திடுங்கால் |
| 2309 | ஓசைச்செழும்புண் | ஓகைச்செழும்புண் |
| 2416 | செரு | செறு |
| 2477 | அறதிறம்பிய | அறநெரம்பிய |
| 2489 | காப்பது | காப்பது |
| 2508 | மோதரும் | ஓதரும் |
| 2522 | எனக்கென்று | எனக்கென்னு |
| 2850 | மெலியனவெற்றி | |
| 2854 | ஊரு இழிவார் | |

